கடவுள் துணை.

# தனிப்பாடற்றிரட்டு

## இரண்டாம்பாகம்.

இதில்,

பலவித்வான்களாற்பாடப்பட்ட

மூலமும்,

மகாவித்வான்.

கா - இராமசாமிநாயுடவர்களால்

செய்யப்பட்ட உரையும்,

அடங்கியிருக்கின்றன.

[இதன் விலை  [ருபா - ;-கூ.



Printed at the

VITHIYA RATHINAKARAM PRESS.

*MADRAS.*

1907.

கடவுள் துணை.

# தனிப்பாடற்றிரட்டு

## இரண்டாம்பாகம்.

இதில்,

பலவித்வான்களாற்பாடப்பட்ட

மூலமும்,

மகாவித்வான்.

கா - இராமசாமிநாயுடவர்களால்

செய்யப்பட்ட உரையும்,

அடங்கியிருக்கின்றன.

[இதன் விலை 

[ரூபா-௧-௧௨.

Printed at the

VITHIYA RATHINAKARAM PRESS.

MADRAS.

1907.

எனது விலாசம்.

பி. நா. சிதம்பரமுதலியார்.

வித்தியா ரத்நாகரம் பிரேஸ்.

பிரம்பூர் பாரக்ஸ் போஸ்டு, மதராஸ்.

உ

கடவுள் துணை.

# செய்யுளகராதி.


| பாட்டு. | பக்கம். |
|---|---|
| அ | |
| அரவிந்தநண்பன் | 6 |
| அம்பளவெவ்வள | 9 |
| அண்பட்டதிக்கெங்கும் | 11 |
| அணியார்கடுக்கை | 17 |
| அசநழிளைப்பகற்று | 25 |
| அந்தணர்கள்போற்று | 33 |
| அன்றயன்மால்காணு | 42 |
| அம்புலியூர்தன்னை | 53 |
| அன்னைவடிவம்மை | 57 |
| அங்கியராணூர்தி | 60 |
| அட்டமியிலோதிணு | 63 |
| அம்மையிலேயேறி | 66 |
| அலரோதிமத்தா | 70 |
| அடியார்க்கெளியன் | 76 |
| அண்டர்தமக்கரசா | 80 |
| அன்பர்பயங்கெடுக்கு | 83 |
| அஞ்சிமயல்சகியா | 83 |
| அம்பிறைக்குமைந்துமல | 88 |
| அன்னமுணற்கரிதா | 90 |
| அனங்கனம்பாலந்தநடை | 99 |
| அக்காலையேறுவா | 108 |
| அக்காண்டியக்கை | 109 |
| அலைகுளிப்பாட்டிஞ் | 123 |
| அத்திக்கொம்பாலை | 124 |
| அலையாழிந்ஞ்சை | 125 |
| அரியெச்சிலசெய்யு | 127 |
| அற்புதமானநம் | 141 |
| அன்றுகண்டோநஞ் | 145 |
| அடக்கேன்விரக | 146 |
| அராமேலிருபுயன் | 151 |
| அலைகடலிற்றுயி | 169 |
| அடன்மிகுசூர்ப்பகை | 171 |
| அக்கரவம்புனை | 175 |
| அழலைத்தரித்த | 179 |
| அறங்காட்டியகரத் | 179 |
| அரியைத்தரித்த | 182 |
| அருணசலஞ்செய்யுங் | 182 |
| அவதாரத்தாதி | 184 |
| அந்தரங்கண்டிடத்தேயு | 189 |
| அன்னமதுவீடென்றே | 190 |
| அருக்கன்மதியுதித்துவரு | 194 |
| அக்கப்புநற்சிலையை | 195 |
| அச்சுதனுரும்முடைய | 197 |
| அளிக்கொளுந்தொடை | 203 |
| அஞ்சக்கரத்தி | 218 |
| அல்லைப்பகல்செய்த | 227 |
| அளகைப்பொறி | 230 |
| அச்சுப்போற்புல | 233 |
| அத்திகத்தவடுத்தக் | 233 |
| அரக்கனலையிலங்கை | 244 |
| அஞ்சனத்தை | 249 |
| அந்தமுள்ளபுவியி | 254 |
| அங்கண்மாஞாலத் | 259 |
| அன்னைபோலெவ் | 264 |
| அங்கமலரு | 267 |
| அரிமந்திரம்புகுந்தா | 275 |
| அன்னைதயையு | 280 |
| அத்திமலரு | 283 |
| அன்னமனையீர்குயி | 285 |
| அந்தோபுரமெரித்த | 286 |
| அம்போருகஞ்செந் | 291 |
| அடையாரடையா | 300 |
| அனையகாவலர் | 310 |
| அமலலகல | 318 |
| அகலல்குற்றேரே | 328 |
| அளபொன்றேறியே | 335 |
| அடிவண்ணந்தாமரை | 343 |
| அரும்புடைத்தொங்கற் | 345 |
| அறையார்கழன்மன்ன | 348 |
| அங்கேழ்மலர் | 361 |
| ஆ | |
| ஆலங்குடியர்சங் | 22 |
| ஆழாவிகழ்ந்திட | 22 |
| ஆரும்போதாரு | 26 |
| ஆயத்துறையிற் | 14 |
| ஆடியநாகஞ் | 20 |
| ஆரார்பொறுப்பார்சொல் | 39 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| ஆற்றுமோநெஞ்சித் | 45 |
| ஆலமோவேலோ | 55 |
| ஆர்செய்தவஞ்சனையோ | 57 |
| ஆச்சரியந்தென்னமா | 61 |
| ஆயிரம்பிரக்கன்னமுலை | 63 |
| ஆயிரங்கண்ணுகமத | 79 |
| ஆதரவாயென்னருகி | 81 |
| ஆறுமுகமென்றளவி | 85 |
| ஆறணியாராகுசடை | 92 |
| ஆறுதலைசிவனுக் | 93 |
| ஆறுகுளந்தோப்பு | 93 |
| ஆழிகடைந்த | 105 |
| ஆசைபெரிதுடையே | 106 |
| ஆனெய்தனைப்பூநெ | 109 |
| ஆடுஞ்சிதம்பர | 120 |
| ஆருருஞ்செஞ்ச... | 134 |
| ஆற்றுமன...வக்கும் | 140 |
| ஆய்க்குஞ்சடாக்கர | 141 |
| ஆம்பனமுகன்குான் | 170 |
| ஆனையைத்தோய்ந்த | 183 |
| ஆரணவாயினர்மா | 208 |
| ஆடிமாதம்ப | 229 |
| ஆரம்பூணும் | 234 |
| ஆதிசிவன்செத்தானோ | 239 |
| ஆக்கம்புகழ்பெற்ற | 258 |
| ஆனைமருப்பு | 279 |
| ஆதரந்தீரன்னை | 336 |
| ஆணைடுந்தானையை | 354 |
| இ | |
| இளந்தத்தையேநல் | 15 |
| இருபுரமுங்கரவேரி | 34 |
| இந்நோக்கியிவளை | 89 |
| இத்தலத்தோர்போற்று | 40 |
| இத்தையனையவரு | 60 |
| இவ்வரையுமாவிக் | 72 |
| இங்கிருக்கவென்று | 76 |
| இங்கிதமாதல்வாழ் | 81 |
| இரும்புழுதபுண்ணுக் | 89 |
| இலையேதுணையெனக் | 91 |
| இன்னுயிர்காத்தளிப்பாய் | 108 |
| இந்திரன்மைந்தன் | 120 |
| இளந்தென்றலைவட | 213 |
| இந்தவசமந்தவசந் | 215 |
| இலக்கணமெய்க்கரை | 221 |
| இல்வாழ்வுநீத்தற | 221 |
| இய்யூர்தகரவெடுத்த | 229 |
| இருகோலமிடுங்கலை | 246 |
| இடர்த்திறத்தைத்துற | 256 |
| இமையவர்கண்மெளலி | 257 |
| இன்னுயிர்காத்தளிப் | 289 |
| இரவறியாயாவரையும் | 295 |
| இவனளவுந்தீயுமிழ்வ | 299 |
| இறைவாவிறைவால் | 302 |
| இருங்கழல்வானவ | 339 |
| இனனுயிர்கண்டறி | 341 |
| ஈ | |
| ஈட்டும்வினைகளறுத் | 81 |
| ஈராறுமீரரையு | 95 |
| ஈக்குவிடந்தலையி | 278 |
| உ | |
| உரகத்திலேகிடப்பான் | 18 |
| உன்மனதுமென்மனது | 36 |
| உறுகிள்ளைமாமொழி | 55 |
| உக்ரகிரியுக்ரகட | 59 |
| உன்றன்மகளை | 65 |
| உன்னவினிதாயிருக்க | 82 |
| உன்னைப்பணிந்தே | 102 |
| உண்ணுவிருந்து | 116 |
| உழுமேழியாளன் | 154 |
| உரவுபொலிமறை | 206 |
| உணங்கியொருகான் | 242 |
| உள்ளங்குளிர | 261 |
| உத்தமர்தாமீயுமிடத் | 287 |
| உமாதர | 315 |
| உரையுறைதீந்தமிழ் | 320 |
| ஊ | |
| ஊசறெழிலிழக்கு | 290 |
| ஊசிக்கழகு | 213 |
| ஊழிக்கருங்கங்கு | 149 |
| ஊழ்வினையைப் | 82 |
| எ | |
| எரிக்குமதிச்சடை | 14 |
| எத்திக்கும்போற்று | 29 |
| என்றுவடிவே | 42 |
| என்னைச்சொல்வாரல்ல | 42 |
| என்றுதொழுவே | 44 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| எய்யவந்தகாமா | 49 |
| எல்லாருநன்று | 51 |
| என்றுடுங்காமீச | 58 |
| எழுதரிதுமுன்ன | 67 |
| எண்ணான்குழுப்பத் | 115 |
| எறிக்கும்புகழ்க்கச்சி | 129 |
| என்றுதிரும்பி | 141 |
| எட்டியுந்தீந்து | 152 |
| எண்சாணுகமிடி | 191 |
| எண்டிசையும்புகழ் | 201 |
| எந்தவுலகினுஞ் | 217 |
| எங்கும்தம்புக | 234 |
| என்னையவரமறந்தும் | 244 |
| என்னேகிரேதத்தி | 280 |
| ஏ | |
| ஏவிழியார்மூர | 30 |
| ஏழையிடத்தவ | 143 |
| ஏழைக்கிரங்கிடும் | 178 |
| ஏழுலொருகிரியா | 204 |
| ஏத்தவளைக்காவெ | 250 |
| ஏந்தியவெண்படை | 325 |
| ஏமாண்சிலைநுத | 362 |
| ஐ | |
| ஐந்துசிரமுள்ள | 93 |
| ஐயன்திருநாம | 220 |
| ஐயோவகலல்குல் | 259 |
| ஒ | |
| ஒருத்திமிகமயல்கொண் | 34 |
| ஒன்றைவிட்டொன்றை | 126 |
| ஒருமானைச்சிதை | 128 |
| ஒருமரக்காவிட் | 169 |
| ஒருநாகம்விட்டுயர் | 184 |
| ஒருமாடுமில்லாமல் | 202 |
| ஒருகோட்டுக்கலைமுனியு | 241 |
| ஒருபேருணர்வுடனே | 258 |
| ஒருபோதுயோகியே | 277 |
| ஓ | |
| ஓடிஞனென்ப | 25 |
| ஓர்தண்டரையாளு | 70 |
| ஓராறுமுன்னியொரு | 82 |
| ஓர்குடிக்கேயோர் | 196 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| க | |
| தலங்காதவீரிய | 13 |
| கடுமொழிசேர்சூரைவென்ற | 41 |
| கண்டேன்சிதம்பரத்தை | 46 |
| கச்சிக்கச்சாலைக் | 57 |
| கன்னிமூகநன்னில்வு | 58 |
| கல்லுமுறுத்தாது | 61 |
| கட்டியடிப்போர்க்குங் | 65 |
| கம்பனென்றுங்கும்ப | 77 |
| கன்னலெனுஞ்சிறு | 79 |
| கல்விக்குஞானக் | 80 |
| கந்தாசடம்பா | 83 |
| கந்தனென்றும்வேல | 86 |
| கயவரெலாங்கூடியொரு | 95 |
| கடம்பவனஞ்சூழ்கூடற் | 98 |
| கங்கொன்றுசேர்திமறு | 100 |
| கல்விநெறியக் | 110 |
| கமலாலயமில்லாங் | 110 |
| கண்டிருந்தும்கேட்டி | 111 |
| கட்டோம்புதலெனக் | 113 |
| கலையளவெவ்வள | 115 |
| கடுவளைக்குங்கண்ணி | 118 |
| கங்கையர்தாளுடை | 128 |
| கவிகற்றவர்க்கும் | 131 |
| கனம்பிரிந்தாலுமின் | 142 |
| கணிமாதவர்புகழ் | 149 |
| கட்டாரியேந்திய | 160 |
| கட்டளையாகப் | 170 |
| கருதுங்கயல்கடு | 172 |
| கண்டநந்த | 186 |
| கனகாசலங்கரிக் | 186 |
| கச்சிக்குரங்கின் | 138 |
| கட்பூக்குழல்மாவடுவண் | 193 |
| கங்குலிலேநடப்பார்க் | 196 |
| கடிவாங்குழலர்த்தடஞ் | 198 |
| கன்றினிதூட்டிக் | 200 |
| கச்சிருக்கும்போது | 205 |
| கட்டுற்றகொன்றையர் | 225 |
| கலைபயிற்றுறுது | 225 |
| கருப்பாலேபணை | 236 |
| கட்டிறலைதிருப்பி | 242 |
| கந்தித்தாளை | 249 |
| களிக்குங்கயல்போது | 262 |
| காமருவுபொற் | 271 |
| கல்லுயணலுங் | 275 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| கண்ணிரண்டேயிவர் | 277 |
| கற்றோர்சனமறிவர் | 277 |
| கற்பூரம்போலக் | 281 |
| கண்ணுக்கினிய | 286 |
| கல்லார்பலர்கூடிக் | 288 |
| கங்கைநதிபாவஞ் | 288 |
| கனிவாயிவள்புலம் | 298 |
| களைகளையமுளரியரு | 307 |
| கடன்மேவு | 311 |
| கருமாலைதொறு | 311 |
| கடியவாயின | 313 |
| கயலேர்தரவருங் | 317 |
| கவிமுதியார்பாவே | 330 |
| கண்டார்மகிழுங் | 342 |
| கடித்தடம்விண்ட | 344 |
| கறையின்மலிந்த | 348 |
| கண்ணுற்றெதிர்ந்த | 351 |
| கந்தாரகெளி | 354 |
| கணிசிறவேங்கையுங் | 356 |
| கழுதுகுருதி | 357 |
| கா | |
| கானவர்தாந்தினை | 8 |
| காணப்பெற்றேமிரண்டு | 45 |
| கானக்கடன்மல்லைக் | 64 |
| காரங்கமேனிக் | 71 |
| காமனூர்வீட்டிலே | 73 |
| காந்தனுக்கென்றன் | 77 |
| காணியொருமாசோமன் | 91 |
| கால்வீழ்ந்தநம்மைக் | 97 |
| காயுங்கடுஞ்சுர | 116 |
| காவியனந்த | 126 |
| காத்திருந்தாலுங் | 133 |
| கால்ப்புயலனையான் | 136 |
| காரைப்பழித்த | 136 |
| காண்டாவனஞ்செறி | 152 |
| காண்கிலையென்றிடுங் | 163 |
| காட்டமருந்திது | 163 |
| காம்பாயர்தெய்வத்தின் | 167 |
| காரார்முகிலே | 210 |
| காவென்றுஞ்சிந்தா | 240 |
| காணிமிர்த்தாற்கண் | 259 |
| காஞ்சனில்லாத | 276 |
| காலையுமாலையுங் | 294 |



| பாட்டு. | பக்கம். |
|---|---|
| காமரம்பயி | 313 |
| காக்கைக்காகாகூகை | 319 |
| கானவாரண | 335 |
| கி | |
| கிழக்கோதந்தெற்கி | 125 |
| கிளியென்றுசொல்லிய | 164 |
| கு | |
| குணமிருந்தாலுங் | 18 |
| குச்சிலியமாதர் | 75 |
| குவளைத்தார்த்தேவர்கடங் | 102 |
| குடக்கோடக்கொற்றக் | 123 |
| குதிரைகனியை | 183 |
| குன்றுகுடையாவெடுத் | 192 |
| குறித்தாள்குறித்தொன் | 150 |
| குருவுங்கிரகணமுங் | 219 |
| குவம்பைவிரும்பக் | 226 |
| குருமூர்த்தமாய்வந்து | 246 |
| குருத்துக்கதலிப் | 248 |
| குழையருகுதாழக் | 266 |
| குரவார்குழலாள் | 301 |
| கூ | |
| கூப்பிட்டான்றன்மகனைக் | 89 |
| கூப்பிட்டேன்செங்கை | 98 |
| கூறவிலைமாதர்வசை | 105 |
| கூரிட்டவேல்விழி | 139 |
| கெ | |
| கெலிக்குஞ்சிங்கத்துக்கும் | 13 |
| கெட்டசாறுதவிடு | 238 |
| கே | |
| கேளந்தநாளையின் | 3 |
| கேளாயிப்போது | 140 |
| கை | |
| கைத்தலந்தன்னிற் | 2 |
| கைக்குடமும்ரெண்டு | 62 |
| கைக்கார்நிந்தரு | 231 |
| கைகாந்தள்வாய் | 269 |
| கொ | |
| கொங்கைகளங்கண்சொல் | 109 |
| கொங்கருடல்கிழியக் | 110 |
| கொன்றையுந்தும்பையுஞ் | 134 |
| கொத்தொடுமாயகனி | 135 |
| கொல்லாவிரதத்தமிழ் | 197 |
| கொம்புளதற்கைந்து | 278 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| கொடியார்கொடியார் | 303 |
| கொண்டல்கொண்டலர் | 305 |
| கொல்லியம்பொருப் | 312 |
| கோ | |
| கோங்கினரும்போ | 39 |
| கோடுதிக்குங்கும்ப | 67 |
| கோவளர்ப்பண | 314 |
| கோடாராவிப் | 315 |
| ச | |
| சங்கரன்றேவி | 7 |
| சதிராயிருந்த | 11 |
| சங்கரிதியோகம்வாழ் | 27 |
| சந்தனந்திமிர்ந்தகொங்கை | 59 |
| சல்லடைக்கண்ணுகித் | 70 |
| சந்தநந்தந்தர | 188 |
| சந்திரன்காற்காற் | 190 |
| சந்தபந்தந்துன்று | 228 |
| சந்தப்பாவிருத்தப்பா | 239 |
| சங்கையிலாமதன் | 240 |
| சந்தநத்திற்செந்தழ | 266 |
| சங்கந்தாபூணூரந் | 337 |
| சா | |
| சாரங்கபாணி | 103 |
| சாரவீடிருந்தோர் | 114 |
| சாற்றினனின்மே | 166 |
| சி | |
| சிந்தாகுலந்தீருஞ் | 1 |
| சித்தசனுல்வாடுகிறேன் | 49 |
| சித்திரமாங்கூடற் | 54 |
| சின்னஞ்சிறுக்கிநற் | 132 |
| சித்தமகிழ்ந்து | 134 |
| சினம்பெரிதாய்மதனே | 199 |
| சிறியாயினோர் | 201 |
| சிலைவிளங்குநீள் | 255 |
| சிற்றுணர்வோ | 281 |
| சிறைபடுவபுட்குலமே | 292 |
| சினமாண்கடற்படைச் | 349 |
| சிலைமாண்படைமன்னர் | 350 |
| சிலைமிசைவைத்த | 357 |
| சீ | |
| சீரானவேத | 138 |
| சீரணிகொன்றை | 168 |
| சீரருந்திருநெடுமா | 191 |
| சீரானபசுவின்பேர் | 253 |
| சீதமதியி | 265 |
| சீலங்குலமடியா | 287 |
| சீலத்தான்ஞானத்தாற் | 333 |
| சு | |
| சுடுமோவிளந்தென்றல் | 50 |
| சுந்தரவேடந்தாங்கிச் | 217 |
| சுருதியோருருக் | 222 |
| சூ | |
| சூலேறிச்சங்க | 12 |
| சூல்வைக்குநெல்வய | 204 |
| சூர்வந்துவணங்கு | 222 |
| சூழ்ந்துமுரன்றனவி | 261 |
| செ | |
| சென்னிமலைவேலவற்குச் | 23 |
| செந்தழல்போல் | 31 |
| செங்கயலோநீலவண்டோ | 36 |
| செய்யாள்கணவா | 65 |
| செந்தமிழோருய்யவன்பு | 73 |
| செல்வம்பெறலாஞ் | 80 |
| செங்கமலப்போதலர்ந்த | 99 |
| செல்கைதிருவுளமேல் | 107 |
| செவ்வந்திமாலை | 122 |
| செல்லார்க்கும் | 216 |
| செந்தாமரையொரு | 218 |
| செவ்வேறிகழ்கரன் | 231 |
| செருமானவேள்சென்னி | 258 |
| செங்கலசக்கொங்கை | 260 |
| செந்திருவுந்திங்களும் | 266 |
| செவ்வாய்த்தளிரு | 267 |
| செவ்வாய்நகையரும் | 268 |
| செல்லுநெறியுனே | 274 |
| செங்கமலப்போ | 279 |
| சே | |
| சேமன்புதல்வன் | 12 |
| சேய்க்கறியுண்ட | 19 |
| சேலோகண்ணேயோ | 38 |
| சேலநகரேமதுரை | 74 |
| சேன்மிஞ்சிப்பாயும் | 138 |
| சேலுங்கலேயுஞ் | 160 |
| சேலூரும்வயல்சூழு | 180 |
| சேல்வண்டுவசமளியே | 193 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| சொ | |
| சொல்லியற்சொல்லி | 130 |
| சொல்லுக்கினிய | 252 |
| சொன்னநாளிது | 308 |
| சோ | |
| சோற்றுக்குந்தன் | 94 |
| சோமனுடவாழ்வுஞ் | 97 |
| சோதிமறந்த | 144 |
| சோமன்பதியுந் | 176 |
| சோதிச்சவரி | 252 |
| சோகமேவன்கொலி | 256 |
| சோலைபயிலுங் | 294 |
| ஞா | |
| ஞாயிறுபோய்விழத் | 20 |
| ஞானம்பெருமை | 101 |
| ஞாயிறுந்திங்களு | 185 |
| ஞானத்தாணிதூண்புக் | 199 |
| ஞானம்பெருமை | 101 |
| த | |
| தருமிகாரன | 19 |
| தக்கசகுனஞ்சபதஞ் | 24 |
| தலையிலிரந்துண்பான் | 26 |
| தந்தைபோய்த்தாய் | 61 |
| தன்னைப்புகழ்வானுஞ் | 91 |
| தம்பியோபெண்டிருடி | 104 |
| தாலாற்றுந்தொட்டிக் | 113 |
| தண்டுஞ்சிவிகையுஞ் | 127 |
| தனங்கடந்தானைகள் | 131 |
| தடந்திசையெட்டை | 137 |
| தத்தடிபாய | 139 |
| தண்டமிழ்நாவலன் | 152 |
| தலைவாசனிற்பள் | 160 |
| தவிக்கின்றகிரண | 164 |
| தணிகாசலத்தி | 181 |
| தருக்காலுமலர்ப் | 194 |
| தருநாணுட்கொள்ள | 207 |
| தண்டுகொண்டோட்டினும் | 211 |
| தன்மலையிரதமாக்கித் | 247 |
| தளிபெற்றுவைகிய | 263 |
| தண்மதிக்குத் | 268 |
| தலைமயிருங்கூறு | 279 |
| தன்னையளித்தா | 282 |
| தண்சவிகைப்பாலுசு | 291 |
| தண்டுறைநீர்நின்ற | 297 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| தத்தித்தாதூதுதிரா | 319 |
| தண்மலர்வில்லி | 329 |
| தன்னும்புரையு | 351 |
| தா | |
| தாராளனெங்க | 8 |
| தார்க்கொன்றை | 23 |
| தாண்டவாவென்று | 47 |
| தாமரைப்பூந்தேனை | 84 |
| தானோர்வலையினுந் | 125 |
| தாளத்தனத்தி | 133 |
| தானேதனக்கொத்த | 176 |
| தாமரைவாண்முகத் | 262 |
| தாமரையன்று | 263 |
| தாதொன்றுதாமரையே | 264 |
| தாதளவிவண்டு | 264 |
| தாமரைபொன்முத்துச் | 275 |
| தாமுங்கொடார் | 283 |
| தாயேயாநோவவா | 327 |
| தாயாயாள | 318 |
| தி | |
| திரைகடலோடித் | 14 |
| திருவுளவாயிற்பதியிற் | 36 |
| திங்கடும்பைகொன்றையுஞ் | 58 |
| திருவிருத்திநாதர் | 109 |
| திரைவேலைசுற்றிய | 155 |
| திருத்தேர்புகழ்நந்தி | 159 |
| தினந்தினம்பாவலர் | 173 |
| திருவல்லிக்கேணி | 183 |
| திருக்குளத்திற்றிருக் | 195 |
| திருமணியைநிறத்தமை | 207 |
| திருவாவடுதுறையிற் | 217 |
| திருமகட்குத் | 229 |
| தித்திக்குந்திரிபுகவி | 250 |
| திருமுகம்போன் | 265 |
| திங்களமிர்த | 288 |
| திருமாமுகந்திங்கள் | 343 |
| திரையுறைவார்புணற் | 345 |
| திருமாலகலஞ்செஞ் | 353 |
| தீ | |
| தீயவர்பாற்கல்வி | 285 |
| து | |
| துர்ச்சனரும்பொன்னுந் | 27 |
| துளவத்தொடையணி | 156 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| துரிசுந்தரியலர் | 214 |
| துனிவருநீர் துடைப் | 157 |
| துர்ச்சநரும்பாம்புந் | 278 |
| துறைவா துறைவார் | 298 |
| துடித்துத்தடித்துத் | 322 |
| துனிதானகல | 346 |
| துடியாரிடைவடி | 360 |
| **தூ** | |
| தூதுமதுரை | 72 |
| **தெ** | |
| தென்றலுலவுந் | 43 |
| தென்னலங்காட்டத்தா | 103 |
| தென்னன்பொருளைத் | 124 |
| தென்னரங்கனரங்க | 200 |
| தெள்ளியசெந்தமிழ்க் | 208 |
| தெரிவருங்காதலிற் | 338 |
| **தே** | |
| தேனாட்டுமுல்லைத் | 19 |
| தேரோடும்வீதியெல்லாம் | 46 |
| தேசமதனிற்பேசுந் | 48 |
| தேமிருக்குமாந்தளிரைச் | 73 |
| தேன்பாயுஞ்சோலைத் | 91 |
| தேங்குவளையன்ன | 112 |
| தேமன்சுதனுக் | 117 |
| தேர்கொண்டகாமன் | 145 |
| தேவெனவேந்தர் | 162 |
| தேமொழியேசிற்குஞ் | 166 |
| தேனேடுமுனுண்ணு | 208 |
| தேசம்புகழுந் | 214 |
| தேங்கானன்முத்தலை | 299 |
| தேற்றமில்லாதசெவ் | 341 |
| தேயத்தவருயி | 341 |
| தேந்தண்பொழிலணி | 346 |
| தேர்மன்னுதானை | 347 |
| தேர்மன்னுவாட்படை | 352 |
| **தொ** | |
| தொண்டருடன்கூடித் | 44 |
| தொல்லைமறைதேர் | 293 |
| **தோ** | |
| தோப்பிடுவாரில்லை | 16 |
| தோமிருந்தொழிலொ | 212 |
| தோடுகொண்டளி | 307 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| **ந** | |
| நடந்தாளொருகன்னி | 5 |
| நச்சணிகண்டத்த | 9 |
| நறைகோட்டிளங்கன்று | 21 |
| நக்கனார்சோணகிரி | 25 |
| நல்லவர்கள்வாயா | 101 |
| நரிக்கும்பொருளை | 135 |
| நறைமலர்ச்சோலை | 171 |
| நதியமர்வேணிக் | 175 |
| நத்தையார்வயல்சூழ் | 189 |
| நடக்கிலன்னமு | 202 |
| நலத்தலைகபெறவிரு | 312 |
| நல்வினைநாற்கால் | 327 |
| **நா** | |
| நாலடிவள்ளுவ | 4 |
| நாலாகலைதெரி | 6 |
| நாலாநாள்சேர்ந்தணைந்த | 31 |
| நாராயணரே | 54 |
| நாலெழுத்துப்பூடு | 68 |
| நாலுங்கடம்பு | 71 |
| நாகந்தனையுரித்து | 94 |
| நாலெழுத்தாமேமந்தி | 112 |
| நாடாதுநாடினை | 137 |
| நானஞ்செறிபுயர் | 148 |
| நாகத்தைநாகத்தி | 185 |
| நாகஞ்செறிந்த | 186 |
| நாநாநாதங்கூடிசை | 317 |
| **நி** | |
| நித்தமுநினைத்திரவி | 37 |
| நினைத்தவதுவொழிந்து | 102 |
| நின்சமுகத்தினைப | 224 |
| நிந்தையிலாத் | 286 |
| நினைவரியபல்புகழார் | 296 |
| நினையாநினையா | 300 |
| நிரையாநிரையா | 306 |
| நிதியின்கிழவ | 347 |
| **நீ** | |
| நீமருவவாமுருகா | 28 |
| நீலமோவேலோ | 37 |
| நீரோதிருவழகர் | 54 |
| நீரோசிதம்பரனார் | 56 |
| நீரூருஞ்செஞ்சடைமே | 66 |
| நீரசங்கொண்ட | 130 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| நீவந்தென்க்குமுன் | 147 |
| நீருஞ்சுமந்தேன் | 237 |
| நீலமணிமிடற்ற | 260 |
| நீவாதமாதவா | 324 |
| நீத்தொழிந்தவாளைக் | 326 |
| நு | |
| நுமதுபுனலி | 321 |
| நூ | |
| நூறுமுகமாய்ப் | 28 |
| நெ | |
| நெஞ்சடைந்தவேட்கை | 68 |
| நெஞ்சிரமும்வற்றி | 137 |
| நே | |
| நேற்றினுமின்று | 129 |
| நேரிழையார்கூந்தலினோர் | 334 |
| நோ | |
| நோகாதோவேலாநீ | 87 |
| ப | |
| பரிக்கொம்ப்போல | 2 |
| பக்குவமாக | 3 |
| பறவைநாய்நாகம் | 24 |
| பரியூர்வீரர்பாலருந்தல் | 24 |
| பங்கயக்கண்வேலவனே | 29 |
| பற்றிப்பணிந்து | 44 |
| பக்தளவுகந்தகள | 48 |
| பகலோன்றெறுங் | 69 |
| படைப்பானுங் | 71 |
| பன்னிரண்டுதோளா | 86 |
| பத்துக்கான்மூன்றுதலை | 92 |
| பத்துருபாயனைநேர் | 96 |
| பவளவிழ்ச்சி | 119 |
| பஞ்சவனத்தத்தைக் | 187 |
| படைத்தமதன்றனை | 203 |
| பண்டுமைக்கோர் | 210 |
| பத்தித்தகட்ட | 261 |
| பரவிநாடொறும் | 308 |
| பணிபவனந் | 315 |
| பருவமாகவி | 323 |
| பா | |
| பாலினுமின்சொற் | 10 |
| பாட்டுக்குபாத்திர | 13 |
| பாதாதிகேச | 17 |
| பாகாருமின்சொல் | 32 |
| பாலாழிநீங்கியிந்தப் | 35 |
| பாரோர்புகழவரும் | 35 |
| பாலனுக்காவன்று | 43 |
| பாரதனிற்பேசும் | 48 |
| பாகாசாவின்சொலுடைப் | 53 |
| பாம்புசேர்தோளிணை | 63 |
| பாலொத்தவின்மொழித் | 115 |
| பாலானவின்மொழித் | 117 |
| பாலாறுபாய்தென் | 118 |
| பார்க்கவனைத்தனிக் | 168 |
| பாவேந்தர்மூவர்தம் | 172 |
| பாலொத்தசெஞ்சொ | 173 |
| பாலனத்தைவிடுத்து | 235 |
| பாலைநிகர்மொழி | 243 |
| பால்போலுமின் | 262 |
| பாலன்றனதுருவா | 272 |
| பாவிதனந்தண்டிப் | 281 |
| பாலையாழ்தன்னிற் | 303 |
| பாவடியானைப் | 320 |
| பாமாண்டமிழுடை | 355 |
| பாவுற்றதீந்தமிழ் | 359 |
| பி | |
| பிறப்பித்தோன் | 64 |
| பிஞ்சகதிங்கள் | 103 |
| பிறப்பித்தோன் | 236 |
| பிறர்செல்வங்கண் | 296 |
| பு | |
| புலியைக்கொடுத்து | 5 |
| புட்டவல்பட்டாண் | 75 |
| புள்ளார்மலர்ப்பொழில் | 181 |
| புதுவைமுத்துக் | 245 |
| புகைத்தகைச் | 324 |
| புண்டாமருநிறத் | 353 |
| புல்லாவலவர் | 358 |
| பூ | |
| பூச்சிலைக்கன்னனற்கைச் | 16 |
| பூமன்றிருக்கண்டி | 27 |
| பூமிதனிற்பேசும் | 40 |
| பூவனைமேனுட்டம் | 47 |
| பூமாலைபாமாலை | 55 |
| பூமன்சிரங்கொய்த | 122 |
| பூப்பார்த்துப்புகழ் | 237 |
| பூண்டாங்குகொங்கை | 294 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| பூவர்ளைநாறுநீ | 325 |
| பூமகள்யார்போவா | 226 |
| பூமருகண்ணிணைவண் | 338 |
| பூவலர்தண்பொழிற் | 358 |
| பெ | |
| பெரும்பாரளந்தவ | 158 |
| பெண்ணொருத்தி | 280 |
| பெரியோருழையும் | 297 |
| பே | |
| பேதையேன்காணப் | 50 |
| பேயோவெயின | 121 |
| பேராணைநொந்தழை | 228 |
| பேரானவீரெழுத்தை | 253 |
| பை | |
| பைங்கிளியென்றிடு | 162 |
| பொ | |
| பொல்லாமதப்பய | 4 |
| பொன்னெல்லையெல் | 95 |
| பொன்றேடிமண்புதை | 96 |
| பொய்யாதவாசகன் | 156 |
| பொருதுவட்டாடுஞ் | 212 |
| பொன்னாரம்பூணும் | 230 |
| பொன்னருகுநாருகும் | 236 |
| பொங்களகமல்ல | 270 |
| பொற்பறிவில்லாத | 282 |
| பொன்னுங்கரும்பும் | 284 |
| பொய்மைநெறிதீர் | 289 |
| பொற்றூணில்வந்தசுடர் | 333 |
| பொற்புடையமாதர் | 334 |
| பொருங்கழல்வானவற் | 340 |
| பொருந்தியபூந்தண் | 355 |
| போ | |
| போமேபொழுது | 9 |
| போற்றுவார்வல் | 85 |
| போரேற்றுவந்தமதன் | 121 |
| போர்மூர்ந்துமோகன | 147 |
| போவென்றிரவைச் | 157 |
| போதம்புடனே | 232 |
| போற்றுகுருகிளைகள் | 285 |
| போதுந்தளிரும் | 295 |
| போதாசிவகுரு | 252 |
| ம | |
| மண்டலத்தோர் | 41 |
| மங்கையர்கள்யோனியிசை | 75 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| மல்லணிந்ததோளரி | 107 |
| மதிசூடியதில்லை | 121 |
| மடைகெண்டைசூழ் | 132 |
| மங்காதகீர்த்தியன் | 133 |
| மறக்கப்படுதில்லை | 139 |
| மன்னனில்லாதவிவ் | 158 |
| மதியேயென்பாங்கி | 161 |
| மறந்தனையான்சொன்ன | 165 |
| மருப்பங்கயக்கண்ணன் | 180 |
| மட்டுத்தார்க்கணை | 235 |
| மரமதுமரத்திலேறி | 242 |
| மதுகரத்தையிகழ்ந்து | 245 |
| மலையிற்பயிலா | 270 |
| மழலைவாய்நவ்வி | 271 |
| மனைக்குவிளக்க | 271 |
| மந்திரமுந்தேவு | 281 |
| மழையார்கொடை | 302 |
| மலையுமலையு | 303 |
| மனமேங்குழைய | 304 |
| மறைநுவல் | 311 |
| மன்னுமான்மான் | 319 |
| மலர்மலிசோலை | 329 |
| மதநவிராகாவமா | 331 |
| மண்ணிவர்செங்கோல் | 358 |
| மா | |
| மாப்பிட்டெனுஞ்சிறு | 1 |
| மாத்தானைப்பித்தனை | 7 |
| மாலாக்கியென்னைப் | 11 |
| மாதங்கவத்திரற்கு | 41 |
| மார்க்கட்டுரு | 131 |
| மாலேசிகர்க்குநற் | 136 |
| மாலோன்பதினய | 148 |
| மாலடிதேடியுங் | 150 |
| மாக்கண்வடுக்கண்ணி | 153 |
| மாலயன்போற்று | 154 |
| மானேயென்றேயுயிர் | 163 |
| மாகத்தைமேவும் | 177 |
| மாகமதிக்கான் | 177 |
| மாதங்கமலை | 187 |
| மாத்தவர்க்கெலாமுடலம் | 198 |
| மாரன்படைத்தலைவி | 205 |
| மாமேவுபுகழ்த்திருவா | 216 |
| மாதவசுப்பிரமணி | 219 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| மாலைதலைப்புனைந் | 243 |
| மாகமுறையுடுக்களிரு | 254 |
| மாற்றத்தாற்கிள்ளை | 269 |
| மாதர்துவரிதழ்வாய் | 273 |
| மாதாமரிக்கின் | 283 |
| மானவாமானவா | 300 |
| மாதருயிர்தாங்க | 301 |
| மாலையருளாது | 305 |
| மாலையாகவெய்ய | 317 |
| மானமேசண்ணு | 322 |
| மாதவாபோதிவா | 330 |
| மாவாநீதாதாநீவாமா | 332 |
| மி | |
| மின்னேபொழிலின் | 290 |
| மின்னுவான்முன்னு | 321 |
| மீ | |
| மீன்பார்த்துவிண் | 78 |
| மு | |
| முருகார்முளரியு | 21 |
| முக்கனியிதழ்க்கொடடா | 38 |
| முனியதட்டுமுட்டுக்கு | 69 |
| முக்கணின்வாழ்வெற்பை | 74 |
| முல்லைமுல்லையாய்த் | 78 |
| முத்துகடலிற்பூத்த | 90 |
| முக்கணன்வில்வெற்பை | 174 |
| முருகார்பூந்தடஞ் | 224 |
| முன்னுசநீரளக்கு | 240 |
| முன்னொருவூரின்போர | 245 |
| முந்தனத்தைத்தூது | 247 |
| முன்னங்குடைபோன் | 272 |
| முல்லைக்கொடிநடுங்க | 273 |
| முடியுடைவேந்தரு | 352 |
| மூ | |
| மூவர்கவிமுந்நூறு | 68 |
| மூவுலகுந்தொழு | 223 |
| மூன்றெழுத்துமெங்கோ | 336 |
| மெ | |
| மெய்யினுநல்லவ | 10 |
| மெத்தமயலாகி | 34 |
| மெய்ச்சரசமாக | 77 |
| மெய்யேபொருண்மேன் | 105 |
| மெய்யேபொருண் | 273 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| மென்மதுரவாக்கால் | 276 |
| மே | |
| மேகம்பிறைசிலை | 15 |
| மேகம்கவிந்ததுபோல் | 56 |
| மேகப்படல | 227 |
| மேருசாபமு | 328 |
| மேவியொன்றுரைவென் | 344 |
| மை | |
| மையுமணையும் | 52 |
| மையிருண்டசோலை | 104 |
| மையிட்டகூந்தலும் | 163 |
| மொ | |
| மொய்வேலைகுழலகின் | 215 |
| யா | |
| யானையிரதம் | 293 |
| யானகவென்னே | 321 |
| யாழியல்வாயவி | 323 |
| வ | |
| வண்டோவிழிநுதல் | 22 |
| வந்தனையாவென்று | 33 |
| வல்லாளகண்டா | 47 |
| வன்மத்தைநின்மனதில் | 56 |
| வந்தவளைக்கையாது | 69 |
| வந்துமழைபொழியும் | 85 |
| வட்டமதியைக்குயிலை | 88 |
| வல்லைப்பொருமுலையாய் | 88 |
| வண்டேகுழல்விட் | 143 |
| வழிமேல்மனமும் | 147 |
| வண்டுமதுவுண் | 178 |
| வரைவின்மாதரா | 209 |
| வல்லவகுளத்திருக்கு | 248 |
| வண்டுறைசோலை | 251 |
| வரையவுரைய | 304 |
| வருகம்புளினம் | 306 |
| வருமறைபல | 309 |
| வரியவாங்குழன் | 313 |
| வண்புயலைக்கீழ்ப்படு | 333 |
| வல்லிச்சிறுமருங் | 342 |
| வருமால்புயல்வண்கை | 349 |
| வா | |
| வானுதித்தமமதிக்கும் | 31 |
| வாகந்தாவல்லவென்றால் | 32 |
| வாதாவுன்றனுடை | 32 |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம் |
|---|---|---|---|
| வாடுகிருணின்மாலை | 53 | வீ | |
| வாமமேவுசீதராசி | 59 | | |
| வாலைப்பொருந்துதலால் | 66 | வீடுகிலங்கள் | 211 |
| வாங்குசிலைநுதலார் | 84 | வீடுகோகிலநீலி | 254 |
| வாரீர்பழகி | 87 | வெ | |
| வானவருமிந்திரரு | 98 | வெள்ளிமலைபொன்னின் | 76 |
| வாமாதூபோகே | 100 | வெற்றிலைக்குமுன்னே | 97 |
| வாவிகணையன்றி | 111 | வெண்ணெயுற்று | 100 |
| வாசமாளி | 112 | வெம்போதகவுரி | 146 |
| வாதாம்பலகலை | 117 | வெள்ளியங்கார்வரை | 157 |
| வாழியிருந்திரு | 144 | வெள்ளைநிறத்தாற் | 206 |
| வாரிக்கிராகவன் | 151 | வெள்ளத்தாலழியாது | 225 |
| வானைத்தரும்புகழ் | 155 | வெய்யோன்கிரண | 287 |
| வாரொனுத்தகையன் | 159 | வெய்ய்குரற்றோன்றி | 291 |
| வாரணமாங்கள | 167 | வெண்ணீர்மை | 292 |
| வாகாணகொன்றை | 174 | வெல்லுந்திறனிலைங் | 350 |
| வாக்குமனமு | 211 | வே | |
| வானென்றுதவ | 222 | வேளாமழகன் | 5 |
| வானுடுமண்ணுடு | 223 | வேலவர்தாநேற்றணைந்த | 29 |
| வாராரக்கொங்கை | 232 | வேலவனேநின்கலவி | 30 |
| வாசவனும்பிறர் | 241 | வேலோகடலோ | 37 |
| வாளரவின்செம்மணி | 267 | வேலனேவேளூர் | 50 |
| வாவியுறைநீரும் | 282 | வேலாவிராலிமலை | 51 |
| வாமனமான | 309 | வேலாவிராலிமலை | 86 |
| வானகந்தரு | 314 | வேலாவுணக்குமிகு | 94 |
| வி | | வேலாயுதவிழி | 114 |
| விளைபொருண்மே | 106 | வேதனித்தையலர்க் | 226 |
| வில்லும்பிறையுங் | 124 | வேம்பைவிரும்பக் | 226 |
| விண்டிரிருவர்க்கு | 129 | வேலுங்கருவிளையு | 265 |
| விளையாடும்பாலனை | 142 | வேலுக்குப்பல்லிறுகும் | 274 |
| விழுதுவிட்டோடிய | 154 | வேசியருநாயும் | 284 |
| விடவாளைவென்ற | 214 | வேண்டுருவங்கொ | 237 |
| விதியிருந்த | 220 | வேறுமெனநின் | 339 |
| விற்கம்பத்தடியாலு | 251 | வேழம்வினவுதிர் | 359 |
| விரவலராய்வாழ் | 255 | வேணகநீண்டகண் | 360 |
| விழியேகளிவண்டு | 269 | வேரித்தடங்தொங்க | 361 |
| விளைபொருண்மே | 289 | வை | |
| விரைமேவு | 310 | வையம்புகழ்பழநி | 51 |
| விண்டேயெதிர்ந்த | 340 | வைத்திடவேளாவி | 52 |
| விரைவளர்வேங்கையுங் | 356 | வையம்புகழு | 62 |


செய்யுளகராதி முற்றிற்று.

யேற்றால் அலங்கரிக்கப்பெற்ற, வென்றிக்கொடியான் - வெற்றிக்கொடியை யுடையவன், (அவனது) மழைவளர் - மேகங்கள் தாங்குகின்ற, அம் - அழகாகிய, கொல்லிசாரல் - கொல்லிமலைச்சாரலிலுள்ள, இக்கொய்தழை - இத்தக்கொய்தழையை, துடிஆர்இடை - துடிபோலும் இடையையும், வடிவேல்கண்-வடித்தவேல்போலுங் கண்களையுமுடைய, மடந்தைதன் சொல் அறிந்தால் - எமது தலைவியின் சொல்லையறிந்தேனாயின், கடிஆர் - விளக்கமமைந்த, கமழ்கண்ணியாய் - பரிமளிக்கிற பூமாலையையணிந்தவனே, யான்கொள்வல் - நான் ஏற்றுக்கொள்வேன்—எ-று.

துடி - உடுக்கை. (௩௪௭)

இதுவுமது.

அங்கேழ்மலர்நறுங் கண்ணியினையருளித்தரினு
மெங்கேழவருக் கியைவனபோலா விருஞ்சிறைவாய்
வெங்கேழயினலங் கொண்டவன்விண்டோய் பொதியிலின்வாய்ச்
செங்கேழ்மலரத் தளிரிளம்பிண்டியின் றீந்தழையே.

இ-ள். இருசிறைவாய் - பெரிய சமுகிறகுபூண்ட, வெம் - கொடுமையாகிய, கேழ் - ஒளியுள்ள, அயில்நலம் கொண்டவன் - வேலினது நன்மையைக்கொண்டவனாகிய பாண்டியனது, விண்தோய் பொதியிலின்வாய் - ஆகாயத்தையளாவிய பொதியமலையில், செங்கேழ்மலா - செந்நிறம்விரிய, தளிர்-தளிர்க்கின்ற, பிண்டியின் - அசோகத்தின், இளதீந்தழை - இளமையும் இனிமையுமுள்ள தழைகள், அம்கேழ் - அழகிய ஒளியோடுகூடிய, நறு - பரிமளமுள்ள, மலர்கண்ணியினாய் - மலர்மாலையைத் தரித்தவனே, அருளிதரினும்-கிருபைசெய்து கொடுத்தாலும், எம்கேழவருக்கு-எம்மினத்தாருக்கு, இயைவனபோலா - இயையாதனவாகும்—எ-று.

அருளி - அன்போடு, கேழவர் - உறவினர், அயினலம்-வேலின்வெற்றி, பிண்டி - அசோகமரம். (௩௪௮)

இதுவுமது.

வேரித்தடந்தொங்க லண்ணல்விருந்தா யிருந்தமையாற்
பூரித்தமென்முலை யேழைபுணையிற்பொல் லாதுகொல்லாம்
பாரித்தவேந்தர் பறந்தலைக்கோடிப் படப்பரிமா
வாரித்தகோமான் மணிநீர்மலயத்து மாந்தழையே.

இ-ள். பாரித்தவேந்தர் - எதிர்த்தவேந்தர், பறந்தலைக்கு - போர்க்களத்தில், ஓடிபட - ஓடியழிய, பரிமாவாரித்த கோமான் - தம்குதிரையைச் செலுத்திய வேந்தனாகிய பாண்டியனது, மணிநீர் மலயத்து - அழகிய நீருவி

களையுடைய பொதியமலையிலுள்ள, மாந்தழை - மாந்தழையை, வேரி-வாசனையுள்ள, தடந்தொங்கல் - பெரியபூமாலையைத்தரித்த, அண்ணல் - பெரியோய், விருந்தாய் இருந்தமையால் - நீ யெமக்கு விருந்தினனாயிருந்ததனால், பூரித்த மென்முலை - பூரித்த மெல்லியதனங்களையுடைய, ஏழைபுனையில் - எமதுதலைவிதரித்தால், பொல்லாது - தீமையாம்—எ-று.

கொல்லாம் - ஈறுதிரிந்த அசையிடைச்சொல். வேரி - தேன்எனினுமாம் ஏழை - பெண்ணுக்குப் பொதுப்பெயர். பறந்தலை - போர்க்களம். (௮௪௧)

## இதுவுமது.

ஏமாண்சிலைநுத லேழையுமேற்குமின் றேனகலாப்
பூமாண்கமழ்கண்ணி யாய்நின்றதொன் றுண்டு பூழியர்கோன்
பாமாண்டமிழன் பராங்குசன்கொல்லிப் பனிவரைவாய்த்
தேமாண்பொழிலின கத்தன் றியில்லையித் தேந்தழையே.

இ-ள். ஏமாண் - அம்புதொடுத்தற்குரிய மாட்சிமையமைந்த, சிலை-வில்லினையொத்த, நுதல் - நெற்றியையுடைய, ஏழையும் - எமதுதலைவியும், ஏற்கும் - ஏற்றுக்கொள்ளுவாள், இன்தேன் அகலா - இனியதேன் நீங்காத, பூமாண்கமழ்கண்ணியாய் - மாட்சியமைந்து கமழ்கின்ற மலர்மாலையையுடையாய், நின்றது ஒன்றுஉண்டு - ஒருகுறைநின்றதுண்டு, (அதென்னெனின்) பூழியர்கோன் - பூழியர்பெருமான், பாமாண்தமிழன் - பாக்கள்மாட்சிமைப்பட்டதமிழறிஞன், பராங்குசன் - பராங்குசபாண்டியன், (அவனது) பனி-குளிர்ச்சியமைந்த, கொல்லிவரைவாய் - கொல்லிமலையின்கண், தேமாண் பொழிலின் அகத்து அன்றி - வாசனைமிகுந்த பொழிலினிடத்தேயன்றி, இ-இந்த, தேம்தழைஇல்லை - பரிமளமுள்ள தழையில்லை, (இந்தக்குறையேயாம்) எ-று.

தேன் - வண்டுஎனினுமாம். தேம் - தேன்என்றலும் பொருந்தும். ()

# தனிப்பாடற்றிரட்டு

## இரண்டாம்பாகம்

மூலமும்-உரையும்

முற்றிற்று.

---

கடவுள் துணை.

# தனிப்பாடற்றிரட்டு.

## இரண்டாம்பாகம்:

### மூலமும் - உரையும்.

---

#### விநாயகர்துதி-வெண்பா.

சிந்தாகுலந்தீருஞ் செய்கருமங் கைகூடும்
சந்தானமென்றுந் தழைத்தேறும் - பைந்தாமத்
தானைவயத் தானைமலைப் பாவையளித் தானைமகத்
தானைமுகத் தானைநினைத் தால்.

இ-ள். பைதாமத்தானை - பசியமலர்மாலையை யுடையவனை, வயத்தானை - தன்வயத்தனானவனை, மலைப்பாவை அளித்தானை - பார்வதிதேவியாரால் பெறப்பட்டவனை, மகத்து - பெருமையுள்ள, ஆனைமுகத்தானை - யானைமுகத்தை யுடையவனாகிய விநாயகமூர்த்தியை, நினைத்தால் - (ஒருவன்) கருதினால், (அவனது) சிந்தாஆகுலம்தீரும் - மனவருத்தம் நீங்கும், செய்கருமம் கைகூடும் - (அவன்) செய்யுங்காரியம் கைவசமாகும், சந்தானம் - (அவனது) சந்ததி, என்றும் - எக்காலத்தும், தழைத்துஏறும் - செழித்தோங்கும்—எ-று.

தன்வயத்தானை யென்பது, முதல்குறைந்து வயத்தானை எனநின்றது. தன்வயத்தனாதல் இறைவனுடைய எண்குணங்களில் ஒன்று. எண்குணங்களாவன:—தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை எனவிவை.

#### கட்டளைக்கலித்துறை.

மாப்பிட்டெனுஞ்சிறு தூப்பிட்டுக்காக மண்ணைச்சுமந்தே
ஆப்பிட்டுக்கொண்டடி பட்டசொக்கேசருக் காசைப்பட்டுச்
சேப்பிட்டுமையிட்டுப் பூமாலைகந்தந் திமிர்ந்துமஞ்சட்
காப்பிட்டுவாழ்க்கைப் பட்டாள்கூடல்வாழுங் கயற்கண்ணியே.

இ-ள். கூடல்வாழும் கயல்கண்ணி - மதுரையில் வாழ்கின்ற அங்கயற்கண்ணம்மையானவள், மாபிட்டு என்னும் - மாவினாற் செய்யப்பட்ட பிட்டு

என்கிற், சிறுதூபிட்டுக்காக - சிறிதுவெண்பிட்டுக்காக, மண்ணைச்சுமந்து - மண்சுமந்து, ஆப்பிட்டுக்கொண்டு - அகப்பட்டுக்கொண்டு, அடிபட்ட - அடியுண்ட, சொக்கேசருக்கு - சொக்கநாதர்மீது, ஆசைப்பட்டு - விருப்பங்கொண்டு, சேப்பு இட்டு - சிவப்புப்பொட்டிட்டு, மையிட்டு - அஞ்சனமணிந்து, பூமாலைசந்தம் திமிர்ந்து - மலர்மாலை சந்தனம் என்பவற்றை அணிந்து, மஞ்சள் காப்புஇட்டு - மஞ்சட் காப்பணிந்து, வாழ்க்கைப்பட்டாள் - வாழ்க்கைப்பட்டனள்—எ-று.

அகப்பட்டு என்பது - ஆப்பிட்டு எனவும், செவப்பு என்பது - சேப்பு எனவும் திரிந்துநின்றன. சேப்பு - சிந்தூரத்திலகத்தையாயினும் குங்குமத்தையாயினும் உணர்த்தும். மஞ்சட்காப்பு - கங்கணம், அன்றி மஞ்சட்பூச்செனினுமமையும். வாழ்க்கைப்படல் - இல்வாழ்க்கைக்குத் துணைவியாதல். (மனைவியாதல்) சிவபெருமான் பிட்டுக்குமண்சுமந்து அடிபட்டசெய்தியைத் திருவிளையாடற்புராணம் மண்சுமந்த படலத்திற்காண்க. (க)

கைத்தலந்தன்னிற் பசும்பொன்வளையல் கலகலெனச்
சத்தமொலித்திட நூபுரம்பாதச் சதங்கைகொஞ்சத்
தத்திமியென்று நடஞ்செய்சம்பீசர்தஞ் சந்நிதிப்பெண்
செத்தகுரங்கைத் தலைமேற்சுமந்து திரிந்தனளே.

இ-ள். கைத்தலம்தன்னில் - கைகளில், பசும்பொன் வளையல் - பசும்பொன்னாற்செய்யப்பட்டவளையல்கள், கலகலென - கலகலவென்று, சத்தம் ஒலித்திட - சத்திக்க, நூபுரம்பாதச்சதங்கைகொஞ்ச - சிலம்பும் பாதகிண்கிணியும் மெல்லென்றொலிக்க, தத்திமிஎன்று நடம்செய் - தத்திமியென்று நடனம்பண்ணுகிற, சம்பீசர்தம் சந்நிதிப்பெண் - சம்பீசரது சந்நிதிப்பெண், செத்தகுரங்கை - சாமந்தியை, தலைமேல் சுமந்து திரிந்தனள் - தலைமேற்றாங்கித்திரிந்தாள்—எ-று.

மலரைக் குறிக்கும் சாமந்தி என்பது செத்தகுரங்கு எனவும் பொருள் படுமாதலால் அதனைச் செத்தகுரங்கு என்றார். சாமந்திப்பூவைத் தலைமேற் சூடித் திரிந்தாளென்பது கருத்து. (உ)

பரிக்கொம்புபோலப் பகவான்சரிதை பகர்ந்திடினும்
உரிக்கம்பதாயினு மீயார்கடனுட னோடிச்சென்று
கரிக்கொம்புபோன்முலை மின்னாருக்கீவரக் கன்னியர்கை
நரிக்கொம்புதானுமுண் டோவேங்கடாசல நாயகனே.

இ-ள். பரிகொம்புபோல் - குதிரைக்கொம்பு போல்வதாகிய, அ - அந்த, பகவான்சரிதை - கடவுளது சரித்திரத்தை, பகர்ந்திடினும் - (ஒருவர்வந்து) சொன்னாலும், (சொன்னவர்க்கு) உரிக்கம்பதாயினும் - உரியளவினதாகிய கம்பயாயினும், ஈயார் - கொடார், கடன்உடன் - கடனுடன்பட்டு, ஓடிசென்று - ஓடிப்போய், கரிகொம்புபோல்முலை - யானைக்கொம்புபோன்ற

தனங்களையுடைய, மின்னருக்கு ஈவர் - விலைமாதர்க்குக் கொடுப்பார்கள், அ கன்னியர்கை - அந்தமாதர்கையில், நரிகொம்பு தானும் உண்டோ - நரிக்கொம்பு முளதோ, வேங்கடாசலநாயகனே—எ-று.

இவ்வுலகத்தார் அருமையான விடயத்தில் செலவுசெய்யாமல் மாதர்விடயத்தில் செலவுசெய்வார்கள். ஆதலால் அம்மாதர்கையில் நரிக்கொம்புண்டு போலுமென்று வியந்து கூறலாயிற்று. பகவான் என்பதற்கு ஆறுமங்கள குணங்களை யுடையவனென்பது பொருள். நரிக்கொம்பை யுடையவருக்கு எல்லாக்காரியமும் கைகூடுமென்பது உலகவழக்கமாதலால் இவ்வாறு கூறப்பட்டது. (௩)

கேளந்தநாளையின் மைந்தாநின்னையரைக் கிட்டிமத
வேள்வந்துபூச லிடமதிகாய வெருண்டெனது
தாள்வந்துபற்றிமுன் வாய்புதைத்தேநின்று தாழ்மைசொன்ன
நாளந்தநாளல்லவே யிந்தநாளந்த நாயகர்க்கே.

இ-ள். மைந்தா - மகனே, கேள் - கேட்பாயாக, அந்தநாளையில் - அந்தக்காலத்தில், மதவேள் - மன்மதன், நின் ஐயரை கிட்டிவந்து - உன்தந்தையை நெருங்கிவந்து, பூசல் இட - போர்செய்யவும், மதிகாய - சந்திரன் சுடவும், வெருண்டு - பயந்து, வந்து எனது தாள்பற்றி - வந்து என்காலைப்பிடித்து, முன் - (எனக்கு) எதிரில், வாய்புதைத்து நின்று - வாய்மூடிநின்று, தாழ்மைசொன்ன - பணிவாகிய வார்த்தைகளைச்சொன்ன, அந்தநாள்-அக்காலம், அந்தநாயகர்க்கு - அந்தத்தலைவருக்கு, இந்தநாள் அல்லவே - இக்காலமல்லவே—எ-று.

இது தலைவனைப்பிரிந்த ஒருதலைவி தன்புதல்வனைநோக்கிக் கூறியது. (௪)

பக்குவமாகக் கவிநூறுசெய்து பரிசுபெற
முக்கரணம்மெதிர் பல்காலும்போட்டு முயன்றிடினும்
அக்கடபோவெனும் லோபரைப்பாடி யலுத்துவந்த
குக்கனையாண்டருள் வில்வவனத்துக் குயிலம்மையே.

இ-ள். பக்குவம் ஆக - பாகமாக, கவிநூறுசெய்து - நூறுபாடல்களைப்பாடி, பரிசுபெற - வெகுமானம் பெறும்பொருட்டு, எதிர் - எதிரேநின்று, பல்காலும் - பலதரமும், முக்கரணம்போட்டு - மூன்றுகரணம் போட்டு, வேண்டிடினும் - முயன்றாலும், அக்கடபோஎன்னும் - அங்கேபோவென்றுசொல்லுகிற, லோபரைப்பாடி - லோபிகளைப்பாடி, அலுத்துவந்த - இளைத்துவந்த, குக்கனை - நாயேனை, ஆண்டருள் - ஆண்டருள்வாயாக, வில்வவனத்து- வில்வவனத்தி லெழுந்தருளியிருக்கிற, குயிலம்மையே—எ-று.

அக்கட - என்பது அங்கே என்னும் பொருள்தருவதோர் திசைச்சொல். குக்கன் - நாய். வில்வவனம் - ஓர் சிவஸ்தலம். குயிலம்மை - அத்தலத்திலுள்ளதேவியார் திருநாமம். (௫)

பொல்லாமதப்பய லெந்நேரமுஞ்செய்யும் போருமெனைக்
கொல்லாமற்கொல்லு மதியுங்கடலுங் குயிலுமிவை
எல்லாந்தொலைந்தவென் றெண்ணினன்பாவியிப் போதுன்மனம்
கல்லாயிருக்குமென் றெவ்வளவேனுமுன் கண்டிலனே.

இ-ள். பொல்லா - பொல்லாத, மதப்பயல் - மன்மதனென்கிறபைய ல், எந்நேரமும் செய்யும்போரும் - (என்னோடு) எப்போதுஞ்செய்கிறசண்டை யும், என்னை கொல்லாமல் கொல்லும் மதியும் - என்னைக்கொல்லாமற்கொல் லுகிற சந்திரனும், கடலும் - சமுத்திரமும், குயிலும் - குயிலுமாகிய, இவை எல்லாம் - இவையாவும், தொலைந்த என்று - நீங்கினவென்று, எண்ணினன்- நினைத்தேன், பாவி - அடிபாவி, இப்போது - இப்பொழுது, உன்மனம் - உ ன்மனமானது, கல்ஆய் இருக்குமென்று - கல்லையொத்திருக்குமென்று, எவ் வளவு ஏனும் - எவ்வள வாயினும், முன்கண்டிலன் - முன்னே அறிந்தேனில் லை—எ-று.

கொல்லாமற் கொல்லுதல் - உயிரோடுவைத்து வருத்துதல். இது மன் மதப்போர்முதலியவைகளால் மெலிவடைந்த ஓர்தலைமகன் தனக்கிணங்காத ஓர் தலைமகளைநோக்கிக் கூறியது. (சு)

நாலடிவள்ளுவ ராமேயிப்பாலை நடந்தபெருங்
காலடிமேலடி மானடியேகட் டுரலிற்பட்டும்
பாலடிசில்வெண்ணெ யுண்டோனரங்கன் பனிவரையில்
வேலடிமுள்ளுக் குபாயமிட்டேகும் விழைவுநன்றே.

இ-ள். உரலில் கட்டுப்பட்டும் - உரலில் கட்டுண்டும், பால் அடிசில் வெண்ணெய் உண்டோன் - பாற்சோறு வெண்ணெய் என்பவற்றை யுண்ட வனாகிய, அரங்கன் - திருவரங்கனது, பனிவரையில் - குளிர்ந்த மலையின் கண், நாலடி வள்ளுவர் ஆம் - நான்கடி இரண்டடிகளாய்க் காணப்படுகின்ற ன, (ஆதலால் இதையோசிக்குமிடத்து) இப்பாலை நடந்த - இந்தப் பாலைநில த்தில் நடந்த, பெருகால் அடிமேல் - பெரிய காற்சுவட்டின்மீதுள்ள, அடி- பாதம், மான் அடியே - நமது பெண்ணின்பாதமே, (இவ்வாறு காணப்படு வது) வேல்அடிமுள்ளுக்கு - வேலமரத்தினடியிற் சிந்தியிருக்கிற முள்ளுக் கஞ்சி, உபாயம் இட்டுஏகும் விழைவு - உபாயம் செய்துபோகிற விருப்பத் தின் காரியமாகும், நன்று - (இது) அழகிது—எ-று.

நாலடி வள்ளுவர்ஆம். நாலடியார் குறளாகும். எனச்சொன்னயம் அமை ந்திருப்பது காண்க. வள்ளுவர் என்பது - குறளுக்குஆனது கருத்தனால்வந்த பெயர். தலைமகள்பாதம் முட்களால்வருந்துமென்று தலைமகன் தன்பாதத்தை முன்னேவைத்து அதன் சுவட்டின்மீது தலைமகள் பாதத்தை வைக்கச்செய் து நடத்திக்கொண்டு போனான் என்பது இதன்கருத்து. இது சுவடுகண்டிரங் கல் என்னுந் துறை. (எ)

புலியைக்கொடுத்துப் பசுவாங்கியோர்புலிப் பூங்குழலாள்
புலியைப்பசுத்தின்ன விட்டுப்புலியைத் தினுதகற்றிப்
புலியையரைத்துப் பலகாரஞ்செய்து பொருந்துமுகப்
புலியைக்களிப்புடன் சாறுவைத்தாடன் புருஷனுக்கே.

இ-ள். புலியைக்கொடுத்து பசுவாங்கி-புலியைக்கொடுத்துப் பசுவைக் கொண்டு, ஓர்புலிபூகுழலாள் - ஒருபுலியையணிந்த மலர்க்குழலையுடையவள், புலியைபசுதின்னஇட்டு - புலியைப்பசுத்தின்னும்படிவைத்து, புலியை தின்னுதுஅகற்றி - புலியைத்தின்னுமல்நீக்கி, புலியைஅரைத்து பலகாரம்செய்து- புலியையரைத்துச் சிற்றுண்டியாக்கி, பொருந்தும் - பொருந்திய, முகப்புலியை - முகப்புலியை, களிப்புடன்சாறுவைத்தாள் - மகிழ்ச்சியோடு குழம்பிட்டாள், தன்புருஷனுக்கு - தன்கணவனுக்கு—எ-று.

புலி - வேங்கை (பொன்) - புலி - மயிர்ச்சாந்து. புலி - புல். புலி - வரி (நெல்.) முகப்புலி - முகத்தாமரை. சாறு - திருவிழா. (விருந்து.) ஓர்பெண் தன்கணவனுக்குப் பலகாரவகைகளுடன் விருந்துசெய்தாள் என்பதுகருத்து.

வேளாமழகன் றுரைசீதக்காதியென் வீட்டிலொரு
நாளாகிலும்வரக் காண்கிலனேயெந்த நாளுமவன்
தோளாலணையுஞ் சுகவாலிபத்தைத் துணிக்கவொரு
வாளாய்ப்பிறந்தனையே மைந்தனேயென்ன வாயுனக்கே.

இ-ள். மைந்தனே - புதல்வனே, வேள்ஆம் அழகன் - மன்மதன்போலும் அழகையுடையவனாகிய, துரைசீதக்காதி - சீதக்காதியென்னும் பிரபுவானவர், என்வீட்டில் - என்வீட்டுக்கு, ஒருநாள் ஆகிலும் - ஒருதினமாயினும், வரக்காண்கிலனே - வரப்பார்த்தேனில்லையே, எந்தநாளும் - எந்நாளும், அவன்தோளால்அணைக்கும் - அவனது தோளாலணைக்கிறதனாலுண்டாகிற, சுகம் - இன்பத்தோடுகூடிய, வாலிபத்தை - பாலியத்தை, துணிக்க - அறுக்க, ஒருவாள் ஆய் பிறந்தனையே - ஒருவாள்போலப் பிறந்தாயே, உனக்குவாய் என்ன - உனக்கித்தனைவாயென்ன—எ-று.

ஒருமாது தன்பாலகனைநோக்கி, சீதக்காதி என்னையணைப்பதனாலுண்டாகுஞ்சுகத்துக்குநீவிரோதியாய்ப்பிறந்தாயென்றிழித்துக்கூறியவாறு, இது பாலனைப்பழித்தல் என்னுந்துறை. (௬)

நடந்தாளொருகன்னி மாராசகேசரி நாட்டிற்கொங்கைக்
குடந்தானசைய வொயிலாயதுகண்டு கொற்றவரும்
தொடர்ந்தார்சந்யாசியர் யோகம்விட்டார்சுத்த சைவரெல்லாம்
மடந்தானடைத்துச் சிவபூசையுங்கட்டி வைத்தனரே.

இ-ள். மாராசகேசரிநாட்டில் - பெருமையமைந்த ராஜகேசரியின்நாட்டில், ஒருகன்னி - ஒருபெண்ணானவள், கொங்கைகுடம் அசைய - தனங்களா

கிய இருகுடங்களும் அசையும்படி, ஒயிலாய்நடந்தாள் - ஒய்யாரமாகநடந்தாள், அதுகண்டு - அதைப்பார்த்து, கொற்றவரும் தொடர்ந்தார் - அரசரும் பின்தொடர்ந்தார், சந்யாசியர்யோகம்விட்டார் - சந்நியாசிகள் தாம்செய்யும் யோகப்பயிற்சியைவிட்டார்கள், சுத்தசைவர்எல்லாம் - சுத்தசைவரெல்லாரும், மடம்அடைத்து - மடத்தைமூடி, சிவபூசையும் கட்டிவைத்தனர் - சிவபூசையையும் கட்டிவைத்தார்கள்—எ-று.

ஒருமாது தன் தனங்கள் குலுங்கும்படி நடந்ததைக்கண்டு அரசர்முதலிய எல்லாரும் மயங்கினார்கள் என்பது இதன்கருத்து. (க0)

நாலாகலைதெரி யேகம்பவாணர்நன் னாட்டில்வளர்
சேலாகக்கண்கள் படைத்தபெண்ணேநின் றிகழும்வயி
றாலாகவுமல்குல் பாம்பாகவுமவ் வணையின்மிசை
மாலாகயான்பள்ளி கொள்ளவந்தேனுன்றன் மாளிகைக்கே.

இ-ள். நாலாகலைதெரி - நாலுவிதமான நூல்களையும் ஆராய்ந்த, ஏகம்பவாணர் - ஏகம்பவாணரது, நல்நாட்டில் - நல்லநாட்டின்கண், வளர்சேல்ஆக - விருத்தியடையாநின்ற சேல்மீன்கள்போல, கண்கள்படைத்தபெண்ணே - கண்களைப்பெற்றமாதே, நின் - உனது, திகழும் - விளங்குகின்ற, வயிறு-வயிறானது, ஆல்ஆகவும் - ஆலிலையாகவும், அல்குல் - அல்குலானது, பாம்புஆகவும் - சர்ப்பசயனமாகவும், அவ்வணையின்மிசை - அந்தச் சயனத்தின்மீது, யான்மால் ஆக - நான் திருமாலாகவும்கொண்டு, உன்றன்மாளிகைக்கு - உன் வீட்டில், பள்ளிகொள்ளவந்தேன் - சயனிக்கவந்தேன்—எ-று.

ஒருநாயகன் ஒருநாயகியின் வயிறுமுதலியவற்றை ஆலிலை முதலியவாகவும் தன்னைத் திருமாலாகவும் புனைந்துரைத்து அவளது கூடத்தை விரும்பினானென்பது இதன்கருத்து நாலாகலைதெரி யேகம்பவாணர் என்றது கல்வியிற் சிறந்தவனென்றபடி. (கக)

அரவிந்தநண்பன் சுதன்றம்பிமைத்துன னண்ணன்கையில்
வரமுந்திவாயுதம் பூண்டவன்காணுமற் றங்கவனோ
பரமன்றிகிரியை யேந்தினன்மைந்தன் பலகவன்வெற்பை
உரமொன்றெடுத்தவன் மாற்றான்றன்சேவக னொண்டொடியே.

இ-ள். அரவிந்தநண்பன் - தாமரைக்கு நண்பனாகிய சூரியன், சுதன் (அவனுக்கு) மகனாகியகர்ணன், தம்பி (அவனுக்குச்) தம்பியாகிய அருச்சுனன், மைத்துனன் (அவனுக்கு) மைத்துனனாகிய கிருஷ்ணன், அண்ணன் (அவனுக்குத்) தமையனாகிய பலராமன், கையில் வரமுந்தி ஆயுதம் - (அவனது) கையில் வரமுன்னே ஆயுதமாயிருந்தகலப்பை, (அதை) பூண்டவன் - பூண்டதாகிய எருமைக்கடா. (இது ஒருத்திசொல்லியது) மற்று அங்கவனோ - மற்றொருவனாகிய அவனோவென்றால், பரமன்திகிரியை - சிவபெருமான்கொடுத்தசக்கரத்

ந்த, ஏந்தினன் - தாங்கினவனாகிய திருமாலுக்கு, மைந்தன் - மகனாகிய மன்மதன், பகைவன் (அவனுக்குப்) பகைவனாகிய பரமசிவன், வெற்பை. (அவனது) மலையாகிய கைலாயத்தை, உரம்ஒன்ற எடுத்தவன் - வலிமைபொருந்தத்தூக்கினவனாகிய ராவணன், மாற்றான்தன் - (அவனுக்குப்) பகைவனாகிய ஸ்ரீராமனது, சேவகன் - சேவகனாகிய அநுமான் (குரங்கு.) இது ஒருத்தி சொல்லியது—எ-று.

தாசிகளிருவர் தம்மிடத்திற்குவந்த காமுகரைப்பற்றி ஒருவரை யொருவர் உசாவியறிந்துகொண்டதென்பது இதன்கருத்து. (கஉ)

சங்கரன்றேவி தமையன்மனைவி தனக்குமுன்னும்
மங்கையரேறிய வாகனங்காணுமற் றங்கவளோ
கொங்கைகளீரைந் துடையதுவாயிக் குவலயத்தில்
எங்குந்திரியும் வயிரவமூர்த்தியென் றேநினையே.

இ-ள். சங்கரன்தேவி - பரமசிவன்தேவி (பார்வதி,) தமையன்மனைவி தனக்கு - (அவளுக்குத்) தமையனாகிய திருமாலின்மனைவியாகிய இலக்குமிக்கு, முன்ஆம் - மூத்தவளாகிய, மங்கையர் - மூதேவியார், ஏறியவாகனம் - ஏறியவாகனமாகியகழுதை, (இது ஒருவன்சொல்லியது) மற்று அங்கவளோ - மற்றொருத்தியாகிய அவளோவென்றால், கொங்கைகள் ஈரைந்து உடையது ஆய் - பத்துமுலைகளையுடையதாகி, இக்குவலயத்தில் - இந்தவுலகத்தில், எங்கும் - எவ்விடத்தும், திரியும் - அலைகின்ற, வயிரவர் ஊர்தியென்றேநினை - வயிரவர்வாகனமாகியநாய் என்றேநினை, (இது ஒருவன்சொல்லியது.)—எ-று.

காமுகர் இருவர் தாம் அநுபவித்த தாசிகளைப்பற்றி ஒருவரை யொருவர் உசாவி யறிந்துகொண்டதென்பது இதன்கருத்து. (கங)

மாத்தானைப்பித்தனை மாடேறுவானை மதகரித்தோல்
போர்த்தானைவேதப் பொடிபூசுவானையிப் பூதலத்தென்
ஆத்தாளுடனெதிர்த் தம்பலத்தேயென்று மாடிநிற்கும்
கூத்தாடிப்பையலுக் கோமகளேமயல் கொண்டனையே.

இ-ள். மாத்தானை - மகத்துவத்தை யுடையவனை, பித்தனை - பைத்தியங்கொண்டவனை, மாடுஏறுவானை - இடபத்தின்மீது ஏறுகின்றவனை, மதகரித்தோல்போர்த்தானை - மதயானைத்தோலைப் போர்த்துக்கொண்டவனை, வேதப்பொடிபூசுவானை - திருநீறுபூசுவோனை, இப்பூதலத்து - இவ்வுலகத்தில், என் ஆத்தாளுடன் எதிர்த்து - என்தாயாகிய உமாதேவியோடெதிர்த்து, அம்பலத்தே - அம்பலத்தின்கண்ணே, என்றும் ஆடிநிற்கும் - எந்நாளும் நடித்துநிற்கிற, கூத்தாடிப்பையலுக்கோ - கூத்தாடிப்பயலுக்கோ, மகளே - என்புதல்வியே, மயல்கொண்டனை - நீமோகங்கொண்டாய்—எ-று.

இது ஒருதாயானவள் நடனசபாபதிமீது மோகங்கொண்ட தன்மகளை நோக்கி வெறுத்துச்சொல்லியதாகக்கொள்க. வேதங்களால் சிறப்பித்துக்கூறப்படுதலால் திருநீறு வேதப்பொடியெனப்பட்டது. (கச)

கானவர்தாந்தினை கொய்தனரோகண்ட கண்ணலவோ
தேனமர்வண்டினங் காள்கிள்ளைகாள்செழுங் கானைவிட்டுப்
போனவன்றானல்லவோ நெடுங்கானிப் புனமல்லவோ
நானவன்றானல்லவோ சொல்லவேண்டு நடுக்கண்டதே.

இ-ள். கானவர்தாம் தினைகொய்தனரோ - குறவர்தாம் தினையறுத்தார்களோ, கண்டகண் அல்லவோ - கண்டகண்களல்லவோ, தேன் அமர் - தேனை விரும்புகிற, வண்டுஇனங்காள் - வண்டுக்கூட்டங்களே, கிள்ளைகாள் - கிளிகளே, செழுகானைவிட்டுப்போனவன் தான் அல்லவோ - செழியகாட்டைவிட்டுப்போனவனல்லவோ, நெடுங்கான் இப்புனம் அல்லவோ - நெடிய காடானது இப்புனமேயல்லவோ, நான் அவன்தான் அல்லவோ - நான அவனேயல்லவோ, நடுக்கண்டது சொல்லவேண்டும் - நடுவுநிலைமையாயிருந்து நீங்கள்கண்டதைச்சொல்லவேண்டும்—எ-று.

இதுஒருநாயகன் முந்தினநாளில்வந்து தான்கூடியநுபவித்த நாயகியைத் தினைப்புனத்தில் காணமையால் வருந்தி, அங்குள்ள வண்டுகள் முதலியவற்றைநோக்கித் தலைவியெங்கேபோனளென்று வினவியவாறு. (கரு)

தாராளனெங்க டிருநின்றைச்சேஷன் சயிலத்தின்பால்
நீரார்முகிற்குழற் பெண்பேதையைவிட்டு நீபிரிந்தால்
சீராமனில்லை யமுதில்லையஞ்சனைச் செல்வனில்லை
காரார்பொழில்வளர் காழிப்பிரானில்லை காப்பதற்கே.

இ-ள். தார்ஆளன் - மலர்மாலையை யுடையவனாகிய, எங்கள் திருநின்றைச் சேஷன்சயிலத்தின்பால் - எங்கள் திருநின்றைச்சேஷன்மலையினிடத்து, நீர் ஆர்முகில் - நீர்நிறைந்த மேகம்போன்ற, குழல் - கூந்தலையுடைய, பெண்பேதையைவிட்டு - என்பேதைப்பெண்ணைவிட்டு, நீபிரிந்தால் - நீபிரிவையாயின், காப்பதற்கு - (இறந்துபடுந்தன்மையளாகிய இவளையிறந்துபடாமல்) காப்பாற்றுதற்கு, சீராமன் இல்லை - ஸ்ரீராமர் இல்லை, அமுதுஇல்லை - அமிர்தமில்லை, அஞ்சனைச் செல்வன் இல்லை - அஞ்சனாதேவிக்குப் புதல்வனாகிய அநுமானில்லை, கார்ஆர் பொழில்வளர் - மேகங்கள்தங்கிய சோலைகள் வளராநிற்கிற, காழிப்பிரான் இல்லை - சீகாழிக்கிறைவராகிய திருஞானசம்பந்த சுவாமியில்லை. (யானென்செய்வேன்)—எ-று.

ஒருதாயானவள், தன்பெண்ணைவிட்டுப் பிரியப்போகிற தலைவனைநோக்கி, கல்லைப் பெண்ணாக்கிய ஸ்ரீராமரும், செத்தாரைப் பிழைப்பிக்கிற அமிர்தமும், சஞ்சீவிமலையைக் கொண்டுவந்த அநுமானும், எலும்பைப் பெண்ணாக்கின திருஞான சம்பந்தரும் இல்லாத இக்காலத்தில், நீ யிவளைவிட்டுப் பிரிந்தால், இவள் இறப்பாள், இறவாமற்காப்பதற்கு வேறொருவருமில்லையென்று கூறினளென்பதுகருத்து. (கசு)

அம்பளவெவ்வள வவ்வளவேவிழி யார்ந்தகொவ்வைச்
செம்பளமெவ்வள வவ்வளவேயிதழ் சீர்கொள்வஞ்சிக்
கொம்பளவெவ்வள வவ்வளவேயிடை கூறெலுமிச்
சம்பளமெவ்வள வவ்வுளவேதனந் தையலுக்கே.

இ-ள். தையலுக்கு - இந்தப் பெண்ணுக்கு, விழி - கண், அம்பு அளவு எவ்வளவு - அம்பினது அளவு எவ்வளவோ, அவ்வளவே - அவ்வளவினதே, இதழ் - அதரம், ஆர்ந்த - நிறைந்த, கொவ்வை - கோவையின், செம்பளம் - செவப்பாகியகனி, எவ்வளவு - எவ்வளவோ, அவ்வளவே - அவ்வளவினதே, இடை - இடையானது, சீர்கொள் - சிறப்பைக்கொண்ட, வஞ்சிக்கொம்பு - வஞ்சிக் கொடியானது, எவ்வளவு - எவ்வளவினையுடையதோ, அவ்வளவே - அவ்வளவினதே, தனம் - தனங்கள், கூறு - சொல்லப்பட்ட, எலுமிச்சம் பளம் எவ்வளவு - எலுமிச்சைக்கனி யெவ்வளவோ, அவ்வளவே - அவ்வளவினதே—எ-று.

இரண்டாமடியிலும் நான்காமடியிலும் பழம் என்பது எதுகைநோக்கிப் பளம் எனவந்தது, இது தென்னாட்டில் சாதாரணவழக்கு. இது இறையோன் இறைவி தன்மையியம்பல் என்னுந் துறையின்பாற்படும். (கஎ)

நச்சணிகண்டத்த ராரூர்த்தியாகர் நளினவெற்பில்
கச்சணியும்முலை மாதேயிதுவென்ன காரணமோ
அச்சுதனுமத் திரண்டாமெழுத்தி னரையெழுத்தில்
வச்சிரபாணி மனையாள்பகைவந்து வாய்த்ததுவே.

இ-ள். நச்சு அணி கண்டத்தர் - நஞ்சைத் தரித்த கண்டத்தை யுடையவர், ஆரூர்தியாகர் - திருவாரூர்த்தியாகர், (அவரது) நளினவெற்பில் - நீர் வளமுள்ள மலையில், கச்சு அணியும் - கச்சணிந்த, முலை - தனங்களையுடைய, மாதே - பெண்ணே, இது என்னகாரணமோ - இதுயாதுகாரணமோ, அச்சுதன் நாமத்து - திருமாலின் பெயராகிய அரி என்பதின், இரண்டாம் எழுத்தில் - இரண்டாமெழுத்தாகிய ரி என்பதின், அரை எழுத்தில் - பாதி யெழுத்தில், (பாதிரியில்) வச்சிரபாணி மனையாள் - வச்சிரக்கையனாகிய இந்திரன் மனையாள், (சசி - சந்திரன்) பகை - (அவனுக்குப்) பகையாகிய தாமரைமலர், வந்துவாய்த்தது - வந்திருந்தது—எ-று.

பாதிரிமரத்தில் தாமரைமலர் இருந்தது என்பது கருத்து. சந்திரனுக்குப் பகை பாம்பு எனவும் சிலர் கூறுவர். இது அலர்க்குறியாதலால் அது பொருந்தாது. (கஅ)

போமேபொழுது வருமேமதியும் புரண்டெனங்கம்
வேமேமதனன் சுரந்தைக்குமேதைத்த புண்வழியிற்
பூமேவுதென்றல் புகுமேயென்பெண்புத்தி போய்விடுமே
கோமேதகப்புயலே மழவாபள்ளி கொண்டவனே.

(இ-ள். சோமேதகப் புயலே - கோமேதகம் போன்ற மேகமே, மழவா- மழவனே, பள்ளிகொண்டவனே—, பொழுதுபோமே - பகற்பொழுது போகுமே, மதியும் வருமே - சந்திரனும் வருவனே, என் அங்கம்புரண்டு வேமே- என்னுடம்புபுரண்டு வேகுமே, மதனன் சரம்தைக்குமே - மன்மதபாணங்கள் தைக்குமே, தைத்தபுண்வழியே - தைத்த புண்ணின்வழியாக, பூமேவுதென்றல் புகுமே - பொலிவுபொருந்திய தென்றற்காற்று நுழையுமே, என்பெண்புத்திபோய்விடுமே - என் பெண்ணறிவு நீங்கிவிடுமே, யான்என்செய்வேன்.) எ-று.

இது மாலைக்காலம் வரக்கண்டு தலைவிவருந்திக்கூறியது. பள்ளிகொண்டான் ஒரு பிரபுவின்பெயர். (கக)

பாலினுமின்சொற் குயிலினுமென்மொழிப் பாவைநல்லாள்
மேலினுங்காமன் சரந்தைக்குமேவட வேங்கடம்விட்
டாலினும்வேலை நடுவினும்பாம்பினு மாத்துரத்துங்
கோலினுங்கண்வளர் வாய்மழவாபள்ளி கொண்டவனே.

இ-ள். பாலினும் - பாலினும், இன்சொல் குயிலினும் - இனிதாகிய சொல்லையுடைய குயிலினும், மெல்மொழி - மிருது வசனத்தையுடைய, பாவைநல்லாள்மேல் - பாவைபோலு முருவமுள்ள என் பெண்ணின்மீது, இன்னும் - இன்னமும், காமன்சரம்தைக்குமே - மன்மதபாணங்கள் தைக்குமோ, வடவேங்கடம்விட்டு - வடவேங்கடத்தை விட்டு, ஆலினும் - ஆலிலையினும், வேலைநடுவிலும் - கடல் நடுவிலும், பாம்பினும் - ஆதிசேடன்மேலும், ஆதுரத்தும் - பசுக்களையோட்டுகின்ற, கோலினும் - மாட்டாங் கோலின்மீதும், கண்வளர்வாய்-கண்ணுறங்குவோனே, மழவா—,பள்ளிகொண்டவனே-எ-று.

பள்ளிகொண்டவனே, நீயிவளைக்கலந்த இக்காலத்தும் இவள்மீது மன்மதபாணங்கள் தைக்குமோ தையா என்பதுகருத்து. இது தாய்க்கூற்று. ()

மெய்யினுநல்லவ ரீனம்பொறார்மயிர் வீழ்தொடக்கம்
செய்யினுமானக் கவரியுய்யாசிற் றினக்கயவர்
வையினும்வாழ்வர் தகரையக்காது மயிருமொக்கக்
கொய்யினும்பின்செலு மேமழவாபள்ளி கொண்டவனே.

இ-ள். மெய்யினும் நல்லவர் - உண்மையில் நல்லவர், ஈனம் பொறார்- இழிவைப் பொறுக்கமாட்டார், மயிர்வீழ் தொடக்கம் செய்யினும் - மயிர்உதிரத் தொடங்கினாலும், மானம்-மானத்திற் சிறந்த, கவரி-கவரிமான், உய்யா- பிழைக்கமாட்டா, சிற்றினக்கயவர் - சிற்றினமாகிய கீழ்மக்கள், வையினும் வாழ்வர் - ஒருவர் வைதாலும் உயிர்வாழ்வர், தகரை - ஆட்டை, அக்காதும் மயிரும் ஒக்ககொய்யினும் - அந்தக் காதுகளையும் மயிரையும் ஒருமிக்க அறுத்தாலும், பின்செல்லும் - (அறுத்தவன்) பின்னேபோகும், மழவா - பள்ளிகொண்டவனே—எ-று.

மானமுள்ள மேன்மக்கள் ஒரு அவமானம் நேர்ந்தால் உயிர் விடுவர், கீழ்மக்கள் உயிர்வாழ்வர் என்பது கருத்து. (உக)

மாலாக்கியென்னைப் பெருவயதாக்கியென் மார்பின்முலை
பாலாக்கியங்கம் பசுநரம்பாக்கியப் பாவையரை
மேலாக்கிச்சிக்கு விளக்கெண்ணெயாக்கி யென்மேனியெங்குந்
தோலாக்கவோமகனே பிள்ளையாய்வந்து தோன்றினையே.

இ-ள். மகனே - மைந்தனே, என்னை மால் ஆக்கி - என்னை மயக்கப் பண்ணி, பெருவயது ஆக்கி - முதிர்ந்த வயதுடையவளாக்கி, என்மார்பில் முலை - என்மார்பிலுள்ள தனங்களை, பால் ஆக்கி - பாலுருவாக்கி, அங்கம்- உடம்பை, பசுநரம்பு ஆக்கி - பச்சைநரம்புகள் தோன்றப்பண்ணி, அப்பாவை யரை - அந்தமாதரை, மேல் ஆக்கி - மேலாகச் செய்து, என்மேனி எங்கும் சிக்குவிளக்கெண்ணெய் ஆக்கி - என்னுடம்புமுழுதும் விளக்கெண்ணெயின் சிக்குநாற்ற முண்டாக்கி, தோல் ஆக்கவோ - தோலாகச் செய்யத்தானோ, பிள்ளையாய் வந்துதோன்றினை - பிள்ளையாய்வந்துபிறந்தாய்—எ-று.

பாலகனே, பரத்தையரைமேலாக்கி, என்னைத் தாழ்வுபடுத்தவோ நீயெனக்கு மகனாகப்பிறந்தாய் என்பது கருத்து. இது பாலனைப்பழித்தல். (உஉ)

சதிராயிருந்த ரதிமாமிமன்மதன் சற்பனைசெய்
தெதிராளியாயைங் கணைதூவவானத் திருந்துகனல்
மதிவாரிவீச வினவைமறந்து மதிமயங்கிப்
பதினயிரங்கொட்டைப் பாக்காயிருந்தனள் பைங்கொடியே.

இ-ள். சதிராய் இருந்த - அழகாயிருந்த, ரதிமாமி - ரதிதேவிக்கு மாமியாகிய இலக்குமிபோன்ற, பைங்கொடி - என் பெண்ணானவள், மன்மதன் சற்பனைசெய்து - மன்மதன் வஞ்சனைசெய்து, எதிராளி ஆய் - பகைவனாகி, ஐங்கணை தூவ - பஞ்ச பாணங்களைச்சிந்த, மதிவானத்து இருந்து - சந்திரன் ஆகாயத்திலிருந்து, கனல்வாரி வீச - நெருப்பை வாரியிறைக்க, வினவை மறந்து - வினவுதலைமறந்து, மதிமயங்கி - அறிவுமயங்கி, பதினயிரம் கொட்டைப்பாக்கு ஆய் இருந்தனள் - அமணமாயிருந்தாள்—எ-று.

பதினயிரம் கொட்டைப்பாக்கு சேர்ந்ததொகை அமணமென்று சொல்லப்படும். அம்மணமானள் என்பது கருத்து. அமணம் - நிருவாணம். (உங)

அன்பட்டதிக்கெங்கும் போற்றுந்தென்கோட்டுக் கதிபதியாய்ப்
பொன்பட்டஞ்சூடும் ரகுநாதபூப விப்பூதலத்தே
நின்பட்டமேபட்ட நீயேதுரைமற்றிந் நீணிலத்தோர்
தன்பட்டமென்பட்டந் தோலாலடிபடுந் தம்பட்டமே.

இ-ள். அன்பு - அன்பினல், அட்டதிக்கு எங்கும் - அட்டதிசைகளாகிய எவ்விடத்தும், போற்றும் - துதிக்கப்படுகிற, தென்கோட்டுக்கு அதிபதியாய் - தென்கோட்டுக்குத் தலைவனுகி, பொன்பட்டம் சூடும் - பொன்பட்டத்தைத்தரித்த, ரகுநாத பூப - ரகுநாத பூபதியே, இப்பூதலத்தில் - இவ்வுலகத்தில், நின்பட்டமே பட்டம் - உன்பட்டமே பட்டம், நீயே துரை - நீயே பிரபு, மற்று இ நீள்நிலத்தோர் தன்பட்டம் என்பட்டம் - மற்றை பெரிய இவ்வுலகத்தாரது பட்டம் என்ன பட்டம், தோலால் அடிபடும் தம்பட்டமே - தோலாற்செய்து அடிக்கப்படுகிற தம்பட்டமே யாகும்—எ-று.

தம்பட்டம் - பறை. (உ௪)

சேமன்புதல்வன் செழுங்குன்றவேலன் செழுங்கிரியில்
காமன்பகைவன் கரிமுந்துமாகினங் கைவலவா
பூமன்கணையு மதியுமிவ்வாடையும் பூசலிட
மாமன்றமையன் றகப்பனென்றேவஞ்சி வாடுவளே.

இ-ள். வலவா - பாகனே, சேமன்புதல்வன் - இடபத்துக்கிறைவனுகிய சிவபிரானுக்குப் புதல்வன், செழுங்குன்ற வேலன் - திருச்செழுங்குன்றத்திலுள்ள வேலன், (அவனது) செழுங்கிரிமேல் - செழிய மலையின்மீது, காமன் கரி - கற்பகச் சோலைக்குத் தலைவனுகிய இந்திரன் யானையாகிய மேகம் என்கிற, மன்பகை முந்துமாகில் - வலியபகை முந்தினல், நங்கை - நம்பெண்ணுகிய, வஞ்சி - கொடிபோல்வாள், பூமன் கணையும் - மன்மத பாணங்களும், மதியும் - சந்திரனும், இவ்வாடையும் - இந்த வாடைக்காற்றும், பூசல் இட் - போரிட, மாமன் - குதிரை செலுத்துதலில் வல்லவனுகிய நகுலன், தமையன் - அவன் தமையனுகிய தருமன் (யமன்) என்றே - என்றெண்ணியே, வாடுவள் - வாடுவாள்—எ-று.

பாகனே தேரை விரைவாய்ச் செலுத்தவேண்டும் என்பதுகருத்து. (உரு)

சூலேறிச்சங்க மடவார்குடையுந் துறைக்கொதுங்கி
வேலேறுங்கண்ணியர் கைக்குடநீர்புக்கு மீண்டுமுழும்
சாலேறிமுத்தந் தனையீனுந்தண்வய லூரனம்பால்
மாலேறுவான்பரி மாவேறினனடி மாமயிலே.

இ-ள். சங்கம் - சங்குகள், சூல் ஏறி - கருப்ப முதிர்ந்து, மடவார்குடையும் - மாதர்மூழ்குகின்ற, துறைக்கு ஒதுங்கி - துறைகளில் ஒதுங்கி, வேலேறும் கண்ணியர் - வேல்போலுங் கண்களையுடைய அந்தமாதரது, கைக்குடம் நீர்புக்கு - கைக்குடத்தின் நீரிற்புகுந்து, மீண்டும் - மறுபடியும், உழும் சால் ஏறி - உழுபடைச் சாலிலேறி, முத்தம் தனையீனும் - முத்துக்களைப் பெறுகின்ற, தண் - குளிர்ந்த, வயலூரன் - வயல்சூழ்ந்த ஊரையுடைய தலைவன்,

நம்பால் - நம்மிடத்தில், மால் ஏறுவான் - காம மிகும்பொருட்டு, பரிமா ஏறி னன் - குதிரையேறிவந்தான், அடிமாமயிலே - அடி அழகிய மயில்போல்வா ளே—எ-று.

ஊரன் - மருதநிலத்தலைவன். தலைவன் நமக்கு ஆசையதிகரிக்கக் குதி ரையேறிவந்தான் என ஒருநாயகிக்குத் தோழிகூறியது. (உ௬)

பாட்டுக்குப்பாத்திர நல்லோரைப்பாடிப் பதம்பெறலாம்
மோட்டுக்குலாமரைப் பாடிலென்னுமுழத் துண்டமுண்டோ
வீட்டுக்குச்சோற்றுக்குண் டோவெள்ளைவாய்க்கொரு வெற்றிலையோ
ஏட்டுக்குச்சேதங்கண் டாய்வெள்ளைநாவ லிருப்பவனே.

இ-ள். பாட்டுக்கு பாத்திரம் - பாடலேற்கப் பாத்திரமாயிருக்கிற, நல் லோரைப்பாடி - மேன்மக்களைப்பாடி, பதம்பெறலாம் - நல்ல பதவியையடை யலாம், மோட்டுகுலாமரைப்பாடின் - கீர்மூடராகிய குலாமர்களைப்பாடினால், என்னும் - என்னபிரயோசனமுண்டாகும், முழத்துண்டும் உண்டோ-முழத் துணியுண்டோ, வீட்டுக்கு சோற்றுக்கு உண்டோ - வீட்டுக்குச் சாப்பாட் டுக்குண்டோ, வெள்ளைவாய்க்கு ஒருவெற்றிலையோ - வெள்ளைவாய்க்கு ஒரு வெற்றிலையுண்டோ, எட்டுக்குசேதம்-எட்டுக்குநஷ்டம், வெள்ளைநாவல்இருப் பவனே - வெண்ணாவல் மரநிழலிலிருப்பவனே—எ-று.

வெள்ளை நாவலிருப்பவன் - சம்புகேச்சுரன், (திருவானைக்காவிலிருக்கும் சிவபிரான்.) மேன்மக்களைப்பாடினால் பயனுண்டு, கீழ்மக்களைப்பாடினால் பய னில்லையென்பது கருத்து. (உஎ)

கெலிக்குஞ்சிங்கத்துக்கும் யானைக்கும்வெற்றிக் கெருடனுக்கும்
வலிக்குறுசிங்கி யரவுக்குநண்டுக்கும் வன்கவிக்கும்
புலிக்குஞ்செம்மானுக்கு ஞானிக்குமூடற்கும் பூனைக்கும்வீட்
டெலிக்குஞ்சங்காத்தமுண் டோவெள்ளைநாவ லிருப்பவனே.

இ-ள். வெள்ளைநாவ லிருப்பவனே - வெண்ணாவலின் கீழிருப்பவனே, கெலிக்கும் - வெற்றியடைகிற, சிங்கத்துக்கும் யானைக்கும் - சிங்கத்துக்கும் யானைக்கும், வெற்றிக் கெருடனுக்கும் - வெற்றியையுடைய கருடனுக்கும், வலிக்கு உறுசிங்கி அரவுக்கும் - வலிமையில்மிகுந்த விஷத்தையுடைய பாம் புக்கும், நண்டுக்கும் வல்கவிக்கும் - நண்டுக்கும் வலிய குரங்குக்கும், புலிக்கும் செம்மானுக்கும் - புலிக்கும் செவந்தமானுக்கும், ஞானிக்கும் மூடற்கும் - ஞா னிக்கும் மூடனுக்கும், பூனைக்கும் வீட்டு எலிக்கும் - பூனைக்கும் வீட்டிலுள்ள எலிக்கும், சங்காத்தம் உண்டோ - நட்புளதோ—எ-று.

இவை ஒன்றுக்கொன்று விரோதிகளை யென்பது கருத்து. (உஅ)

கலங்காதவீரிய ராணுலும்போகின்ற காலம்வந்தால்
நலங்காமலேவெல்ல மாட்டுவரோவிந்த நானிலத்தில்

சலங்காணுங்கோட்டை மதிலேழ்தலைபத்துத் தானிருந்தும்
இலங்காபுரிநின்றதோ வெள்ளைநாவ லிருப்பவனே.

இ-ள். கலங்காத வீரியர் ஆனாலும் - கலங்காத வீரத்தன்மையுள்ளவராயினும், போகின்ற காலம் வந்தால் - அந்த வீரியம் முதலியவை போகுங் காலம் வந்தால், நலங்காமல் வெல்ல மாட்டுவரோ - உடம்பு வருந்தாதிருந்து பகைவரை வெல்ல மாட்டுவரோ, இந்த நானிலத்தில் - இந்தவுலகத்தில், சலம் காணும் - நீர்சூழ்ந்த, கோட்டைமதில்எழ் - கோட்டையைவளைந்த மதில்கள் எழும், தலை பத்து - பத்துத் தலைகளும், இருந்தும் - (ராவணனுக்கு) இருந்தும், இலங்காபுரி நின்றதோ - இலங்கைப் பட்டணம் அழியாதிருந்ததோ எ-று.

எல்லாம் ஆகுங்காலத்தில் ஆகும், போகுங்காலத்தில் போகும் என்பது கருத்து. (௪௯)

## சுரம் போக்கு.

எறிக்குமதிச்சடை யண்ணமலைய ரெழிற்கிரியில்
பறிக்கின்றபூவை மிதிக்கப்பொருளந்தப் பாதத்தினால்
பொறிக்கண்பிசாசுக ணெற்களைத்தூவிப் பொரிபொரித்துக்
கொறிக்கின்றபாலையி லெப்படிபோயினள் கோமளமே.

இ-ள். எறிக்கும் - நிலவெறிக்கிற, மதி - சந்திரனையணிந்த, சடை - சடாபாரத்தையுடைய, அண்ணமலையர் - திருவண்ணமலையாரது, எழில் கிரியில் - அழகியமலையில், கோமளம் - என்பெண்ணனவள், பறிக்கின்றபூவைமிதிக்கப் பொருள் - பறிக்கப்படுகிறமலர்களை மிதிக்கவும் பொறுக்கமாட்டாள், அந்த பாதத்தினால் - அந்தப் பாதத்தைக்கொண்டு, பொறிகண் பிசாசுகள் - நெருப்புப்பொறி சிந்துகின்ற கண்களையுடைய பேய்கள், நெற்களை தூவி - நெற்களைச்சிந்தி, பொரிபொரித்து கொறிக்கின்ற பாலையில் - பொரி பொரித்துக் கறிக்கிற பாலைநிலத்தில், எப்படிபோயினள் - எவ்வாறு நடந்துபோனாள் - எ-று.

சுரத்திற்சென்ற தலைவியின் அடிமென்மையைக் குறித்துத் தாய்கூறி வருந்தியது. (௫0)

திரைகடலோடித் திரவியந்தேடென்று செப்புமௌவை
உரைபழுதன்றெனச் சோர்ந்தாள்கழுக்குன்றத் தோர்மடமான்
அரைபனிநீர்சந் தனங்கொண்டுபொங்கிய ராற்றியபின்
இரைகடல்போய்வர வெத்தனைநாளென் றெழுந்தனளே.

இ-ள். திரைகடல் ஓடி திரவியம் தேடு என்று - அலைகளையுடைய கடலில் கப்பலேறிப்போய் திரவியத்தைச் சம்பாதியென்று, செப்பும் - சொன்ன, ஔவை உரை - ஔவையார் சொல்லானது, பழுது அன்று என - பழுதல்ல வென்றுசொல்ல (கேட்டு), கழுக் குன்றத்து - திருக்கழுக் குன்றத்திலுள்ள, ஓர் மடமான் - ஒரு இளமையுள்ள மான்போல்வாள், சோர்ந்தாள் - மூர்ச்சித்

தான், பனிநீர் அரைசந்தனம் கொண்டு - பனிநீர் அரைத்த சந்தனம் இவற்றைக்கொண்டு, பாங்கியர் ஆற்றியபின் - தோழியர் (விடாயைத்) தணித்த பிறகு, இரைகடல்போய்வர - ஒலிக்கின்றகடலில் போய்வருதற்கு, எத்தனை நாள் என்று - எத்தனைநாள் செல்லுமென்று சொல்லிக்கொண்டே, எழுந்தனள் - எழுந்தாள்—எ-று. (௩௧)

## காட்சி.

மேகம்பிறைசிலை வேல்குமிழ்வள்ளைவெண் முத்தந்தொண்டை
பூகம்பசுங்கழை தேனுமிழ்காந்தள் பொற்பாலிலைநூல்
நாகங்கதலி யலவன்வரானன் னளினமுண்டு
மாகம்பொழிற்றிருத் தில்லையிலேயொரு வல்லியிலே.

இ-ள். மாகம்பொழில் - ஆகாயத்தை யளாவிய சோலை சூழ்ந்த, திருத்தில்லையிலே - திருத் தில்லையின்கண், ஒருவல்லியிலே - ஒரு கொடியின்கண்ணே, மேகம் - மேகமும், பிறை - பிறையும், சிலை - வில்லும், வேல்-வேலும், குமிழ் - குமிழம்பூவும், வள்ளை - வள்ளைத் தண்டும், வெண் முத்தம் - வெள்ளியமுத்தும், தொண்டை - கோவைக்கனியும், பூகம்-கமுகமும், பசுங்கழை-பசுமையாகிய மூங்கிலும், தேன் உமிழ்காந்தள் - தேனைப் பொழிகின்ற காந்தள் மலரும், பொற்பு ஆல் இலை - அழகிய ஆலிலையும், நூல் - நூலும், நாகம்-பாம்பின் படமும், கதலி - வாழைத் தண்டும், அலவன் - நண்டும், வரால்-வரால்மீனும், நல்நளினம் - நல்லதாமரைப்பூவும், உண்டு - உளது—எ-று.

வல்லியென்றது ஒருபெண்ணை, மேகம் - கூந்தல், பிறை-நெற்றி, சிலை-புருவம், வேல் - கண், குமிழ் - நாசி, வள்ளை - காது, முத்தம் - பல், தொண்டை - அதரம், பூகம் - கழுத்து, கழை - தோள், காந்தள்-கை, ஆலிலை-வயிறு, நூல் - இடை, நாகம் - அல்குல், கதலி - தொடை, அலவன் - முழந்தாள், வரால் - கணைக்கால், நளினம் - பாதம். (௩௨)

## கிள்ளைவிடு தூது.

இளந்தத்தையேநல் லமுதத்தையேபுசித் தென்கரத்தில்
வளர்ந்தத்தையாது முணர்ந்திலையேமய லாகிமனந்
தளர்ந்தத்தையேயென் றிருவரங்கேசர்க்குச் சாற்றச்சொன்னால்
அளந்தத்தையேயளந் தாய்பின்னையாது மளந்திலையே.

இ-ள். இளம் தத்தையே - இளமை பொருந்திய கிளியே, நல் அமுதத்தையே புசித்து - நல்ல பாலையேயுண்டு, என்கரத்தில் வளர்ந்தத்தை - என் கையில் வளர்ந்ததை, யாதும் உணர்ந்திலையே-சிறிதும் நினைந்திலையே, மயல் ஆகி - மோகமுண்டாகி, மனம் தளர்ந்தத்தை - மனம் வாடினதை, என் திருவரங்கேசர்க்கு - என் திருவரங்கநாதருக்கு, சாற்றச் சொன்னால் - சொல்லச்

சொன்னால், அளந்தத்தையே அளந்தாய்-சொன்னதையே சொன்னாய், பின்னையாதும் அளந்திலை - மற்றொன்றையுஞ் சொன்னாயில்லை—எ-று.

அளந்தத்தையே யளந்தாய் என்றது உலகவழக்கு. இது தலைவி கிள்ளையை நோக்கிச்சொல்லியது. (௩௩)

ஆயத்துறையிற் பிறந்துவந்தந்தணர் பால்குடித்து
மாயக்கண்வேசை யிடத்தேவளர்ந்து வண்ணானொருநாள்
ஏயப்புலவ ரிடத்தெட்டுநாள்செட்டி யேனென்றுபின்
போயக்கசாலை புகுந்தனள்காணந்தப் பொய்மகளே.

இ-ள். அந்த பொய்மகள் - அந்தப்பொய் யென்னும்பெண், ஆயத்துறையில் பிறந்து - சூதாடுமிடத்திற் பிறந்து, வந்து அந்தணர்பால் குடித்து - வந்துவேதியர் பாலைக்குடித்து, மாயக்கண் வேசையிடத்தே வளர்ந்து - வஞ்சகமுள்ளகண்களையுடைய வேசையிடத்திலேவளர்ந்து, வண்ணான் ஒருநாள்ஏய-வண்ணானொருநாள் கலக்க, புலவரிடத்து எட்டுநாள் - புலவரிடத்தில் எட்டுநாள்கூடியிருந்து, செட்டி என் என்று - செட்டி ஏனென்று வார்த்தையாடி, பின்போய் - பிறகுபோய், அக்கசாலை புகுந்தனள் - கம்மாலையில் பிரவேசித்தாள்—எ-று.

ஆயத்துறை முதலிய இடங்களில் பொய் மிகுதியாயிருக்கு மென்பது கருத்து. (௩௪)

## சுரம் போக்கு.

பூச்சிலைக்கன்னற்கைச் சேஷாசலேந்த்ரன் பொருப்பிடத்தே
காய்ச்சியபாலைக் குடிபோவென்றேனந்தக் காரிகையும்
பேச்சிலெத்துக்கள்ளி பின்கைகைராமற்கு முன்சொன்னதாய்
வாய்ச்சுதென்றேநடந் தாள்பாலையான வனந்தனிலே.

இ-ள். பூ - அழகாகிய, கன்னல் சிலை - கருப்புவில்லைத் தாங்கிய, கை-கையையுடைய, சேஷாசலேந்த்ரன் பொருப்பு இடத்தே - சேஷாசலேந்திரனது மலையின் கண்ணே, காய்ச்சியபாலைக் குடிபோவென்றேன் - காய்ச்சின பாலைக் குடிபோ வென்று சொன்னேன், அந்தக்காரிகையும் - அந்தப் பெண்ணும், பேச்சில் எத்துக்கள்ளி - பேச்சில் எத்துக்கள்ளியாதலால், பின்-பிறகு, கைகை - கைகேசி, ராமற்கு - ஸ்ரீராமனுக்கு, முன்சொன்னதாய் வாய்ச்சுது என்றே - முற்காலத்தில் சொன்னதுபோல வாய்த்த தென்று சொல்லிக்கொண்டே, பாலையான வனந்தனிலே நடந்தாள் - பாலை வனத்தில் நடந்தனள்—எ-று.

இதுதாய்க்கூற்று. எத்துக்கள்ளி - ஏமாத்துந்திருடி. பாலைவனம் - நீரில்லாத வெளிநிலம். பாலைக்குடிபோ - பாலையில் குடியாகப்போ. (௩௫)

தோப்பிடுவாரில்லை தென்றல்வராமற் சுடுமதிக்குக்
காப்பிடுவாரில்லை காமன்வராமற் கருங்குயில்வாய்க்

காப்பிடுவாரில்லை தென்னரங்கேசர்க் கபயமென்று
கூப்பிடுவாரில்லையே வண்டுகாளென் குறைசொல்லியே.

இ-ள். வண்டுகாள் - வண்டுகளே, தென்றல்வாராமல் - தென்றற்காற்று வாராதிருக்கும்படிக்கு, தோப்பு இடுவார் இல்லை - தோப்புவைப்பவர் இல்லை, சுடுமதிக்கு காப்பு இடுவார் இல்லை - சுடுகின்றசந்திரனுக்குக் காவல்வைப்பவரில்லை, காமன்வாராமல் - மன்மதன் வாராதிருக்கும்படி, கருங்குயில்வாய்க்கு - கரிய குயிலின்வாய்க்கு, ஆப்பு இடுவார் இல்லை - முளையடிப்பவரில்லை, தென்னரங் கேசர்க்கு - தென்னரங்க நாதருக்கு, என் குறைசொல்லி - என் குறைகளைச்சொல்லி, அபயம் என்று கூப்பிடுவார் இல்லை - அபயம் என்று அழைப்பவரில்லை—எ-று.

இது தலைவி வண்டுகளைநோக்கிக் கூறியது. (௩௬)

வெறி விலக்கல்.

அணியார்கடுக்கை நறுந்தும்பைகங்கை யறுகுடனே
பணியார்சடாடவிக் கச்சாலைநாதர் பனிவரையில்
தணியாதமாமதப் பேய்பிடித்தாடுமித் தையலுக்கு
மணியாட்டினல்விடுமோ சொல்லுவீரிந்த மாநிலத்தே.

இ-ள். அணி ஆர் கடுக்கை - அழகுநிறைந்த கொன்றை, நறுதும்பை - மணமுள்ளதும்பை, கங்கை - கங்கை, அறுகுடனே - அறுகம் புல்லுடன், பணி - பாம்பும், ஆர் - பொருந்திய, சடா அடவி - சடைக்காட்டையுடைய, கச்சாலைநாதர் - கச்சாலை நாதரது, பனிவரைமேல் - குளிர்ந்த மலையின்மீது, தணியாத - குறையாத, மாமதப் பேய்பிடித்து - பெரிய மதப்பேய்பிடித்து, ஆடும் - ஆடுகின்ற, இ தையலுக்கு - இந்தப் பெண்ணுக்கு, மணி ஆட்டினல் விடுமோ - மணியை யசைத்தால் (அந்தப்பேய்) விட்டு நீங்குமோ, சொல்லுவீர் - சொல்லுங்கள், இந்த மாநிலத்து - இந்தப் பெரியவுலகத்தில்—எ-று.

மதப்பேய் - மன்மதப் பேய், மணிஆடு - அதனையுடைய ஆடு, அதர் - ஆட்டின் கழுத்தில் இரண்டு மணிகள்போலத் தொங்குந்தோல், ஆட்டை வெட்டுதலால் இந்த மதப்பேய் நீங்காதென்பது கருத்து. (௩௭)

நயப்பு.

பாதாதிகேச முதலாயிவளைப் படைத்தமலர்
வேதாமருங்குல் வெளிவைப்பனோவிரி பூதலத்துள்
ஆதாரமின்றி யிரண்டிளநீரந் தரநிற்குமோ
ஏதாகிலுஞ்சற் றங்கில்லாதிராதிடை யேந்திழைக்கே.

இ-ள். பாதாதிகேசம் முதலாய் - அடிமுதல் முடிமுதலாகிய அவயவங்களுடன், இவளைபடைத்த - இவளைச் சிருட்டிசெய்த, மலர்வேதா - தாமரை

மலையுடைய பிரமன், மருங்குல் வெளிவைப்பனோ - இடையை வெளியாய் வைப்பனோ, விரிபூதலத்துள் - விசாலமாகிய பூமியில், ஆதாரம் இன்றி-ஆதாரமில்லாமல், இரண்டு இளநீர் - இரண்டிளநீர்கள், அந்தரம் நிற்குமோ - ஆகாயத்தில் நிற்குமோ (நில்லா ஆதலால்), எந்திழைக்கு - இந்தப்பெண்ணுக்கு, இடை - இடையானது, எதாகிலும் சற்று - யாதாயினும் சிறிது, அங்கு இல்லாது இராது - அவ்விடத்தில் இல்லாமலிராது, (இருக்கும்)—எ-று.

இரண்டு இளநீர் என்றது இரண்டு தனங்களை, இந்தமாதுக்கு இடையில்லையென்ற நெஞ்சுக்குத் தலைவன் கூறியது. (ங-அ)

குணமிருந்தாலுங் குலமிருந்தாலுங் கொழுந்தமிழின்
மணமிருந்தாலு மதியிருந்தாலும் வழுத்திடுவங்
கணமிருந்தாலுமோர் காசும்பெறாது சிங்காரவரைப்
பணமிருந்தாலவர்க் கெல்லாருமஞ்சலி பண்ணுவரே.

இ-ள். குணம் இருந்தாலும்-(ஒருவனுக்கு) நற்குண மிருந்தாலும், குலம் இருந்தாலும் - உயர்குல மிருந்தாலும், கொழுதமிழின்மணம் இருந்தாலும்-செழியதமிழின் மணமிருந்தாலும், மதி இருந்தாலும் - அறி விருந்தாலும், வழுத்திடு - துதித்தற்குரிய, வங்கணம் இருந்தாலும் - சிநேக மிருந்தாலும், ஓர் காசும் பெறாது - ஒருகாசும் பெறாது, சிங்காரம் - அழகாகிய, அரைப் பணம் இருந்தால் - அரைப்பண மிருந்ததானால், அவர்க்கு - (அந்தப்) பணமுடையவர்க்கு, எல்லாரும் - யாவரும், அஞ்சலி பண்ணுவர் - கைகுவிப்பார்கள்—எ-று.

அரைப்பணம் - அரையாகிய பாம்பின்படம், வரைப்பணம் - மலையோடு பாம்பின்படம். இப்பொருளுக்கு அவர்க்கு என்றது. அந்த மாதர்க்கு எனக் கொள்க. (ங-கூ)

உரகத்திலேகிடப்பான் சக்ரபாணி யுயர்ந்தகும்ப
கரகத்திலேகிடப்பான் குறுமாமுனி கன்னியர்கள்
விரகத்திலேகிடப்பான் காமராசன் மிகுந்தவெழு
நரகத்திலேகிடப்பான் கொழுமூர்முத்து நாகப்பனே.

இ-ள். சக்ரபாணி - திருமால், உரகத்திலே கிடப்பான் - ஆதிசேஷன் மீது கிடப்பான், குறுமாமுனி - அகத்தியன், உயர்ந்தகும்பகரகத்திலேகிடப்பான் - உயர்வாகிய குடமாகிய கரகத்திலே கிடப்பான், காமராசன் - மன்மதன், கன்னியர்கள் விரகத்திலே கிடப்பான் - மாதாது மோகத்திலேகிடப்பான், கொழுமூர் முத்துநாகப்பன் - கொழுமூர் முத்துநாகப்பன், மிகுந்த எழுநரகத்திலே கிடப்பான் - மிகுந்த எழ்நரகலோகத்திலேகிடப்பான்-எ-று.

இது கொழுமூர் முத்துநாகப்பனை ஒரு புலவன் இகழ்ந்து கூறியது. இகழ்சற் காரணம் புலவனுக் கீயாமை. (சo)

சேய்க்கறியுண்ட சிவன்மேலன்பற்றவன் சீசியவன்
வாய்க்கறியாத விடக்கானதுமில்லை மரக்கறியுங்
காய்க்கறியென்பதும் வேண்டான்சம்பாரங் கனக்கவிட்ட
நாய்க்கறியும்புசிப்பான் கொழூமூர்முத்து நாகப்பனே.

இ-ள். கொழூமூர் முத்து நாகப்பன்—, சேய்க்கறி உண்ட சிவன்மேல் அன்பு அற்றவன் - பிள்ளைக்கறியுண்ட சிவபெருமான்மீது அன்பில்லாதவன், சீசி - சைசை, அவன்வாய்க்கு அறியாதவிடச்கு ஆனதும் இல்லை - அவனதுவாய்க்கு அறியப்படாத மாமிசமானது மில்லை, மரக்கறியும் - மாவினுற் செய்யப்பட்ட கறிகளையும், காய்க்கறி என்பதும் - காயினுற் செய்யப்பட்ட கறிகளையும், வேண்டான் - விரும்பான், சம்பாரம்கனக்க இட்ட - சம்பாரம் அதிகமாய்ச்சேர்த்த, நாய்க்கறியும் புசிப்பான் - நாய்க்கறியையும் உண்பான் எ-று.

சேய்க்கறியென்றது சிறுத்தொண்டன் மகனுகிய சீராளன்கறியை, மரக்கறி - மாப்பலகாரம். சம்பாரம் - வாசனைப்பண்டம். (சக)

தருநிகரான கரன்செல்வநாளுந் தழைக்கும்புல்லூர்ப்
பெருவயனுடு தனிலென்னைப்போலொர் பிடாரன்வந்தே
ஒருகுடங்கொண்டொரு பாம்பாட்டினனிவ் வுலகினுள்ளே
இருகுடங்கொண்டரைப் பாம்பாட்டுவதென்ன வேந்திழையே.

இ-ள். ஏந்திழையே - பெண்ணே, தருநிகர் ஆனகரன் - கற்பகத்தருவுக்குச் சமானமான கையையுடையவன், செல்வம் நாளும்தழைக்கும் - செல்வம் நாள்தோறும் விருத்தியடைகின்ற, புல்லூர் - புல்லூர் என்கிற, பெருவயல் நாடுதனில் - பெருவயல் நாட்டில், என்னைப்போல் - என்னைப்போல, ஓர் பிடாரன்வந்து - ஒருபிடாரன்வந்து, ஒருகுடம்கொண்டு ஒருகுடத்தைக்கொண்டு, ஒருபாம்பு ஆட்டினன் - ஒருபாம்பையாட்டினுன், இவ்வுலகினுள்ளே - இவ்வுலகத்தில்; இருகுடம் கொண்டு - இரு குடத்தைக்கொண்டு, அரைப்பாம்பு ஆட்டுவது என்ன - அரைப்பாம்பை நீயாட்டுவது என்னவியப்பு-எ-று.

பிடாரன் - பாம்பாட்டி, இருகுடம்-இரண்டுதனம், அரைப்பாம்பு-அரையாகியபாம்பு, (அரை - அல்குல்) இதுதலைமகன்கூற்று. (சஉ)

தேனுட்டுமுல்லைத் தொடைரகுநாதன் செழித்தபுகழ்
பூநாட்டுமன்னர் தொழாமலிரார்மணிப் பூணணிந்த
வானுட்டரம்பையர் மண்ணுட்டரசர் மணத்தினுக்குக்
கானுட்டுவரிவன் கைநாட்டும்வேலினைக் கண்டுகொண்டே.

இ-ள். தேன்நாட்டும் முல்லைத்தொடை - தேன்நிலைபெற்ற முல்லைமலர் மாலையையணிந்த, ரகுநாதன் - ரகுநாதனது, செழித்தபுகழ் - செழித்த கீர்த்தியை, பூநாட்டுமன்னர் - பூமியில் நிலைபெற்ற அரசர்கள், தொழாமல் இரார்

வணங்கியிருக்கமாட்டார்கள், இவன்கைநாட்டும் வேலினைக்கண்டுகொண்டு வான்நாட்டு அரம்பையர் - விண்ணுலகத் தரம்பையர், மண்ணாடு அரசர் - நிலவுலகத்து வேந்தரது, மணத்தினுக்கு கால் நாட்டுவர் - மணத்தின்பொருட்டுக் கால்நாட்டுவர்—எ-று.

ரகுநாதனது கைவேலைக் கண்டளவில் நிலவுலகத்தார் பொருதிறந்து வீரசுவர்க்கம் புகுவரென்பது கருத்து. (சங)

ஞாயிறுபோய்விழத் திங்கள்வந்தெய்திட நண்ணியசெவ்
வாயனல்தூவப் புதனம்புகாயநல் வியாழம்வர
மேயிருவெள்ளிக் கலைசோரநானுன்னை மேவுதற்குத்
தாய்சனியாயினளே ரகுநாத தளசிங்கமே.

இ-ள். ரகுநாத தளசிங்கமே - ரகுநாத தளவாயாகிய சிங்கமே, ஞாயிறு போய்விழ - சூரியன்போய்க் கடலில்விழ, திங்கள்வந்து எய்திட - சந்திரன் வந்துபொருந்த, நண்ணியசெவ்வாய் அனல்தூவ - பொருந்திய அங்காரகன் நெருப்பைவீச, புதன் அம்புகாய - புதன் அம்புபோலச்சுட, நல்வியாழம்வர - நல்லவியாழம்வர, மேய இருவெள்ளிகலைசோர - உதயமான பெரியவெள்ளியினால் (சுக்கிரனால்) ஆடைநெகிழ, நான் உன்னைமேவுதற்கு - நான் உன்னைக் கூடுதற்கு, தாய் - என் தாய், சனியாயினள் - சனியானாளே—எ-று.

ஒருநாயகி தனக்குநேரிட்ட இராத்துயரமுழுதும் சொல்லிப் புலம்பியது. ()

ஆடியநாகஞ் சரோருகம்பானுநல் லம்புலியும்
சூடியநாதர் நயனமுமாலம்புஞ் சொற்பனுவல்
பாடியபாலனு மாய்வந்ததால் வெண்பணிலவயல்
கோடியகோன்சிவந் தான்றிருமார்பிற் குளிர்தொங்கலே.

இ-ள். வெள்பணிலம் - வெண்மையாகிய சங்குகள் தவழ்கின்ற, வயல்கோடிய - கோடி வயல்களையுடைய, கோன் - அரசனாகிய, சிவந்தான் - சிவந்தானது, திருமார்பில் - திருமார்பி லணிந்த, குளிர் தொங்கல் - குளிர்ந்த மாலையானது, ஆடியநாகம் - ஆடினபாம்பையும், சரோருகம் - தாமரை மலரையும், பானு - சூரியனையும், நல் அம்புலியும் - அழகிய சந்திரனையும், சூடிய நாதர் - தரித்த சிவபெருமானது, நயனமும் - கண்ணும், மால் அம்பும் - திருமாலின் அம்பும், சொல்பனுவல்பாடிய பாலனும் - சொன்மாலை பாடின பாலகனாகிய திருஞானசம்பந்தரும், ஆய்வந்தது - ஆகிவந்தது—எ-று.

இதுதாய்க்கூற்று. அன்றித் தோழிகூற்றெனினுமாம். சிவந்தானது மாலை, மன்மதனையும் கடலையும் அடக்கி, இவளைப் பிழைப்பித்தமையால் முறையே பரமசிவன் கண்ணையும் திருமாலம்பையும் சம்பந்தசுவாமியையும் ஒத்திருந்தது என்பது கருத்து. (சரு)

முருகார்முளரியு முள்ளியுமுண்டக மூரியரம்
பொருகாரிரும்புங் கனகமும்பொன்பொறித் தாரகையும்
குருகாருங்கெண்டையு மீனெனல்போலென் குரிசிலுக்கு
வருகாதலேதந்த மங்கையுநானு மடந்தையரே.

இ-ள். முருகுஆர் - தேன்பொருந்திய, முளரியும் முள்ளியும் - தாமரையும் முள்ளியும், முண்டகம் எனல்போல் - முண்டகம் என்று சொல்லப்படுதல்போலவும், மூரி - வலிமையுள்ள, அரம்பொரு - அரத்தினால் அராவப்படுகிற, கார்இரும்பும் கனகமும் - கரியஇரும்பும் சொர்ணமும், பொன் எனல்போல் - பொன்என்று சொல்லப்படுதல்போலவும், பொறிதாரகையும் குருகு ஆரும்கெண்டையும் - புள்ளிகளாய்த்தோற்றுகிற உடுக்களும் நாரைமுதலிய பறவைகளுண்ணுகின்ற கெண்டைகளும், மீன்எனல்போல் - மீன் என்று சொல்லப்படுதல் போலவும், என்குரிசிலுக்கு - என்தலைவனுக்கு, வருகாதல் தந்தமங்கையும்நானும் - மிகுவிருப்பைத்தந்த பரத்தையும்நானும், மடந்தையரே - மாதரேயாவோம்போலும்—எ-று.

இது பரத்தையிற்பிரிந்துபோய் மீண்டுவந்த தலைமகனோடு பிணங்கின தலைவிகூற்று. பரத்தையோடு என்னையும் சமமாக்கினனேயென்பது கருத்து.

அந்தக்கவி வீரராகவமுதலியார் ஈழநாட் டரசனைக்காணப்
போனபோது அவனிடத்திருந்த வித்துவான்கள்
சொற்படி அவன் திரைபோட் டிருந்
ததைக் குறித்துப் பாடியது.

நரைகோட்டிளங்கன்று நல்வளநாடு நயந்தளிப்பான்
விரையூட்டுதார்ப்புய வெற்பீழமன்னனென் றேவிரும்பிக்
கரையோட்டமீதின் மரக்கலம்போட்டுன்னைக் காணவந்தால்
திரைபோட்டுநீயிருந்தாய் சிங்கபூப சிரோமணியே.

இ-ள். விரைஊட்டுதார் - வாசனைபொருந்திய பூமாலையை யணிந்த, புயவெற்பு - புஜமலைகளையுடைய, ஈழமன்னன் - ஈழநாட்டரசன், நரைகோடு இளங்கன்றும் - வெள்ளியகொம்புகளையுடைய இளமையாகிய பசுங்கன்றுகளையும், நல்வளநாடும் - நல்லவளமமைந்த நாட்டையும், நயந்துஅளிப்பான் என்றேவிரும்பி - அன்போடுகொடுப்பானென்று விரும்பியே, கரைஓட்டம் மீதில் - கரையோரத்தில், மரக்கலம்போட்டு - தெப்பம்போட்டுக்கொண்டு, உன்னைக்காணவந்தால் - உன்னைக்காணும்பொருட்டு நான்வந்தால், நீதிரைபோட்டு இருந்தாய் - நீதிரைபோட்டுக்கொண்டிருந்தாய், சிங்கபூபசிரோமணியே - சிங்கம்போன்றராஜசிகாமணியே—எ-று.

உன்னைக்காணவேண்டுமென்கிற அவாவினால் கப்பலேறிவந்த எனக்கு, நீவெளியில் தரிசனம் தந்திலையென்பதாம். (சஎ)

வண்டோவிழிநுதல் வான்பிறையோவல்குன் மான்குளம்போ
செண்டோமுலைநித் திலமோநகையிடை சேர்துடியோ
கண்டோமொழிகுழல் காரோமுகங்கம லம்பவளத்
துண்டோவிதழ்கன்னித்தண்டோதொடையிந்தத்தோகையர்க்கே.

இ-ள். இந்ததோகையர்க்கு - இந்தமாதர்க்கு, விழிவண்டோ - கண்கள் வண்டுகளோ, நுதல்வான்பிறையோ-நெற்றிமேகத்திலுள்ளபிறையோ, அல்குல்மான்குளம்போ - அல்குல் மானின்குளம்போ, முலைசெண்டோ - தனங்கள் பூச்செண்டுகளோ; நகைநித்திலமோ - பல்முத்துத்தானோ, இடைசேர் துடியோ-இடையானதுபொருந்திய உடுக்கையோ, மொழிகண்டோ-சொல் கற்கண்டோ, குழல்காரோ - கூந்தல்மேகமோ, முகம்கமலமோ - முகம்தாமரைமலரோ, இதழ்பவளத்துண்டோ - அதரம்பவளத்துண்டுதானோ, தொடைகன்னித்தண்டோ - தொடைவாழைத்தண்டோ—எ-று.

இது ஒருநாயகன் ஒருநாயகியின் அவயவ சௌந்தரியத்தைப் புகழ்ந்து கூறியது. (சஅ)

ஆலங்குடியர்சங் கஞ்செறியத்தரஞ் சக்கரர்பொன்
மேலம்பரத்தினர் நாகமெடுத்தவர் மேவிடையர்
சூலக்கண்மெய்யினர் பார்ப்பதிகோன்மதி தோய்சவினர்
பாலன்கைக்கோற்படைக்கூர்மைக்கண்ணுமிந்தப் பைந்தொடிக்கே.

இ-ள். ஆலங்குடியர் - திருவாலங்குடியை யுடையவர், சங்கம்செறி அத்தர் - வளையலணிந்த இடப்பாகத்தையுடையவர், அஞ்சுஅக்கரர் - ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையுடையவர், பொன்மேல் அம்பரத்தினர் - அழகிய மேலாகியசிதாகாசத்தையுடையவர், நாகம் எடுத்தவர் - பாம்பைத்தரித்தவர், மேவிடையர்- மேன்மையாகிய இடபவாகனத்தையுடையவர், சூலக்கண்மெய்யினர் - சூலப் பெருமைவாய்ந்த நித்தியர், பார்ப்பதிகோன் - உமாநாயகர், மதிதோய் சடையர் - சந்திரனையணிந்த சடையையுடையவர், (அவரது) பாலன் - பாலகனாகிய சுப்பிரமணியனது, கை - கையிலுள்ள, கோல்படை - வேலாயுதம்போன்ற, கூர்மை - கூர்மையாகிய, கண்ஆம் - கண்களுண்டு, இந்தப் பைந்தொடிக்கு - இந்தப்பசும்பொன் வளையலணிந்தமாதுக்கு—எ-று.

" ஆலங்குடியர் என்பதற்கு விஷபானத்தையுடையவர் எனினும் பொருந்தும். வேற்படை என்றும்பாடம். (சகூ)

ஆமாவிகழ்ந்திட லாமாவினியுனை யன்றிவினை
போமாவுனைவிட்டுப் போமாவெனக்கிந்தப் புன்மைவர
லாமாபராமுக மாமாபுயத்தி லணிகடப்பந்
தாமாகுகனென்று நாமாவயிர்கரச் சண்முகனே.

இ-ள். புயத்தில் - திருத்தோள்களில், அணி - தரித்த, கடப்பந்தாமா - கடப்பமலர்மாலையை யுடையவனே, குகன் என்னும் நாமா - குகன் என்னுந் திருநாமத்தை யுடையவனே, அயில் கரம் சண்முகனே - வேலாயுதத்தைக் கையிலேயுடைய அறுமுகனே, என்னை இகழ்ந்திடல் ஆமா ஆமா - என்னை யிகழ்தல் உனக்குத் தகுமாதகுமா, உன்னையன்றி வினை போமா - உன்னை யடுத்தாலல்லது என்வினையொழியுமா, எனக்கு இந்தப்புன்மைவரல் ஆமா - எனக்கு இந்த இழிவுண்டாதல்தகுமா, பராமுகம் ஆமா - என்மீது பராமுகஞ்செய்தல் உனக்குத்தகுமா—எ-று. (ருo)

வெண்பா.

சென்னிமலைவேலவர்க்குச் சேர்ந்தகொம்பிரண்டுண்டு
கன்னிகுறவள்ளிக்குக் காலில்லை—முன்னமே
ஆட்டுக்குக்கொம்பில்லை யானைக்குக்காலில்லை
பாட்டுக்குளாராய்ந்து பார்.

இ-ள். சென்னிமலை வேலவற்கு - சென்னிமலை முருகருக்கு, சேர்ந்த கொம்பு இரண்டு உண்டு - பொருந்திய கொம்புகள் இரண்டுண்டு, கன்னிகுற வள்ளிக்கு கால் இல்லை - குறப் பெண்ணாகிய வள்ளி நாயகிக்குக் காலில்லை, முன்னமே - முன்பே, ஆட்டுக்கு கொம்பு இல்லை - ஆட்டுக்குக் கொம்பில்லை, யானைக்கு கால் இல்லை - யானைக்குக் காலில்லை, (இந்த அதிசயத்தை) பாட்டுக்குள் ஆராய்ந்துபார் - (இந்தப்) பாட்டுக்குள்ளே ஆராய்ந்துபார்—எ-று.

கொம்பு இரண்டு என்றது பூங்கொம்பு போல்வாராகிய வள்ளிதெய்வயானை என்பவரை, வள்ளி, ஆடு, ஆனை, என்பவற்றில் காலும்கொம்பு மில்லாமையறிக. (ருக)

தார்க்கொன்றைதாவென்றேன் றாவேழிலொன்றென்றான்
ஊர்க்கஞ்சிநான்மூன்றி லொன்றென்றேன்—யார்க்கும்
பொதுவென்றான் பூவென்றேன் போயினான்றோழி
இதுவோநம்மீச னியல்பு.

இ-ள். தார்கொன்றை தாஎன்றேன் - கொன்றைமாலையைத்தாவென்று கேட்டேன், ஏழில் ஒன்று தா என்றான் - ஏழில் ஒன்றைக் கொடு என்றான், ஊர்க்கு அஞ்சி - ஊராருக்கு பயந்து, நான் மூன்றில் ஒன்று என்றேன் - நான் மூன்றிலொன்றென்று சொன்னேன், யார்க்கும் பொது என்றான் - எல்லாருக்கும்பொதுவென்றுசொன்னான், பூ என்றேன் - பூவென்றுசொன்னேன், தோழீ - சகியே, போயினான் - போனான், நம் ஈசன் இயல்பு - நம்மிறைவனது இயற்கை, இதுவோ - இது தானோ—எ-று.

ஏழிலொன்று - கன்னிக்கு, ஏழிலொன்று கும்பம், (குசம்) மூன்று - கன்னி, சுமங்கலி, விதந்து என்பன, இம்மூன்றி லொன்று கன்னி, பொது—, யாவர்க்கும் உரியது. பூ - பூப்பு. (மாதவிடாய்.) (ருஉ)

## தடியின்குணம்.

பறவைநாய்நாகம் பகைவிலங்குபங்கம்
செறியுமிருணூருஞ் சிதடன்—குறிகிழவன்
என்றுரைத்தவீரைந்து மேர்தண்டத்தின்பண்பாய்
ஒன்றுமெனவுரைப்ப ரால்.

இ-ள். பறவை - பக்ஷி, நாய்—, நாகம் - பாம்பு, பகை - பகைவன், விலங்கு - மிருகம், பங்கம் - சேறு, செறியும் இருள் - மிகுந்த இருள், நாரம்-நீர், சிதடன் - குருடன், குறிகிழவன் - குறிக்கப்பட்ட கிழவன், என்று உரைத்த - என்று சொல்லப்பட்ட, ஈரைந்தும் - பத்தும், ஏர்தண்டத்தின் பண்பு ஆய் - அழகிய தடியினலாகிய நன்மைகளாக, ஒன்றும் என - பொருந்துமென்று, உரைப்பர் - சொல்லுவர் (பெரியோர்)—எ-று.

கையில் தடியிருந்தால், பறவை நாய் முதலிய வற்றாலுண்டாகுந் துன்பமில்லை யென்பது கருத்து. (ருங)

பரியூர்வார்பாலருந்தல் பண்பாமுடற்குக்
கரியூர்வார்பெண்ணின்பங் காணல்—விரியும்
சிவிகையூர்வார்க்குமைத்த லின்பஞ்சேட்செல்வார்
பசிவீயவுண்டல் பயன்.

இ-ள். பரி ஊர்வார் - குதிரை நடத்துவோர், பால் அருந்தல் - பால் குடித்தல், உடற்கு பண்பு ஆம் - (அவரது) உடம்புக்கு நன்மையாகும், கரி ஊர்வார் - யானை நடத்துவோர், பெண் இன்பம் காணல் - மாதர் சுகத்தை யநுபவித்தலும், விரியும் சிவிகை ஊர்வார் - விரிந்த பல்லக்கைச் செலுத்துவோர், குமைத்தல் - குத்தப்படுதலும், இன்பம் - சுகமாகும், சேட்செல்வார்-நெடுந்தூரம் நடப்பவர், பசி வீய உண்டல் - பசிதீரவுண்ணுதல், பயன்-இன்பமாகும்—எ-று.

குதிரையேறுவோர் பால்குடித்தலும், யானையேறுவோர் மாதரைக்கூடுதலும், பல்லக்கேறுவோர் குத்தப்படுதலும், நெடுந்தூரம் நடப்பவர் வயிறு நிறையவுண்ணுதலும் அவர்களுக்கு நன்மையாமென்பது கருத்து. (ருச)

தக்கசகுனஞ்சபதஞ் சாமுத்திரிகஞ்செல்
மிக்கவசரீரிகணு வென்றைந்தும்—இக்கலியில்
கூடினுங்கைகூடிவருங் கூடாதொழிந்தொருகால்
வீடினும்வீடி விடும்.

இ-ள். தக்கசகுனம் - தகுதியாகியசகுனம், சபதம் - பிரதிக்கினை, சாமுத்திரிகம் - அங்கநூல், சொல்மிக்க அசரீரி - புகழ்மிகுந்த அசரீரிவாக்கு, கனு - சொப்பனம், என்ற ஐந்தும் - என்றுசொல்லப்பட்ட ஐந்தும், இக்கலி

யில் இந்தக் கலியுகத்தில், கூடினும் கைகூடிவரும் - கைகூடினாலும் கூடும், ஒருகால் - ஒருவேளை, கூடாது ஒழிந்து - கைகூடாதொழிந்து, வீடினும் வீடிவிடும் - தவறினாலும் தவறிவிடும்—எ-று.

சகுனசாத்திரம் முதலியவை முந்தினயுகங்களில் தவறாமல் பலித்தன, இந்தக் கலியுகத்தில் ஒருவேளை பலித்தும் ஒருவேளை பலியாதும் போகின்றன என்பது கருத்து. (ருரு)

நக்கனார்சோணகிரி நாதனார்வேள்வியிலே
தக்கனாரைத்தகர்த்த தக்கனார்—பொக்கைவாய்
ஆக்கினார்சூரியனை யம்புலியைத்தேய்த்தரியைத்
தாக்கினாரோடோடத் தான்.

இ-ள். நக்கனார் - திகம்பரர், சோணகிரிநாதனார் - அருணாசலநாதர், வேள்வியிலே - யாகத்திலே, தக்கனாரைத்தகர்த்த தக்கனார் - தக்கனையழித்த இறைவர், சூரியனை - ஆதித்தனை, பொக்கைவாய் ஆக்கினார் - பொக்கைவாயனாகச்செய்தார், அம்புலியைதேய்த்து - சந்திரனைத்தேய்த்து, அரியை - இந்திரனை, ஓடோடதாக்கினார் - ஓடவோடப்புடைத்தார்—எ-று.

பொக்கைவாய் - பல்லில்லாதவாய். (ருசு)

ஓடினனென்ப துணர்ந்துமுனக்குச்சரியா
நாடினார்க்கென்ன நரகமோ—நீடியே
ஆலவிடந்தோன்றியபோ தம்பலவாணநெடிய
மாலவிடஞ்சஞ்சரியா மல்.

இ-ள். அம்பலவாண - அம்பலவாணனே, நீடி - மிகுந்து, ஆலவிடம் தோன்றியபோது - ஆலகாலவிஷமுண்டானகாலத்தில், நெடியமால் - நெடுமாலானவன், அவிடம்சஞ்சரியாமல் - அவ்விடத்திலிராமல், ஓடினன்என்பது உணர்ந்தும் - ஓடினனென்பதை யறிந்தும், உனக்குச்சரியா நாடினார்க்கு - (அவனை) உனக்குச் சமானமாக நினைத்தவர்க்கு, என்னநரகமோ - என்னநரகம் சித்திக்குமோ—எ-று.

அம்பலவாணன் - பொன்னம்பலத்தில் வாழ்பவன், அவிடம் என்றது திருப்பாற்கடல் கடைந்தவிடத்தை. (ருஎ)

அசநமிளைப்பகற்று தன்னையேநம்பால்
வசநமிதுதவறு வாய்மை—இசைநாகைச்
சின்னப்பால்வெண்மதியஞ் சேரிமயத்தேபிறந்த
அன்னப்பாலிங்குவந்தா லாம்.

இ-ள். அன்னையே - தாயே, அசம் - ஆடு, நம்இளைப்புஅசற்றுது - நமது மெலிவையொழிக்காது, நம்பால்வசனம்இது - நம்மிடத்துண்டாகிய இந்த

வார்த்தை, தவறாவாய்மை - தவறாத உண்மைவார்த்தையாகும், இசை-புகழ் பொருந்திய, நாகை - திருநாகையில் வாழ்கின்ற, சின்ன - சிறிய, பால்-வெண்மையாகிய, மதியம்சேர் - சந்திரன் தவழ்கின்ற, இமயத்தேபிறந்த - இமயமலையிற்பிறந்த, அன்னப்பால்-அன்னம்போல்வாளாகிய உமாதேவியை யிடப்பக்கத்திலுடைய பரமசிவன், இங்குவந்தால்ஆம் - இவ்விடத்திற்கு வந்தால் இளைப்பாறும்—எ-று.

இதுசெவிலிநற்றாயக்கு அறத்தொடுநின்று வெறிவிலக்கல் என்னுந்துறை - அஃதாவது, செவிலியானவள் நற்றாயைநோக்கி, நமது பெண்ணுக்குண்டாயிருக்கிறமெலிவு இந்த ஆட்டுப்பலியால் நீங்காது இவளால் விரும்பப்பட்ட திருநாகைப்பரமசிவன் இவ்விடததிற்குவந்தால் நீங்கும் என்பதாம். அசனம்-சோறு, அன்னப்பால் - கஞ்சி, சோறு இளைப்பாற்றாது கஞ்சியிளைப்பாற்றும் என வேறுபொருள் தோன்றுதல்காண்க. (ருஅ)

நிந்தாஸ் துதி.

தலையிலிரந்துண்பான் றன்னுடலிற்பாதி
மலையின்மடமகளுக் கீவான்—உலையில்
இருப்புவனமேனியனே யென்றாலோவாமாம்
திருப்புவனத்தீசன் றிறம்.

இ-ள். உலையில் இருப்புவன்னம் மேனியன் - உலைக்களத்திற் காய்ந்த இரும்பினது நிறத்தைப் பொருந்திய திருமேனியை யுடையவனாகிய பரமசிவன், தலையில் இரந்து உண்பான் - தலையோட்டில் இரந்துண்பான், தன் உடலில்பாதி - தன் உடம்பிற்பாதியை, மலையின் மடமகளுக்கு ஈவான்-மலையரையனது இளமையாகிய பெண்ணுக்குக் கொடுப்பான், என்றால்-என்றால், திருப்புவனத்து - திருப்புவனத்தி லெழுந்தருளியிருக்கிற, ஈசன் திறம்-இறைவாது தன்மை, ஆம்ஆம் - அழகிது அழகிது—எ-று.

திருப்புவனம் - ஓர்திருப்பதி, மலையின்மடமகள் - உமாதேவி, உலையில் இருப்புவன்னம் - செந்நிறம். (ருக)

ஆகும்போதாகு மனைத்துமதுவொழிந்து
போகும்போதெல்லாமும் போகுமே—வேக
நவசரம்பட்டாற்போ னலிந்துமடநெஞ்சே
அவசரம்பட்டாலாகு மா.

இ-ள். மடநெஞ்சே - அறியாமையுள்ள மனமே, அனைத்தும் - எல்லாக்காரியங்களும், ஆகும்போது ஆகும் - முடியும்போது முடியும், அது ஒழிந்துபோகும்போது - அதுநீங்கிப்போகும்போது, எல்லாமும்போகும் - எல்லாக்காரியங்களும் அழியும் (ஆதலால்), வேகம் - வேகத்தையுடைய, நவசரம்பட்டாற்போல் - நூதனமாகிய அம்புதைத்தாற்போல, நலிந்து - வருந்தி, அவசரம்பட்டால் ஆகுமா - அவசரப்பட்டால் முடியுமா (முடியாது)—எ-று.

எல்லாக் காரியங்களும் ஆகுங்காலாகும் அழியுங்காலழியும், ஆதலால், மனமே நீவருந்தி அவசரப்பட்டால் பயனில்லையென்று ஒருவன் தன்மனத்தை முன்னிலையாக்கிச் சொல்லியது. (சுO)

துர்ச்சனரும்பொன்னுந் துடியுந்துரகதமும்
அச்சமறமுன்னிற்கு மாயிழையும்—நச்சரவும்
கண்டித்தவெள்ளுங் கரும்புமிளநீரும்
தண்டித்தார்க்கன்றோ சயம்.

இ-ள். துர்ச்சனரும் - துஷ்டஜனங்களும், பொன்னும் - சொர்ணமும், துடியும் - உடுக்கையும், துரகதமும் - குதிரையும், அச்சம் அற - பயமில்லாமல், முன்நிற்கும் - எதிரே நிற்கிற, ஆயிழையும் - பெண்ணும், நச்சு அரவும் - நஞ்சையுடைய பாம்பும், கண்டித்த எள்ளும் - நசுக்கின எள்ளும், கரும்பும் - கரும்பும், இளநீரும் - இளநீரும் (ஆகிய இவைகளை), தண்டித்தார்க்கு அன்றோ - தண்டித்தவர்களுக் கல்லவோ, சயம் - பயனுண்டாவது—எ-று.

துஷ்டர் முதலியோரைத்தண்டித்தால் பயனுண்டென்பது கருத்து. (சுக)

பூமன்றிருக்கண்டி யந்தகன்கோவல் புரமதிகை
மாமன்பறியல் சலந்தரன்விற்குடி—மாவழூவூர்
காமன்கொறுக்கை நமன்கடவூரிந்தக் காசினிக்குள்
தேமன்னுகொன்றைச் சடையான்பொருதிட்ட சேவகமே.

இ-ள். பூமன்திருக்கண்டி - அழகுமிக்கதிருக்கண்டியூர், அந்தகன் - திருவந்தகன், கோவல் திருக்கோவலூர், புரம் - திருப்புரம், அதிகை - திருவதிகை, மாமன்பறியல்-பெருமைபொருந்திய திருப்பறியல், சலந்தரன்விற்குடி-திருச்சலந்தரன் விற்குடி, மாவழூவூர் - திருமாவழூவூர், காமன் கொறுக்கை-திருக்காமன்கொறுக்கை, நமன் கடவூர் - நமன்கடவூர், (இவை) இந்தக் காசினிக்குள் - இந்தவுலகத்தில், தேம்மன்னு கொன்றை சடையான் - மணம் பொருந்திய கொன்றைமலரையணிந்த சடையையுடையவனாகிய பரமசிவன், பொருதிட்ட - போர்செய்த, சேவகம் - செவ்விய இடங்களாம்—எ-று. (சுஉ)

சங்கநிதியேரகம்வாழ் சண்முகனேநின்மோக
மங்கையெழின்மேனிகளம் வண்மருங்குல்—கொங்கைசெங்கண்
கந்தந்தங்கந்தந்தங் கம்பந்தந்தந்தம்
பந்தந்தந்தண்கஞ்சம் பார்.

இ-ள். சங்கநிதி - அன்பருக்குச் சங்கநிதி போல்பவனே, ஏரகம் வாழ் - திருவேரகத்தி லெழுந்தருளிய, சண்முகனே - அறுமுகனே, நின்மோகம் - உன் விருப்பமுள்ள, மங்கை - இந்தப் பெண்ணினது, எழில் - அழகாகிய, மேனி - மேனியும், களம் - கழுத்தும், வள் மருங்குல் - வளவிய இடையும்,

கொங்கை - தனங்களும், செங்கண் - செவந்த கண்களும், (முறையே)கந்தம் தங்கு அம் தங்கம் - மணந்தங்கிய அழகிய தங்கத்தையும், கம்பு - சங்கையும், அம் தந்து - அழகிய நூலிழையையும், அம்தந்தம் - அழகிய யானைக் கொம்பையும், பந்து அந்தம் - அழகாகியபந்தையும், தண் கஞ்சம் - குளிர்ச்சியாகிய தாமரைமலரையும் (நிகர்க்கும்), பார் - நீநோக்குவாயாக—எ-று.

இது தாய்க்கூற்று, திருவேரகத்திலெழுந்தருளிய முருகக்கடவுளே, அழகிய மேனிமுதலியவற்றையுடைய இப்பெண்ணை நீகடாக்ஷிக்கவேண்டும் என்பதுகருத்து, "சங்கநிதி யேரகம்வாழ்" என்பதற்குச் சங்கநிதிபோலத் திருவேரகத்தில் வாழ்கின்ற என்றுரைத்தலுமாம். (சுஙு)

நீமருவவாமுருகா நித்திலங்களுஞ்சிந்தக்
காமருதேன்பூட்டிநெடுங் கன்னல்வளைத்—தேமதனன்
வண்டுவரக்கண்டுளறி வண்டுமதியும்பறிபோய்
வண்டுவரவாய்புலம்பு வாள்.

இ-ள். முருகா - முருகனே, மதனன் - மன்மதனன், நித்திலங்களும் சிந்த - முத்துக்களும் உதிரும்படி, நெடுகன்னல் வளைத்து - நெடியகரும்பை வில்லாகவளைத்து, காமர் தேன் பூட்டி - அழகிய வண்டுகளை நாணகப்பூட்டி, வண்டுவர - (புஷ்ப) பாணங்களோடுவர, கண்டு உளறி - பார்த்துவாய்குழறி, வண்டும் மதியும் - வளையலும் அறிவும், பறிபோய் - பறியுண்டு, வண்டுவர - விரகத்துன்பமுண்டாக, வாய்புலம்புவாள் - (என்பெண்) வாய்பிதற்றுகின்றுள், (ஆதலால்) நீமருவவா - நீ (இவளைத்) தழுவவருவாயாக—எ-று.

நித்திலங்கள் சிந்த என்றதைக் கரும்புக்கும் பெண்ணுக்கும் கொள்க. கரும்புக்குமுத்து, பெண்ணுக்கு முத்துமாலை, பெண்ணுக்குக் கண்ணீர்த்துளியுங்கொள்ளலாம். (சுச)

நூறுமுகமாய்ப்புகழ்ந்து நூறுயிரம்பேர்தம்
வேறுமுகம்பார்த்திரங்க வேண்டாமே—ஆறுமுகச்
சுத்தனைச்சித்தத்துவைத்துச் சொற்றமிழ்ச்சித்ரக்கவிக்குட்
கத்தனைச்சற்றுத்துதித்தக் கால்.

இ-ள். ஆறுமுகம் - ஆறுதிருமுகங்களையுடைய, சுத்தனை - பரிசுத்தனை, கத்தனை - கர்த்தனை, சித்தத்து வைத்து - மனத்தில் வைத்து, சொல் தமிழ் சித்ரக்கவிக்குள் - சொல்லப்பட்ட தமிழ்ச்சித்திரக்கவிகளால், சற்று - சிறிது, துதித்தக்கால் - தோத்திரம்பண்ணினுல், (அப்படிதோத்திரம்பண்ணுவோர்) நூறுமுகமாய்ப் புகழ்ந்து - பலவழியாகப் புகழ்ந்து, நூறுயிரம்பேர்தம் - நூறுயிரம்பேர்களுடைய, வேறுமுகம் - வெவ்வேறு முகங்களை, பார்த்து-நோக்கி, இரங்கவேண்டாமே - இரங்கவேண்டுவதில்லையே—எ-று.

நூறு என்றது இவ்விடத்துப் பலவென்னும் பொருள்தந்தது. (சுரு)

பங்கயக்கண்வேலவனே பைந்தொடியாடேடிநிதம்
மங்கிமிகவுந்தளர்ந்து வாடுகிறாள்—செங்கைமலர்
அன்னநடைமின்னலொளி சின்னவிடைவன்னமுலை
கன்னன்மொழிமன்னுமிவள் காண்.

இ-ள். பங்கயம் கண் வேலவனே - தாமரை மலர்போலும் கண்களை யுடைய முருகக்கடவுளே, மலர் செங்கை - தாமரை மலர்போலுஞ் செவந்த கைகளையும், அன்னம்நடை - அன்னம்போலும் நடையையும், மின்னல் ஒளி- மின்னல்போலும் ஒளியையும், சின்ன இடை - சிற்றிடையையும், வன்னம் முலை - அழகிய தனங்களையும், பைந் தொடியாள் - பசும்பொன் வளையலையு முடையவளாகிய, இவள் - இந்தப்பெண், நிதம் - நாள்தோறும், தேடி-(உன்னைத்) தேடி, மங்கி - மதிமழுங்கி, மிகவும்தளர்ந்து-(மனம்) மிகவும் தளர்ச்சியடைந்து, வாடுகிறாள் - உடல் வாடுகிறாள், (ஆதலால்) காண் - (இவளை) கடாக்ஷிக்கவேண்டும்—எ-று.

இது தாய்க்கூற்று, மின்னல் ஒளி சின்னவிடை என்பதற்கு, மின்சொடிபோலும் ஒளியையுடைய சிற்றிடையென் றுரைத்தலுமாம். (சுசு)

எத்திக்கும்போற்று மிவளையெழிற்குமரா
தித்திக்குநின்கனிவாய்த் தேனூறல்—முத்தமிட்டுச்
சித்திரச்செப்புத்தனத்தைச் சிக்கெனக்கட்டிப்பிடித்துச்
சித்தமொத்துப் பொற்புயத்திற் சேர்.

இ-ள். எழில்குமரா - அழகிய முருகக்கடவுளே, எத்திக்கும்போற்றும்- எந்தத்திக்கிலுள்ளமாதரும் வணங்குதற்குரிய, இவளை - இந்தப் பெண்ணை, தித்திக்கும் - இனிக்கின்ற, நின் கனிவாய் - உன் கனிவாயின், தேனூறல்- தேனூறலோடு, முத்தமிட்டு - முத்தமிட்டு, சித்திரம் செப்புதனத்தை - சித்திரித்த செப்புப்போலுந் தனங்களை, சிக்கென - இறுக, கட்டிப் பிடித்து- கட்டிப்பிடித்து, சித்தம் ஒத்து-மனமொத்து, பொன்புயத்தில்சேர்-(உனது) அழகிய திருத்தோளில் அணைத்துக்கொள்வாயாக—எ-று.

பொற்பதத்திற் சேர் என்றும் பாடம், இதற்கு உனது அழகிய திருவடியிற் சேர்ப்பாயாகவெனப் பொருளுரைத்துக்கொள்க. எத்திக்கும்போற்றுதல் இவளது எழினலத்தைக்குறித்தென்க. இது தாய்க்கூற்று. (சுஎ)

வேலவர்தாநேற்றணைந்த விந்தையைநானேதுசொல்வேன்
கோலவடமோசையிடக் கொம்பனையே—சீலமுடன்
கட்டிமுத்தமிட்டணைத்துக் கட்டிமைக்கணைச்சுவைத்து
மெட்டினைப்பதத்திலிட்டு மேல்.

இ-ள். கொம்பனையே - பெண்ணே, நேற்று - நேற்றைத்தினம், வேலவர் - முருகர், கோலவடம் ஓசையிட - அழகிய முத்துவடம் முதலாயின

வொலிக்க, சிலமுடன் - அழகோடு, கட்டி முத்தமிட்டு - தழுவி முத்தமிட்டு, அணைத்து - தோளிலணைத்து, கட்டு இமை - காவலாகிய இமைகளையுடைய, கண்ணைச்சுவைத்து - கண்களைச் சுவைத்து, மெட்டினை பதத்தில் இட்டு - மிஞ்சியைக்காலிலணிந்து, மேல் - பிறகு, அணைந்த - புணர்ந்த, விந்தையை - அற்புதத்தை, நான் எதுசொல்வேன் - நான் யாதென்றுசொல்வேன்—எ-று.

முருகரைத் தழுவப்பெற்ற ஒருத்தி, அக்கலவி யதிசயத்தைத் தன் உயிர்த்தோழியோடு சொல்லியது. (௬அ)

வேலவனேநின்கலவி விந்தையதற்கேற்றமங்கை
கோலவரிக்கண்சுழற்றிக் கொஞ்சுகிளி—போலமுலைக்
கச்சுக்குட்சிக்கச்சொக்கப் பொற்சுட்டிக்கட்டிப்
பச்சைப்பொட்டிட்டத்தைப் பார்.

இ-ள். வேலவனே - முருகனே, நின் - உனது, கலவி விந்தையதற்கு - புணர்ச்சியதிசயத்துக்கு, ஏற்ற - தகுந்த, மங்கை - இந்தப் பெண்ணானவள், கோலம் - அழகாகிய, வரி - இரேகைகளுள்ள, கண் - கண்களை, சுழற்றி - சுழலச்செய்து, கொஞ்சுகிளிபோல - கொஞ்சுகின்ற கிளிப்பிள்ளைபோல, முலை - தனங்களின்மேலணிந்த, கச்சுக்குள் - கஞ்சுகத்தினுள்ளே, சிக்க - அகப்படவும், சொக்க - அழுந்திப்போகவும், பொன்சுட்டிகட்டி - பொற்சுட்டியணிந்து, பச்சைப்பொட்டு - பச்சைநிறப்பொட்டினை, இட்டத்தை - தரித்ததை, பார் - நீநோக்குவாயாக—எ-று.

மங்கை - பன்னிரண்டுவயதுப்பெண். இது தாய்க்கூற்று. (௬௯)

ஏவிழியார்மூர லிளநிலாக்கண்டுகருங்
காவிமுகையவிழுங் காஞ்சியே—மேவலரூர்ச்
சக்கரக்கரக்குதைக்க தக்கணைக்கிலக்கெனக்கொள்
நக்கரக்கரக்கணக்கர் நாடு.

இ-ள். மேவலர்ஊர் - பகைவரூராகிய திரிபுரத்தை, சக்கரக்கரம் - சக்கரபாணியென்கிற, குதை - குதையோடுகூடிய, கதம் - கோவத்தையுடைய, கணைக்கு - அம்புக்கு, இலக்கு என - இலக்காக, கொள் - கொண்ட; நக்கர் - திகம்பரர், அ - அந்த, கரம் - ஒளியுள்ள, கண் - கண்களையும், அக்கர் - அக்குமாலையையுமுடைய சிவபெருமானது, நாடு - தேசமானது, ஏ - அம்புபோன்ற, விழியார் - கண்களையுடைய மாதரது, மூரல் - பலவரிசையின், இள நிலா கண்டு - இளநிலவைப்பார்த்து, கருங்காவிமுகை - கருங்குவளை யரும்புகள், அவிழும் - மூறுக்கவிழ்கின்ற, காஞ்சியே - திருக்கச்சியே—எ-று.

திரிபுரசங்காரஞ்செய்த சிவபெருமானது ஊராவது திருக்கச்சிநகரமே யென்பதாம். இலக்கு - குறி. (எ0)

நாலாநாள்சேர்ந்தணைந்த நன்னயத்தையெண்ணிமெத்த
மாலானாள்வேலவனே மாரனெய்யும்—கோலாலே
வண்டுகுடியானகுழல் வஞ்சியெனவோபயந்து
வண்டுகுடியாண்மருவ வா.

இ-ள். வேலவனே - முருகனே, நாலாம்நாள் - நாலாம்நாளில், சேர்ந்து அணைந்த - நீவந்து தழுவின, நல்நயத்தை - நல்லசுகத்தை, எண்ணி - நினைத்து, மெத்த - மிகுதியாக, மால் ஆனாள் - (உன்மீது) விருப்பங் கொண்டாள், வண்டு குடியான - வண்டுகள் குடிகொண்ட, குழல் - கூந்தலையுடைய, வஞ்சி - வஞ்சிக்கொடிபோலும் இந்தப்பெண்ணானவள், மாரன் எய்யும் கோலாலே - மன்மதன் எவுகின்ற புஷ்பபாணங்களாலே, என்னவோ துவண்டு - என்னவோ துவட்சியடைந்து, பயம் - பாலையும், குடியாள் - குடியாமலிருக்கிறாள், (ஆதலால்) மருவ - இவளைத்தழுவும் பொருட்டு, வா - நீவருவாயாக எ-று.

இதுதாய்க்கூற்று. (எக)

வானுதித்தமாமதிக்கும் வாரிவிட்டவேள்கணைக்கும்
மீனுதித்தவாரிதிக்கு மேதினிக்குள்—நானொருத்தி
சிந்தைவாடிநொந்தசேதி செங்கைவேலர்பங்கிலோடி
மந்தமாருதஞ்சொலோது மா.

இ-ள். வான் உதித்த - ஆகாயத்தில் உதயமான, மாமதிக்கும் - பெரிய சந்திரனுக்கும், வேள் - மன்மதன், வாரிவிட்ட - அள்ளிவிட்ட, கணைக்கும் - புஷ்பபாணங்களுக்கும், மீன் உதித்த - மீன்கள் உண்டாகிய, வாரிதிக்கும் - கடலுக்கும், மேதினிக்குள் - இவ்வுலகத்தில், நான் ஒருத்தி - நானொருத்தியே, சிந்தைவாடி - மனம்வாடி, நொந்தசேதி - வருந்தினசெய்தியை, செங்கைவேலர் பங்கில் ஓடி - செவந்த கையில் வேலாயுதத்தை யுடையவராகிய முருகரிடத்தில் விரைந்துபோய், மந்தமாருதம் - தென்றற் காற்றானது, ஓதுமா - சொல்லுமா, சொல் - நீசொல்லுவாயாக—எ-று.

மாமதி - பூர்ணசந்திரன், தலைமகள் தன்தோழியோடு சொல்லியது. ()

செந்தழல்போல்வீசுதினிச் சேர்ந்தணைவாய்வேலவனே
கந்தமலர்ச்சோலைவண்டுங் கார்க்குயிலும்—தொந்தமுடன்
பாடுதுவம்புந்தம்பும் பாழ்மதனுந்தும்வந்தும்
சாடுதுவம்புந்தும்புந் தா.

இ-ள். வேலவனே - முருகனே, கந்தம் - மணமுள்ள, மலர்ச்சோலை - பூஞ்சோலையில் வாழ்கிற, வண்டும் - வண்டுகளும், கார்குயிலும் - கருங்குயில்களும், தொந்தமுடன் - தொடர்பாக, பாடுது - பாடாநின்றன, வம்புஉந்து - வாசனையைவீசுகிற, அம்பும் - புஷ்ப பாணங்களையும், பாழ்மதன் உந்தும்-

பாழான் மன்மதன் பிரயோகிக்கிறன், வந்தும் - காற்றும், வம்பும் தும்பும் சாடுது - வம்புந்தும்புமாக வீசாநின்றது, இந்து - சந்திரகிரணம், ஆ-ஐயோ, செந்தழல்போல் வீசுது - செவந்த நெருப்பைப்போல வெப்பமாக எரிக்கின்றது, (ஆதலால்) இனி - இனியாகிலும், சேர்ந்து அணைவாய்-என்னைக்கூடித் தழுவவேண்டும்—எ-று.

இது தலைமகள் கூற்று. (எ௩)

வாகந்தாவல்லவென்றால் வாகந்தாராகிலுந்தா
சோகந்தான்மீறிவளைத் தோய்ந்திடவே—நாகஞ்சேர்
மாலையிந்துசோலைவண்டு மாரனம்புசூழநொந்திவ்
வேழைநெஞ்சமேகலங்கி னாள்.

இ-ள். நாகம் சேர் - ஆகாயத்திற் பொருந்திய, மாலை இந்து - மாலைக்காலத்து சந்திரனும், சோலைவண்டு - சோலையிலுள்ள வண்டுகளும், மாரன் அம்பு - மன்மத பாணங்களும், சூழ - வளைந்து கொள்ள, நொந்து - வருந்தி, இ - இந்த, ஏழை - பேதையானவள், நெஞ்சம் கலங்கினாள் - மனம் கலங்கினாள், கந்தா - கந்தனே, சோகம்மீறு - துன்பம் அதிகரித்த, இவளை தோய்ந்திட - இவளைத் தழுவுதற்கு, வா - வருவாயாக, அல்ல என்றால் - அல்ல வென்று மறுத்தால், வாகு - உன் தோளிலுள்ள, அம் - அழகாகிய, தார் ஆகிலும் - மாலையை யாகிலும், தா - தருவாயாக—எ-று.

இது தாய்க்கூற்று. (எச)

பாகாருமின்சொல்வள்ளி பாகாதேவேந்த்ரனருள்
வாகானகுஞ்சரிவி வாகாநீ—யேகாவல்
என்றுநம்புமென்றனொந்த சிந்தையன்புபொங்கவந்து
நின்றுகொண்டிரங்குகந்த னே.

இ-ள். கந்தனே - முருகனே, பாகு ஆரும் - சர்க்கரைப்பாகின் சுவையமைந்த, இன்சொல் - இன்சொல்லையுடைய, வள்ளிபாகா - வள்ளிபங்கனே, தேவேந்திரன் அருள் - தேவேந்திரன்பெற்ற, வாகு ஆன - அழகாகிய, குஞ்சரிவிவாகா - தெய்வ யானையை மணந்தவனே, நீயே காவல் என்று - நீயே என்னுயிர்த்துணையென்று, நம்பும் - நம்புகின்ற, என்றன் - என்னுடைய, நொந்தசிந்தை - வருந்தின மனத்தில், அன்பு பொங்கவந்து - அன்பு அதிகரிக்கவந்து, நின்றுகொண்டு - நிலைத்திருந்து, இரங்கு - இரங்கியருள வேண்டும்—எ-று.

வள்ளிதெய்வ யானையென்னும் இருவருக்கும் மணாளனே, நீயென்மனத்தில் தங்கியிருத்தல் வேண்டும் என்பதாம். (எரு)

வாதாவுன்னுனுட வாதாவோராறிரண்டு
காதாவுன்சித்தமிரங் காதா—நீதாவென்

சிந்தைக்கிசைந்தபடி செஞ்சொற்கிரங்கியருள்
கந்தப்ரசண்ட முருகா.

இ-ள். நீதா - நீதிமானே, என்சிந்தைக்கு - என்மனதுக்கு, இசைந்தபடி - இசைந்தவண்ணமாகப்பாடின, செஞ்சொற்கு - செந்தமிழ்ச் சொன்மாலைக்கு, இரங்கியருள் - இரங்கியருள்வாயாக, கந்த - கந்தனே, ப்ரசண்டமுருகா - அதிபராக்ரமமுள்ள முருகவேளே, ஓர் - ஒப்பற்ற, ஆறு இரண்டு காதா - பன்னிரண்டு திருச்செவிகளை யுடையவனே, உன்சித்தம் இரங்காதா - உன்மனமிரங்காதா, வாதா - என்னுடன்வாதா, உன்னாலும்நடவாதா - (என்மீதிரங்கியருள்வதாகிய காரியம்) உன்னாலும் முடியாதா—எ-று. (எ௬)

வந்தனையாவென்றுதுயர் மாற்றிமனவேட்கையெல்லாம்
வந்தனையாத்தந்தருளு மாதவா—பந்தனைய
கொங்கைகுறமங்கையொடு குஞ்சரிபுயந்தழுவு
கங்கையுமைதந்திடு குகா.

இ-ள். பந்து அனைய - பந்தையொத்த, கொங்கை - தனங்களையுடைய, குறமங்கையொடு - குறப்பெண்ணாகிய வள்ளிநாயகியோடு, குஞ்சரி - தெய்வயானையின், புயம் - தோள்களை, தழுவு - தழுவுகின்ற, கங்கை உமைதந்திடு குகா - கங்காதேவியும் உமாதேவியும் பெற்ற முருகவேளே, ஆ என்று - ஐயோவென்று, வந்தனை - வந்து, துயர்மாற்றி - என்துன்பத்தை நீக்கி, மனவேட்கை எல்லாம் - மனவிருப்பத்தை யெல்லாம், அன்னையா வந்து - தாய்போல்வந்து, தந்தருளு - கொடுத்தருளவேண்டும், மா - பெரிய, தவா - இறைவனே—எ-று.

வந்தனை யிரண்டனுள் முன்னையது முற்றெச்சம். (எஎ)

அந்தணர்கள்போற்று மருந்தணிகைவாழ்குமரர்
வந்துகலந்துமருவாநாள்—பைந்தொடிக்கு
மேல்படுத்தமுத்தனங்கன் வேல்படப்பொரிந்துதென்றற்
கால்படச்சரிந்ததென்பள் காண்.

இ-ள். அந்தணர்கள் போற்றும் - வேதியர்கள் வணங்குகின்ற, அரு - அருமையாகிய, தணிகைவாழ் குமரர் - திருத்தணிகையில் வாழ்கின்ற குமாரக்கடவுள், வந்துகலந்து மருவாநாள் - வந்துகூடித்தழுவாதநாளில், பைந்தொடிக்கு - பசியவளையலையணிந்தஇப்பெண்ணுக்கு, மேல்படுத்த - உடம்பின்மீதணிந்த, முத்து - முத்துமாலைகள், அனங்கன்வேல்பட - மன்மதபாணங்கள் படுதலால், பொரிந்து - பொரிந்துபோய், தென்றல்கால்பட - தென்றற்காற்றுப் புடுதலால், சரிந்தது - உதிர்ந்தது, என்பள் - என்று சொல்லுவாள் எ-று.

வேல் என்றது இவ்விடத்து பாணத்துக்காயிற்று, இதுதாய்க்கூற்று. ()

மெத்தமயலாகி மெலிந்தயர்ந்துவாடுகிருள்
சித்தமுவந்தாண்டருளுஞ் செவ்வேளே—இத்தலத்தில்
கண்டுமொழிகண்டஞ்சுங் கங்குல்குழல்கண்டஞ்சும்
வண்டுவிழிகண்டஞ்சு மான்.

இ-ள். செவ்வேளே - முருகக்கடவுளே, இத்தலத்தில் - இவ்வுலகத்தில், மொழிகண்டு - சொல்லைப்பார்த்து, கண்டு அஞ்சும் - கற்கண்டானது பயப்படும், குழல்கண்டு - கூந்தலைக்கண்டு, கங்குல் அஞ்சும் - இரவானது பயப்படும், விழிகண்டு - கண்களைப் பார்த்து, வண்டு அஞ்சும், வண்டுகள் பயப்படும், மான் - இத்தன்மையளாகிய என்பெண், மெத்தமயல் ஆகி-மிகவும் காமமயக்கங்கொண்டு, மெலிந்து - இளைத்து, அயர்ந்து - சோர்ந்து, வாடுகிருள் - வாடாநின்ருள், (ஆதலால்) சித்தம் உவந்து - நீ திருவுளமகிழ்ந்து, ஆண்டருளும் - இவளை ஆண்டருளல்வேண்டும்—எ-று.

மொழியினது இன்சுவைக்குத்தோற்றுக் கற்கண்டும், குழலின் கருமைக்குத்தோற்றுக் கங்குலும், விழிகளின்உருவம் ஒளிமுதலியவைகட்குத்தோற்று வண்டும் அஞ்சும் எனக்கொள்க. இது தாய்க்கூற்று. (எகூ)

இருபுறமுங்காவேரி யேர்மாலையாச்சூழ்
திருவரங்காவெங்கள் குலதேவா—வெருவ
எரிபுரிந்துவிழிசிவந்து யமனிருண்டவுருவுகொண்டு
வரவுகண்டுதிகிரிகொண்டு வா.

இ-ள். இருபுறமும் - இருபக்கத்திலும், காவேரி - காவேரி நதியானது, ஏர்மாலைஆ - அழகியமாலைபோல, சூழ் - வளைந்த, திருவரங்கா - திருவரங்கத்தையுடையவனே, எங்கள்குலதேவா - எமதுகுலதெய்வமாயிருப்பவனே, யமன் - யமனனவன், வெருவ - யாம் அஞ்சும்படி, எரிபுரிந்த - நெருப்பைக்கக்குகிற, விழிசிவந்து - கண்சிவந்து, இருண்டஉருவுகொண்டு - கறுத்தவடிவங்கொண்டு, வரவு - வருதலை, கண்டு - நீநோக்கி, திகிரிகொண்டு - சக்காயுதத்தையேந்தி, வா - எழுந்தருளல்வேண்டும்—எ-று.

திருவரங்கனே, யமன் வருங்காலத்தில் நீசக்கரபாணியாய் எழுந்தருளி யெம்மைக் காக்கவேண்டும் என்பதாம். (அ0)

ஒருத்திமிகமயல்கொண் டுன்சமுகம்வந்தாள்
திருத்தியணையென்றுவகை செப்பி—உரைத்திடுநற்
செப்புமுலைச்சொற்பகழிக் கொத்தவிழிச்சித்திரவிற்
பொற்புருவத்துப்பதரத் தாள்.

இ-ள். உரைத்திடும் - புகழ்ந்துசொல்லுதற்குரிய, நல்செப்பு - (இணையாகிய) அழகிய செப்பையொத்த, முலை - தனங்களையும், சொல் - சொல்லைத்

தருந்த, பக்ஷிக்கு ஒத்த - அம்புக்குச் சமானமான, விழி - கண்களையும், சித்திரம் - ஆச்சரியகரமான, வில் - வில்லைநிகர்த்த, பொன்புருவத்து - அழகிய புருவத்தையும், துப்பு - பவளம்போன்ற, அதரத்தாள் - அதரத்தையுமுடையவளாகிய, ஒருத்தி - என்ஒருபெண்ணானவள், மிகமயல்கொண்டு - மிகவும் மோகங்கொண்டு, திருத்தி - திருத்தமாக்கி, அணையென்று - தழுவுவாயென்று, உவகைசெப்பி - சந்தோஷவார்த்தைசொல்லி, உன்சமுகம்வந்தாள் - உன்சமுகத்தையடைந்தாள், (ஆதலால் இவளைத்தழுவவேண்டும்)—எ-று.

இதுதாய்க்கூற்று. (௮௧)

பாலாழிநீங்கியிந்தப் பார்தனிலோர்கள்ளனுக்கா
மாலாழிசங்கொளித்து வந்தருளிக்—காலாழி
அன்றதைக்கடித்திழுக்க வங்கவற்களித்தமுத்தி
இன்றளிக்கவென்றனக்கு நீ.

இ-ள். அன்று - அந்நாளில், ஓர்கள்ளனுக்கா - ஒருதிருடன் பொருட்டு, பால்ஆழிநீங்கி - பாற்கடலைவிட்டு, மால் - பெரிய, ஆழிசங்கு ஒளித்து - திருவாழிதிருச்சங்கங்களை மறைத்து, இந்தப்பார்தனிலேவந்தருளி - இந்தப்பூமியிலெழுந்தருளி, காலாழிஅதை - காலாழியாகியஅதனை, கடித்துஇழுக்க- (அந்தக்கள்ளன்) கடித்திழுக்க, அங்கு - அவ்விடத்தில், அவற்கு - அவனுக்கு, அளித்த - கொடுத்தருளின, முத்தி - மோக்ஷத்தை, இன்று - இப்பொழுது, எனக்கு - அடியேனுக்கு, நீஅளிக்க - நீகொடுத்தருளக்கடவை—எ-று,

கள்ளன் என்றது திருமங்கையாழ்வாரை. இந்தக்கதையைக் குருபரம்பரையிற் கண்டுகொள்க. (௮௨)

பாரோர்புகழவரும் பங்குனியுத்திரத்தில்
ஆரூரர்வீதி யணுகினார்—நேரே
பணச்சர்ப்பந்தரித்துப்பொற் பதத்திற்கிண்கிணிச்சத்தம்
கிணுக்குக்கிண்கிணுக்கென்ன வே.

இ-ள். நேரே - நேராக, பணம் - படத்தையுடைய, சர்ப்பம் தரித்து- பாம்பையணிந்து, பொன் பதத்தில் - அழகிய திருவடியில், கிண்கிணிசத்தம் - கிண்கிணி யோசையானது, கிணுக்கு கிண்கிணுக்குஎன்ன - கிணுக்குகிண்கிணுக்கு என்று சத்திக்க, பாரோர்புகழ - உலகத்தார் புகழும்படி, பங்குனி உத்திரத்தில் - பங்குனி யுத்திரநாளில், ஆரூரர் - திருவாரூர்த் தியாகராயப் பெருமானானவர், வீதி அணுகினார் - தெருவை யடைந்தார்—எ-று.

பங்குனியுத்திரம் - ஒருவிசேடநாள், இந்நாளில் தியாகராயப் பெருமான், வீதியிற்பவனி வருவது வழக்கமாதலால் அந்தப் பவனியைச் சேவித்த ஒருவர் சந்தோஷித்துப் பாடியது. (௮௩)

திருவளவாயிற்பதியிற் சேலேறுமீசா
மிருவளகொன்றைத்தார் வழங்கில்—வெருவளதோ
சங்கமும்விழுந்திடாது தங்கமும்மெழுந்திடாது
திங்களும்மழன்றிடாது தேர்.

இ-ள். திருவள வாயிற்பதியில் - திருவளவாயில் என்னும் திருப்பதியில், சேஏறும் ஈசா - இடபத்தின் மீதேறி யருளுகின்ற ஈசனே, மருஉள்ள - வாசனையுள்ள, கொன்றைதார் - சொன்றைமலர் மாலையை, வழங்கில் - நீதந்தருள்வையானால், வெருஉளதோ - எமக்கு அச்சமுண்டோ, சங்கமும் விழுந்திடாது - வளையலும் கழன்றுவிழாது, தங்கமும் எழுந்திடாது - தேமலும் அதிகரிக்காது, திங்களும் அழன்றிடாது - சந்திரனும் சுடாது, தேர் - (இதனை) நீதெளிவாயாக—எ-று.

இது தலைமகள் கூற்று. (௫௪)

செங்கயலோநீலவண்டோ சித்தசன்கைநீலவண்டோ
பங்கயமோமால்வளரும் பாற்கடலோ—தங்கமலி
வச்சிரநகைச்சிகன வச்சிரவின்மெச்சுபுரு
வச்சினவிடைச்சிவிழி பார்.

இ-ள். தங்கம்மலி - பொன்னிறமிகுந்த, வச்சிரம் - வயிரமணிபோன்ற, நகைச்சி - பற்களையுடையவளும், கனம் - மேகத்திலுள்ள, வச்சிரம் - உறுதியாகிய, வில் - இந்திரவில்லும், மெச்சு - மெச்சும்படியான, புருவம் - புருவத்தையும், சின்ன இடைச்சி - சிறிய இடையையும் உடையவளுமாகிய இந்தப் பெண்ணின், விழி - கண், செங்கயலோ - சிவந்தகெண்டைமீனோ, நீலவண்டோ - நீல நிறமுள்ள வண்டுதானோ, சித்தசன்கை - மன்மதன்கையிலுள்ள, நீலவண்டோ - கருங்குவளை மலர்க்கணையோ, பங்கயமோ - தாமரைமலரோ, மால் - திருமால், வளரும் - கண் வளராநின்ற, பால் கடலோ - திருப்பாற்கடலோ, பார் - நீயே நோக்கு—எ-று.

இது தாய்க்கூற்று. (௫௫)

உன்மனதுமென்மனது மோர்மனதாயொன்றிடினே
மன்மதனும்வில்லெடுக்க மாட்டானே—நன்மதிதோய்
குன்றடர்ந்துபந்தைவென்று கொம்படைந்ததும்பிகுன்ற
வென்றடர்ந்தகொங்கைமங்கை யே.

இ-ள். நன்மதிதோய் - அழகாகிய சந்திரன்படிகின்ற, குன்று அடர்ந்து - மலையைவென்று, பந்தைவென்று - பந்தைஜெயித்து, கொம்பு அடைந்த - தந்தங்களைப்பொருந்திய, தும்பிகுன்ற - யானையான துவருந்த, வென்று அடர்ந்த - வென்றுநெருங்கின, கொங்கை - தனங்களையுடைய, மங்கையே - பெண்ணே,

உன்மனதும் - உன்மனமும், என் மனதும் - என் மனமும், ஓர்மனது ஆ- ஒருமனமாக, ஒன்றிடின் - பொருந்தினல், மன்மதனும் வில் எடுக்கமாட்டான்-மன்மதனும்வில்லையெடுக்கமாட்டான்—எ-று.

இது தலைமகன் கூற்று. மன்மதன் வருத்தமாட்டான் என்றற்கு, மன்மதனும் வில்லெடுக்கமாட்டான், என்ருன். (அ௬)

நித்தமுநினைத்திரவி னித்திரையுமற்றுருகிச்
சித்தசனெடுத்துவரு டித்தகணை—தைத்துருவ
மெத்தமயலுற்றுபிர மித்துதலைசுற்றுதடி
தத்தையொருமுத்தமது தா.

இ-ள். நித்தமும் - நாள்தோறும், நினைத்து - எண்ணி, இரவில் - இராக்காலத்தில், நித்திரையும் அற்று உருகி - நித்திரையு மில்லாமலுருகி, சித்தசன் - மன்மதனனவன், எடுத்து வருடித்தகணை - எடுத்து மழைபோலச் சொரிந்த அம்புகள், தைத்து உருவ - தைத்து உருவுதலால், மெத்த மயல் உற்று - மிகு மயக்கங் கொண்டு, பிரமித்து - திகைத்து, தலை சுற்றுதடி- தலை சுழலுகின்றதடி, தத்தை - கிளிபோல்வாளே, ஒரு முத்தமது தா - ஒரு முத்தம்கொடுப்பாயாக—எ-று.

ஒருமுத்தங் கொடுத்தாயானல் என் துன்பமெல்லாம் தீரும் என்பதாம். இது தலைமகன்கூற்று. (அஎ)

வேலோகடலோ விடமோகருவண்டோ
சேலோகணையோ சிறுவாளோ—கோலமுடன்
தண்டங்கித்துண்டுருளத் தத்திவிழக்குத்துமுலைக்
கண்டங்கிக்காரிகடைக் கண்.

இ-ள். கோலமுடன் - அழகோடு, தண் தங்கி - குளிர்ச்சி பொருந்தி, துண்டு உருள - (எதிர்ப்பட்ட ஆடவர்) துண்டுபட்டுருளவும், தத்திவிழ- தடுமாறிவிழவும், குத்தும் - (அவர்களைக்) குத்துகின்ற, முலை - தனங்களின் மீது, கண்டங்கிக்காரி - கண்டாங்கியை யணிந்தவளாகிய இந்தப்பெண்ணினது, கடைக்கண் - கடைக்கண்ணனது, வேலோ-வேலாயுதமோ, கடலோ- சமுத்திரமோ, விடமோ - நஞ்சமோ, கருவண்டோ - கருமையாகிய வண்டோ, சேலோ - சேல்மீனே, கணையோ - அம்போ, சிறுவாளோ - சிறிய வாளாயுதமோ—எ-று.

ஒருநாயகன் ஒருபெண்ணின் கண்ணழகை வியந்து கூறியது. கண்டாங்கி யென்பது கண்டங்கியெனக் குறுகியது. கண்டாங்கி - உத்தரீயம்.

நீலமோவேலோ நெடுங்கயலோவாரிதிசேர்
ஆலமோவம்புயமோ வைங்கணையோ—நீலநிற
வசவிச்சோலைக்கருகில் வந்துபுனலாடுகின்ற
காவிச்சேலைக்காரிக் கண்.

இ-ள். நீலநிறம் - நீலநிறமுள்ள, வாவி - தடாகங்கள்பொருந்திய, சோலைச்கு அருகில்வந்து - சோலைக்குச் சமீபத்தில்வந்து, புனலாடுகின்ற - நீராடுகின்ற, காவிச்சேலைக்காரி - காவிசசேலைக்காரியாகிய இந்தப் பெண்ணினது, கண் - கண்கள், நீலமோ - நீலோற்பலமலர்களோ, வேலோ - வேல்களோ, நெடுங்கயலோ - நெடியகெண்டைமீன்களோ, வாரிதிசேர் ஆலமோ - பாற்கடலிலுண்டாகிய ஆலகாலவிஷமோ, அம்புயமோ - தாமரை மலர்களோ, ஐங்கணையோ - (மன்மதனது) பஞ்சபாணங்களோ—எ-று.

வாரிதியோ என்றும்பாடம். காவிச்சேலை - செங்காவிச்சேலை. (அசு)

சேலோகணையோ பிணையோநற்றென்னவன்கை
வேலோநமனோ மிளிர்வண்டோ—சாலப்
பளபளென்றவொளிமிகுந்து பவளமிஞ்சுநகைபுனைந்த
களபகும்பமுலைமடந்தை கண்.

இ-ள். சால - மிகவும், பளபளென்ற - பள பளப் பாகிய, ஒளிமிகுந்து - ஒளி அதிகரித்து, பவளம்மிஞ்சு நகை புனைந்த - சிறந்த பவளத்தாழ்வடமணிந்த, களபம் - கலவைச்சந்தனம்பூசப்பெற்ற, கும்பம் - குடம்போன்ற, முலை - தனங்களையுடைய, மடந்தை - இந்தக்கன்னிகையின், கண் - கண், சேலோ - சேல் மீன்களோ, கணையோ - அம்புகளோ, நல் - அழகிய, தென்னவன்கை - பாண்டியன்கையிலுள்ள, வேலோ - வேலாயுதமோ, நமனோ-யமனோ, மிளிர் வண்டோ - பிரகாசிக்கிற கருவண்டோ—எ-று.

இதுவும் ஒரு பெண்ணினது கண்ணழகைக் கண்டவொரு தலைமகன் வியந்து கூறியது. (கூ0)

முக்கனியிதழ்க்கொடடா முற்கதிரையிற்குமரா
விக்கநறைமிக்கவினி யிக்கமுது—சர்க்கரைரு
சிக்கிலைகசக்குது நிசிக்கலையுதிக்கிலதில்
அக்கரைபிறக்குமடடா.

இ-ள். கதிரையில்குமரா - கதிரையில் வாழ்கின்ற முருகனே, முன் - முன்னே, முக்கனி - முக்கனியின் சுவைபோலும் சுவையையுடைய, இதழ் - அதரத்தை, கொடடா - தாடா, விக்க - விக்கும்படி, நறைமிக்க - தேனினுமிகுந்த, இனிய இக்கு அமுது - இனிய கருப்பஞ்சாறும், சர்க்கரை - (அதனாலுண்டாகிற) சர்க்கரையும், ருசிக்கிலை - இனிப்பதில்லை, கசக்குது-கைக்கின்றது, நிசி - இரவில், கலை உதிக்கில் - சந்திரன் உதித்தால், அதில் அக்கரை பிறக்கும் - அதில் அக்கரையுண்டாகும், அடடா—எ-று.

கதிரை - முருகர் தலங்களுள் ஒன்று, முக்கனி - வாழை, மா, பலா, என்பன. இனிய இக்கமுது என்பது இனி யிக்கமுது எனத் தொகுத்தலாயி

ற்று. அக்கரை - விருப்பம், அதில் என்றது அந்தக்கலவியில் என்றபடி. இது இடக்கரடக்கல், அக்கரை யுதிக்கும் என்றும், அக்கரை பயக்கும் என்றும் பாடம். (௬௧)

ஆரார்பொறுப்பார்சொல் லாதித்தாவஞ்சிமன்னு
சேராபரராஜ சேகரர்—நேரே
சினத்துவட்டமிட்டுசெப் பெனப்பணைத்துதித்தபொற்
றனத்திலிட்டமுத்துவெக்கை தான்.

இ-ள். ஆதித்தா - சூரியனே, வஞ்சிமன்னு - வஞ்சிவேந்தனே, சேரா- சேரனே, பராராஜசேகரா - பராராஜ சேகரனே, நேரே - நேராக, சினத்து- கோபித்து, வட்டமிட்டு - வட்டவுருவங்கொண்டு, செப்பு என பணைத்து- செப்பென்னும்படி பருத்து, உதித்த - பூரித்த, பொன் தனத்தில் இட்ட- அழகியதனத்தின்மீதணிந்த, முத்துவெக்கை-முத்துமாலையின்வெப்பத்தை, ஆர் ஆர் பொறுப்பார் - எவர் எவர் பொருப்பார், சொல் - நீ சொல்வாயாக எ-று.

ஆதித்தன் என்றது - புகழாகிய வொளியுள்ளவன் என்றபடி, வஞ்சி- கருவூர், பராராஜசேகரன் - பராராஜர்களுக்கு முடிபோல்பவன், விரகிகளுக்கு முத்துவெப்பமாயிருந்து வருத்துமாதலால், "முத்து வெக்கை - ஆரார் பொ றுப்பார்" என்றாள், இது தலைமகள்கூற்று. (௬௨)

இந்நேரநீயிவளை யின்பமணமேபுரிவாய்
தன்னேரருணு சலதுரையே—மன்னுமதன்
பூவினம்மையேவிநின்று போர்செய்கின்றதான்மெலிந்து
காவியங்கணாள்கலங்கி னாள்.

இ-ள். தன் நேர் - தனக்குத் தானே நிகரான, அருணசல துரையே- அருணசலப் பிரபுவே, மன்னும் மதன் - நிலைபெற்ற மன்மதன், பூவின் அம் பை ஏவிநின்று - புஷ்ப பாணங்களை யெய்து நின்று, போர் செய்கின்றதால்- போர் செய்வதனால், மெலிந்து - இளைத்து, காவியங் கணாள் - கருங்குவளை மலர்போலுங் கண்களையுடையவளாகிய என்பெண்ணானவள், கலங்கினாள்- மனக்கலக்க மடைந்தாள் (ஆதலால்), இந்நேரம் - இப்பொழுது, இவளை - இந்தப்பெண்ணை, நீ - நீ, இன்பம் - சுகத்தை யநுபவித்தற்குரிய, மணம்புரி வாய் - விவாகஞ் செய்துகொள்வாயாக—எ-று.

பூவினம்பை யென்பதில் இன் அல் வழிச்சாரியை, அருணசலம் என் னும் பெயருள்ள ஒருசீமானை நோக்கி ஒருபெண்ணின் தாய் கூறியது. (௬௩)

கோங்கினரும்போ குமிழியோபொற்பந்தோ
ஓங்குவரையோ வொளிர்செப்போ—மாங்குயிலின்
மன்னுமொழியன்னநடை மின்னலிடையென்னிவரு
கன்னிவளர்சின்னமுலை கள்.

இ-ள். மா - மாமரத்திலுள்ள, குயிலின் - குயில்மொழிபோல, மன்னும் - பொருந்திய, மொழி - மொழியையும், அன்னம் நடை - அன்னத்தின் நடைபோலும் நடையையும், மின்னல் இடை - மின்கொடிபோலும் இடையையும் உடையாள், என்ன - என்று கண்டோர் சொல்லும்படி, வரு - தோன்றின, கன்னி - இந்தப்பெண்ணின, வளர் - (நாளுக்குநாள்) விருத்தியடையாநின்ற சின்னமுலைகள் - சிறிய கொங்கைகள், கோங்கின் அரும்போ - கோங்கரும்புகளோ, குமிழியோ - நீர்க்குமிழிகளோ, பொன்பந்தோ - பொன்னினாற் செய்யப்பட்ட பந்துகளோ, ஓங்குவரையோ - உயர்ந்த மலைகளோ, ஒளிர்செப்போ - பிரகாசிக்கிற பொற்செப்புக்களோ—எ-று.

இது ஒருபெண்ணின் தனத்தழகைக்கண்ட ஒருதலைமகன் அதனை வியந்து கூறியது. (௧௪)

இத்தலத்தோர்போற்று மிறைவனே தஞ்சைநகர்
வித்தகனேசிவாஜி வேந்தேகேள்—சித்தசன்றன்
சமரிலங்கங்குழலுநந்தஞ் சதிருறும்பெண்டிருமுகஞ்செங்
கமலமுஞ்சந்திரனுமஞ்சுங் காண்.

இ-ள். இத்தலத்தோர் போற்றும் - இவ்வுலகத்தார் யாவரும் வணங்குகின்ற, இறைவனே - தலைவனே, தஞ்சை நகர் வித்தகனே - தஞ்சை நகரில் வாழ்கின்ற புத்திமானே, சிவாஜிவேந்தே - சிவாஜியரசனே, கேள் - கேட்பாயாக, சித்தசன் தன் - மன்மதனது, சமரில்-போரில், அங்கு அங்கு உழலும் - அங்கங்கேயுழலுகின்ற, நம் தம் - எமது, சதிர் உறும்பெண் - அழகுபொருந்தியபெண்ணினது, திருமுகம் - அழகிய முகத்துக்கு, செங்கமலமும் - செந்தாமரைமலரும், சந்திரனும்—, அஞ்சும் - பயப்படும், காண்-நீநோக்கு—எ-று.

இது தாய்க்கூற்று. (௧௫)

பூமிதனிற்பேசும் புனிதாசிவாஜிமன்னா
காமியின்மேலின்றுபகை கண்டவைகேள்—காமனவன்
மாகரமுந்தோகையரு மாமதியும்பாலனமும்
சாகரமுங்கோகிலமுந் தாம்.

இ-ள். பூமிதனில் - பூமியில், பேசும் - (எல்லாரும் புகழ்ந்து) பேசுதற்குரிய, புனிதா - பரிசுத்தனே, சிவாஜிமன்னா - சிவாஜிவேந்தனே, காமியின் மேல் - காமியாகிய இந்தப்பெண்ணின்மீது, இன்றுபகை கண்டவைகேள் - இன்றுபகையாகக் காணப்பட்டவைகளைக் கேட்பாயாக, (அவையாவையெனின்), காமன் அவன்மா கரமும் - மன்மதனாகிய அவனது பெரியகையும், தோகையரும் - மாதரும், மாமதியும் - பூர்ண சந்திரனும், பால் அன்னமும் - பாற்சோறும், சாகரமும் - கடலும், கோகிலமும்தாம்—, குயிலுமேயாம்-எ-று.

இது தாய்க்கூற்று. (௧௬)

மண்டலத்தோர்பேசுகின்ற மாலேசிவாஜிமன்னா
கண்டஞ்சுங்கன்னிதனங் கைத்தாளம்—செண்டுசிமிழ்
கும்பமம்புயங்கிரீடங் குஞ்சரங்குரும்பைமேரு
பம்பரஞ்சிறந்தசூது பார்.

இ-ள். மண்தலத்தோர் பேசுகின்ற - நிலவுலகத்தார் புகழ்ந்துபேசுகின்ற, மாலே - பெரியோனே, சிவாஜிமன்னா - சிவாஜிவேந்தனே, கன்னி - இந்தப்பெண்ணினது, தனம்கண்டு - தனத்தைப்பார்த்து, கைத்தாளம் - கைத்தாளமும், செண்டு - பூஞ்செண்டும், சிமிழ் - சிமிழும், கும்பம் - குடமும், அம்புயம் - தாமரையரும்பும், கிரீடம் - முடியும், குஞ்சரம் - யானையும், குரும்பை - தென்னங்குரும்பையும், மேரு - மேருமலையும், பம்பரம் - பம்பரமும், சிறந்தசூது - சிறந்த சொக்கட்டான்காயும், அஞ்சும் - அஞ்சாநின்றன, பார்- நீநோக்கு—எ-று.

இதுதாய்க்கூற்று. (கஎ)

மாதங்கவத்திரற்கு வட்டமளித்தோனுதவும்
மாதங்கவத்திரன்பின் வந்தகுகா—மாதங்கம்
தங்கங்கம்பம்பொன்றுந் தண்கஞ்சுங்கண்கண்டம்
பங்கந்தங்குஞ்சங்கம் பார்.

இ-ள். மாதங்கவத்திரற்கு - அழகாகிய பொன்னுடையையுடைய திருமாலுக்கு, வட்டம் அளித்தோன் - சக்கரத்தைக் கொடுத்தவனாகிய சிவபெருமான், உதவும் - பெற்ற, மாதங்கவத்திரன்பின் - யானைமுகத்தோனாகிய விநாயகனுக்குப்பின்னே, வந்த - தோன்றின, குகா - முருகா, மாது அங்கம்- இந்தப்பெண்ணினது உடம்பு, தங்கம்கம் - தங்கத்தினும் தலைமைப்பாடுடையது, கண் - கண்ணானது, அம்புஒன்றும் - நீரிலுள்ள, தண்கஞ்சம் - குளிர்ந்ததாமரைமலர்போல்வது, கண்டம் - கழுத்தானது, பங்கம் தங்கும் சங்கம்- சேற்றில்வாழ்கின்ற சங்கைநிகர்ப்பது, பார் - நீநோக்கு—எ-று.

இதுதாய்க்கூற்று. (கஅ)

கடுமொழிசேர்சூரைவென்ற கந்தாவிம்மாதின்
நடுமொழிகளங்கண்முலை நற்றா—ளொடுசேரத்
தந்தஞ்சுங்கண்டஞ்சுஞ் சங்கஞ்சும்வண்டஞ்சும்
பந்தஞ்சும்பஞ்சஞ்சும் பார்.

இ-ள். கடுமொழிசேர் - கடுஞ்சொற்களைப்பொருந்திய, சூரை - சூரபன்மனை, வென்ற - வென்றருளின, கந்தா - கந்தனே, இம்மாதின் - இந்தப்பெண்ணின், நடுஒடு - இடையோடும், மொழிஒடு - சொல்லோடும், களம்ஒடு - கழுத்தோடும், கண்ஒடு - கண்ணோடும், முலைஒடு - தனத்தோடும், நல்தாள்ஒடு-

அழகியபாதத்தோடும், சேர - இணங்குதற்கு, (முறையே) தந்து அஞ்சும்- நூலிழையஞ்சும், கண்டு அஞ்சும் - கற்கண்டு அஞ்சும், சங்கு அஞ்சும் - வண்டு அஞ்சும், பந்து அஞ்சும்—, பஞ்சு அஞ்சும் - செம்பஞ்சு அஞ்சும்—எ-று.

இது தாய்க்கூற்று. (கூகூ)

என்றுவடிவே லிளங்குமரனைக்கண்டாள்
அன்றுமுதற்சேரமன தாகியே—இன்றுறும
திக்கிளைத்துச்சொக்கிவட்குத் திக்கிலைப்பக்கத்தடுத்துச்
சுக்கெடுத்துத்தட்டிவைத் தூது.

இ-ள். வடிவேல் - வடித்தவேலாயுதத்தைத் தாங்கிய, இளங்குமரனை- இளையகுமாரக்கடவுளை, என்றுகண்டாள் - என்றுகண்டாளோ, அன்றுமுதல் - அன்றுமுதலாக, சேர - (அவனைக்) கூட, மனது ஆகி - விருப்பங்கொண்டு, இன்று உறும் - இன்றுதோன்றிய, மதிக்கு இளைத்து - சந்திரனுக்குத் தோற்று, சொக்கு - மயங்குகிற, இவட்கு - இந்தப்பெண்ணுக்கு, திக்குஇல்லை - திக்கில்லை, (ஆதலால்) பக்கத்து அடுத்து - இவள்பக்கத்தில்கிட்டி, சுக்கு எடுத்துதட்டி - சுக்கையெடுத்துநறுக்கி, வைத்து - காதில்வைத்து, ஊது- ஊதுவாயாக—எ-று.

இது நற்றாய்தோழிக்குச்சொல்லியது. (கOO)

என்னைச்சொல்வாரல்ல தென்னைவிதித்தகுகன்
தன்னைச்சொல்வாரிலையித் தாரணியில்—கன்னி
தனைமறந்தாளன்னைமறந்தா டுயிறுறந்தாளணைபொருந்தாள்
எனைமறந்தாளுனைமறந்தா ளென்று.

இ-ள். கன்னி - இந்தக்கன்னிகையானவள், தன்னைமறந்தாள் - தன்னை மறந்துவிட்டாள், அன்னைமறந்தாள் - தாயைமறந்தாள், துயில்துறந்தாள்- நித்திரையை நீங்கினாள், அணைபொருந்தாள் - படுக்கையிற்பொருந்தியிராள், என்னைமறந்தாள் - என்னைமறந்துவிட்டாள், உன்னைமறந்தாள் - உன்னை மறந்துவிட்டாள், என்று - என்று, என்னைச் சொல்வாரல்லது - என்னை யிகழ்ந்துரைப்பதேயன்றி, என்னைவிதித்த - என்னைப்படைத்த, குகன்தன்னை- முருகக்கடவுளை, சொல்வார் - இகழ்ந்துசொல்லுவோர், இத்தாரணியில் - இவ்வுலகத்தில், இல்லை - இல்லை—எ-று.

இது தலைமகள்கூற்று. (கOக)

அன்றயன்மால்காணு வடிமுடியைக்காண்பதற்குத்
தென்றிசைக்கோனென்ன தவஞ் செய்தானோ—வென்றிதிகழ்
ஆடரவாளாநீறணிதோளா வாதிரைநாளாமாதுமணாளா
தோடவிர்காதாமாகடவூரா சொல்.

இ-ள். வென்றிதிகழ் - வெற்றிவிளங்குகின்ற, ஆடு - ஆடுமியல்புள்ள, அரவாளா - பாம்பையணிந்தவனே, நீறுஅணிதோளா - திருநீற்றையணிந்த தோள்களையுடையவனே, ஆதிரைநாளா - திருவாதிரை நாளையுடையவனே, மாதுமணாளா - உமாநாயகனே, தோடு அவிர்காதா - குழைவிளங்குங் காதினையுடையவனே, மாகடவூரா - பெருமையுள்ள திருக்கடவூரில் எழுந்தருளியிருப்பவனே, அன்று - அந்நாளில், அயன்மால்காணு - பிரமவிஷ்ணுக்கள்காணாத, முடிஅடியைக்காண்பதற்கு - உன் திருமுடியையும் திருவடியையும் காணும்பொருட்டு, தென்திசைக்கோன் - தென்றிசைக்கதிபனாகிய யமன், என்னதவம் செய்தானோ - எப்படிப்பட்ட தவத்தைச்செய்தானோ, சொல் - சொல்லு—எ-று.

அயன்மால்காணு என்பதற்கேற்ப அடிமுடியென்பதனை முடியடியென மாற்றிப் பொருள்கூறலாயிற்று. சிவபெருமான் திருக்கடவூரில் யமனையுதைத்து மார்க்கண்டனைக்காக்க எழுந்தருளினகாலத்தில் இறைவன் திருமுடியையும் திருவடியையும் யமன் காணப்பெற்றானாதலால் "அன்றயன்மால்காணு வடிமுடியைக்காண்பதற்குத் தென்றிசைக்கோனென்ன தவஞ்செய்தானோ" என்று வியந்துகூறலாயிற்று. (கO௨)

தென்றலுலவுந் திருக்கடவூரெம்பெருமான்
மன்றல்செறிந்தே மதுவூறும்—கொன்றைக்காப் [தும்
பொன்பரவுந்திண்கொங்கையிரண்டும் புண்படநொந்துந்துன்பமிகுந்
அன்புதிரண்டும்பெண்கொடிநெஞ் சஞ்சும்.

இ-ள். பெண்கொடி - பூங்கொடிபோல்வாளாகிய என்பெண்ணானவள், தென்றல் உலவும் - தென்றற்காற்றுலாவுகின்ற, திருக்கடவூர் - திருக்கடவூரிலெழுந்தருளிய, எம்பெருமான் - எம்மிறைவரது, மன்றல்செறிந்து மதுஊறும்கொன்றைக்குஆ - வாசனைமிகுந்து தேன்சுரக்கின்ற கொன்றைமலர்மாலையின்பொருட்டு, பொன்பரவும் - தேமல்படர்ந்த, திண்கொங்கை யிரண்டும் - வன்மையாகிய தனமிரண்டும், புண்படநொந்தும் - புண்படவருந்தியும், துன்பம் மிகுந்தும் - துன்பம் அதிகரித்தும், அன்புதிரண்டும் - அன்பே ஒருஉருவாகியும், நெஞ்சு அஞ்சும் - மனமஞ்சுவாள்—எ-று.

இதுதாய்க்கூற்று. எம்பெருமான் கொன்றைக்கா எனக்கூட்டுக. (கO௩)

பாலனுக்காவன்று பகடேறிவந்தெதிர்த்த
காலனுக்குக்காலா கடவூரா—மேலோர் [ெ
கரும்புகொண்டங்கெதிர்ந்துவந்தங்கசன்பொருஞ்செஞ்சரங்கள்கண்
மருண்டுநெஞ்சங்கலங்குமென்றன் மான்.

இ-ள். பாலனுக்கா - பாலகனாகிய மார்க்கண்டன்பொருட்டு, அன்று - அந்நாளில், பகடுஏறிவந்து - எருமைக்கடாவை யூர்ந்துவந்து, எதிர்த்த - எதிர்த்த, காலனுக்குக்காலா - யமனுக்குயமனே, கடவூரா - திருக்கடவூரனே, எ

ன்றன்மான் - என்பெண்ணனவள், மேல் - தன்மீது, ஓர்கரும்புகொண்டு- ஒப்பற்ற கருப்புவில்லைக் கைக்கொண்டு, அங்கு எதிர்த்துவந்து - அவ்விடத்து எதிர்த்துவந்து, அங்கசன் - மன்மதன், பொரும் - போர்புரிகின்ற, செஞ்சரங்கள்கண்டு - செவ்வியபாணங்களைப்பார்த்து, மருண்டு - மயங்கி, நெஞ்சம் கலங்கும் - மனங்கலங்காநின்றாள்—எ-று.

இது தலைமகள்கூற்று. (கOச)

தொண்டருடன்கூடித் துதித்திரண்டுகண்ணாரக்
கண்டுதொழுவேனே கடவூரா—பண்டோர்
அமுதிருக்குஞ்சிறுகடத்தன் றெழுமுனக்கன்பரைமருட்டும்
சமனையெற்றும்பரிபுரச்செந் தாள்.

இ-ள். கடவூரா - திருக்கடவூரனே, பண்டு - முற்காலத்தில், ஓர் அமுது இருக்கும் சிறுகடத்து - ஒருஅமிர்தமிருந்த சிறியகுடத்தில், அன்றுஎழும்- அக்காலத்தவதரித்த, உனக்கு - உனக்கு, அன்பரை - அன்பனாயிருந்த மார்க்கண்டனை, மருட்டும் - மருளச்செய்த, சமனைஎற்றும் - யமனையுதைத்த, பரிபுரம் - நூபுரமணிந்த, செந்தாள் - செவந்ததிருவடியை, தொண்டருடன்கூடி துதித்து - அடியாருடன்கூடித்துதித்து, இரண்டுகண் ஆரக்கண்டு - இருகண்களாரக்கண்டு, தொழுவேனே - வணங்கப்பெறுவேனோ—எ-று.

திருக்கடவூர்ச் சிவபெருமான் அமுதகலசத்தில் அவதரித்தமையால் அவர்க்கு அமுதகடேசர்என்னும் திருநாமம் வழங்கும். (கOரு)

என்றுதொழுவே னெளியேனளிமுரலுங்
கொன்றையணிதென்கடவூர்க் கோமானே—துன்றும்
கனற்பொறிக்கட்பகட்டிலூற்றுக் கறுத்ததெற்குத்திசைக்குளுக்ரத்
தனைச்சினத்திட்டுதைத்தபற்பத் தாள்.

இ-ள். அளிமுரலும் - வண்டுகள் முழங்குகின்ற, கொன்றைஅணி- கொன்றைமலர்மாலையைத்தரித்த, தென்கடவூர்கோமானே - தென்கடவூரிறைவனே, துன்றும் - மிகுந்த - கனல்பொறி - நெருப்புப்பொறியைச் சிந்துகின்ற, கண் - கண்களையுடைய, பகட்டில்ஊற்று - எருமைக்கடாவின்மீதேறி, கறுத்த - கோவித்துவந்த, தெற்குத்திசைக்குள் - தென்றிசையில்வாழ்கின்ற, உக்ரத்தனை - கொடுமையையுடையவனாகியயமனை, சினத்திட்டு - கோவித்து, உதைத்த - உதைத்தருளின, பற்பம் - தாமரைமலர்போன்ற, தாள்- உன்திருவடியை, எளியேன் - ஏழையேன், என்றுதொழுவேன் - என்றுவணங்குவேன்—எ-று. (கOசு)

பற்றிப்பணிந்து பரவவரந்தருவாய்
கற்றைச்சடையா கடவூரா—வெற்றிநெடுங்

கொண்டலொக்குங்கண்டசத்தங்கொண்டெதிர்த்தங்கங்கறிக்குஞ்
சண்டனைக்கண்டன்றுதைக்குந் தாள்.

இ-ள். கற்றை சடையா - திரட்சியாகிய சடையையுடையவனே, கடவூரா - திருக்கடவூரனே, வெற்றி - வெற்றியைக்கொண்ட, கொண்டல் ஒக்கும் - மேக முழக்கத்தையொத்த, கண்டசத்தம்கொண்டு - கண்டத் தொனியையுடையவனாய், எதிர்த்து - எதிர்த்து வந்து, அங்கம் கறுக்கும் - உடல் கறுத்த, சண்டனைக் கண்டு - யமனைக் கண்டு, அன்று உதைக்கும் - அன்று உதைத்த, தாள் - திருவடியை, பற்றிபணிந்து - பற்றிவணங்கி, பாவ-துதிக்கும்படி, வரம் தருவாய் - (எமக்கு) வரம் தந்தருளவேண்டும்—எ-று. (௧0எ)

ஆற்றுமோநெஞ்சத் தடங்குமோகொண்டமையல்
கூற்றுதைத்ததென்கடவூர்க் கோமானே—மாற்றுயர்பொற்
கும்பமுலைத்திங்கணுதற் கொந்தளகக்கொம்பைவெறுத்
தம்புதொடுத்தங்கசன்விட் டால்.

இ-ள். கூற்று உதைத்த - யமனையுதைத்த, தென்கடவூர் கோமானே-தென்கடவூரிறைவனே, மாற்றுயர்பொன்கும்பம்முலை - மாற்றுயர்ந்த பொற்குடம்போன்ற தனங்களையும், திங்கள்நுதல் - பிறைபோன்றநெற்றியையும், கொந்து அளகம் - பூங்கொத்துக்களையணிந்த கூந்தலையும் உடைய, கொம்பை - பூங்கொம்புபோல்வாளாகிய இந்தப்பெண்ணை, அங்கசன் - மன்மதன், வெறுத்து - கோபித்து, அம்புதொடுத்துவிட்டால் - அம்பைப்பிரயோகித்து விட்டால், ஆற்றுமோ - இவள் சகிப்பாளோ, கொண்டமையல் - கொண்ட மயக்கம், நெஞ்சத்து அடங்குமோ - மனத்திலடங்குமோ—எ-று.

மன்மதபாணத்தாலுண்டாகுந் துன்பத்தை இவள் பொறுக்கமாட்டாள், ஆதலால் நீஇவளை ஆதரிக்கவேண்டும் என்பது கருத்து. (௧0அ)

காணப்பெற்றேமிரண்டு கண்ணாரக்கண்டன்பு
பூணப்பெற்றேமனமே போதாதோ—சேணிற்
புரம்புரம்புரிந்திடும் புரந்தரன்பதந்தரும்
பரம்பரந்தருஞ்சிதம்ப ரம்.

இ-ள். மனமே - நெஞ்சே, சேணில் - மேவிடத்திலுள்ள, புரம் - நகரங்களுள், புரம் - ராஜதானியாகிய அமராவதி நகரத்தை, புரிந்திடும் - விரும்பி வாழ்கின்ற, புரந்தரன்பதம் தரும் - இந்திரபதத்தைத் தருவதும், பரம் பரம் தரும் - மேன்மையுள் மேன்மையாகிய முத்தியைத் தருவதும் ஆகிய, சிதம்பரம் - சிதம்பரதலத்தை; இரண்டு கண்ணாரக் காணப்பெற்றேம் - இருகண்ணிறையத் தரிசிக்கப்பெற்றேம், கண்டு-தரிசித்து, அன்புபூணப்பெற்றேம்-அன்பைத்தரிக்கப்பெற்றேம், போதாதோ - இது அமையாதோ—எ-று.

இந்திரபதவி முதலியவற்றையும் முத்தியையும்கொடுக்கும் மகிமையுள்ள சிதம்பரதலத்தைத்தரிசித்து அதனிடத்து அன்புபூண்டோம், இது அமையாதோ, வேறொருதலத்தைத் தரிசிக்கவேண்டுமோவென்பதாம். (கOசு)

கண்டேன்சிதம்பரத்தைக் கண்குளிரமெய்ஞ்ஞானம்
கொண்டேன்சிவாயவென்று கும்பிட்டேன்—வண்டேகேள்
நீண்டசெம்பொற்காண்டகும்விற் பூண்டசெங்கைப்பாண்டரங்கத்
தாண்டவன்றண்பூஞ்சதங்கைத் தாள்.

இ-ள். வண்டே கேள் - வண்டே கேட்பாயாக, நீண்ட - நீட்சியாகிய, செம்பொன் - செம்பொன்னாற் செய்யப்பட்டு, காண்தகும் - காணுந் தகுதியையுடைய, வில் - வில்லை, பூண்ட - தரித்த, செங்கை - செவந்தகையையும், பாண்டரங்கத்தாண்டவன் - பாண்டரங்கமென்னுங் கூத்தையுமுடையவனாகிய சிவபெருமானது, தண்பூ - குளிர்ச்சிபொருந்திய தாமரைமலர்போன்ற, சதங்கை தாள் - சதங்கையணிந்த திருவடியை, கண்டேன் - தரிசித்தேன், மெய்ஞானம்கொண்டேன் - மெய்ஞ்ஞானத்தைப் பெற்றவனாகி, சிவாய என்று - சிவாயவென்று உச்சரித்துக்கொண்டே, கண்குளிர - கண் குளிரும்படி, சிதம்பரத்தைக் கும்பிட்டேன் - சிதம்பரதலத்தை நமஸ்கரித்தேன்—எ-று.

சிவபெருமானுக்குப் பொன்மலையாகிய மேருவேவில்லாதலால் "நீண்ட செம்பொற்காண்டகும் விற்பூண்டசெங்கைப் பாண்டரங்கத்தாண்டவன்" எனக்கூறப்பட்டது. (கக0)

தேரோடும்வீதியெல்லாஞ் செங்கயலுஞ்சங்கினமும்
நீரோடுலாவிவரு நெல்லையே—காரோடுங்
கந்தரத்தரந்தரத்தர் கந்தரத்தரந்தரத்தர்
கந்தரத்தரந்தரத்தர் காப்பு.

இ-ள். கார் ஓடும் கந்தரத்தர் - கருமையோடிய கண்டத்தையுடையவர், அந்தரத்தர் கந்தர் அத்தர் - விண்ணுலகினராகிய தேவருக்கும் முருகருக்கும் தந்தையாயிருப்பவர், அம்தரத்தர் கம்தரத்தர் - அழகிய மேன்மையைக் கொண்டவராகிய பிரமன் முதலியோர் தலைமாலையைத் தரித்தவர், அந்தரத்தர் - ஆகாயவுருவமுடையவர் (அவரது) காப்பு-காவல், தேர் ஓடும் வீதியெல்லாம் - தேரோடுந் தெருக்களிலெல்லாம், செங்கயலும் - செவந்த கயல் மீன்களும், சங்கு இனமும் - சங்கின்கூட்டமும், நீரோடு உலாவிவரும் நெல்லையே - நீரோடுத்வழ்ந்துவருகின்ற திருநெல்லைப்பதியேயாம்—எ-று.

நெல்லை - திருநெல்வேலி, காரோடும் என்பதற்கு மேகம் கந்தரக்கருமைக்குத் தோற்றோடும் என்றுரைப்பினுமாம். சிவபெருமானுக் கிருப்பிடம் திருநெல்வேலியே யென்பது கருத்து. (ககக)

வள்ளாளகண்டா வடுகநாதாசுவர்க்க
வல்லாளகண்ட மயல்கொண்டு—பொல்லாத
சித்தசன்சரத்திஞெந் துதிர்த்தகண்கள்முத்துடன்கை
நத்திழந்திடத்தயங்கி ஞள்.

இ-ள். வல்லாள கண்டா - வல்லாள கண்டனே, வடுகநாதா - வடுகநாதனே, சுவர்க்கம்வல்லாள் - தனங்களாகிய சொக்கட்டான்காய்களை யுடையவளாகிய என்பெண், அகண்டமயல்கொண்டு - பெருமயக்கங்கொண்டு, பொல்லாத - தீயதாகிய, சித்தசன்சரத்தின் - மன்மத பாணத்தால், நொந்து உதிர்த்த - வருந்தியுதிர்த்த, கண்ணின் முத்துடன் - கண்ணீர்த்துளியாகியமுத்திஞேடு, கைநத்து இழந்திட - கையணியாகிய வளையலையு மிழக்கும்படி, தியங்கிஞள் - திகைத்தாள்—எ-று.

வல்லாளகண்டன் வடுகநாதன் என்பது ஒரு சீமான்பெயர். சுவர்க்கம்-தனம். வல் - சூதாடுகருவி (சொக்கட்டான்காய்) நத்து - ஆபரணப் பொது, இதுதாய்க் கூற்று. (கக௨)

பூவணைமேஞட்டம் பொருந்தாதிருப்பவளைக்
காவடுகநாதாதென் கால்சீறித்—தாவிவர
இக்குவிலிநற்கணைக ளிக்கணமெடுக்குமதி
அக்கினிதரக்கவலை யாய்.

இ-ள். வடுகநாதா - வடுகநாதனே, தென்கால் சீறி - தென்றற் காற்ருனது சீறி, தாவிவர - மேலிட்டுவருகையாலும், இக்குவில்லி - கருப்பு வில்லியாகிய மன்மதன், நல் கணைகள் - நல்ல அம்புகளை, இக்கணம் எடுக்க - இந்த க்ஷணமேயெடுக்கையாலும், மதி அக்கினிதர - சந்திரன் நெருப்பைத்தருகையாலும், கவலை ஆய் - கவலையுள்ளவளாகி, பூவணையில் - புஷ்ப சயனத்தில், நாட்டம்பொருந்தாதிருப்பவளை - கண்ணுறக்கமில்லா திருப்பவளாகிய என் பெண்ணை, கா - காப்பாயாக—எ-று.

இதுதாய்க்கூற்று. (கக௩)

தாண்டவாவென்று தளருந்தனியிருந்தென்
ஆண்டவாவந்தென்னை யாளென்னும்—ஈண்டுமதன்
தொட்டநஞ்சம்பிற்கிரங்குஞ்சொற்றனர்ந்தென்றத்தையங்கம்
சுட்டவெண்டிங்கட்குடைந்தஞ் சும்.

இ-ள். என்தத்தை - என் கிளிப்பிள்ளைபோலும் பெண், தாண்டவா என்று தளரும் - தாண்டவாவென்று தளர்வாள், தனி இருந்து - தனியாயிருந்து, என் ஆண்டவாவந்து என்னைஆள்என்னும் - என் ஆண்டவனேவந்து என்னையாளவேண்டுமென்பாள், ஈண்டும்மதன் - நெருங்கிவருகிறமன்மதன்,

தொட்ட - பிரயோகித்த, நஞ்சு அம்பிற்கு - விஷபாணத்துக்கு, இரங்கும் - (ஆற்றமாட்டாமல்) இரங்குவாள், சொல்தளர்ந்து - சொல்தடுமாறி, அங்கம் சுட்ட - உடம்பைச்சுட்ட, வெள்திங்கட்கு - வெண்மையாகிய சந்திரனுக்கு, உடைந்து அஞ்சும் - தோற்று அஞ்சுகின்றாள்—எ-று.

தாண்டவன் - ஓர்சீமான்பெயர், நஞ்சம்பு - நீலமலர்க்கணை. இதுதாய்க்கூற்று. (கசச)

பந்தளவுகந்தகளபந்தணையணிந்தமுலை
கொந்தளகபந்தமு மிருந்தமுகில்—அந்தமுள
தந்தெனமெலிந்தவிடை தந்தவரியுந்தரளம்
எந்தநகரிந்தமயி லே.

இ-ள். உகந்த-யாவராலும் விரும்பப்பட்ட, களபம்தணை அணிந்தமுலை - கலவைச்சந்தன மணிந்த தனங்கள், பந்து அளவு - பந்தினளவாயுள்ளன, கொந்து அளகபந்தமும் - பூங்கொத்துக்களையணிந்த அளகபாரமும், மிருந்த முகில் - நீர்மிகுந்த மேகம்போன்றிருக்கின்றது, மெலிந்த இடை - இளைத்திருக்கிற இடையானது, அந்தம் உள தந்தது - அழகுள்ள நூலிழையின் தன்மையது, தந்தவரியும் - பல்வரிசையும், தரளம் - முத்து வரிசைபோன்றிருக்கின்றது, (ஆதலால்) இந்தமயில் - இந்தமயில்போல்வாள்வாழ்வது, எந்தநகர் - எந்தநகரமோ—எ-று.

ஒருதலைமகன் ஒருபெண்ணின் அவயவசௌந்தரியத்தைநோக்கிவியந்து கூறியது. (ககரு)

தேசமதனிற்பேசுந் தேவாசிவாஜிமன்னா
வாசமலர்மாலையணி மார்பாநீ—நேசமொடு
நாடுமடமாதுமத னாலுமதியாலுமிக
வாடுமடவாளையணை வா.

இ-ள். தேசமதனில் - உலகத்தில், பேசும் - எல்லாராலும் புகழ்ந்து பேசுதற்குரிய, தேவா - தேவனே, சிவாஜிமன்னா - சிவாஜிவேந்தனே, வாசம் - மணமுள்ள, மலர் மாலை அணி - பூமாலையை யணிந்த, மார்பா - மார்பையுடையவனே, நீவா - நீவருவாயாக, மடமாது - என் அறியாமையுள்ளபெண், நேசமொடுநாடும் - அன்போடு உன்னையேவிரும்பியிருக்கின்றாள், (ஆதலால்) மதனாலும் - மன்மதனாலும், மதியாலும் - சந்திரனாலும், மிகவாடும் - மிகவும் வாடாநின்றாள், மடவாளை - இப்படிப்பட்ட மடந்தையை, அணை - வந்து தழுவவேண்டும்—எ-று.

இது தாய்க்கூற்று. (ககசு)

பாரதனிற்பேசும் பரனேசிவாஜிமன்னா
சீரமைந்தமாதுகொங்கைச் சித்திரங்கண்—டேரமருங்
பங்கயங்கிண்ணஞ்சிலம்பம் பந்திலங்குஞ்செங்குடங்கம்
பங்கயந்தண்டெங்குமஞ்சட் பார்.

இ-ள். பாரதனில் - உலகத்தில், பேசும் - எல்லாரும் புகழ்ந்துபேசும்படியான, பரனே - மேலோனே, சிவாஜிமன்னு - சிவாஜிவேந்தனே, சீர்அமைந்தமாது - சிறப்புப்பொருந்திய இந்தப் பெண்ணினது, கொங்கை சித்திரம்கண்டு - தனங்களின் அழகைக்கண்டு, ஏர்அமர் - அழகமைந்த, கும்பம் - குடமும், கயம்கிண்ணம் - சிறியபொற்கிண்ணமும், சிலம்பு - மலையும், அம்பந்து - அழகியபந்தும், இலங்கும் செங்குடமும் - விளங்குகின்ற செவ்வந்தகுடம், கம்பு - கோலும், அம்பங்கயத்தண்டு - அழகிய தாமரைத்தண்டும், எங்கும் - எவ்விடத்தும், அஞ்சும் - அஞ்சாநின்றன, பார் - நீநோக்கு—எ-று.

கம்புஎன்பதற்குச் சங்கென்றுரைத்தலுமாம். இதுதாய்க்கூற்று. (௧௧௭)

சித்தசனுல்வாடுகிறேன் சேர்ந்தணையவேளையிது
வித்தைசெய்யவேண்டாங்காண் வேலவனே—நித்யப்
படிக்குத்தனித்துப் படுத்துத்தவித்துத்
துடித்துத்திகைத்திப் படி.

இ-ள். வேலவனே - வேலாயுதத்தை யுடையவனாகிய முருகக்கடவுளே, நித்யப்படிக்கு - நாள்தோறும், தனித்துப்படுத்து - தனித்துப்படுத்து, தவித்துதுடித்து - தவித்துப்பதைத்து, திகைத்து - பிரமித்து, இப்படி - இந்தப்பிரகாரம், சித்தசனுல்வாடுகிறேன் - மன்மதனால் வாடாநின்றேன், இதுசேர்ந்து அணையவேளை - இதுவேசேர்ந்தணையச்சமயம், வித்தைசெய்யவேண்டாம் - சாலவித்தைசெய்யவேண்டியதில்லை—எ-று.

இது தலைமகள்கூற்று. (௧௧௮)

எய்யவந்தகாமா வுனக்கிங்கிடமில்லை
உய்யவந்தானென்னோடுறவானன்—செய்யமலர்த்
தேனைவிடுபூவைமுடி தின்றுவிடுகைக்கரும்பை
மீனையொருகாசாக வில்.

இ-ள். உய்யவந்தான் - உய்யவந்தான் என்னுஞ்சீமான், என்னோடுஉறவுஆனன் - என்னோடு சிநேகமானன், (ஆதலால்) எய்யவந்தகாமா - என்மீதுபாணப்பிரயோகஞ்செய்யவந்த மன்மதனே, உனக்கு இங்கு இடமில்லை - உனக்கு இங்கேயிடமில்லை, செய்யமலர்த்தேனைவிடு - செவ்வியமலர்களில் வாழ்கின்ற வண்டுகளைவிட்டுவிடு, பூவைமுடி - மலர்களை முடித்துக்கொள், கைக்கரும்பைதின்றுவிடு - கையிலுள்ளகரும்பைத் தின்றுவிடுவாயாக, மீனை ஒருகாசாகவில் - மீனை ஒருகாசுக்கு விற்கக்கடவாய்—எ-று.

இதுதலைமகள்கூற்று, உய்யவந்தான் என்னும் பிரபுவானவன் என்னைக்கூடினன், அவனதுபிரிவில் என்னைவருத்திக்கொண்டிருந்தமன்மதனே, இனி உன்ஆற்றல்செல்லாது, ஆதலால் உன்வில்லுக்குநாணயிருந்த வண்டுகளைவிட்டுவிடு, உனக்குக் கணைகளாயிருந்த மலர்களைமுடித்துக்கொள், உனக்கு

வில்லாயிருந்த கரும்பைத்தின்றுவிடு, உனக்குக் கொடியாயிருந்தமீனை ஒருகாசுக்கு விற்கக்கடவாய் என்பதாம். (கககூ)

வேலனேவேளூர் வினைதீர்த்தவனுதவும்
பாலனேசேனு பதிவேளே—சீலனே, [கைப்
கோங்கரும்பிற்கோங்குகொங்கைக் கூந்தல்கொண்டற்காந்தளங்
பூங்கரும்பிற்காங்கடம்பிற் பூ.

இ-ள். வேலனே, - வேலவனே, வேளூர்வினைதீர்த்தவன் உதவும் - வேளூரிலெழுந்தருளியிருக்கிற வினைதீர்த்தவன்என்னுஞ் சிவபெருமான்பெற்ற, பாலனே - குமரனே, சேனுபதிவேளே - சேனுபதி யென்னும் முருகக்கடவுளே, சீலனே - நல்லொழுக்க முள்ளவனே, கோங்குஅரும்பிற்கு - கோங்கரும்பினும், ஓங்கு - உயர்ந்த, கொங்கை - தனங்களையும், கூந்தல்கொண்டல்- மேகம்போலுங்கூந்தலையும், காந்தள் அம்கை - காந்தள்மலர்போலும் அழகிய கையினையுமுடைய, பூங்கரும்பிற்கு - அழகிய கரும்புபோல்வாளாகிய என் பெண்ணுக்கு, கடம்பிற்பூ - உன்கடப்பமலர்மாலை, ஆம் - இன்பந்தரும், (ஆதலால்) அதனைத் தருவாயாக—எ-று.

இதுதாய்க்கூற்று. (கஉ0)

சுடுமோவிளந்தென்றல் தோகையின்மேலம்பு
படுமோமெய்வாதைப் படுமோ—கடவூரா
நீரணங்கார்வேணிநம்பா நீலகண்டாமேனியின்பால்
ஆரணங்கார்காலசங்க ரா.

இ-ள். கடவூரா - திருக்கடவூரனே, நீர்அணங்குஆர் - கங்காதேவிவாழ்கின்ற, வேணி - சடாபாரத்தையுடைய, நம்பா - நம்பனே, நீலகண்டா - நீலகண்டனே, மேனியின்பால் - திருமேனியின் ஒருபக்கத்தில், ஆரணங்குஆர் - உமாதேவிவாழப்பெற்ற, காலசங்கரா - காலசங்கரனே, (இவளை நீஆதரிப்பாயானுல்) இளந்தென்றல்சுடுமோ - இளந்தென்றலானது சுடுமோ, தோகையின்மேல் - இந்தப்பெண்ணின்மீது, அம்புபடுமோ - மன்மதபாணம் தைக்குமோ, மெய்வாதைப்படுமோ - சரீரவேதனையை யடைவாளோ—எ-று.

இது தாய்க்கூற்று. (கஉக)

பேதையேன்காணப் பெறுவதெந்நாள்வேலவற்கோர்
தாதையேசெம்பொற் சபாநாதா—மாதவத்துச்
சாத்துலங்கண்டேத்தவும்பின் தாப்புயங்கம்போற்றவுந்தித்
தாத்தெயென்றுந்தூக்கிடுஞ்செந் தாள்.

இ-ள். வேலவற்கு - முருகருக்கு, ஓர்தாதையே - ஒப்பற்ற தந்தையே, செம்பொன்சபாநாதா - செம்பொனம்பலத்தையுடைய இறைவனே, மாதவ

த்தி - பெருந்தவத்தினையுடைய, சாத்துலம் - புலியானது, கண்டு - தரிசித்து, ஏத்தவும் - துதிக்கவும், பிந்தா - பின்பக்கமாகநின்று, புயங்கம் - பாம்பானது, போற்றவும் - வணங்கவும், தித்தாதெய்என்று - தித்தாதெய்யென்று, தூக்கிடும் - தூக்கியாடுகின்ற, செந்தாள் - (உன்) சிவந்த திருவடியை, பேதையேன் - அறிவிலியாகியநான், காணப்பெறுவது - தரிசிக்கப்பெறுவது, எந்நாள் - எக்காலம்—எ-று.

சார்த்தூலம் என்னும் வடமொழிசாத்துலம் எனச் சிதைந்துவந்தது, சாத்துலம் என்றது வியாக்கிரபாதரை. புயங்கம் என்றது பதஞ்சலிமுனிவரை.

எல்லாருநன்று யிருக்கட்டுமேதினியில்
வில்லாருந்தென்பழநி வேலோனே—பொல்லாத
பாதகப்பரத்தைவைத்த பாசமெத்தமுற்றுமத்தைப்
பேதகப்படுத்திவிட்ட பேர்.

இ-ள். மேதினிக்குள் - இவ்வுலகத்தில், வில்ஆரும் - ஒளிநிறைந்த, தென்பழநிவேலோனே - தென்பழநிமுருகனே, பொல்லாதபாதகப்பரத்தைவைத்த - பொல்லாதபாவத்தையுடைய வேசையானவள் என்னிடத்தில்வைத்த, பாசம்மெத்த - அன்புஅதிகம், அத்தை - அந்தஅன்பை, முற்றும் - முழுதும், பேதகப்படுத்திவிட்டபேர் எல்லாரும் - பேதப்படுத்திவிட்டபேர்களெல்லாரும், நன்றுயிருக்கட்டும்—எ-று.

தன்னிடத்தில் மிகுதியாகிய அன்புவைத்திருந்த பரத்தையை பேதப்படுத்தினவர்களைக்குறித்து ஒருபுலவன் பழநியாண்டவரிடத்தில் சொல்லிச் சலித்துக்கொண்டது. நன்றுயிருக்கட்டும்என்றது நசித்துப்போகட்டும் என்றபடி. (கஉங)

வையம்புகழ்பழநி வாசன்குமரமுரு
கையன்றழுவி யணையாநாள்—தையல்
மதியழன்றுவளைகழன்று மதனனம்புபடவுழன்று
மதிமறந்துமிகவருந்து வாள்.

இ-ள். வையம்புகழ் - உலகத்தோர் புகழ்கின்ற, பழனிவாசன் - பழநியில்வாழ்பவன், குமரன் - குமாரவேள், முருகையன் - முருகையன், (அவன்) தழுவிஅணையாநாள் - தழுவியணையாதநாளில், தையல் - என்பெண்ணானவள், மதிஅழன்று - சந்திரன் சுடுதலால், வளைகழன்று - வளையல் கழலப்பெற்று, மதனன் அம்புபட - மன்மதபாணம்பட, உழன்று - சுழன்று, மதிமறந்து - அறிவிழந்து, மிகவருந்துவாள் - மிகவும் வருந்தாநின்றாள்—எ-று.

இது தாய்க்கூற்று. (கஉச)

வேலாவிராலிமலை வித்தகாநின்மீதில்
மாலாகியேயொருபெண் மையல்கொண்டாள்—மேலான

வட்டமிட்டபொற்றனத்தி வச்சிரப்பதக்கமொய்த்த
கட்டிழைக்குறச்சிறுக்கி காண்.

இ-ள். வேலா - வேலனே, விராலிமலைவித்தகா - விராலிமலையி லெழுந்தருளிய ஞானசொருபனே, மேலானவட்டமிட்ட - மேன்மையாகிய வட்டவடிவுகொண்ட, பொன்தனத்தி - தேமல்படர்ந்த தனத்தினையுடையவளும், வச்சிரப்பதக்கம்மொய்த்த கட்டுஇழை - வயிரப்பதக்கத்தைச்சூழ்ந்த மிக்க ஆபரணங்களையணிந்த, குறச்சிறுக்கி - குறச்சிறுமியுமாகிய, ஒருபெண் - (என்) ஒருபெண்ணானவள், நின்மீதில்யால்ஆகி - உன்மேலாசைப்பட்டு, மையல்கொண்டாள் - மயக்கங்கொண்டாள்—எ-று.

இது தாய்க்கூற்று. (௧௨௫)

மையுமணையும் வனப்புமிழந்தாண்மாது
செய்யும்விதமென்ன சித்தசவேள்—எய்யும் [க்
தனிச்சரத்தைத்தடுப்பதற்குத் திருத்தணிக்கர்த்தனுக்கெதிர்க்
கணத்தினிற்புக்குரைத்திடத்திக் கார்.

இ-ள். மாது - என்பெண்ணானவள், மையும்அணையும் வனப்பும் இழந்தாள் - மையினையும் சயனத்தையும் அழகையும் ஒருங்கேயிழந்தாள், செய்யும்விதம்என்ன - இதற்கு யான்செய்யும்வகையாது, சித்தசவேள் - மன்மதனானவன், எய்யும் - எய்கின்ற, தனிசரத்தை தடுப்பதற்கு - ஒப்பற்ற அம்புகளைத் தடைசெய்வதற்கு, திருத்தணிக்கர்த்தனுக்கெதிர்க்க - திருத்தணிகைக் கர்த்தாவாகிய முருகவேளுக்கெதிரே, கணத்தினில்புக்கு - க்ஷணகாலத்திற்போய், உரைத்திட - இந்தச்செய்தியைச்சொல்ல, திக்குஆர் - திக்குயாரிருக்கிறார்கள் - (ஒருவருமில்லையே)—எ-று.

மை - அஞ்சனம்: திக்கு - கதி. இது தாய்க்கூற்று. (௧௨௬)

வைத்திடவேளாவி மருமத்தினஞ்சம்பால்
எத்தினனுடீரிதைக்கா மீசரே—நத்துதிர்த்த
முத்துரத்தினத்தைவைத் திழைத்தவத்திரத்தையுற்ற
மத்தகத்தனத்திமெத்த மால்.

இ-ள். காமீசரே - திருக்காமீசரே, நத்து உதிர்த்த - சங்குகள் சிந்தின, முத்துரத்தினத்தை வைத்து இழைத்த - முத்துரத்தினங்களை வைத்திழைத்துச்செய்யப்பட்ட, வத்திரத்தை உற்ற - உத்தரியத்தையணிந்த, மத்தகம் தனத்தி - யானைமத்தகம்போலும் தனங்களையுடையவளாகிய என்பெண், மெத்தமால்வைத்திட - மிகுதியாகிய ஆசையைவைத்திட, வேள் - மன்மதனானவன், ஆவிமருமத்தில் - உயிரினது மர்மஸ்தானத்தில், நஞ்சுஅம்பால் - விஷபாணங்களால், எத்தினன் - எற்றினான், இதைநாடீர் - இதனைநோக்குவீராக—எ-று.

மர்மம் - ரகசியமான இடம். நஞ்சம்பு - நீலமலர்க்கணை. இது தாய்க் கூற்று. (௧௨௭)

பாகாகாவின்சொலுடைப் பைந்தொடிமேற்கோபமென்ன
வாகாகாமன்கணையால் வாடுகிறாள்—சீகாழி
மாநகரிலேநிதமும் வானவர்கள்வந்துபணி
கானளினமானவடு கா.

இ-ள். சீகாழிமா நகரிலே - சீகாழியென்னும் பெரியநகரின்கண், நிதமும் - நாள்தோறும், வந்துபணி - வந்துபணிகின்ற, கால் - திருவடிகள், நளினம்ஆன - தாமரைமலர்போன்ற, வடுகா - வயிரவக்கடவுளே, பாகுஆகா-சர்க்கரைப்பாகும் நிகராகாத, இன்சொல் உடை-இனியமொழியையுடைய, பைந்தொடிமேல் - என்பெண்மீது, கோபம் என்ன - கோவமுண்டாவதற்குக்காரணம்யாது, (இப்படி நீயிருப்பது) வாகா - அழகா, காமன்கணையால் வாடுகிறாள்-மன்மதபாணத்தால் வாடுகின்றாள் (இவளையாதரிக்கவேண்டும்)-எ-று.

இது தாய்க்கூற்று. (௧௨௮)

அம்புலியூர்தன்னை யடைமின்பணிமின்கள்
அம்புலியூர்விண்ணுலகை யாள்வீர்கள்—அம்போரு
கத்தினயனத்திலகு கைத்தலனிவர்க்கரிய
சத்திநயனத்தியிடத் தான்.

இ-ள். அம்போருகத்தின் அயன் - தாமரைமலரையிடமாகவுடைய பிரமன், நத்து இலகுகைத்தலன் - சங்கம் விளங்குகின்ற கைத்தலத்தையுடையவனாகிய திருமால், இவர்க்கு அரிய - இவர்களுக்கும் அருமையாகிய, சத்திநயனத்தி இடத்தான் - வேல்போலுங்கண்களையுடைய உமாதேவியையிடப்பாகத்திலேயுடையவனாகிய சிவபெருமானது, அம்புலியூர்தன்னை - அழகாகிய புலியூரை, அடைமின் - அடையுங்கள், பணிமின்கள் - வணங்குங்கள், (அவ்வாறு செய்வீர்களாயின்) அம்புலி ஊர் விண்ணுலகை ஆள்வீர்கள் - சந்திரன் தவழ்கின்ற ஆகாயத்திலுள்ள சுவர்க்கலோகத்தை யாள்வீர்கள்—எ-று. (௧௨௯)

வாடுகிறாணின்மாலை வாங்க்கிளியொன்று
தேடுகிறாளாரூர்த் தியாகரே—நாடி
அனகனம்புசொரியவிந்து வனலைமொண்டுவிசிறவெம்பி
மனதுநொந்துகலையிழந்த மான்.

இ-ள். ஆரூர்த்தியாகரே - திருவாரூர்த்தியாகரே, நாடி - ஆராய்ந்து, அனகன் - மன்மதன், அம்புசொரிய - அம்புமாரியைப் பொழியவும், இந்து - சந்திரன், அனலைமொண்டுவிசிற - நெருப்பை முகந்து வீசவும், மனதுநொந்து-மனம் வருந்தி, கலை இழந்த மான் - ஆடையை யிழந்த என்பெண்ணானவள்,

வாடுகிறாள் - வாடாநின்றாள், நின்மாலைவாங்க - உன்மாலையை வாங்கிவரும் பொருட்டு, கிளி ஒன்று தேடுகிறாள் - ஒருகிளியைத் தேடாநின்றாள்—எ-று.

அனங்கன் என்பது அனகன் எனவந்தது. இதுதாய்க்கூற்று. (கரு௦)

நீரோ திருவழகர் நீரோகரியமுகில்
நீரோ திருமலைமே னின்றருள்வோர்—நீரோ
வளர்ந்தசெம்பதங்கள்கொண் டெழுந்துமண்டலங்கள்பண்
டளந்துகொண்டடங்கலுண்ட மால்.

இ-ள். திரு அழகர்நீரோ - திருவழகர்நீர்தாமோ, கரியமுகில்நீரோ - கரியமால்நீர்தாமோ, திருமலைமேல் நின்றருள்வோர் நீரோ - திருமலைமேல் நின்றருள்வோர்நீர்தாமோ, வளர்ந்தசெம் பதங்கள் கொண்டு எழுந்து - வளர்ந்த செவ்விய திருவடியைக் கொண்டெழுந்து, மண்டலங்கள் - எல்லாவுலகங்களையும், பண்டு அளந்து கொண்டு - முற்காலத்தில் அளந்து ஆக்கிரமித்துக் கொண்டு, அடங்கல் உண்ட - முழுதுமுண்டருளின, மால்நீரோ - திருமால் நீர்தாமோ—எ-று. (கருக)

சித்திரமாங்கூடற் றிருவரங்கப்பெருமாள்
மெத்தெனவேபஞ்சணைக்குண் மேவியநாள்—நித்தமுமே
செங்கையுஞ்சங்கும்பொருந்துந் திங்களும்மங்குந்தயங்கும்
கொங்கையெங்குங்குங்குமந் தங்கும்.

இ-ள். சித்திரம்ஆம் - ஆச்சரியகரமான, கூடல் - திருக்கூடலி லெழுந்தருளியிருக்கிற, திருவரங்கப்பெருமாள்—, மெத்தென - மெத்தென்று, பஞ்சணைக்குள் மேவியநாள் - பஞ்சணைமேல் என்னைக்கூடியநாளில், நித்தமும்- நாள்தோறும், செங்கையும் சங்கும்பொருந்தும் - செவந்தகைகளில்சங்கவளையலுந்தங்கியிருக்கும், திங்களும்மங்கும் - சந்திரனும்ஒளிமழுங்குவான், தயங்கும்கொங்கையெங்கும் - விளங்குகின்ற தனங்களின் எவ்விடத்தும், குங்குமந்தங்கும் - குங்குமக்குழம்பு தங்கியிருக்கும்—எ-று. (கருஉ)

நாராயணரே ரகுராமபத்திரரே
காராம்பசுமேய்த்துக் காளியன்மேல்—நீரோமுன்
தொக்கணகதிக்கணக தொந்திமிதிமிந்திமிதி
நக்கணகவென்றாடி னார்.

இ-ள். நாராயணரே - நாராயணரே, ரகுராமபத்திரரே—, காராம்பசுமேய்த்து - காராம்பசுக்கள் மேய்த்து, காளியன்மேல் - காளிங்கன் தலைமீது, முன் - முற்காலத்தில், தொக்கணகதிக்கணக தொந்திமிதிமிந்திமிதிநக்கணக என்று—, ஆடினார் - நிருத்தஞ்செய்தவர், நீரோ - நீர்தாமோ—எ-று.

காளியன் - யமுனாநதியின் மடுவிலிருந்துகொண்டு, அநேகசீவராசிகளுக்குத் துன்பஞ்செய்துகொண்டிருந்த ஓர்பாம்பு. இதைக் கிருஷ்ணவதாரத்தில் பகவான் அடக்கி, இதின்முடிமேல் நடனஞ்பண்ணினாரென்பதுபுராணகதை.

உறுகிள்ளைமாமொழி யீரொற்றித்தியாகர்
சிறுபிள்ளையோ வீண்செருக்கோ—பெறுகிருதோ
தொக்கணகதிக்கணக தொந்திமிதிமிந்திமிதி
நக்கணகவென்றாடி னார்.

இ-ள். உறுகிள்ளைமாமொழியீர் - மிகுதியாய்க் கிளிப்பிள்ளையின்சொற்போன்ற சொல்லையுடைய பெண்களே, ஒற்றித் தியாகர் - திருவொற்றியூர்த் தியாகேசர், சிறுபிள்ளையோ - சிறுகுழந்தையோ, வீண்செருக்கோ - அன்றி அவருக்குள்ள வீண்செருக்குத்தானோ, பெறு கிருதோ - தாம்படைத்த கிருதோ, (என்னெனில்) தொக்கணகதிக்கணக தொந்திமிதிமிந்திமிதி நக்கணக என்று ஆடினார்—எ-று. (௧௩௪)

பூமாலைபாமாலை பூண்டசட்டைநாயகனே
மாமாலைமின்கொண்டு வாடியன—லாமாலை
இந்தாலும்வந்தாலு மின்றாண்மெலிந்தோடி
வந்தாள்கலந்தாளு வாய்.

இ-ள். பூமாலைபாமாலைபூண்ட - பூமாலைபாமாலைகளைத்தரித்த, சட்டைநாயகனே - சட்டைநாதனே, மின் - மின்கொடிபோலும் என்பெண், மாமாலைகொண்டுவாடி - பெரிதாகிய மோகங்கொண்டுவாடி, அனல்ஆம்மாலை - நெருப்புப்போன்ற மாலைக் காலத்தில் தோன்றுகின்ற, இந்தாலும் - சந்திரனாலும், வந்தாலும் - தென்றற்காற்றினாலும், இன் தாள்மெலிந்து ஓடிவந்தாள் - இனிய அடிகள்மெலிய ஓடிவந்தாள், (ஆதலால் அவளை) கலந்து ஆளுவாய் - கூடியாளக்கடவாய்—எ-று.

இந்து - சந்திரன், வந்து - காற்று, இதுதாய்க்கூற்று. (௧௩௫)

ஆலமோவேலோ வலைகடலோவம்புயமோ
நீலமோமார னெடுங்கணையோ—சாலச்
சிறுத்தவிடைபருத்தமுலை சிவத்தவிதழ்வெளுத்தநகை
கறுத்தகுழலொருத்திகடைக் கண்.

இ-ள். சால சிறுத்த இடை - மிகவுஞ் சிறுத்த இடையையும், பருத்த முலை - பருத்ததனங்களையும், சிவந்த இதழ் - சிவந்த அதரத்தையும், வெளுத்த நகை - வெளுத்த பல் வரிசையையும், கறுத்த குழல் - கறுத்த கூந்தலையுமுடைய, ஒருத்தி - ஒருபெண்ணின், கடைக்கண் - கடைக்கண்கள், ஆலமோ - நஞ்சோ, வேலோ - வேலாயுதங்களோ, அலை கடலோ - அசையாநின்ற கட

லோ, அம்புயமோ - தாமரைமலர்களோ, நீலமோ - கருங்குவளை மலர்களோ மாரன் - மன்மதனது, நெடுகணையோ - நீண்ட அம்புகளோ—எ-று.

ஒருநாயகன் ஒருநாயகியின் கண்களைப்பார்த்து வியந்துரைத்தது. (௧௬௬)

நீரோசிதம்பரனார் நும்பதியோநீள்புலியூர்
நீரோசுடலைக் குணித்தனார்—நீரோ
கடத்தடக்களிற்றினைக் கறுத்துறப்பிடித்திழுத்
தடர்த்தறுத்துரித்துடுத்த வா.

இ-ள். சிதம்பரனார்நீரோ - சிதம்பரதலத்தில் வாழ்பவர்நீர்தாமோ, நீள் புலியூர் - பெரியபுலியூரான்து, நும்பதியோ - உமதிட்மோ, சுடலைக்குள் ளித்தனார்நீரோ - சுடலையில் வாழ்கின்ற சாசுவதர் நீர்தாமோ, கடம் - மதத்தையுடைய, தடம் - மலையைநிகர்த்த, களிற்றினை - யானையை, கறுத்து - கோபித்து, உறப்பிடித்து இழுத்து - மிகுதியாய்ப் பற்றியிழுத்து, அடர்த்து-கொன்று, அறுத்து - சேதித்து, உரித்து - தோலையுரித்து, உடுத்தவர் - உடுத்துக்கொண்டவர், நீரோ - நீர்தாமோ—எ-று.

இவ்விடத்துக்களிறு என்றது கயமுகாசுரனை. (௧௬௭)

வன்மத்தைநின்மனதில் வையாதேபாவியேம்
கன்மத்தைநீக்கிக் கரையேற்றாய்—சென்மத்து
ணமலையண்ணமலுமின் னார்முலையுண்ணமலுமண்
ணமலையுண்ணமுலை யம்மா.

இ-ள். அண்ணமலை - திருவண்ணமலையிலெழுந்தருளிய, உண்ணமுலையம்மா - உண்ணமுலையம்மையே, வன்மத்தை நின்மனதில்வையாதே - உன் மனத்தில் மர்மத்தைவைக்கவேண்டாம், சென்மத்துள் - பலபிறவிக்கடலில், நாம் அலையுண்ணமலும் - நாமலையாமலும், மின்னார்முலை உண்ணமலும் - மாதர்முலையை யுண்ணமலும், பாவியேம் - பாவியேங்களுடைய, கன்மத்தை நீக்கி - கர்மங்களைநீக்கி, கரையேற்றாய் - முத்திக்கரையை யடைவிக்கவேண்டும்—எ-று.

வன்மம் - வயிரம் (தீராப்பகை.) (௧௬௮)

மேகங்கவிந்ததுபோன் மேலெழுமக்காலனைக்கண்
டாகந்தளர்ந்துநெஞ்ச மஞ்சாமுன்—மாகடவூர்ப்
பூதநாதாவேதகீதா பூவிதாதாதேடுபாதா
மாதுபாககாலகாலா வா.

இ-ள். மாகடவூர் - பெருமையுள்ள திருக்கடவூரிலெழுந்தருளிய, பூதநாதா - பூதநாதனே, வேதகீதா - வேதகீதனே, பூவிதா தேடு பாதா - தாமரைமலரில் வாழ்கின்றபிரமன் தேடுகின்ற திருவடியை யுடையவனே, மாதுபாகா - பெண்பாகனே, காலகாலா - காலகாலனே, மேகம் கவிந்ததுபோல்-

கரியமேகம் மூடிக்கொண்டதுபோல, மேல்எழும் அக்காலனைக்கண்டு - மேல் வருகின்ற அந்திக்காலனைப்பார்த்து, ஆகம் தளர்ந்து - சரீரம்தளர்ந்து, நெஞ்சம் அஞ்சுமுன்னே - மனம் அஞ்சுவதற்குமுன்பே, வா - (நீயெனக்கெதிரே) எழுந்தருளவேண்டும்—எ-று.

காலன் கருநிறமாதலால் "மேகங்கவிந்ததுபோன் மேலெழுந்தகாலனை" என்றார். (கருக)

ஆர்செய்தவஞ்சனையோ வாறுமுகவேலர்மலர்த்
தாரீயாறுற்றதென்ன சற்பனையோ—பார்தனிலச்
சூதுகற்றசக்களத்தி தோதகத்திபச்சிலைக்குள்
ஓதுசெப்படக்குவித்தை யோ.

இ-ள். ஆர்செய்த வஞ்சனையோ—, ஆறுமுகம் - ஆறுமுகங்களையுடைய, வேலர் - வேலவர், மலர்தார் ஈயாது உற்றது - தமது பூமாலையைக் கொடாதிருப்பது, என்னசற்பனையோ - என்னமோசமோ, பார்தனில் - இவ்வுலகத்தில், அ - அந்த, சூதுகற்ற - சூதுமார்க்கத்தைக் கற்றிருக்கிற, சக்களத்தி - சக்களத்தியாகிய, தோதகத்தி - பசப்புக்காரியின், பச்சிலைக்குள் - பச்சிலையில், ஓது - சொல்லப்பட்ட, செப்படக்குவித்தையோ—எ-று.

ஒருகுல மாதானவள், தன்கணவனைப் பச்சிலைமருந்து முதலியவற்றால் கைவசப்படுத்திக்கொண்ட தன்சக்களத்தியின் கபடமார்க்கத்தைக் குறித்துச்சொல்லியது. (கசo)

கச்சிக்கச்சாலைக் கடவுளடியைத்துதித்தால்
இச்சிக்கச்சாலையிலா ளின்பமகார்—மெச்சிக்க
நித்தநித்தம்விர்த்தியுற்றந் நிட்களத்தைப்பெற்றமுத்தர்
பத்தியைச்சித்தத்தளிக்கும் பார்.

இ-ள். கச்சி - திருக் கச்சியிலுள்ள, கச்சாலைக் கடவுள் - கச்சபாலயக் கடவுளது, அடியை துதித்தால் - திருவடியை நீ தோத்திரம் பண்ணினால், (அப்படி தோத்திரம்பண்ணுதல்) இச்சிக்க - யாவரும் விரும்பும்படி, சாலை - வீடு, இல்லாள் - மனைவி, இன்பம்மகார் - இன்பத்தைத்தருகிறமக்கள், மெச்சிக்க - எல்லாரும் மெச்சும்படி, நித்தம்நித்தம் - நாள்தோறும், விர்த்தியுற்று - விருத்தியையடைந்து, அ - அந்த, நிட்களத்தைபெற்ற முத்தர் - நிஷ்களப்பொருளைப்பெற்ற முத்தராது, பத்தியை - பத்திநெறியை, சித்தத்து அளிக்கும் - மனத்தில் தோன்றுவிக்கும், பார் - நோக்கு—எ-று. (கசக)

அன்னைவடிவம்மையொற்றி யந்தரியைச்சிந்தித்தால்
பின்னைவடிவம்மையுற்றுப் பேதுருய்—முன்னைவினைப்

பந்தமுந்தவிர்ந்துமேவு சந்தமும்பரந்துஞான
சிந்தையுந்தணந்திடாது தேர்.

இ-ள். அன்னை - தாயாகிய, வடிவம்மை - வடிவாம்பிகையும், ஒற்றி அந்தரியை - திருவொற்றியூரில் வாழ்கின்ற அந்தரியும் ஆகிய இறைவியை, சிந்தித்தால் - நீ நினைத்தால், பின்னை - பிறகு, அம்மை - மறுபிறப்பில், வடிவு உற்று - சரீரமெடுத்து, பேதுறாய் - நீ வருந்தமாட்டாய், முன்னை வினைபந்தமும் - முற்செய்த வினைக்கட்டும், தவிர்ந்து - நீங்கி, மேவு - பொருந்திய, சந்தமும் பரந்து - அழகும் மிகுத்து, ஞானசிந்தையும் தணந்திடாது - ஞான சிந்தையும் உன்னைவிட்டு நீங்காது, தேர் - இதனை நீ தெரிவாயாக—எ-று.

என்றாடுங்காமீச ரின்பவடிவைத்துதிக்க
அன்றாம்வினைவிட் டகலுமே—குன்றாமல்
தொங்கிட்டத்தோதரிகிட தோதரிகிடதோதரிகிட
தங்கிட்டத்தாதரிகிட தா.

இ-ள். குன்றாமல் - குறையாமல், தொங்கிட்டத் தோதரிகிட தோதரிகிட தோதரிகிட தங்கிட்டத் தாதரிகிடதா என்று—, ஆடும் - நடிக்கின்ற, காமீசர் - திருக்காமீசரது, இன்பவடிவைத் துதிக்க - ஆனந்தரூபத்தைத்தோத்திரம்பண்ண, அன்று ஆம் வினை - தீவினையானது, விட்டு அகலும் - விட்டு நீங்கும்—எ-று. (கசங)

திங்கடும்பைகொன்றையுஞ் சிறந்தணிந்துகொண்டுநின்ற
அங்கியம்பகன்பயந்த வன்பகந்தா—தங்கமென்னும்
தேகத்தானேகுறவர் சேய்நட்டோனேபன்னிரு
வாகுற்றோனேபெருமானே.

இ-ள். திங்கள் - தும்பை கொன்றையும் சிறந்து அணிந்துகொண்டு, நின்ற - சந்திரனையும் தும்பைமலர்மாலையையும் கொன்றைமலர்மாலையையும் மேன்மையாக அணிந்துகொண்டுநின்ற, அங்கி அம்பகன் - நெருப்புக்கண்ணனாகிய பரமசிவன், பயந்த - ஈன்ற, அன்ப - அன்புடையபுதல்வனே, கந்தா - கந்தனே, தங்கம் என்னும் தேகத்தோனே - தங்கமென்று சொல்லத்தக்க திருமேனியையுடையவனே, குறவர்சேய் நட்டோனே - குறவர்பெண்ணாகிய வள்ளிநாயகியை சினேகித்தவனே, பன்னிருவாகு உற்றோனே - பன்னிரண்டுதிருத் தோள்களை யுடையவனே, பெருமானே - பெருமையுடையவனே (என்னையாதரித்தருளவேண்டும்)—எ-று. (கசச)

கன்னிமுகநன்னிலவு கன்னலிதழின்னிலவு
பன்னுநகைபன்னமுலை பன்னிருகை—மன்னவநின்
மின்னயில்லையன்னவிழி மின்னலிடைபின்னுசடை
அன்னநடைமின்னவறி வாய்.

இ-ள். கன்னிமுகம் - இந்தப்பெண்ணினதுமுகமானது, நல்நிலவு - பூரணச்சந்திரன், கன்னல் இதழ் - சர்க்கரைப்பாகுபோல் இனிக்கின்ற, இதழ்-அதரமானது, இன் இலவு - இனிதாகியமுருக்கம்பூ, பன்னும்நகை - சொல்லப்பட்டபல்வரிசையை, பன்ன - எடுத்துச்சொல்லுமிடத்து, முல்லை-முல்லையரும்பு, பன்னிருகைமன்னவ - பன்னிருகரங்களையுடையஇறைவனே, விழி-கண்கள், நின்மின் அயிலை அன்ன - உனதுமின்னுகின்ற வேலாயுதத்தைநிகர்ப்பன, இடை - இடையானது, மின்னல்-மின்கொடியைநிசர்க்கும், சடை-கூந்தல் பின்னு பின்னலுருவமா யிருக்கின்றது, நடை - நடையானது, அன்னம் - அன்னத்தை நிகர்க்கும், இன்ன - இத்தன்மையவாகிய அவயவங்களை, அறிவாய் - நீ ஆராய்ந்தறிவாயாக—எ-று. (கசரு)

உக்ரகிரியுக்ரகட லுட்கவடவெற்பொடுயர்
சக்ரகிரிக்கப்பாலுந் தாண்டுமே—விக்ரமவை
வேன்முருகன்கந்தன் விசாகன்குகன்கரிய
மான்மருகனேறு மயில்.

இ-ள். விக்ரமம் - வெற்றியையுடைய, வைவேல் - கூர்மையாகிய வேலாயுதத்தைத்தாங்கிய, முருகன்—, கந்தன்—, விசாகன்—, குகன்—, கரிய மால்மருகன் - கரியதிருமாலுக்குமருகன், (அவன்) ஏறும் மயில் - ஏறிநடத்துகின்ற மயிலானது, உக்ரகிரி - உக்கிரமாகிய மலைகள், உக்ரகடல் - உக்கிரமாகியகடல், (என்பவை) உட்க - முறையே பொடிபடவும்கலங்கவும், வடவெற்பொடு - மேருமலையோடு, உயர்சக்ரகிரிக்கு - உயர்ந்த சக்ரவாளகிரிக்கு, அப்பாலும் - அப்புறத்தும், தாண்டும் - தாவும்—எ-று. (கசசு)

சந்தனந்திமிர்ந்தகொங்கை சந்ததம்பசந்ததிங்கு
வந்தனங்கனம்பையுந் தவந்தெழுந்து—சிந்தைதங்கு
நேசபாசமோபொலாது நீநிலாவிலேகுலாவ
வாசலாமுலாசவேல வா.

இ-ள். சந்தனம் திமிர்ந்த கொங்கை - சந்தனம் பூசப்பெற்றகொங்கை, சந்ததம் பசந்தது - எப்பொழுதும் பசலைநிறமடைந்து, இங்குவந்து - இவ்விடத்துவந்து, அனங்கன் - மன்மதன், அம்பை உந்த - தனது புஷ்பபாணத்தைப் பிரயோகிக்க, வந்து எழுந்து - உண்டாகிஅதிகரித்து, சிந்தைதங்கும் - என்மனத்தில்தங்கிய, நேசபாசமோ பொல்லாது - பாசபந்தமோகொடியது, நிலாவிலேகுலாவ - நிலவில்விளையாட, நீவா - நீவருவாயாக, உல்லாசம் வேலவா-சம்பிரமத்தையுடைய வேலவனே, வந்தனம்-உனக்கு நமஸ்காரம்-எ-று.

வாழமேவுசிதராசி வாஜிராஜநேயமோக
காமமாகிசோபமான காமிவாம—தாயமேவு

சொங்கைபைங்குரும்பைபம்பு கொண்டைகொண்டல்கண்ட நந்
செங்கைபங்சயங்கண்வண்டு சேர். [து

இ-ள். வாமம் மேவு சீதரா - அழகுபொருந்திய ஸ்ரீதரனே, சிவாஜிராஜ-சிவாஜி வேந்தனே, நேயமோக காமமாகி -, அன்பும் மோகமும் காமமும் அடைந்து, சோபம் ஆன - சோர்ந்த, காமி - மிகுகாமியாகிய என்பெண்ணினது, வாமம் - அழகாகிய, தாமம்மேவு - பூமாலையை யணிந்த, கொங்கை-கொங்கைகள், பைங்குரும்பை - பசிய குரும்பைகள்போலும், பம்பு கொண்டை - மயிர்நெருங்கின, கொண்டையானது, கொண்டல் - மேகம்போலும், கண்டம் - கழுத்து, நந்து - வலம்புரிச்சங்குபோலும், செங்கை - சிவந்தகை, பங்கயம் - தாமரைமலர்போலும், கண் - கண்கள், வண்டு - கருவண்டுகள் போலும், (இத்தன்மையளை) சேர் - நீதழுவுவாயாக—எ-று. (கசஅ)

அங்கிபரனூர்தி யானிருமதிக்கும்
தங்குபன்றியையிரண்டு தந்திடவே—எங்கும்
உரைக்குங்கான்மைந்தர்க் கொருவநடுவுற்ற
துரைக்குத்துரையேநீ சொல்.

இ-ள். எங்கும் உரைக்குங்கால் - எவ்விடத்தும்சொல்லுமிடத்து, மைந்தர்க்கு - ஆடவர்க்குள்ளே, ஒருவ - ஒப்பற்றவனே, நடுவுற்ற - நடுவுநிலைமையுள்ள, துரைக்குத்துரையே-துரைக்குத்துரையாயிருப்பவனே, அங்கிஊர்தி-அக்கினி தேவனுக்கு வாகனமாகிய ஆடு,(மேஷம்) அரன் ஊர்தி - சிவபெருமானுக்குவாகனமாகிய எருது, (இடபம்) ஆன இருமதிக்கும் - ஆகிய இரண்டு மாசங்களுக்கும், தங்குபன்றி ஐயிரண்டு - பொருந்திய பத்துப்பன்றியை, தந்திடசொல் - தரும்படிசொல்வாயாக—எ-று.

மேடம் இடபம் சித்திரை வையாசி ஆகிய இரண்டுமாசச் செலவுக்குக் கொடுக்கும்படி உன் காரியத்தலைவருக்கு உத்திரவு செய்யவேண்டும் என்பதாம். ஐயிரண்டுபன்றி - பத்துவராகன். ஆடுமாடு பன்றி எனச்சொன்னயந் தோன்றுமாறும் அறிக. (கசகூ)

இத்தைபனையவுரு வில்லான்விடும்போதே
வைத்தகரையோதடுக்க மாட்டாதே—கொத்துலவும்
அங்கமுகக்காத்துறைசை யம்பலவாணன்புயத்துச்
செங்குவளைத்தாரிணையே தேடு.

இ-ள். இ தையல்னைய - இந்தப்பெண்ணனவள் வருந்தும்படி, உருஇல்லான்விடும் - உருவிலியாகிய மன்மதன் பிரயோகிக்கின்ற, போது எவை-புஷ்பபாணத்தை, ஐயோ - அந்தோ! தகர் - இந்த ஆடானது, தடுக்கமாட்டாது - தடைசெய்யமாட்டாது, (தடுக்கவிரும்புவையாயின்)கொத்துஉலவும்-

சூலைகள்பொருந்திய, அம் - அழகாகிய, கமுகக்கா-கமுகஞ்சோலைகள்சூழ்ந்த, துறைசை - துறைசையில் வாழ்கின்ற, அம்பலவாணன் - அம்பலவாணனது, புயத்து - தோளிலணிந்த, செங்குவளைத்தாரினையே - செங்குவளை மலர்மாலையையே, தேடு - தேடுவாயாக—எ-று.

இது செவிலியறத் தொடுகின்ற வெறிவிலக்கல். (சுஙo)

ஆச்சரியந்தென்னமர மத்தனையுங்குத்துமுலை
காச்சிருக்குந்தென்குடந்தைக் காவலா—மாச்சன்
வரக்குப்பையாநீ மருவாநாளெல்லாம்
சரக்குப்பையாமே தனம்.

இ-ள். ஆச்சரியம் - ஆச்சரியப்படும்படி, தென்னமரம் அத்தனையும்-தென்னைமரங்களெல்லாம், முத்துமுலை - குத்துமுலைகள்போல, காச்சுஇருக்கும்-காய்ச்சிருக்கின்ற, தென்குடந்தை காவலா - தென்குடந்தைக் அரசனே, மாச்சன் - மாச்சனென்பவனது, வரம் - வரத்தினு லவதரித்த, குப்பையா - குப்பையனே, நீ மருவாநாள்எல்லாம் - நீ என்னைக்கூடாத நாளெல்லாம், தனம்-என் தனங்கள், சரக்குப்பைஆம் - மன்மதபாணங்களின் குவியல்களாகவேயிருக்கும்—எ-று.

சரக்குப்பை சரக்குவைக்கும் பையென்பது சொன்னயம். (சுஙச)

## செருப்பின்குணம்.

கல்லுமுறுத்தாது காலினின்முட்டைக்காது
எல்லைமார்த்தாண்டன்சூ டேறுது—தொல்லைவரும்
மாலையிருளில் வழிநடக்கக்கூசாது
காலிற்செருப்பிருந்தக் கால்.

இ-ள். காலில் - (ஒருவனது) காலில், செருப்புஇருந்தக்கால்-செருப்பிருந்தால், கல்லும் உறுத்தாது - கற்களும் உறுத்தாது, காலினில் முள்தைக்காது - காலில் முள்தைக்காது, எல்லை மார்த்தாண்டன் சூடு ஏறுது - சூரியனதுவெப்பமேறுது, தொல்லைவரும் - பலதுன்பங்களுண்டாதற்குரிய, மாலை இருளில் - மாலைக்காலத்திருளில், வழிநடக்கக் கூசாது - வழிநடக்கப் பின்னிடாது—எ-று. (சுஙஉ)

ஒருதலத்திலுள்ள ஆபற்சகாயனேன்னும் சிவபெருமானைத் தரிசித்த ஒருபுலவன், தந்தைதாய் முதலானவரை யிழந்ததனால் மனம்வருந்திப் பாடியது.

தந்தைபோய்த்தாய்போய்த் தமர்போயென்சுற்றமும்போய்
வெந்தபுரியாகிவிட் டேனே—முந்தவே

ஆழாழிநஞ்சுண்ட வாபற்சகாயனெனும்
பாழாவான்கண்ணேறு பட்டு.

இ-ள். முந்தவே - முன்பாகவே, ஆம் ஆழி - ஆழ்ந்த பாற்கடலிற்றோன்றிய, நஞ்சுஉண்ட - விஷத்தையுண்ட, ஆபற்சகாயன் என்னும் - ஆபற்சகாயனென்கிற, பாழாவான் - பாழானவனது, கண்ணேறுபட்டு - கண்ணெச்சில்பட்டு, தந்தைபோய் - தந்தையையிழந்து, தாய்போய் - தாயையிழந்து, தமர்போய் - சிநேகரையிழந்து, என்சுற்றமும்போய் - என்சுற்றத்தாரையுமிழந்து, வெந்தபுரியாகி விட்டேன் - வெந்தவைக்கோற் புரியைப்போலாகி விட்டேன் எ-று.

வெந்த வைக்கோற்புரி தன் முன்னுருவழியா திருத்தல் போல, நானும் தந்தைதாய் முதலானோரை யிழந்தும் முன்போலவே யிருக்கிறேனென்பதாம். கண்ணேறு - கண்திருஷ்டி, நெருப்புக்கண்ணுகையால் எல்லாரையும் எரித்துவிட்டதென்பது கருத்து. (௧௫௩)

## நீர்க்குடங்கொண்டுபோகிற சிலபெண்களை நோக்கி ஒருவிடபுருஷன் சொல்லியது.

கைக்குடமும்ரெண்டு கனககும்பக்குடமும்
முக்குடமுங்கொண்டால் முறியாதோ—மைக்குழலீர்
வேய்க்காற்றினல்விளங்கும் வீரனந்திமாநகரில்
ஈக்காற்றுக்காற்று விடை.

இ-ள். மைக்குழலீர் - கரிய கூந்தலையுடையீர், வேய்க்காற்றினல் விளங்கும் - மூங்கிற்காற்றினல் விளங்குகின்ற, வீரன் - வீரனென்பவனது, நந்திமாநகரில் - நந்திமாநகரத்தில், ஈக்காற்றுக்கு - ஈப்பறக்குங்காற்றுக்கு, ஆற்று - பொறுக்காமல் முறிகின்ற, இடை - இடையானது, கைக்குடமும் - கையிலுள்ள ஒருநீர்க்குடமும், ரெண்டுகனககும்பக்குடமும் - இரண்டு தங்கக்குடங்களும்ஆகிய, முக்குடமும் - மூன்றுகுடங்களையும், கொண்டால் - தாங்கினல், முறியாதோ - முறிந்துபோகாதோ, (இப்படி நீங்கள் செய்வது தகுதியல்ல) எ-று. (௧௫௪)

வையம்புகழு மலராயிரமெடுத்துக்
கையிலொருமாமலரைக் காணமல்—வையகத்தில்
செங்கண்மாலீசன் றிருவடிக்கெண்ணுயிரமாத்
தங்கண்மலர்சாத்தினர் தாம்.

இ-ள். வையகத்தில் - இவ்வுலகத்தில், செங்கண்மால் - திருமால், வையம்புகழும் - உலகத்தார் புகழும்படியான, மலர் ஆயிரம்எடுத்து - ஆயிரந்தாமரைமலரையேந்தி, கையில் ஒருமாமலரைக் காணமல் - (அருச்சனையின்முடி

வில்) கையிலிருந்த மலர்களில் ஒருமலரைக்காணமல், ஈசன் திருவடிக்கு-சிவ பெருமானது திருவடிக்கண், ஆயிரம் எண் ஆ - ஆயிரம்என்னுந் தொகைபெற, தம் கண்மலர்சாத்தினார் - தமதுகண்ணுகிய தாமரைமலரைப் பறித்துச்சாத்தினார்—எ-று. (சருரு)

பாம்புசேர்தோளிணையாள் பாளயத்துமாமாரி
சாம்பசிவன்றன்னடியைச் சாராரை—வேம்பின்
இலையையுடுத்தியவ ரீனமானம்போக்கித்
தலையில்விளக்கேற்றிவைப்பா டான்.

இ-ள். சாம்பசிவன் தன் அடியைச் சாராரை-சாம்பசிவனது திருவடியையடையாதவர்களை, பாம்புசேர் தோளிணையாள் - பாம்பையணிந்த இரு தோள்களை யுடையவளாகிய, பாளயத்துமாமாரி - பெரியபாளயத்திலுள்ள மகாமாரியானவள், வேம்பின் இலையைஉடுத்தி - வேப்பந்தழைச்சீலையைஉடுக்கப்பண்ணி, அவர் - அவர்களுடைய, ஈனமானம்போக்கி - ஈனமானங்களையிழக்கச்செய்து, தலையில் - தலையிலே, விளக்குஏற்றிவைப்பாள் - தீபமேற்றி வைப்பாள்—எ-று.

பாளயத்து மாமாரியும் சிவசத்தியின் கூறுதலால் பாம்புசேர் தோளிணையாள் என்று கூறினர். (சருசு)

படிக்கத்தகாதநாட்கள்.

அட்டமியிலோதிஞ லாசானுக்காகாது
சிட்டருக்குப்பன்னுன்கு தீதாகும்—கெட்டவுவா
வித்தைக்குநாசமாம் வெய்யபிரதமையில்
பித்தரும்பேசார் பிழை.

இ-ள். அட்டமியில் ஓதினல்-அஷ்டமியில் படித்தால், ஆசானுக்கு ஆகாது - குருவுக்காகாது, பன்னுன்கு-சதுர்த்தசியில் படித்தால், சிட்டருக்குதீது ஆகும் - சீடருக்குக் கெடுதியாகும், கெட்டஉவா - கெட்ட பூர்ணிமையில் படித்தால், வித்தைக்கு நாசமாம் - வித்தைக்குக் கெடுதியுண்டாகும், வெய்யபிரதமையில் - கொடியபிரதமையில் படித்தால், பிழை - பிழையாகும்; (ஆதலால்) பித்தரும்பேசார் - (அதைக்குறித்து) பித்தரும் பேசமாட்டார்கள் எ-று.

ஆயிரம்பாக்கன்னமுலை யன்னநடைக்கன்னிபதி
ணுயிரம்பாக்காண ருன்னுசையினல்—நீயிரங்கி
வந்தாளவேண்டு மலைப்பழனிவேலவனே
சந்தாளவேறில்லை தான்.

இ-ள். ஆயிரம்பாக்கு அன்னமுலை - ஆயிரம்பாக்கை நிகர்த்த தனங்களையும், அன்னநடை - அன்னநடைபோன்ற நடையினையுமுடைய, கன்னி-என்

பெண்ணானவள், உன்ஆசையினால் - உன்மீதுவைத்த விருப்பத்தினால், பதி னாயிரம்பாக்குஆனாள் - பதினாயிரம் பாக்காயினாள், (ஆதலால்) மலைப்பழனி வேலவனே - பழனிமலை வேலவனே, நீ இரங்கிவந்து - நீ யிரக்கங்கொண்டு வந்து, ஆளவேண்டும் - இவளை யாண்டருளவேண்டும், சந்துஆள - தூதுவிட வேறுஇல்லை - வேறொருவரில்லை—எ-று.

ஆயிரம்பாக்குக்குக் கலசமென்று பெயராதலால் "ஆயிரம்பாக்கன்னமு லை" என்பதற்குக் கலசம்போன்ற தனம்எனவும், பதினாயிரம் பாக்குக்கு அம் மணம் "என்று பெயராதலால்" பதினாயிரம் பாக்கானாள் என்பதற்கு நிர்வா ணமானாள் எனவும் பொருளுரைத்துக்கொள்க. (கருஅ)

பிறப்பித்தோன்வித்தைதனைப் பேணிக்கொடுத்தோன்
சிறப்பினுபதேசஞ் செய்தோன்—அறப்பெரிய
பஞ்சத்திலன்னம் பகிர்ந்தோன்பயந்தீர்த்தோன்
எஞ்சாப்பிதாக்களென வெண்.

இ-ள். பிறப்பித்தோன் - பிறப்பித்தவன், வித்தைதனை பேணிக்கொடு த்தோன் - வித்தையை விரும்பிக்கொடுத்தவன், சிறப்பின் உபதேசம்செய் தோன் - சிறப்பினையுடைய ஞானோபதேசம்செய்தவன், அறப்பெரிய - மிக ப்பெரிய, பஞ்சத்தில் - பஞ்சகாலத்தில், அன்னம்பகிர்ந்தோன் - அன்னம்ப கிர்ந்து கொடுத்தவன், பயம்தீர்த்தோன் - பயத்தை நீக்கிரக்ஷித்தவன், (இவர் ஐவரும்) எஞ்சா - குறைவில்லாத, பிதாக்கள்என எண் - பிதாக்களாவார்க ளென்று நினைப்பாயாக—எ-று. (கருகூ)

கானக்கடன்மல்லைக் கார்வண்ணன்றானுமால்
நானக்குழன்மடவீர் நானுமால்—ஆனக்கால்
தன்கையிற்சங்காழி தானிருக்கப்போவதேன்
என்கையிற்சங்காழி யின்று.

இ-ள். கானம் - சோலைசூழ்ந்த, கடன்மல்லை - திருக்கடன்மல்லையிலெ ழுந்தருளிய, கார்வண்ணன் தானும்-மேகவண்ணனும், மால் - மாலே, நானும் யானும், மால் - மாலே, ஆனக்கால் - ஆனால், நானக்குழல் மடவீர்-மயிர்ச்சாந் தணிந்த கூந்தலையுடைய பெண்களே, தன்கையில் - அவன்கையில், சங்கு ஆழிதாம்இருக்க - சங்காழிகளிருக்க, என்கையில் - என்கையிலுள்ள, சங்கு ஆழி - சங்காழிகள், இன்றுபோவதுஏன் - இன்று நீங்குவதேன்—எ-று.

மால் இரண்டில் முன்னையதற்குத் திருமால்என்றும், பின்னை யதற்கு மோகங்கொண்டவள் என்றும், சங்காழியிரண்டில் முன்னையதற்குச் சங்கசக் ரங்களென்றும், பின்னையதற்குச் சங்குவளையிலும் மோதிரமும் என்றும் பொ ருளுரைத்துக்கொள்க. (சகூO)

கட்டியடிப்போர்க்குங் கன்மீதிலேற்றுவர்க்கும்
எட்டியடிப்போர்க்கு மீவரே—திட்டமுடன்
பாடுவோர்க்கீயாரே பல்லுதிரத்தாடையினிற்
போடுவோர்க்கீவார் பொருள்.

இ-ள். கட்டி அடிப்போர்க்கும் - கட்டி யடிப்பவர்களுக்கும், கல்மீதில் ஏற்றுவர்க்கும் - கல்லை மேலேற்றிச் சுமப்பிப்பவர்க்கும், எட்டி அடிப்போர்க்கும் - எட்டிக்கன்னத்தில் அறைவோர்க்கும், ஈவர் - (இவ்வுலகத்தார்) பொருள்கொடுப்பார்கள், (அன்றியும்) பல் உதிர - பற்கள் உதிரும்படி, தாடையினில் போடுவோர்க்கு - தாடையில் அறைகிறவர்களுக்கு, பொருள் ஈவார்-பொருளைக் கொடுப்பார்கள், திட்டமுடன் பாடுவோர்க்கு - திருத்தமாகப்பாடும் புலவருக்கு, ஈயார் - கொடார்—எ-று. (கசுக)

செய்யாள்கணவா செகராஜசேகரா
ஐயாவடகங்கைக் காரியா—துய்யா
குடஞ்சுட்டுப்பின்போன கோபாலாமுத்து
வடஞ்சுட்டுக்கண்டுயிலாண் மான்.

இ-ள். செய்யாள்கணவா - திருமகள் கொழுநனே, செகராஜசேகரா-செகராஜ சேகரனே, ஐயா - ஐயனே, வடகங்கைக்கு ஆரியா - வட கங்கைக் கிறைவனே, துய்யா - பரிசுத்தனே, குடஞ்சுட்டுப் பின்போன கோபாலா-பசுக்கூட்டத்தின் பின்போன கண்ணனே, மான் - என் பெண்ணாவள், முத்துவடம்சுட்டு - முத்துமாலை சுடுதலால், கண் துயிலாள் - கண்ணுறங்காதிருக்கிருள் (இவளை யாதரிக்கவேண்டும்)—எ-று.

விரகிகளை முத்துவடம்சுடுத லியல்பாதலால் "முத்துவடஞ்சுட்டு" என்ளூர். இது தாய்க்கூற்று. (சசுஉ)

உன்றன்மகளை யொறுப்பதற்குக்காரணமென்
என்றன்மகட்ன் னியல்புகேள்—குன்ருச்
சிராப்பளியானேறிவருஞ் சேவின்மணியோசைக்
கிராப்பளியுங்கொள்ளா ளிவள்.

இ-ள். உன்றன்மகளை ஒறுப்பதற்கு - உன்மகளை வருத்துதற்கு, காரணம் என் - காரணம் யாது, என்றன் மகள் தன் இயல்பு கேள் - என்மகளுடைய இயற்கையைக் கேட்பாயாக, (என்னெனின்) குன்ருு-அழியாத, சிராப்பள்ளியான் ஏறிவரும் - திருச்சிராப்பள்ளிச் சிவபிரானேறிவருகின்ற, சேவின்மணியோசைக்கு - இடபத்தின்மணியோசைக்கு, இவள் - (என்மகளாகிய) இவள், இரா - இரவில், பள்ளியும் கொள்ளாள் - படுத்துறங்கவுமாட்டாள்—எ-று.

சிறப்பள்ளியான்மீது மோகங்கொண்ட ஒருபெண்ணின்தாய் அவளைத் தண்டித்து வருத்துவதைக்கண்ட மற்றொருபெண்ணின் தாயானவள் என் பெண்ணு மிப்படியே, நீயேன் அவளைவருத்துகிறாயெனச் சொல்லியது. ()

நீரூருஞ்செஞ்சடைமே னீரூரும்பாம்பணிந்து
நீரூரிலேவருகை நீதியோ—நேரே
படவரவஞ்சாடப் பலியிடெனவந்தால்
இடவரவஞ்சாளோ விவள்.

இ-ள். நீர் ஊரும் செஞ்சடைமேல் - கங்கைதங்கிய செஞ்சடைமேல், நீர் - நீர், ஊரும்பாம்பு அணிந்து - தவழ்கின்ற பாம்பைத்தரித்து, நீர் - நீர், ஊரிலேவருகை - ஊருக்குள்ளேவருதல், நீதியோ - நீதியாமோ, நேரே - நேராக, படம் அரவம்சாட - படத்தையுடைய பாம்பு சீறும்படி, பலியிடு என வந்தால் - பிக்ஷையிடுவென்றுவந்தால், இவள் - இந்தப்பெண், இடவர - பிக்ஷையிட வருவதற்கு, அஞ்சாளோ - பயப்படமாட்டாளோ—எ-று.

இது தாய்க்கூற்று. (கஅச)

சந்திரனுக்கும் கருடனுக்கும் சிலேடை.

வாலைப்பொருந்துதலால் வல்லரவம்பற்றுதலால்
மாலையடுத்துநெடு வானுறலால்—மேலைநிலத்
தும்பர்பூசிக்கவரு ளொற்றியூரன்வரையில்
அம்புலியுநன்கருட னும்.

இ-ள். சந்திரன்—வாலைப்பொருந்துதலால் - வெண்ணிறம் பொருந்துதலால், வல் அரவம் பற்றுதலால் - வலியராகு கேதுக்களென்னும் சர்ப்பங்களால் பற்றப்படுதலால், மாலை அடுத்து நெடுவான் உறலால்-மாலைக்காலத்தை யடுத்து நெடிய ஆகாயத்தைப் பொருந்துதலால்.

கருடன்—வாலைப் பொருந்துதலால் - வாலையுடைத்தாதலால், வல் அரவம்பற்றுதலால் - வலியசர்ப்பங்களைப் பிடித்தலால், மாலை அடுத்துநெடுவான் உறலால் - திருமாலையடுத்துப் பரமபதத்தைப் பொருந்துதலால், மேலைநிலத்து - மேலுலகத்தில் வாழ்கின்ற, உம்பர் பூசிக்க அருள் - தேவர்கள் வந்து பூசிக்க அவர்களுக் கருள்செய்கிற, ஒற்றியூரன் - திருவொற்றியூரனாகிய சிவபரானது, வரையில் - மலையில், அம்புலியும் நன் கருடன் ஆம் - சந்திரனும் நல்லகருடனாவான்—எ-று. (கஅரு)

அம்மையிலேயேறி யடியேனிடர்தீர
இம்மையிலேவந்தென்னை யீடேற்றி—மும்மையிலே
எந்தப்பாவஞ்செய்தே னந்தப்பாவந்தீரக்
கந்தப்பாவந்திப்போ கா.

இ-ள். கந்தப்பா - முருகக்கடவுளே, அம்மயிலே ஏறி - அழகியமயில்மேலேறி, அடியேன் இடர்தீர - அடியேனது துன்பம்நீங்கும்படி, இம்மையிலே வந்து - இப்பிறப்பிலேவந்து, என்னை ஈடேற்றி - அடியேனை யீடேற்றி, மும்மையிலே - முப்பிறப்பிலே, எந்தப்பாவம்செய்தேன் - எந்தப்பாவத்தைச் செய்தேனோ, அந்தப்பாவம்தீர - அந்தப்பாவம் நீங்கும்படி, இப்போவந்து - இப்பொழுதுவந்து, கா - என்னைக் காத்தருளவேண்டும்—எ-று.

மயிலேயென்பது மையிலேயெனப் போலியாய்வந்தது. (கசுசு)

எழுதரிதுமுன்ன மெழுதியபின்னத்தைப்
பழுதறவாசிப்பது பண்பா—முழுதுமதைக்
கற்பரிதுநற்பயனைக் காண்பரிதுகண்டக்கால்
நிற்பரிதுதானந் நிலை.

இ-ள். முன்னம் எழுது அரிது - முன்னே யெழுதுதல் அருமை, எழுதியபின் - எழுதினபிறகு, அத்தை - அதை, பழுது அறவாசிப்பு அரிது - பழுதறப் படித்தல் அருமை, பண்பா - நற்குணத்தோடு, அதை - அதனை, முழுதும் கற்பு அரிது - முழுதும் கற்றல் அருமை, (கற்றாலும்) நல்பயனை - அதனது நல்லஅர்த்தத்தை, காண்பு அரிது - காணுதல் அருமை, கண்டக்கால் - கண்டால், அந்நிலைநிற்பு அரிது - அந்தநிலையிலே நிற்றல் அருமை—எ-று. ()

கோடுதிக்குங்கும்பமுலைக் கோதையரைக்கூடவென்றால்
மாடுதின்னியென்னை மறுத்தானே—மாடுதின்னி
தன்பொழுதும்போச்சுதே தன்னந்தனித்திருந்த
என்பொழுதும்போச்சுதே யின்று.

இ-ள். கோடு - யானைக்கொம்புபோன்ற, உதிக்கும் - பருத்த, கும்பம் - குடம்போன்ற, முலை - தனங்களையுடைய, கோதையரைக்கூட என்றால் - மாதரைக் கூடவேண்டுமென்று வந்தால், மாடுதின்னி - மாடுதின்னியானவன், என்னைமறுத்தானே - என்னைத் தடுத்தானே, மாடுதின்னி தன்பொழுதும் போச்சுதே - மாடுதின்னியின் பொழுதும் கழிந்தது, தன்னந்தனித்திருந்த - தன்னந்தனியாயிருந்த, என்பொழுதும் போச்சுதே - என்பொழுதும் கழிந்ததே, இன்று - இப்பொழுது—எ-று.

மாடுதின்னி - மாட்டினால் தின்னப்படுவதாகிய வைக்கோலாற்செய்யப்பட்ட மருள் (பாவை) ஒருநாயகன் ஒருநாயகியை விரும்பி யிராப்பொழுதில் அவளிருக்கும் புனத்தை யடுத்துவந்து, பறவைகள் முதலாயினவற்றைவெருட்டுதற்பொருட்டு அவ்விடத்து நிறுத்தியிருந்தவைக் கோற்பாவையையொருபுருடனாய் நினைத்து, மீண்டுபோகவும் மனமில்லாதவனாய் அவ்விடத்தே நின்று, பொழுதுவிடிந்தபிறகு வைக்கோற்பாவையென் றறிந்து தனக்குத்தானே சொல்லிக்கொண்டது. (கசுஅ)

நெஞ்சடைந்தவேட்கையெல்லா நீங்கியிருவிழியும்
பஞ்சடைந்துள்ளாவி படுமுன்னே—செஞ்சடையில்
வெள்ளாறுவெந்நாளும் வேள்விப்புகையாறு
நள்ளாறுவென்று நவில்.

இ-ள். நெஞ்சு-மனமே, அடைந்த வேட்கையெல்லாய்நீங்கி-நீயடைந்திருக்கிற விருப்பங்களெல்லாம் ஒழிந்து, இருவிழியும் பஞ்சு அடைந்து - இரண்டுகண்ணும் பஞ்சடைந்து, உள் - உள்ளேயிருக்கிற, ஆவி - உயிரானது, படுமுன்னே - நீங்குமுன்பே, செஞ்சடையில் வெள்ஆறு - செஞ்சடையில் வெண்மையாகிய கங்காநதியையுடையவனே, எந்நாளும் - எப்பொழுதும், வேள்விப்புகைஆறு - யாகாக்கினிதணியாத, நள்ளாறு - திருநள்ளாற்றையுடையவனே, என்றுநவில்-என்றுசொல்லு—எ-று.

- நெஞ்சு முன்னிலை. (கசுகூ)

## சிவாலயங்கள் ஆயிரத்தெட்டின் விவரம்.

மூவர்கவிமுந்நூறு முன்சோழனைந்நூறு
நாவலர்மாணிக்கர்தல நாற்பத்தெட்—டோவறுசீர்
நூதநசிவாலயங்க ணூற்றறுபதுங்கூட
ஓதவருமாயிரத்தெட் டோர்.

இ-ள். மூவர்கவி - மூவர்பாடல்பெற்றதலங்கள், முந்நூறு - முந்நூறும், முன்சோழன் ஐந்நூறு - நினைத்தற்குரிய சோழநாட்டுத்தலங்கள் ஐந்நூறும், நாவலர் மாணிக்கர்தலம் - நாவலராகிய மாணிக்கவாசகசுவாமிகளால் பாடல்பெற்றதலங்கள், நாற்பத்தெட்டு - நாற்பத்தெட்டாகும், ஓ அறுசீர் - நீங்காத சிறப்புள்ள, நூதநசிவாலயங்கள்-ஓதிய சிவத்தலங்கள், நூற்றுஅறுபதும் கூட - நூற்றறுபதும்சேர, (சிவாலயங்கள்) ஓதவரும் - துதித்தற்குரிய, ஆயிரத்தெட்டு - ஆயிரத்தெட்டாம், ஓர் - அறிவாயாக—எ-று. (கஎ0)

நாலெழுத்துப்பூடு நடுவேநரம்பிருக்கும்
காலுந்தலையுங் கடைச்சாதி—மேலாக
ஒட்டுமுதலெழுத்து மோதுமூன்றுமெழுத்தும்
விட்டாற்பரமனுக்கு வீடு.

இ-ள். நாலெழுத்துபூடு-நாலெழுத்துக்கொண்டபூடு (ஒன்றுஉண்டு,) நடுவேநரம்பு இருக்கும் - (அதின்) நடுவே நரம்பிருக்கும், காலும்தலையும் கடைச்சாதி - அடியும்நுனியும் கடைப்பட்டசாதி, மேலாக - மேன்மையாக, ஒட்டும் பொருந்திய, முதல்எழுத்தும் - முதலாமெழுத்தும், ஓதும் - சொல்லப்பட்ட மூன்றும்எழுத்தும்—, விட்டால் - நீக்கிவிட்டால், பரமனுக்குவீடு - பரமசிவனுக்குவீடு ஆம்—எ-று.

நாலெழுத்துப்பூடு புகையிலை, இதில் முதலெழுத்தும் மூன்றுமெழுத்தும் விடுதல் புலையைவிடுதல், இரண்டாமெழுத்தும் நான்காமெழுத்தும் கைலை. (௧௭௧)

## கைத்தடியின் குணங்கள்.

முனியதட்டுமுட்டேக்கு முன்னீரளக்கும்
கனியுதிர்க்குங்கவ்வுநாய் காக்கும்—தனிவழிக்குப்
பத்திரமதாகும் பயந்தீர்க்கும்பாம்படிக்கும்
கைத்தலத்திற்றண்டிருந்தக் கால்.

இ-ள். கைத்தலத்தில் - கையில், தண்டு இருந்தக்கால் - தடியிருந்தால், முனி அதட்டும் - முனியையதட்டும், முள் தூக்கும் - முள்ளையெடுத்தெறியும், முன்நீர் அளக்கும் - எதிரேயிருக்கிற நீரை அளவிடும், கனிஉதிர்க்கும் - பழங்களை உதிர்க்கும், கவ்வும் நாய்காக்கும் - கவ்வவருகிற நாயைத்தடுக்கும், தனிவழிக்கு பத்திரமதாகும் - தனிவழிக்கு நன்மையாகிய உதவியாகும், பயம்தீர்க்கும் - பயத்தைநீக்கும், பாம்பு அடிக்கும் - பாம்பையடித்துக்கொல்லும்—எ-று.

முனி - பசாசுமுதலிவற்றையும் குறிக்கும். (௧௭௨)

## கைக்குடையின்குணங்கள்.

பகலோன்றெறுங்கிரணம் பாய்பறவையெச்சம்
மிகமேலுறாதகற்றும் விண்ணின்—முகிலதனால்
பெய்யுமழையைத்தடுக்கும் பேரழகுமாமொருவர்
கையிற்குடையிருந்தக் கால்.

இ-ள். ஒருவர்கையில் குடை இருந்தக்கால் - ஒருவர் கையில் குடையிருந்தால், பகலோன் தெறும்கிரணம் - சூரியன் எல்லாரையும் வருத்தும்படியானகிரணமும் (வெயில்,) பாய்பறவை எச்சம் - ஆகாயத்தில் தாவிச்செல்லுகின்ற பறவையெச்சம், (இவைகள்) மிக - மிகவும், மேல் உறாது அகற்றும் - மேலேவிழாமல் நீக்கும், விண்ணின் - ஆகாயத்தினின்றும், முகிலதனால் - மேகத்தினால், பெய்யும் - பெய்விக்கப்படுகிற, மழையைத்தடுக்கும் - மழையைமேல்விழாமல் தடைப்படுத்தும், பேரழகும்ஆம் - மிகுந்த அழகுமாகும்—எ-று.

பறவையெச்சம் - பறவைமலம். (௧௭௩)

வந்தவளைக்கையாது வாய்முத்தந்தந்தருள்வாய்
தொந்தவளைக்கையா துவாரகையா—சந்துவளை
தோசையிடத்தானே குயிலோசைக்கஞ்சியுளத்
தாசையிடைத்தானே யறிந்து.

இ-ள். தொந்தம் - தகுதியாகிய, வளைகையா - சங்கத்தையேந்திய கையையுடையவனே, துவாரகையா - துவாரகா நகரத்தையுடையவனே, சந்துவளை - சந்தனச்சோலைகளால் சூழப்பட்ட, கோசை இடத்தானே - கோசையென்னும் இடத்தையுடையவனே, குயிலோசைக்கு அஞ்சி - குயிலினது ஓசைக்குபயந்து, உள்ளத்து - மனத்தில், ஆசையிட - ஆசைமிக, தானே அறிந்து - தானேதெரிந்துகொண்டு, வந்தவளை - வந்தவளாகிய இந்தப்பெண்ணை, கையாது - வெறுக்காமல், வாய்முத்தம் தந்தருள்வாய் - உன்திருவாய் முத்தம் தந்தருள்வாயாக—எ-று. (கஎச)

அலரோதிமத்தா னறைகோசைமாலே
அலரோதிமத்தா லடிக்கும்—அலரோதி
நந்தனகத்தாளுறவே நண்ணிநின்றாயானடைந்தேன்
உந்தனகத்தாளுறவே யோர்ந்து.

இ-ள். அலர் - தாமரைமலரில் வாழ்கின்ற, ஓதிமத்தான் - அன்னவாகனனாகிய பிரமன், அறை - துதிக்கின்ற, கோசைமாலே - திருக்கோசைத்திருமாலே, அலர்ஓதி - பழிமொழிகளைச் சொல்லி, மத்தால் அடிக்கும் - மத்தினால் அடித்த, அலரோதி - பூங்குழலாளாகிய ஒருத்தி, நந்தன் அகத்து-நந்தன் வீட்டில், ஆளுற - ஆளும்படி, நண்ணிநின்றாய் - பொருந்தியிருந்தாய், யான்-நான், உந்தன் - உனது, நகத்தாள் - நகத்தோடுகூடிய திருவடியை, உறஓர்ந்து அடைந்தேன் - மிகவும் ஆராய்ந்து அடைந்தேன்—எ-று.

நகத்தாள் என்பதை நகுஅதாள் எனப்பிரித்து, பிரகாசிக்கிற அந்தத்திருவடியை யெனப்பொருளுரைப்பினும் பொருந்தும். (கஎரு)

ஓர்ந்தண்டரையாளு முத்தமநற்கோசையனே
ஈர்ந்தண்டரையாளு மிந்திரையும்—சேர்ந்திலகு
தூயத்திருக்கறுப்பா தோற்றியடியேனுடைய
மாயத்திருக்கறுப்பாய் வந்து.

இ-ள். ஓர்ந்து - அவ்வவர் நிலைமையை யறிந்து, அண்டரை ஆளும் - தேவர்களை யாளுகின்ற, உத்தம - உத்தமனே, நல்கோசையனே - அழகியதிருக்கோசையி லிருப்பவனே, ஈர்தண் தரையாளும் - பூதேவியும், இந்திரையும் - சீதேவியும், சேர்ந்து இலகு - கூடிவிளங்குகிற, தூய - பரிசுத்தமான, திருகறுப்பா - அழகிய கருநிறத்தை யுடையவனே, தோற்றி - அடியேனுக்கெதிரே தோன்றி, அடியேனுடைய - அடியேனது, மாயத்திற்கு - மாயமாறுபாட்டை, வந்து அறுப்பாய் - வந்து சேதித்தருளவேண்டும்—எ-று. (கஎசு)

சல்லடைக்கண்ணாகித் தளர்ந்தாளருள்புரிவாய்
மல்லடையுங்கோசைநகர் வைகுந்தா—கல்லடையும்
பாந்தளிடைத்தேர்காலான் பாணம்வருந்துதலால்
மாந்தளிரைத்தேர்காலான் மார்பு.

இ-ள். மல் அடையும் - வளம் பொருந்திய, கோசைநகர் வைகுந்தா - திருக்கோசை நகரில்வாழ்கின்ற வைகுந்தனே, கல் அடையும் பார்தன் இரை கால் தேரான் - பொதிகை மலையைச்சேர்ந்த பாம்பினிரையாகிய தென்றற் காற்றாகிய தேரையுடைய மன்மதனது, பாணம் - பாணங்கள், வருத்துதலால் - துன்பப்படுத்தலால், மாந்தளிரை தேர் காலாள் - மாந்தளிரை நிகர்த்த பாதங்களையுடையவளாகிய இந்தப்பெண், மார்பு-தன்மார்பு, சல்லடைக்கண் ஆகி - சல்லடைக்கண்களாகி, தளர்ந்தாள் - தளர்ச்சியடைந்தாள், (ஆதலால்) அருள்புரிவாய் - அருள்செய்யவேண்டும்—எ-று.

சல்லடைக் கண்ணாகி என்றது சல்லடைக் கண்போலத் தொளைபட்டு என்றபடி. (கஎஎ)

காரங்கமேனிக் கருணைக்கடலான
சீரங்கநாதரே செல்வரே—நீரங்கே
அள்ளியுண்டவெண்ணெய்க்கா வம்மையடிப்பாளென்று
பள்ளிகொண்டாற்போமோ பயம்.

இ-ள். கார் அங்கம்மேனி - கரிய திருமேனியையுடைய, கருணைக்கடல் ஆன - கிருபைக்கடலாகிய, சீரங்கநாதரே-ஸ்ரீரங்கநாயகரே, செல்வரே-செல்வரே, நீர் - நீர், அங்கே - அந்தத்திருவாய்ப்பாடியிலே, அள்ளி உண்ட வெண்ணெய்க்கா-வாரியுண்டவெண்ணெயின்பொருட்டாக, அம்மை அடிப்பாளென்று - தாய் அடிப்பாளென்று, பள்ளிகொண்டால் - படுத்துக்கொண்டால், பயம் போமோ - பயம்நீங்குமோ—எ-று.

அம்மையென்றது யசோதையை. (கஎஅ)

படைப்பானுங்காப்பானும் பார்க்கிலருணேசன்
படைப்பானயனென்னல் பாவம்—படைக்கிலயன்
ஐந்தலையிலொன்றை யரனறுத்தபோதிலவன்
தன்றலையைப்பண்ணறியான் றான்.

இ-ள். படைப்பானும் காப்பானும் - படைப்பவனும் காப்பவனும், பார்க்கில் - நோக்குமிடத்து, அருணேசன் - அருணேசனே யாவன், படைப்பான் - படைப்பவன், அயன் என்னல் - பிரமனென்றுசொல்லுதல், பாவம்-பாவமாகும், படைக்கில் - படைப்பவனாகில், அயன் ஐந்தலையில் ஒன்றை-பிரமனது ஐந்துதலைகளில் ஒன்றை, அரன் அறுத்தபோதில் - சிவன் அறுத்தகாலத்தில், அவன் - அந்தப்பிரமன், தன்தலையை தான்பண்ணறியான்-தன்தலையைத் தான்படைக்க அறியாதவனானான்—எ-று. (கஎகூ)

நாலுங்கடம்பு நடையுடையும்பாவனையும்
வீறுமுனக்கேன்பழனி வேலவா—ஆறுதனில்

வெட்டுண்டானுங்களையன் வெண்ணெய்தனையே திருடிக்
கட்டுண்டானுங்களம்மான் காண்.

இ-ள். பழனிவேலவா - பழனிவேலவனே, உங்கள் ஐயன் - உன்தகப்பனாகிய சிவபெருமான், ஆறுதனில் வெட்டு உண்டான் - ஆற்றில் வெட்டுப் பட்டான், உங்கள் அம்மான் - உன்மாமன், வெண்ணெய்தனை திருடி-வெண்ணெயைத்திருடி, கட்டுண்டான் - கட்டுப்பட்டான், (ஆதலால்) நாறும் - பரிமளிக்கின்ற, கடம்பும் - கடப்பமலர்மாலையும், நடை உடையும் பாவனையும்-- நடை உடைபாவனைகளும், வீறும் - மேன்மையும், உனக்கு ஏன் - உனக்கு யாதுக்கு, (விட்டுவிடு)—எ-று.

நடை - பெருமிதநடை, உடை - பட்டாடை முதலியவற்றை யுடுத்தல், பாவனை - எண்ணம். (கஅ0)

தூதும்துரை துவரைகடையிடைமுன்
ஓதுகின்றமூவெழுத்து மொக்குமே---நீதி
செகராஜசேகரன்வாழ் சிங்கையெனுஞ்செல்வ
நகராயிழையார் நகை.

இ-ள். நீதி - நீதியையுடைய, செகராஜசேகரன்வாழ் - செகராஜ சேகரன் வாழ்கின்ற, சிங்கை என்னும் - சிங்கையென்கிற, செல்வம் - செல்வப் பெருக்கையுடைய, நகர் - நகரிலுள்ள, ஆயிழையார் - மாதருடைய, நகை-பல், தூதும்துரை துவரை - தூதுமதுரை துவரை என்னும் மூன்று சொற்களின், கடை இடை முன் ஓதுகின்ற - கடை இடைமுதல்களாகச்சொல்லுகின்ற, மூவெழுத்தும் - மூன்றெழுத்துக்களையும், ஒக்கும்-நிகர்க்கும்---எ-று.

(து - து - து) முத்து, மூன்றுது. (கஅக)

இவ்வரையுமாவிக் கிரங்குவோர்தாமில்லை
ஐவ்வரையுங்காத்தவ னாதலினால்—மைவரைசொல்
வானிரங்குமுத்து க்ருஷ்ணமன்னனமதுதொண்டை
யானிரங்குவானென்றாண் மான்.

இ-ள். மான் - என் பெண்ணானவள், இவ்வரையும் - இதுவரைக்கும், ஆவிக்கு - என்னுயிரின்பொருட்டு, இரங்குவோர்தாம் இல்லை - இரங்குவோரில்லை, (ஆயினும்) மைவரைசொல் - கருமைக் கெல்லையாகச் சொல்லப்பட்ட, வான் இரங்கும் - மேகமும் இரங்கும்படியான, முத்து க்ருஷ்ண மன்னன்-முத்துக்ருஷ்ணராஜனாகிய, நமதுதொண்டைமான் - நமதுதொண்டைமானானவன், ஐவரையுங்காத்தவன் ஆதலினால் - பாண்டவர் ஐவரையும் காத்தருளினவனாதலால், இரங்குவான் - இரங்குவான், என்றாள் - என்றுசொன்னாள் எ-று. (கஅஉ)

தேமிருக்குமாந்தளிரைச் செந்தீவனமென்றும்
பூமுருக்கையத்தீப் பொறியென்றும்—தாமிருக்கும்
மாப்படுமேயென்றெண்ணி வாடிமனந்தளர்ந்து
கூப்பிடுமேயந்தக் குயில்.

இ-ள். அந்தக்குயில் - அந்தக்குயில்கள், தேம் இருக்கும் - வாசனைபொருந்திய, மாந்தளிரை - மாவினது தளிரை, செந்தீவனம் என்றும் - செந்தீக்காடென்றும், பூமுருக்கை - முருக்கம்பூவை, அ - அந்த, தீபொறி என்றும்- தீயின்பொறியென்றும், தாம்இருக்கும் - தாம் வாழ்கின்ற, மா - மாமரங்கள், படுமே என்று எண்ணி - அழியுமேயென்று நினைத்து, வாடிமனம்தளர்ந்து கூப்பிடும் - வாடிமனந்தளர்ந்து கூவாநிற்கும்—எ-று. (௧அ௩)

காமனார்வீட்டிலே கள்ளன்புகுந்தானோ
சோமனாரைப்பாம்பு சூழ்ந்ததோ—மாமரந்தான்
தீப்பட்டுவேகுதோ தியாகேசர்நன்னாட்டில்
கூப்பிட்டதேயக் குயில்.

இ-ள். தியாகேசர் நல்நாட்டில் - தியாகேசருடையநல்ல நாட்டின்கண், அக்குயில்கூப்பிட்டது - அந்தக்குயில்கூவினது, (இதற்குக் காரணம்யாது) காமனார்வீட்டிலே கள்ளன்புகுந்தானோ - மன்மதன்வீட்டில் திருடன்நுழைந்தானோ, சோமனாரை - சந்திரனை, பாம்புசூழ்ந்ததோ - பாம்புவளைந்துகொண்டதோ, மாமரம்தான் தீப்பட்டுவேகுதோ - மாமரம் தீப்பற்றிவேகுதோ, (அறியோம்)—எ-று.

காமனார் தமக்கு அரசனாகையாலும், சோமனார் அவனுக்குக் குடையாகையாலும், மாமரம் தமக்கு இருப்பிடமாகையாலும் குயில் கூப்பிடலாயிற்று. (௧அ௪)

செந்தமிழோருய்யவன்பு செய்யவந்தசோழவள்ளல்
சந்ததமுஞ்சேராநா டாழ்குழலே—வந்தனைசெய்
ஐங்கரனைவேலவனை யன்றழற்கண்வந்தவனைச்
சங்கரனைவாசுகியைத் தான்.

இ-ள். தாழ்குழலே - நீண்டகூந்தலையுடையாளே, செந்தமிழோர் உய்ய - செந்தமிழ்ப்புலவர் உய்யும்படி, அன்புசெய்யவந்த - அவர்மீது அன்புசெய்யவே அவதரித்த, சோழவள்ளல் - சோழராஜன், சந்ததமும் - சதாகாலமும், சேராநாள் - (என்னைக்) கூடாதநாளில், ஐங்கரனை - விநாயகனையும், வேலவனை - முருகனையும், அன்று அழல்கண்வந்தவனை - அன்று நெருப்புக்கண்ணினின்றும்தோன்றினவனையும், சங்கரனை - சிவனையும், வாசுகியை - வாசுகியென்னும் பாம்பையும், வந்தனைசெய் - வழிபடுவாயாக—எ-று.

காயன் வில்லாகிய கரும்பைமுறிக்க விநாயகனாகிய யானையையும், கடலையடக்க முருகனையும், சந்திரனைத்தேய்க்க வீரபத்திரனையும், மன்மதனையெரிக்கச் சங்கரனையும், தென்றலையுண்ண வாசுகியையும் வந்தனைசெய்யென்பது கருத்து. இது தலைமகன் தோழிக்குச்சொல்லியது. (கஅ௫)

முக்கணன்வாழ்வெற்பை முறித்துவரியிட்டகால்
முக்கணனையப்பில்விழ மோதாதோ—முக்கணன்றன்
வேணிக்காகாமலர்வைத் தேகினன்மெல்லியலே
சாணிற்குறைந்தான் றலை.

இ-ள். மெல்லியலே - தலைவீ, முக்கணன் வாழ்வெற்பை - மூன்று கண்களை யுடையவனாகிய சிவபெருமான்வாழ்கின்ற மேருமலையை, முறித்து-ஒடித்து, உவரியிட்ட - கடலில் வீழ்த்தின, கால் - காற்றானது, முக்கணனை-மூன்றுகண்களையுடைய தேங்காயை, அப்பில்விழ - நீரில்விழும்படி, மோதாதோ - தாக்காதோ, முக்கணன்தன்-சிவபெருமானது, வேணிக்கு ஆகாமலர்-சடைக்கணியத்தகாத தாழம்பூவை, சாணிற்குறைந்தான்தலை - ஒட்டைச்செடியின்மேல், வைத்து ஏகினன் - வைத்துப்போயினன் (நமதுதலைவன்) எ-று.

இரவுக்குறியில் வந்துநின்ற தலைமகன், நெடுநேரம் நின்றும் தலைமகளைக் காணாமையால், தான்கொண்டுவந்த தாழைமலரைத் தான்வந்ததற்கறிகுறியாக ஒரு ஒட்டைச்செடியின்மேல் வைத்துச்சென்றான், அதன்பிறகு தலைமகளும் தோழியும் வந்துநிற்கும்போது, ஒருதேங்காய் காற்றினால் நீரில்வீழ்ந்த சத்தத்தைக்கேட்டுத் தலைமகள் அந்தச்சத்தத்தை அவன்செய்த குறியென்றபோது, தோழியானவள் அவன்வந்து போய்விட்டான், இந்தச்சத்தம் தேங்காய் நீரில்விழுந்ததனா லுண்டானது, அவன் வந்துபோனதற்குச் சாக்ஷி இந்தத் தாழம்பூவேயென்றுசொல்லியது. இது அலர்க்குறி. (கஅசு)

சேலநகரத்துக்குப்போன ஒருபுலவர் அந்த நகர
முதலியவற்றைப் புகழ்ந்து சொல்லியது.

சேலநகரேமதுரை சீர்ச்செழியனேசெழியன்
சாலவதிலுள்ளோரே சங்கத்தார்—சீலமிகும்
கம்பாலதேவன் கடம்பவனவாசர்
தம்பாரிமீனாட்சித் தாய்.

இ-ள். சேலநகரேமதுரை - சேலநகரமே மதுரை, சீர்ச்செழியனேசெழியன் - சிறப்பையுடைய செழியனே பாண்டியன், சாலஅதில்உள்ளோரே சங்கத்தார் - மிகவும்அதில்வாழ்வோரே சங்கப்புலவர்கள், சீலம்மிகும் - ஒழுக்கமிகுந்த, கம்பாலதேவன் கடம்பவனவாசர் - கம்பாலதேவனே சொக்கலிங்கப்பெருமான், தம்பாரி மீனாட்சித்தாய்-அவனதுமனைவியே மீனாட்சியம்மை எ-று.

செழியன், கம்பாலதேவன் என்பவர் அந்நகரத்திலுள்ள பிரபுக்கள். ()

மங்கையர்கள்யோனிமிசை வைத்திருக்குமாசைதனைப்
பங்குசெய்துநூற்றிலொரு பங்கெடுத்துக்—கங்கைமதி
வேணியரன்பாதார விந்தத்தில்வைத்தக்கால்
காணலாங்காணுக் கதி.

இ-ள். மங்கையர்கள் யோனிமிசை - மாதர்களுடைய யோனியின்மீது, வைத்திருக்கும் ஆசைதனை - வைத்திருக்கிற ஆசையை, பங்குசெய்து - பாகித்து, நூற்றில் ஒருபங்கு எடுத்து - நூற்றிலொருபாகத்தை யெடுத்து, கங்கைமதி - கங்கையையும் சந்திரனையும் அணிந்த, வேணி - சடாபாரத்தையுடைய, அரன் - சிவபெருமானது, பாதாரவிந்தத்தில் வைத்தக்கால் - பாததாமரையின்மீது வைத்தால், காணுக்கதிகாணலாம் - காணக்கூடாத முத்தியைக் காணலாம்—எ-று. (கஅஅ)

புட்டவல்பட்டாணி பொரிதேங்குழலப்பம்
மட்டவிழுந்தோசை வடையுடனே—சட்டமுடன்
ஓயாமற்சோறுகறி யுண்டையுண்டையாயடைக்கும்
வாயாநமச்சி வாயா.

இ-ள். புட்டு - பிட்டு, அவல்—, பட்டாணி—, பொரி—, தேங்குழல்—அப்பம்—, மட்டுஅவிழும் தோசை - மணம்வீசுகின்ற தோசை, வடையுடனே—, சோறுகறி—, (இவற்றை) சட்டமுடன் - சட்டமாக, ஓயாமல் - இடைவிடாமல், உண்டை உண்டையாய் அடைக்கும் - உண்டை உண்டையாய்த் துறுத்துகின்ற, வாயா - வாயையுடையவனே, நமச்சிவாயா - நமச்சிவாயனே—எ-று.

செல்வப் பெருக்குள்ள நமச்சிவாயன் என்னும் ஒருவனிடத்தில் யாசிக்கப்போன ஒருபுலவன், அவன் தனக்கொன்றுங் கொடாமையையும் அவனது பேருண்டியையுங்கண்டு அவனை யிகழ்ந்து சொல்லியது. (கஅகூ)

குச்சிலியமாதர் குயமுங்குவலயத்தோர்
மெச்சுதமிழ்மாதர் வியன்முலையும்—சிச்சீ
தெலுங்கமடமாதர் சிங்காரக்கொங்கைக்
கலிங்கமெனவேசொல் கவி.

இ-ள். குச்சிலியமாதர் குயமும் - குச்சிலியதேசத்துப் பெண்களுடைய தனங்களும், குவலயத்தோர்மெச்சு - உலகத்தார் புகழ்கின்ற, தமிழ்மாதர்வியன்முலையும் - தமிழ்நாட்டுப் பெண்களுடைய பெரியதனங்களும், சிச்சீ - சைசை (அருவருக்கத்தக்கன ஆதலால்), தெலுங்கமடமாதர் - தெலுங்கதேசத்துப்பெண்களுடைய, கலிங்கம் சிங்காரக்கொங்கைஎன - உத்தரீயத்தையணிந்த அழகிய தனங்களென்னும்படி, கவிசொல் - கவியைப்பாடு—எ-று.

குச்சிலியப்பெண்கள் தனம்முழுதும் மூடப்பட்டிருக்கும், தமிழ்நாட்டுப் பெண்கள் தனம்முழுதும் வெளிப்பட்டிருக்கும், தெலுங்கதேசத்துப்பெண்கள் தனம் சிறிது மூடியும் மூடாமலுமிருக்கும் - ஆதலால் கவிசொல்வோன் கவிப்பொருள்முழுதும் தோன்றுமலும் முழுதும் வெளிப்படையாயும் இராமல், தோன்றியும் தோன்றுமல் உய்த்துணரும்படி சொல்லவேண்டும் என்பதாம். (ககo)

இங்கிருக்கவென்று லெமனொட்டானிவ்விடம்விட்
டங்கிருக்கவென்று லயனொட்டான்—எங்குவைத்துப்
பேணுவேனிவ்வுடலைப் பித்தாபிறைசூடுந்
தாணுவேசொக்க நாதா.

இ-ள். பித்தா - பித்தனே, பிறைசூடும் தாணுவே - பிறையையணிந்த தாணுவே, சொக்கநாதா - சொக்கநாதரே, இங்கு இருக்கஎன்றால் - இங்கேயிருக்கலாமென்றால், யமன் ஒட்டான் - யமன்விடான், இவ்விடம்விட்டு-இவ்விடத்தைவிட்டு, அங்கு இருக்கஎன்றால் - அங்கேயிருக்கலாமென்றால், அயன் ஒட்டான் - பிரமன்விடான், இவ்வுடலை - இந்தவுடம்பை, எங்குவைத்துப்பேணுவேன் - எவ்விடத்தில்வைத்துக் காப்பாற்றுவேன்—எ-று.

யமன் அழிக்கிறன், பிரமன் படைக்கிறன், வேறெவ்விடத்திற்போயிருப்பேன் என்பதாம். (ககக)

வெள்ளிமலைபொன்னின்மலை மேவிமகிழ்வீடாகிப்
பிள்ளைகளோபுத்திசொல்லும் பிள்ளைகளாய்த்—தெள்ளுமுகம்
வாடாவடிவுடையாள் மாமனையாளானக்கால்
ஆடாரோவொற்றியப்ப னார்.

இ-ள். வெள்ளிமலை பொன்னின்மலை - கைலாயமும் மேருவும், மேவிமகிழ் வீடுஆகி - தங்கி மகிழும்படியான வீடாகி, பிள்ளைகள் புத்திசொல்லும் பிள்ளைகள்ஆய் - பிள்ளைகள் தமக்குப் புத்திசொல்லும்படியான பிள்ளைகளாகி, தெள்ளும் முகம்வாடா வடிவுடையாள் - தெளிந்த முகம்வாடாத வடிவுடையம்மை, மாமனையாள் ஆனக்கால் - பெருமைபொருந்திய மனையாளானால், ஒற்றி அப்பனார் - திருவொற்றியூரி லெழுந்தருளிய எமதுதந்தையாராகிய சிவபெருமானனவர், ஆடாரோ - ஆடமாட்டாரோ—எ-று.

பிள்ளைகள் - விநாயகர் சுப்பிரமணியர். ஆடுதல்-நடனம்பண்ணுதல். ()

## கோற்றங்குடியார்க்குச் சிற்றம்பலவர் எழுதிய திருமுகம்.

அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்கொற்றங்
குடியார்க்கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்

பெத்தான்சாம்பானுக்குப் பேதமறத்தீக்கைசெய்து
முத்திகொடுக்கை முறை.

இ-ள். அடியார்க்கு எளியன் - அடியவர்க்கு எளியவன், சிற்றம்பலவன் - சிற்றம்பலத்தான், கொற்றங்குடியார்க்கு - கொற்றங் குடியவர்க்கு, எழுதிய கைச்சீட்டு—, (என்னெனின்) படியின்மிசை - உலகத்தில், பெத்தான் சாம்பானுக்கு—, பேதம் அற - வேற்றுமையில்லாமல், தீக்கைசெய்து - தீக்ஷை செய்து, முத்தி கொடுக்கை - முத்தி கொடுத்தல், முறை - உமக்குக்கடமை யாம்—எ-று. (கககூ)

காந்தனுக்கென்றன்கொடிய காமவிகாரமெல்லாம்
போந்தறிவித்தாலுனக்குப் புண்ணியமாம்—சேர்ந்தோடும்
தேளிபடவாடுந் திரைக்கடலேமன்மதன்கை
வாளிபடவாடு மனம்.

இ-ள். சேர்ந்து ஓடும் - திரண்டோடுகின்ற, தேளிபட ஆடும் - தேளி மீன்கள் பொருந்தவிளையாடுகின்ற, திரைக்கடலே - அலைகளையுடையகடலே மன்மதன் கைவாளிபட - மன்மதன்கை அம்புபடுதலால், மனம்வாடும்-மனம் வாடாநின்றது, (ஆகையால்) காந்தனுக்கு - தலைவனுக்கு, என்றன் - எனது, காமவிகாரம் எல்லாம் - காமவிகாரமுழுதும், போந்து அறிவித்தால் - போய்த் தெரிவிப்பாயானல், உனக்கு புண்ணியம் ஆம் - உனக்குப் புண்ணியமுண்டாகும்—எ-று.

இது தலைவிகடலொடு கூறியது. (ககூச)

கம்பனென்றுங்கும்பனென்றுங் காளியொட்டக்கூத்தனென்றும்
கும்பமுனியென்றும்பேர் கொள்வாரோ—அம்புவியில்
மன்னுவலர்புடைசூழ் வாழ்குடந்தையாரியப்பன்
அந்நாளிலேயிருந்தக் கால்.

இ-ள். அம் புவியில் மன் - உலகத்தில் நிலைபெற்ற, நாவலர்புடைசூழ் - நாவலர்கள் புடைசூழ, குடந்தைவாழ் - திருக்குடந்தையில் வாழ்கின்ற, ஆரியப்பன் - ஆரியப்பப்புலவன், அந்நாளிலே யிருந்தக்கால் - அக்காலத்தி லிருந்தானுனல், கம்பன் என்றும்—, கும்பன் என்றும்—, காளி ஒட்டக்கூத்தனென்றும் - காளிமுத்து ஒட்டக்கூத்தனென்றும், கும்பமுனி என்றும் - அகத்தியனென்றும், பேர்கொள்வாரோ - பேர்படைப்பார்களோ—எ-று.

முற்காலத்தில் ஆரியப்பப்புலவ னிருந்தால் கம்பன் முதலானவர்களுடைய புலமைசெல்லா தென்பதாம். (சகூரு)

கோச்சகம்.

மெய்ச்சரசமாக விளையாடும்வேளையிலே
கைச்சரசமென்றதல்லாற் கைச்சரசமென்றேனே

அச்சனகியார்மீதி லாசைகொண்டராவணன்மேல்
தச்சுருவவாளிதொட்ட தாமோதரேந்திரனே.

இ-ள். அ - அந்த, சனகியார் மீதில் - சீதா பிராட்டிமீதில், ஆசைகொண்ட - விருப்பங்கொண்ட, ராவணன்மேல் - ராவணன்மீது, தச்சு உருவ - தைத்துருவும்படி, வாளிதொட்ட - அம்புதொடுத்த, தாமோதரேந்திரனே— மெய்ச்சரசமாக விளையாடும் வேளையிலே - உண்மைச்சரசமாக நீ விளையாடுங் காலத்தில், கைச்சரசம் என்றதல்லால் - இதென்ன கைச்சரசம் என்றதே யன்றி, கைச்சரசம் என்றேனோ - கைத்தரசம் என்றுசொன்னேனோ—எ-று.

தாமோதரன் என்னும் ஒரு சீமான் தன்னோடு சரசமாடுங் காலத்தில், அந்தசர்சரசம் இனிமையா யிருந்ததென்று அவனோடு சொல்லியது. (கககூ)

மீன்பார்த்துவிண்பார்த்து வேளையும்பார்த்தாள்வரவு
தான்பார்த்தெனைப்போற் சரிபார்க்கும்வெண்குருகே
மான்பார்த்துவாளிதொட்ட மால்சிவநாராயணனை
நான்பார்த்துமாதா நகைபார்த்திருந்தேனே.

இ-ள். மீன்பார்த்து - மீனைப்பார்த்தும், விண்பார்த்து - ஆகாயத்தைப் பார்த்தும், வேளையும் பார்த்து - சமயத்தைப் பார்த்தும், ஆள்வரவுதான் பார்த்து - ஆள்வருதலைப் பார்த்தும், என்னைப்போல் - என்னைப்போல, சரிபார்க்கும் - வழிபார்க்கும், வெண்குருகே - வெள்ளியகுருகே, மான்பார்த்து - மாயமானாகிய மாரீசனைப்பார்த்து, வாளிதொட்ட - அம்பெய்த, மால் - திருமாலினமிசமாயெ, சிவநாராயணனை—, நான்பார்த்து - நான் எதிர்பார்த்து, மாதர் நகைபார்த்து இருந்தேன் - மாதர் நகைத்தலையும்பார்த்திருந்தேன்-எ-று.

மீன் - மீன், நக்ஷத்திரம். குருகு - நாரை, ஒருமாது சிவநாராயணன் என்னுஞ் சீமானை யெதிர்பார்த்திருந்து அவன் வாராமையால் மாதர் நகைப்பதைக்கண்டு ஒருகுருகைநோக்கிச் சொல்லியது. (ககஎ)

முல்லைமுல்லையாய்த்தொடுத்து மோகமதனெய்யவந்த
வில்லைவில்லையாய்நறுக்கி மெல்லமெல்லத்தாராயோ
இல்லையில்லையென்றுசொல்லி யேற்கவரும்பாவலர்கள்
தொல்லைதவிர்க்குங்களந்தைச் சுப்ரமண்யபூபதியே.

இ-ள். முல்லை - முல்லைமலரம்பை, முல்லையாய்த்தொடுத்து - தன்வெற்றியம்பாகத்தொடுத்து, மோகமதன் எய்யவந்த - மோகத்தைத் தருகிற மன்மதன் எய்யவந்த, வில்லை - கருப்புவில்லை, வில்லையாய் நறுக்கி - வில்லைகளாயறுத்து, மெல்ல மெல்லும்படி, மெல்லதாராயோ - பையத்தரமாட்டாயா, இல்லை இல்லை என்றுசொல்லி—, ஏற்கவரும் - யாசிக்கவருகிற, பாவலர்கள் - வித்வான்களுடைய, தொல்லை தவிர்க்கும் - துன்பத்தை நீக்குகின்ற, களந்

ந்தை - திருக்களிந்தையில் வாழ்கின்ற, சுப்ரமண்ய பூபதியே - சுப்ரமண்ய பூபாலனே—எ-று.

களந்தை - களத்தூர். இது ஒருமாது சுப்ரமண்யபூபதி என்னும் சீமானைநோக்கி, மன்மதன் என்மீது கணைதொடுத்தற் கிடமாயிருக்கிற வில்லாகிய கரும்பைப் பில்லைகளாய்த்துண்டித்து, நான் மெல்லும்படிகொடுக்கமாட்டாயோவென்றுசொல்லியது. என்னைச் சேரமாட்டாயோ வென்பதாம். ()

ஆயிரங்கண்ணுகமத னம்புமேலம்புவிட
வீயிரங்குசெந்தேனி ருலினங்கமானேனே
தாயிரங்கவேணபெண்க ளாமிரங்கவாவிரங்க
வேயிரங்கும்வாயா விசயரகுநாயகனே.

இ-ள். ஆன் இரங்க - பசுக்களிரங்கும்படி; வேய் இரங்கும்-வேய்ங்குழல் ஒலிக்கின்ற, வாயா - திருவாயையுடையவனே, தாய் இரங்க - தாயானவள் இரங்கவும், வேணபெண்கள் இரங்க - வேண்டியமாதர் இரங்கவும், விசயரகு நாயகனே—, மதன் - மன்மதன், அம்புமேல் அம்புவிட - அம்புமேல்அம்பை யெய்ய, ஆயிரம் கண் ஆக - ஆயிரங்கண்களாக, ஈ இரங்கு - ஈக்கள் சத்திக்கிற, செந்தேன் இறுலின் - செந்தேன் கூடுபோல, அங்கம் ஆனேனே - உடம்பு ஆகப்பெற்றேனே—எ-று.

விசயரகுநாயகன் - விசயரகுநாதசேதுபதி, இந்தச் சீமானைநோக்கி ஒருமாது சொல்லியது. (கசுகூ)

கன்னலெனுஞ்சிறுகுருவி ககனமழைக்காற்ருமல்
மின்னலெனும்புழுவெடுத்து விளக்கேற்றுங்கார்காலம்
மன்னவனுந்தென்மதுரை மாவலிவாணனைப்பிரிந்திங்
கென்னபிழைப்பென்னவிருப் பென்னநகைப்பின்னமுமே.

இ-ள். கன்னல் என்னும் - கன்னலென்கிற, சிறுகுருவி - சிறிய குருவியானது, ககனமழைக்கு ஆற்ருமல் - மேகத்தினின்றும் வீழ்கின்றமழைக்குச் சகிக்காமல், மின்னல் என்னும் புழு எடுத்து - மின்மினிப்பூச்சியையெடுத்து, விளக்கு ஏற்றும் - (தன்வீட்டுக்கு) விளக்காக ஏற்றுகின்ற, கார்காலம்-மழைகாலம், (இந்தக் கார்காலத்தில்) மன்னவன் ஆம் - வேந்தனுகிய, தென்மதுரை - தென்மதுரையில் வாழ்கின்ற, மாவலிவாணனை—, பிரிந்து - நீங்கி, இங்கு என்ன பிழைப்பு - இவ்விடத்தில் என்ன பிழைப்பிருக்கின்றது, என்ன இருப்பு - இது என்னநிலை, இன்னமும் என்னநகைப்பு - இன்னமும் என்ன சிரிப்பு—எ-று.

மாவலிவாணன் - ஓர்சீமான். இது தலைமகள் தோழி முதலியோரை நோக்கிச் சொல்லியது. (உ00)

## வெண்பா.

கல்விக்குஞானக் கருத்துண்டாங்காயமுறும்
தொல்வினைகளெல்லாந் தொலையுமே—வில்லைத
னிற்புயற்றிருக்கணத்த னித்தன்வச்சிரப்புயத்தோர்
கற்பகத்தினைத்துதித்தக் கால்.

இ-ள். வில்லை தனில் - வில்வ வனத்திலுள்ள, புயல் - கருணைமழை பொழிகின்ற, திருக்கண் அத்தன் - திருக்கண்களையுடைய எமதுதந்தை, நித்தன் - அழிவற்றவன், வச்சிரப்புயத்து - வயிரம்போலும் வலியதிருத்தோள்களையுடைய, ஓர்கற்பகத்தினை - ஒப்பற்ற கற்பகவிநாயகனை, துதித்தக்கால்-தோத்திரம்பண்ணினால், கல்விக்கு - கல்வியோடு, ஞானக்கருத்துஉண்டாம்-ஞானக்கருத்து உண்டாகும், காயம் உறும் - உடம்பெடுத்தற் கேதுவாகிய, தொல்வினைகள் எல்லாம் - பழவினைகள்யாவும், தொலையும் - நீங்கும்—எ-று.

வில்லை - வில்வவனம், இது ஒரு திருப்பதி. (உ0க)

செல்வம்பெறலாஞ் செழித்தபுகழ்சேரலாம்
வில்வம்புனைவார் விரிஞ்சேசர்—புல்லுமதன்
கோளைமுடித்தாரிமயக் கோதையிடத்தார்கமலத்
தாளைமனத்தூடுநினைத் தால்.

இ-ள். வில்வம் புனைவார் - வில்வ மாலையைத் தரிப்பவர், விரிஞ்சேசர்-விரிஞ்சைநகர்க்கிறைவர், புல்லும்மதன் - கிட்டிவந்த மன்மதனது, கோளை முடித்தார் - வல்லமையையழித்தவர், இமயக்கோதை இடத்தார் - உமாதேவியை யிடப்பாகத்திலுடையவர், (அவரது) கமலம் தாளை - தாமரைமலர்போலும் திருவடிகளை, மனத்தூடு நினைத்தால் - மனத்தில்நினைத்தால், செல்வம் பெறல் ஆம் - செல்வத்தையடையலாம், செழித்த புகழ் சேரல் ஆம்-மிக்க புகழையடையலாம்—எ-று. (உ0உ)

## வேலாயுதத்தின் சிறப்பு.

அண்டர்தமக்கரசா மன்புபடரக்கொம்பாம்
மண்டவுணர்தம்முயிர்க்கு வன்னியாம்—பண்டுதிறற்
கஞ்சனஞ்சிடுங்கடம் பணிந்தெழுந்துகந்துசூரை
மிஞ்சிநெஞ்சுறிந்தெறிந்த வேல்.

இ-ள். பண்டு - முற்காலத்தில், திறல் - வெற்றியையுடைய, கஞ்சன் அஞ்சிடும் - பிரமன் அஞ்சும்படியான, கடம்பு அணிந்து - கடப்பமாலையைத் தரித்து, எழுந்து - மேற்சென்று, உகந்து - சந்தோஷித்து, சூரை - சூரபன்மனை, மிஞ்சி - மேலாடி, நெஞ்சு உறிந்து எறிந்த - (அவனது) நெஞ்சைப் பிளந்தெறிந்த, வேல் - வேலாயுதமானது, அண்டர்தமக்கு அரசு ஆம்-தேவர்களுக்கு அரசாகும், அன்புபடரக் கொம்பு ஆம் - அன்பாகிய கொடிபடர்வதற்

குக்கொள் கொம்பாகும், மண்டு - நெருங்கிய, அவுணர்தம் உயிர்க்கு - அரக்கர்களுயிருக்கு, வன்னி ஆம் - நெருப்பு ஆகும்—எ-று.

தேவர் சேனாபதி என்பதை யுணர்த்துதற்கு அண்டர்தமக்[கரசாம் என்றார். (உ0ங.)

ஆதரவாயென்னருகி லஞ்சலென்றுவந்துநின்று
போதரவுசெய்யுமெப் போதுமே—ஓதுதமிழ்ச்
சந்தமுந்தலங்க்ரதஞ் செறிந்துநன்குயர்ந்துதங்கு
விந்தைகொண்டிலங்குசெந்தில் வேல்.

இ-ள். ஓதுதமிழ் சந்தம்முந்து - சொல்லப்பட்ட தமிழ்ச் சந்தங்களில் மூந்தின, அலங்க்ரதம் செறிந்து - அலங்காரமாகிய சொன்மாலைகள் மிகுதியாய்ப் பணியப்பெற்று, நன்கு உயர்ந்து - நன்றாயுயர்ந்து, தங்கு - தங்கிய, விந்தைகொண்டு இலங்கு - அற்புதத்தைக்கொண்டு விளங்குகின்ற, செந்தில் வேல் - செந்தில்வேலானது, என் அருகில் - எனக்குச் சமீபத்தில், அஞ்சல் என்று - பயப்படாதேயென்று, ஆதரவாய் வந்துநின்று—, எப்போதும் போதரவுசெய்யும் - எப்பொழுதும் என்னைக்காப்பாற்றும்—எ-று. (உ0ச)

இங்கிதமாநல்வாழ் வெமக்களிக்குமுற்பகல்செய்
சங்கடமாம்வேலை தணிக்குமே—பொங்கமுறத்
தற்பரற்கநுக்ரகித் திடக்கருத்தனித்தசத்த
வெற்பினைத்தொளைத்தவுக்ர வேல்.

இ-ள். பொங்கம் உற - விளக்கமிகும்படி, தற்பரற்கு - பரம சிவனுக்கு, அனுக்ரகித்திட - (பிரணவப்பொருளை) உபதேசிக்க, கருத்தன் - கர்த்தனாயிருந்த முருகக்கடவுளுடைய, நித்தம் - சாசுவதமான, சத்தவெற்பினை-சப்தகுல பர்வதங்களையும், தொளைத்த - தொளைசெய்த, உக்ரவேல் - உக்ரமாகிய வேலானது, எமக்கு - எங்களுக்கு, இங்கு - இவ்விடத்தில், இதம் ஆம் - சுகமாகிய, நல்வாழ்வு - நல்லவாழ்வினை, அளிக்கும் - கொடுக்கும், முற்பகல்செய் - முன்னைநாளிற்செய்த, சங்கடம் ஆம்வேலை - (தீவினையின்காரியமாகிய) துன்பக்கடலை, தணிக்கும் - சுவறப்பண்ணும்—எ-று. (உ0ரு)

ஈட்டும்வினைகளறுத் தின்பமுறவேயெனது
பாட்டுக்குகந்தருள்பா லிக்குமே—நாட்டமிகும்
மண்டலங்கலங்கவண்டர் கண்டர்துண்டர்மிண்டராவி
விண்டொடுங்கமண்டியுண்ட வேல்.

இ-ள். நாட்டமிகும் - ஆராய்ச்சிமிகுந்த, மண்டலங்கலங்கு - மண்டலம் கலங்குதற் கேதுவாகிய, அகண்டர் - அநேகராகிய, கண்டர் - கண்டகர்,

துண்டர் - துஷ்டர், மிண்டர் - வலியர் (ஆகிய இவர்களுடைய), ஆவிவிண்டு ஒடுங்க - உயிர்நீங்கி யொடுங்கும்படி, மண்டி உண்ட-நெருங்கியுண்ட, வேல்-வேலாயுதமானது, ஈட்டும் வினைகள் அறுத்து - (ஆன்மாக்கள்) சம்பாதிக்கிற வினைகளைச்சேதித்து, இன்பம் உற - இன்பம் அதிகரிக்கும்படி, எனது பாட்டுக்கு உகந்து - என்பாடலுக்கு சந்தோஷித்து, அருள் பாலிக்கும் - அருள் செய்யும்—எ-று.

வினைகள் - நல்வினை தீவினைகள். இன்பம் - மோக்ஷசுகம். (௨0௬)

உன்னவினிதாயிருக்கு மோங்குசெல்வமும்பெருக்கும்
நன்னரருளைக்கொடுக்கு நாடோறும்—பன்னும்
சகடமுருளநெருடுகமல சரணகருணையரியின்மருகன்
விகடகரியினிளையமுருகன் வேல்.

இ-ள். பன்னும் - சொல்லப்பட்ட, சகடம் உருள - வண்டில் உருளும்படி, நெருடு - நெருடின, கமலசரணம் - தாமரை மலர்போலும் பாதங்களையுடைய, கருணை - கருணையுள்ள, அரியின் மருகன் - திருமாலுக்கு மருகன், விகடகரியின் - மாறுபட்ட தலையையுடைய விநாயகனுக்கு, இளைய - சிறிய, முருகன் - முருகவேள் (அவனது), வேல் - வேலானது, உன்ன - (அன்பர்) நினைக்க, இனிது ஆய் இருக்கும் - இன்பமாயிருக்கும், ஓங்கு செல்வமும் பெருக்கும் - உயர்ந்த செல்வத்தையும் பெருகச்செய்யும், நாள் தோறும் - தினந்தோறும், நன்னர் அருளைக் கொடுக்கும் - நன்மையாகிய அருளைச் செய்யும் எ-று.

சகடம் என்றது சகடாசுரன். விகடகரி - மாறுபட்ட யானை. அதாவது தலையொன்றுமே யானையுருவாயிருத்தல். (௨0௭)

ஊழ்வினையைப்போக்குமே யுள்ளொளியைக்காட்டுமே
வாழ்வினுக்கோர்வித்தாய் வளருமே—தாழ்வார்
தடபடவெனவதிர் கடலதின்முடிமிசை
விடவதிபொடிசெயும் வேல்.

இ-ள். தாழ்வார் - வணங்குவோர், தடபட என - தடபட என்னும்படி, அதிர் - முழங்குகின்ற, கடலதின்முடிமிசை - கடலின்முடிமேல், விட - எவ, அதிபொடிசெயும் - மிகப்பொடியாக்குகின்ற, வேல்-வேலாயுதமானது, ஊழ்வினையைப்போக்கும் - பழவினையைநீக்கும், உள் ஒளியைகாட்டும் - உள்ளொளியாகிய பரம்பொருளைக்காட்டும், வாழ்வினுக்கு ஓர் வித்து ஆய் வளரும் - செல்வத்துக்கு ஒரு விதையாகிவளரும்—எ-று.

வாழ்வு - செல்வம். (௨0௮)

ஓராறுசென்னி யொருமுருகாவென்றளவில்
தீராதவல்வினைநோய் தீர்க்குமே—போராடிக்

கொக்கரித்தவெற்படர்த்துக் கொக்கரக்கனைத்துணித்த
விக்ரமத்திருக்கரத்து வேல்.

இ-ள். போராடி - போரிட்டு, கொக்கரித்த - ஆர்ப்பரித்த, வெற்புஅடர்த்து - கிரவுஞ்சமலையைப் பொடித்து, கொக்கு அரக்கனை துணித்த - மாமரவடிவாயிருந்த அரக்கனாகிய சூரனை இருபிளவாகச்சேதித்த, விக்ரமம் - வெற்றியையுடைய, திருக்கரத்துவேல் - திருக்கைவேலானது, ஓர் ஆறு சென்னி - ஓராறுதலைகளையுடைய, ஒருமுருகா என்றளவில் - ஒப்பற்ற முருகனேயென்றளவில், தீராத - நீங்காத, வல்வினை - வலியவினைகளையும், நோய் - (அவற்றாலுண்டாகிற) துன்பங்களையும், தீர்க்கும் - நீக்கும்—எ-று. (௨௦௧)

கந்தாகடம்பா கயிலாயமாமலையான்
மைந்தாசுவாமிவடி வேலா—சந்தக்
குறமகளாசைகொள் கணவாகுருபரனாகியகுமரா
அறுமுகவாபழனியின் வேலா.

இ-ள். கந்தா - கந்தனே, கடம்பா - கடப்ப மாலையையுடையவனே, கயிலாயமா மலையான்மைந்தா - கயிலாயமாகிய பெரியமலையையுடைய பரமசிவனுக்குப் புதல்வனே, சுவாமிவடிவேலா - எமக்கு சுவாமியாகியவடிவேலனே, சந்தம் - அழகுள்ள, குறமகள் - குறப்பெண்ணாகிய வள்ளிநாயகியின், ஆசைகொள் - விருப்பங்கொண்ட, கணவா - கணவனே, குருபரன் ஆகிய குமரா - (சிவபெருமானுக்கு) சிறந்தகுருவாகிய குமரவேளே, அறுமுகவா - ஆறுமுகனே, பழனியின்வேலா - பழனிவேலனே (என்னையாதரித்தருளவேண்டும்) எ-று. (௨௲௦)

அன்பர்பயங்கெடுக்கு மத்திகிரியைத்துளைக்கும்
இன்பவல்லிகண்ணுக் கெதிராகும்—மின்பரந்த
வாகுதோளிலேறிமீறி வாகுசாரியோடியாடி
வேகசூரன்மார்பிடந்த வேல்.

இ-ள். மின்பரந்த - மின்னுதல் பரவிய, வாகுதோளில் ஏறி - வீரவாகுதோளிலேறி, மீறி - மிஞ்சி, வாகுசாரி ஓடி ஆடி - அழகிய சாரியோடி விளையாடி, வேகம் சூரன்மார்பு இடந்த - கொடுமையாகிய சூரனது மார்பைப் பிளந்த, வேல் - வேலானது, அன்பர் பயம்கெடுக்கும் - அன்பரது பயத்தைக் கெடுக்கும், அ - அந்த, கிரியை - (கிரவுஞ்ச) மலையை, துளைக்கும் - தொளைபடுத்தும், இன்பவல்லி கண்ணுக்கு - சுகவடிவாகிய உமாதேவியார் கண்ணுக்கு, எதிர் ஆகும் - நேர் நிற்கும்—எ-று. (௨௧௧)

அஞ்சிமயல்சகியா தங்கமுருகிநின்ற
வஞ்சியைச்சேர்தென்றணிகை வள்ளமே—பஞ்சமலர்

அங்கசனுக்குங்கிரணத் தந்திமதிக்குங்கடலுக்
கும்குழலுக்குங்குயிலுக் கும்.

இ-ள். பஞ்ச மலர் - பஞ்ச புஷ்ப பாணங்களையுடைய, அங்கசனுக்கும்-மன்மதனுக்கும், கிரணத்து - கிரணத்தோடுகூடிய, அந்திமதிக்கும் - அந்திப் பிறைக்கும், கடலுக்கும்—, குழலுக்கும் - வேய்ங்குழலுக்கும், குயிலுக்கும்— அஞ்சி - பயந்து, மயல்சகியாது - மையலைச் சகிக்கமாட்டாமல், அங்கம் உருகின்ற - உடலுருகின்ற, வஞ்சியை - வஞ்சிக் கொடிபோலும் என்பெண்ணை, சேர் - நீசேர்வாயாக, தென் தணிகை வள்ளலே - தென் தணிகை மலையில் வாழ்கின்ற வள்ளலே—எ-று.

மயல் - காமமயக்கம், வள்ளல் - மிகுகொடையாளி, குழல் - புள்ளாங்குழல். (௨௧௨)

வாங்குசிலைநுதலார் மாயக்கலவியிலே
ஏங்கிமனமே யிளையாதே—மாங்கனிக்காத்
தம்பியொக்கச்சண்டையிட்டுத் தந்தையைச்சுற்றந்தவொற்றைக்
கொம்பனைச்சற்றன்புவைத்துக் கூறு.

இ-ள். வாங்கு - வளைந்த, சிலை நுதலார் - வில்லையொத்த நெற்றியையுடையவராகிய மாதரது, மாயக்கலவியிலே - மாயப்புணர்ச்சியிலே, ஏங்கி-ஏக்கமுற்று, மனமே - நெஞ்சே, இளையாதே - நீ மெலியாதே, மாங்கனிக்கா - மாங்கனியின்பொருட்டு, தம்பி ஒக்க சண்டையிட்டு - தம்பியோடு சமானமாய்ச் சண்டையிட்டு, தந்தையைச் சுற்று - தந்தையாகிய சிவபெருமானைச் சுற்றி வந்த, அந்த ஒற்றைக்கொம்பனை - அந்த ஏகதந்தனை, சற்று அன்புவைத்துக் கூறு. சற்றே அன்புவைத்துத் துதிசெய்வாயாக—எ-று.

ஒற்றைக்கொம்பன் - விநாயகன். (௨௧௩)

தாமரைப்பூந்தேனையுண்டு தாதளைந்துவண்டிமிர்ந்து
காமரஞ்செய்வாவிகள்சூழ் கந்தர்சிவ—மாமலைவாழ்
பூவையரங்கந்தங்கம் பூகமிலங்குங்கண்டம்
காவையரங்கஞ்சங்கண் காண்.

இ-ள். வண்டு - வண்டுகள், தாமரைப்பூ தேனையுண்டு - தாமரைப்பூந் தேனைப்பருகி, தாது அளைந்து - மகரந்தத்தைப் பூசிக்கொண்டு, இமிர்ந்து-ஒலித்து, காமரம்செய் - காமரப்பண் பாடுதற்கிடமாகிய, வாவிகள்சூழ்-தடாகங்கள்சூழ்ந்த, கந்தர் சிவமாமலைவாழ் - கந்தரது பெருமைவாய்ந்த சிவகிரியில்வாழ்கின்ற, பூவையார் - இம்மாதரது, அங்கம் - சரீரம், தங்கம்-தங்கத்தை நிகர்க்கும், இலங்கும்கண்டம் - விளங்குகின்ற கழுத்து, பூகம் - கமுகை

நிகர்க்கும், கண் - கண்கள், வை அரம் கஞ்சம் - கூர்மையாகிய அரத்தையும் தாமரைமலரையும் நிகர்க்கும், கா - நீ காத்தருளல்வேண்டும்—எ-று. (உகச)

திருச் சேந்தூர்க்கந்தர் திருவிழாக்காலத்தில் மேகமழை
பெய்யத்தொடங்குதலும், வந்தவர்கள் எல்லாரும்
இங்குமங்குமா யோடுவதைக்கண்ட
ஒருஅன்பர்மேகத்தை நோக்
கிக் கூறியசெய்யுள்.

வந்துமழைபொழியும் வானேவெஞ்சூர்தடிந்த
கந்தர்திருவிழாக் காலத்தில்—தொந்தரையா
நீர்த்துளியையூற்றிவிட னேர்த்தியலமாற்றிவிடு
கீர்த்திவருநாட்டென்மொழி கேள்.

இ-ள். வந்து - (உனக்குரியபருவத்தில்) வந்து, மழைபொழியும் - மழையைச்சொரிகின்ற, வானே - மேகமே, வெஞ்சூர்தடிந்த - வெவ்விய சூரனைக் கொன்ற, கந்தர் - கந்தசுவாமியின், திருவிழாக்காலத்தில் - உற்சவகாலத்தில், தொந்தரையா - அவசரமாக, நீர்த்துளியை ஊற்றிவிடல் - நீர்த்துளியைக் கொட்டிவிடுதல், நேர்த்தியல - நன்மையல்ல, மாற்றிவிடு - (நீர்கொட்டுந்தொழிலை) நீக்கிவிடு, (நீக்குவையாயின்) நாட்டு - உலகத்தில், கீர்த்திவரும் - உனக்குப் புகழுண்டாகும், என்மொழிகேள் - என்சொல்லைக்கேட்பாயாக—எ-று.

இச்செய்யுள் கூறினவுடனே மேகம் மழை பெய்யாது நின்றுவிட்டது.()

போற்றுவார்வல்வினையைப் போக்குமேபூமலர்கொண்
டேற்றுவாரைக்கையிலை யேற்றுமே—தோற்றரிய
சந்தந்தங்குஞ்செஞ்சொற் சங்கம்பொங்குஞ்செந்திற்
கந்தன்செம்பொன்றண்டைக் கால்.

இ-ள். தோற்றரிய - காண்டலருமையாகிய, சந்தம்தங்கும் - அழகுதங்கிய, செஞ்சொல் சங்கம்பொங்கும் - செஞ்சொல்லையுடைய தமிழ்ச்சங்கம் விளங்குகின்ற, செந்தில் - திருச் செந்தூரில் வாழ்கின்ற, கந்தன் - முருகவேளின், செம்பொன் தண்டை - செம்பொற்றண்டையைத் தரித்த, கால்-திருவடி, போற்றுவார் - தன்னை வணங்குவோருடைய, வல்வினையை - வலியவினைகளை, போக்கும் - நீக்கும், பூமலர்கொண்டு - அழகியமலர்களைக்கொண்டு அருச்சித்து, ஏற்றுவாரை - உயர்த்துவோரை, கயிலை ஏற்றும் - கயிலாயத்தில் ஏற்றும்—எ-று. (உகரு)

ஆறுமுகமென்றளவி லச்சந்தவிர்க்குமே
வேறுவினைவந்தால் விலக்குமே—கூறுபுகழ்

மாரியொத்தசூரபத்மன் மார்பிளக்கவேதொடுத்த
வீரசத்தியான்மிகுத்த வேல்.

இ-ள். கூறுபுகழ் - சொல்லத்தகுந்த புகழமைந்த, மாரியொத்த - மேகத்தை நிகர்த்த, சூரபத்மன் - சூரபன்மனுடைய, மார்பிளக்கதொடுத்த - நெஞ்சு பிளக்கும்படியேவின, வீரசத்தியால்மிகுத்த - வீரவாற்றலால்மிகுந்த, வேல் - வேலானது, ஆறுமுகம்என்றளவில் - ஆறுமுகமென்றுச்சரித்தளவில், அச்சம் தவிர்க்கும் - பயத்தைத்தீர்க்கும், வேறுவினைவந்தால் விலக்கும் - வேறு துன்பங்கள் வந்தால் அவை விலகச் செய்யும்—எ-று. (உகள)

வேலாவிராலிமலை வீராவுன்மீதொருபெண்
மாலாகியேநின்று வாடுகிறாள்—நீலான
உற்பலக்கயற்கணிச்சி யுத்தரித்திடச்சமர்த்தி
அற்பசிற்றிடைக்கொடிச்சி யாள்.

இ-ள். வேலா - வேலனே, விராலிமலை வீரா - விராலிமலைவீரனே, ஒருபெண் உன்மீது மால்ஆகி நின்றுவாடுகிறாள் - ஒருபெண்ணானவள் உன்மேல் மையல்கொண்டு நின்றுவாடுகிறாள், (அவள் எத்தன்மையளெனின்) நீலம் ஆன உற்பலம் - நீலநிறமாகிய குவளைமலர் போன்ற, கயல் கண்ணிச்சி - சேற்கண்ணி, உத்தரித்திட சமர்த்தி - உன்னையாதரிக்கச் சமர்த்தி, அற்பம் - அற்பமாகிய, சிறு இடை - சிற்றிடையை யுடைய, கொடிச்சியாள் - குறப்பெண் எ-று.

நீலம் நீல் எனக்கடைக் குறைந்தது. (உகஅ)

கந்தனென்றும்வேல்னென்றும் கானமயில்வீரனென்றும்
செந்தனென்றுமேன்புலவீர் செப்புகின்றீர்—முந்தவிளம்
கூனற்பிறைசூட்ச் சிவனருக்குபதேசித்தருள்
ஞானக்குருவேடப் பயலை.

இ-ள். புலவீர் - புலவர்களே, முந்த - முந்தின காலத்தில், இளங்கூனல் பிறைசூடு - இளமையாகிய வளைவுள்ளபிறையையணிந்த, அச்சிவனருக்கு - அந்தச் சிவபெருமானுக்கு, உபதேசித்தருள் - உபதேசித்தருளிய, ஞானக்குரு - ஞானாசிரியனாகிய, வேடப்பயலை - வேடப்பையலை, கந்தன் என்றும் - கந்தனென்றும், வேலன் என்றும்—, கானம் மயில்வீரன் என்றும்—, செந்தன் என்றும்—, என்செப்புகின்றீர் - என்சொல்லுகிறீர்கள்—எ-று.

சேந்தன் என்பது செந்தன்எனக் குறுகிற்று, செந்நிறமுள்ளோன் என்பதுபொருள். (உகக)

பன்னிரண்டுதோளா பரங்குன்றுவெப்பொழுதும்
பன்னிரண்டுதோண்மீதி லேயிருப்பாய்—பொன்னின்

கதிர்முடியப்பாகுகுடக் கனவரையப்பாபழனிக்
கதிபதியப்பாகுமரப் பா.

இ-ள். பொன்னின் - பொன்னினாற்செய்யப்பட்ட, கதிர் - ஒளியுள்ள, முடி - மகுடத்தையணிந்த, அப்பா - எமது தந்தையே, குகுடம் - கோழியாகிய, கனவரை - பெரிய மலையையுடைய, அப்பா - அப்பனே, பழனிக்கு அதிபதி அப்பா—, குமரப்பா—, பன்னிரண்டுதோளா - பன்னிரண்டுதோள்களையுடையவனே, பரங்குன்று - திருப்பரங்குன்றத்தையுடையவனே, எப்பொழுதும் - எக்காலத்திலும், என் இரண்டுதோள்மீதிலே இருப்பாய் - எனது இரண்டுதோள்களின்மேலே யிருக்கவேண்டும்—எ-று. (உஉ0)

நோகாதோவேலாநீ நோக்குமடமானுக்காப்
போகாவனந்தேடிப் போனக்கால்—வாகாத்
தினநினைந்திட்டுனைவணங்கித் திரியுமன்பர்க்கருள்செயும்பொற்
கனகதண்டைச்சிறுசதங்கைக் கால்.

இ-ள். வேலா - வேலனே, நோக்கு - அழகுள்ள, மடமானுக்கா - இளமானுக்காக, போகாவனம் - போகக்கூடாதவனத்தில், நீ தேடிப்போனக்கால் - நீபோனால், வாகா - பாங்காக, தினம் - நாள்தோறும், உன்னைநினைந்திட்டு - உன்னைநினைந்து, வணங்கி - பணிந்து, திரியும் அன்பர்க்கு - திரியாநின்ற அன்பருக்கு, அருள்செயும் - அருள்செய்கின்ற, பொன்கனகதண்டை - அழகிய பொற்றண்டையும், சிறுசதங்கை - சிறுசதங்கையுமணிந்த, கால் - திருவடி, நோகாதோ - நோவாதோ—எ-று.

மடமான்என்றது வள்ளிநாயகியை - போகாவனம் என்றது தினைப்புனத்தை. (உஉக)

வாரீர்பழனி வடிவேலரேகடம்பைத்
தாரீரென்சிந்தையினிற் றுனுறையீர்—சேரீர்நீர்
கன்றுநஞ்சபிஞ்சுமஞ்சு கண்களுஞ்சிவந்துபொங்க
என்றனங்களுங்கசங்க வே.

இ-ள். பழனி - பழனியில்வாழ்கின்ற, வடிவேலரே - வடித்தவேற்படையையுடையவரே, நீர்வாரீர் - நீர்வரமாட்டீர், (வாரீராயினும்) கடம்பைதாரீர் - கடப்பமலர்மாலையாயினுந் தரமாட்டீர், (அன்றியும்) என்சிந்தையினில் உறையீர் - என்மனத்தில் வாழவுமாட்டீர், கன்று - கோவித்த, நஞ்சுபிஞ்சும் அஞ்சு - நஞ்சின் பிஞ்சும் அஞ்சும்படியான, கண்களும் சிவந்துபொங்க - கண்களும் சிவந்து விளங்கவும், என்தனங்களும் கசங்க - என்தனங்களும் கசங்கவும், சேரீர் - கூடவுமாட்டீர், (இது என்ன அநியாயம்)—எ-று.

இது தலைமகள் கூற்று. (உஉஉ)

அம்பிறைக்குமைந்துமல ரம்பிறைக்குநொந்துமிக
அம்பிறைக்குங்கண்ணாட் கருள்புரிவாய்—நம்புதணி
கைக்கிரிக்குளுற்றசித்ர கச்சுடைத்தனக்குறத்தி
யைக்களித்தணைத்தவத்த னே.

இ-ள். நம்பு - நம்பின, தணிகைக்கிரிக்குள்உற்ற - தணிகைமலையிற்பொருந்திய, சித்ரம்கச்சு உடை தனம் - விசித்ரமான கச்சணிந்த தனங்களையுடைய, குறத்தியை - குறப்பெண்ணாகிய வள்ளிநாயகியை, களித்து அணைத்த - மகிழ்ந்தணைத்த, அத்தனே - முருகக்கடவுளே, அம்பிறைக்கும் - அழகிய சந்திரனுக்கும், ஐந்துமலர் அம்பு இறைக்கும் - ஐந்தாகிய புஷ்பபாணங்களை யுடைய மன்மதனுக்கும், மிகநொந்து - மிகவும்நொந்து, அம்பு இறைக்கும்கண்ணாட்கு - நீரைச் சிந்துகிற கண்களையுடையவளாகிய இந்தப்பெண்ணுக்கு, அருள்புரிவாய் - அருள்செய்யல்வேண்டும்—எ-று.

இது தாய்க்கூற்று. (உஉங)

வட்டமதியைக்குயிலை மாரவேளைப்பனச
பட்டனைநானோவப் பயனுண்டோ—கெட்டவிழிக்
காகத்தைக்கண்ணுதலைக் கண்ணுதலுக்காரமாம்
நாகத்தைநோவதல்லா னன்.

இ-ள். நான் - யான், கெட்டவிழி காகத்தை - கண் கெட்ட காகத்தையும், கண்ணுதலை - பரமசிவனையும், கண்ணுதலுக்கு ஆரம்ஆம் நாகத்தை - அந்தப் பரமசிவனுக்கு ஆரமாகிய பாம்பையும், நோவது அல்லால் - நொந்துகொள்வதல்லாமல், வட்டமதியை - வட்டவுருவமாகிய சந்திரனையும், குயிலை-குயிலையும், மாரவேளை - மன் மதனையும், பனச பட்டனை - பனச பட்டனையும், நோவ - நொந்துகொண்டால், பயன் உண்டோ - பயனுளதோ—எ-று.

குயிலை வளர்த்துவிட்டதனால் காகத்தையும், எரித்துவிட்ட மன்மதனுக்கு மறுபடி உயிர்கொடுத்ததனால் கண்ணுதலையும், சந்திரனை விழுங்கி மறுபடி உமிழ்ந்துவிட்டதனால் நாகத்தையும் நோவவேண்டும் என்பதாம். நாகம் என்றது இவ்விடத்தில் ராகுகேதுக்களை. பனசபட்டன் - ஒருசீமான், இது தலைவிகூற்று. (உஉச)

வல்லைப்பொருமுலையாய் வார்த்தைமுனிந்தன்பருடன்
சொல்லப்பிரியத் துணியாதே—செல்லப்பன்
கச்சியெல்லாங்காவந்தக் காவெல்லாமாமாவின்
உச்சியெல்லாங் காமாயுதம்.

இ-ள். வல்லபொரு முலையாய் - சொக்கட்டான்போன்ற தனத்தையுடையவளே, செல்லப்பன் - செல்லப்பன் என்னுஞ் சீமானது, கச்சியெல்

லாம் - கச்சிநகர் முழுதும், கா - சோலைகளே, அந்தக்கா எல்லாம் - அந்தச் சோலைகள் முழுதும், மா - மாமரங்களே, மாவின் உச்சி எல்லாம் - மாமரங்களின் தலைகள் முழுதும், காமாயுதம் - மன்மதபாணங்களே, (இப்படியிருத்தலால்) வார்த்தை முனிந்து - என்சொல்லை மறுத்து, அன்பருடன்சொல்ல - அன்பரோடு சொல்லும்பொருட்டு, பிரியத்துணியாதே - என்னைவிட்டுப்பிரியத்துணியாதே—எ-று.

செல்லப்பன் - ஒருசீமான். இது தலைவி கூற்று. வல்லைப்பொரு முலையாய் என்றழைத்தது தோழியை. (உஉரு)

இரும்புழுதபுண்ணுக் கிடுமருந்தைக்கொன்றால்
திரும்பவருந்தீராப் பழிதான்—வரும்பழியைத்
தீரவருள்செய்கின்ற செல்வனருணாசலனைச்
சேரமனம்வைக்கநீ செப்பு.

இ-ள். இரும்பு உழுத புண்ணுக்கு - இரும்புபட்ட புண்ணுக்கு, இடுமருந்தை - போடுகிறமருந்தை, கொன்றால் - கொன்றுவிட்டால், திரும்ப-(இப்போதுள்ள பழியன்றி) மேலும், தீராபழிவரும் - தீராப்பழியுண்டாகும், வரும்பழியை - உண்டாகும்பழியை, தீர - நீக்க, அருள்செய்கின்ற - கிருபைசெய்கின்ற, செல்வன் - சீமானாகிய, அருணாசலனை - அருணாசலனை, (கண்டு)சேர் - என்னைச் சேர்வதற்கு, மனம்வைக்க - மனம்வைக்கும்படி, நீசெப்பு - நீ சொல்லுவாயாக—எ-று.

நீயென்றது தோழியை, இதுதலைமகள் கூற்று; வெறிவிலக்கு. இரும்புழுத்புண் - எட்டிலெழுதின எழுத்து. இதற்கிடும்மருந்து - மை. (மைக்காப்புச்செய்தல்) மையென்பது ஆடு. ஆட்டைக்கொல்வதனாற் பெரும்பழி நேருமென்று தலைவிகூறியது. (உஉசு)

## வெறிவிலக்கு.

கூப்பிட்டான்றன்மகனைக் கொன்றானைத்தாங்கிமலைக்
காப்பிட்டாற்போகுங்காண் கன்னிக்கு—வாய்ப்பட்ட
மஞ்சிட்டசோலை மருதீசர்நன்னாட்டிற்
பிஞ்சிட்டாற்போகாதிப் பேய்.

இ-ள். கன்னிக்கு - இந்தப்பெண்ணுக்கு நேரிட்ட, இப்பேய் - இந்தப்பேயானது, வாய்பட்ட - இடம்பொருந்திய, மஞ்சு இட்ட சோலை - மேகம் தவழ்கின்ற சோலைகள் சூழ்ந்த, மருதீசர் நல்நாட்டு - மருதீசரது நல்லநாட்டின்கண், இல்பிஞ்சு இட்டால் - இல்பிஞ்சை யிட்டால், போகாது - விட்டுநீங்காது, கூப்பிட்டான் தன்மகனை - கூப்பிட்டவனது மகனை, கொன்றானை - கொன்றவனை, தாங்கி - தாங்குவோனது, மலைக்காப்பு இட்டால்போகும் - மலைக்காப்புச்செய்தால் போகும்—எ-று.

கூப்பிட்டான் - பூமியைப்பிளந்தவனாகிய திருமால், மகனை - அவன்மகனாகிய மன்மதனை, கொன்றானை - கொன்றவனாகிய பரமசிவனை, தாங்கி-சுமப்பதாகிய இடபம், (அதனது) மலம் - சாணம் (விபூதி) காப்பு - பூச்சு (பூசுதல்), இல் - வீடு, (இராசி) பிஞ்சு - முதல், இல்பிஞ்சு - இராசிகளில் முதலாகிய மேஷம். (ஆடு), இவளைப்பற்றின காமப்பேய் ஆட்டைக்கொன்றால் நீங்காது, பரமசிவனது விபூதியைக்கொண்டுவந்து பூசினால் நீங்கும் என்பதாம். செவிலி வெறிவிலக்கல் (உஉஎ)

## ...தையூர் பொன்னுசாமிமுதலியார்குமாரர் முத்துமுதலியார்பேரில் சுந்தரகவிராயர் பாடியது.

முத்துகடலிற்பூத்த முத்தையெட்டுமாக்களுந்தம்
நத்துமணிக்கிச்சைகொண்டு நண்ணுவார்—அத்தமரைப்
பேராசைச்சாமிமால் பெட்பகஞ்சேர்நின்பெருமைக்
காராசைகொள்ளா ரறை.

இ-ள். முத்து கடலில்பூத்தமுத்தை - பாற்கடலில் உண்டாகியமுத்தை, எட்டுமாக்களும் - அஷ்டலக்ஷ்மிகளும், தம் நத்துமணிக்கு இச்சைகொண்டு நண்ணுவார் - தமது நத்துஎன்னும் மூக்கணிக்காக விரும்புவார்கள், அத்தமர் - அத்தினமாகிய முத்துஎன்கிற, ஐபேர் - அழகியபேரைக்கொண்டு, ஆசைச்சாமிமால் - பொன்னுசாமியென்னும்பெரியோனது, பெட்பு அகம்சேர் - பெருமைவாய்ந்த வீட்டையடைந்த, நின்பெருமைக்கு - உன் பெருமைக்கு, ஆசைகொள்ளார் ஆர்-இச்சைகொள்ளாதவர் யாவர், அறை-நீயேசொல்-எ-று.

மா-லக்ஷ்மி, ஆசை - பொன். (உஉஅ)

## சுந்தரகவிராயர் தம்வறுமையைச் சொல்லியது.

அன்னமுணற்கரிதா மாறுமூன்றும்மரிதாம்
பன்னமரிதாம் பகலின்கண்—துன்னிசியில்
நேயமரிதாகு நித்திரைக்குப்பாயரிதாம்
காயக்கரிதாங் கலை.

இ-ள். பகலின்கண் - பகற்காலத்தில், உண்ணற்கு - உண்ணுதற்கு, அன்னம் அரிதுஆம் - அன்னம் அரிதாகும், ஆறும் - அறுசுவைக் கறிகளும், மூன்றும் - நெய் தயிர் பால் இம்மூன்றும், அரிதுஆம் - அரிதாகும், பன்னம்அரிது ஆம் - இலை (வெற்றிலை) அரிதாகும், துன்நிசியில் - இருளடர்ந்தஇராக்காலத்தில், நேயம் அரிது ஆகும் - மனைவி அருமையாகும், நித்திரைக்குபாய் அரிது ஆம் - நித்திரைசெய்வதற்குப் பாய் அரிதாகும், காயக்குகலைஅரிது ஆம் - உடம்பு மூடுதற்கு ஆடை அரிதாகும்—எ-று.

காயத்துக்கு என்பது காயக்கு என அத்துச்சாரியை பெறுதுவந்தது, மூன்று என்பது-புஷ்பம் சந்தனம் தாம்பூலம் எனினும் பொருந்தும். (உஉகூ)

## முத்துக்கறுப்பன் என்னும் பிரபுவின் கொடைச்சிறப்புக்கூறியது.

காணியொருமாசோமன் காலிலரையாங்குமுணன்
மாணிரவிசேயைந்து மாவிருகால்—வேணிமால்
முக்காற்பலியா முழுக்கொடைமுத்துக்கறுப்பன்
இக்காலத்தீவோர்க் கிறை.

இ-ள். சோமன் - சோமன், காணி ஒருமா - வீசம் கொடையாளியாவான், குமுணன் - குமுணன், காலில் அரைஆம் - அரைக்கால் கொடையாளியாவான், மாண இரவிசேய் - மாட்சிமைப்பட்ட சூரியகுமாரனாகிய கர்ணன், ஐந்துமா - கால்கொடையாளியாவான், வேணிமால்-ஆகாயத்திலுள்ளமேகம், இருகால் - அரைக் கொடையாளியாகும், பலி - மகாபலியானவன், முக்கால் - முக்கால் கொடையாளி ஆவான், (அவர்கள்போலாகாமல்) முழுக்கொடை - முழுக்கொடையையுடைய, முத்துக்கறுப்பன் - முத்துக்கறுப்பனென்னுஞ் சீமான், இக்காலத்து ஈவோர்க்கு - இக்காலத்துக் கொடையாளிகளுக்கு, இறைஆம் - தலைவனாவான்—எ-று.

பலியாம் என்பதிலுள்ள ஆம் என்பது சோமன்முதலிய எல்லாவற்றோடுங் கூட்டப்பட்டது. சோமன்முதல் பலியிறுதியாயுள்ளோர் முக்காலத்துக் கொடையாளிகள். சோமன் - ஓர் ஈகையாளன் சந்திரன் எனினும் அமையும்.

தேன்பாயுஞ்சோலைத் திருவிரிஞ்சைமார்க்கேசா
நான்பாவிவந்துஉன்னை நாடினல்—என்பாவி
என்றுபேசாம லிருந்தாய்தலைவளைத்து
இன்றுதுணையாருமிலை யே.

இ-ள். தேன்பாயும் - தேன்பெருகிப் பாய்கின்ற, சோலை - பூஞ்சோலைகள் சூழ்ந்த, திருவிரிஞ்சை - திருவிரிஞ்சையி லெழுந்தருளிய, மார்க்கேசா-மார்க்கேசனே, பாவிநான்வந்து உன்னைநாடினல் - பாவியாகிய நான்வந்து உன்னைநாடினல், என்பாவி என்றுபேசாமல் - ஏன்பாவியென்று வாய்பேசாமல், தலைவளைத்து இருந்தாய் - தலைவளைத்து மௌனமா யிருந்துவிட்டாய், இன்றுதுணை - இன்று எனக்குத் துணையாவார், யாரும் இல்லையே - ஒருவருமில்லையே, (என்செய்வேன்) —எ-று. (உஉக)

இலையேதுணையெனக் கீசாமார்க்கேசா
தலையேவளைக்கத் தகுமோ—அலையுமென்மேல்

என்றோதானேயென் றிருப்பதழகோநீ
தானேவழித்துணைநாதன்.

இ-ள். எனக்குத்துணை இல்லையே - எனக்குத் துணையாவார் ஒருவருமில்லையே, ஈசா - ஈசனே, மார்க்கேசா - மார்க்கேசனே, தலைவளைக்கத்தகுமோ - தலையைவளைத்துக் கொள்ளத்தகுமா, அலையும் என்மேல் - அலையாநின்ற என்மீது, என்றோதானே என்று இருப்பது—, அழகோ - அழகாமோ, வழித்துணைநாதன் நீதானே - மார்க்கசகாயதேவன் நீதானே—எ-று. (௨௩௨)

பத்துக்கான்மூன்றுதலை பார்க்குங்கண்ணாறுமுகம்
இத்தரையிலாறுவா யீரிரண்டாம்—இத்தனையும்
ஓரிடத்திற்கண்டே னுகந்தேன்களிகூர்ந்தேன்
பாரிடத்திற்கண்டே பகர்.

இ-ள். இத்தரையில் - இவ்வுலகத்தில், பத்துக்கால், மூன்றுதலை, பார்க்கும் கண்ஆறு, முகம் ஆறு, வாய் ஈரிரண்டுஆம் இத்தனையும் - பத்துக்கால்களும் மூன்றுதலைகளும் பார்க்கின்றகண்கள் ஆறும், முகம் ஆறும், வாய்நான்கும் ஆகிய இத்தனையும், ஓர் இடத்தில் கண்டேன் - ஓரிடத்திலேயேபார்த்தேன், உகந்தேன் - மகிழ்ந்தேன், களிகூர்ந்தேன் - களிப்பு மிகுந்தேன், பார் இடத்தில் - இவ்வுலகத்தில், கண்டு - (இந்த அதிசயத்தை) பார்த்து, பகர் - சொல்லு—எ-று.

(கொறுக்கலப்பை - பத்துக்கால், இரண்டுமாட்டின்கால்எட்டும், உழுவோன்கால் இரண்டும்) (மூன்றுதலை - இரண்டு மாட்டுத்தலை இரண்டும் மனிதன்தலை ஒன்றும்) (ஆறுகண் - இரண்டுமாட்டின்கண் நான்கும் மனிதன்கண் இரண்டும்) (முகம்ஆறு - இரண்டு மாட்டுமுகம் இரண்டும் மனிதன்முகம் ஒன்றும் கொழுமுகம் மூன்றும்) வாய்நான்கு - இரண்டுமாட்டுவாய் இரண்டும் உழுவோன்வாய் ஒன்றும் நாழிவாய் ஒன்றும்) (௨௩௩)

## நிந்தாஸ்துதி.

ஆற்றணியாராடுசடை யாரூர்சேஷூர்திகொடி
நீறணிவிரிஞ்சைபுரி நித்தரைக்—கூறுவது
பித்தனென்விந்திரன் பெண்டைத்தலைசுமந்து
அத்திமைமார்வைத்தவத னால்.

இ-ள். ஆறுஅணியார் - கங்கையாகிய அணியை யுடையவர், ஆடுசடையார் - அலைகின்ற சடையையுடையவர், சேஊர்திகொடி - இடபத்தை வாகனமாகவும் கொடியாகவு முடையவர், (இத்தன்மைவாய்ந்த) நீறுஅணிவிரிஞ்சைபுரிநித்தரை - விபூதியையணிந்த விரிஞ்சையி லெழுந்தருளிய சாசுவதராகிய சிவபெருமானை, (இவ்வுலகத்தார்) பித்தன் எனக்கூறுவது - பித்தன்

என்று சொல்லுவது எதனாலெனின், இந்திரன் தன்பெண்டைத் தலை சுமந்து - இந்திரன் மனையாளைத் தலையால் சுமந்து, அத்தியைமார் வைத்த அதனால் - தமது அத்தபாகத்திற் குரியவளாகிய உமாதேவியை மார்பிலே வைத்ததனால் தான்—எ-று.

இந்திரன்பெண்டு-சசி, (சந்திரன்), அத்தி-எலும்புமாலை. (௨௯௪)

ஆறுதலைசிவனுக் கைந்துமுகந்தோன்முகற்குக்
கூறுங்கையைந்து குரவனுக்கு—வீறுதோள்
எட்டாஞ்சேடற்கிரட்டி யாயிரநாவிந்திரற்குக்
கட்டாயிரங்கண்கு கற்கு.

இ-ள். குகற்கு ஆறுதலை-முருகனுக்கு ஆறுதலை, சிவனுக்கு ஐந்துமுகம்—தோல்முகற்குக் கூறுங்கை ஐந்து—, யானைமுகத்தானாகிய விநாயகனுக்குச் சொல்லப்பட்ட கை ஐந்து, குரவனுக்கு - (குகன் ஐங்கரன் என்னும் இருவருக்கும்) தந்தையாகிய பரமசிவனுக்கு, வீறுதோள் எட்டு ஆம் - மேன்மையாகிய தோள்கள் எட்டாகும், சேடற்கு - ஆதிசேடனுக்கு, இரட்டி ஆயிரம்நா—இரண்டாயிரம் நாக்கள், இந்திரற்கு - இந்திரனுக்கு, கட்டு ஆயிரம் கண்-தொகுதியாகிய ஆயிரங்கண்கள்—எ-று.

இது பூட்டுவிற்பொருள்கோள். (௨௯௫)

எல்லார்க்கும் போதுப்போருள்கள் இவை யெனல்.

ஆறுகுளந்தோப்பு மணிநியமஞ்சத்திரமும்
கூறுவழித்தாறுநிழல் கோட்டமுடன்—மாறுமன
வேசிசபைநீர்ப்பந்தல் வேந்தன்மடமயிலே
காசினிக்குள்ளேபொதுவாங் காண்.

இ-ள். மயிலே - மயில்போல்வாளே, ஆறுகுளம் தோப்பும்—, அணி நியமம் சத்திரமும் - அலங்காரமும் தெருவும்சத்திரமும், கூறுவழித்தாறு - சொல்லப்பட்ட வழிமேலுள்ள தாறும், நிழல் - மாநிழலும், கோட்டமுடன் - கோயிலோடு, மாறும் மனம்வேசி - மாறுபாடுள்ள மனத்தையுடைய வேசியும், சபை—, நீர்ப்பந்தல்—, வேந்தன் - அரசனும், மடம்—, (இவையாவும்) காசினிக்குள்ளே - உலகத்திலே, பொது ஆம் (எல்லார்க்கும்) - பொதுப் பொருள்களாம்—எ-று.

இச்செய்யுள் மகடூஉ முன்னிலையாய்க் கூறப்பட்டது. (௨௯௬)

ஐந்துசிரமுள்ள வண்ணன்மேலேயெதிர்த்த
ஐந்துசரங்கொ ளநங்கனால்—ஐந்தான
பூதங்கடாமொடுங்கிப் பொன்றிடுவளாதலினால்
மாதங்கமாமயிலோய் வா.

இ-ள். ஐந்து சிரமுள்ள - ஐந்து தலைகளையுடைய, அண்ணல்மேலே எதிர்த்த - பரமசிவன்மேலே எதிர்த்துச்சென்ற, ஐந்து சரம் கொள் அநங்கனால் - பஞ்சபாணங்களைக்கொண்ட மன்மதனால், ஐந்து ஆன பூதங்கள் தாம் ஒடுங்கி - ஐந்தாகிய பூதங்க ளொடுங்கி, பொன்றிடுவள் ஆதலினால் - இவள் இறந்து படுவாளாகையால், (இவள் இறந்துபடாமற் காக்கும் பொருட்டு) மா - பெரிய, தங்கம் - தங்கநிறமான, மா - அழகிய, மயிலோய் - மயிலோனே, வா - எழுந்தருள்வாயாக—எ-று.

இது தாய்க்கூற்று. (உகஎ)

வேலாவுனக்குமிகு வீணனைஜம்பமினி
ஏலாதேயேலாதே யேலாதே—தோலாடை
கொண்டணிந்துன்றந்தை கோகனகத்தோன்சிரத்தில்
பண்டிரந்துண்டான் பலி.

இ-ள். வேலா - வேலவனே, உனக்கு - நினக்கு, மிகு-மிகுந்த, வீணனை ஜம்பம் - பயனற்ற ஆடம்பரம், இனி ஏலாது ஏலாது ஏலாது இனித் தகாது, தகாது தகாது, (ஏனெனின்) உன் தந்தை - உன்தந்தையாகிய பரமசிவன், தோல் ஆடைகொண்டு அணிந்து - தோலாடையைத் தரித்து, கோகனகத் தோன்சிரத்தில் - பிரமனதுதலையோட்டில், பண்டு - முற்காலத்தில், இரந்து உண்டான் - பிக்ஷையை யாசித்துண்டானதலால்—எ-று.

கோகனகத்தோன் - தாமரைமலரில் வாழ்பவன். (உகஅ)

நாகந்தனையுரித்து நாகந்தனைவளைத்து
நாகந்தனைத்தரித்த நாதனே—நாகங்கொள்
பத்தானைக்கொன்றானைப் பாண்டிலெனவூர்ந்த
அத்தாவடியேற் கருள்.

இ-ள். நாகம் தனை உரித்து - யானையையுரித்து, நாகம் தனைவளைத்து - (மேரு) மலையைவளைத்து, நாகம் தனைதரித்த நாதனே - பாம்பை ஆபரணமாக அணிந்த இறைவனே, நாகம்கொள் பத்தானைக் கொன்றானை - பத்துநாவையும் பத்துத்தலையையுமுடைய ராவணனைக் கொன்றவனாகிய திருமாலை, பாண்டில் என ஊர்ந்த அத்தா - வாகனமாகக் கொண்டு செலுத்தின அத்தனே, அடியேற்கு அருள் - அடியேனுக்கு அருள்புரியவேண்டும்—எ-று. ()

சோற்றுக்குந்தண்ணீர்க்குந் துக்கப்பட்டெஞ்ஞான்றும்
காற்றினைய்யானென்னைக் கண்பாராய்—ஊற்றமிகு
வெங்கராக்கொன்ற விடையூர்விரிஞ்சைவாழ்
சங்கராகங்கா தரா.

இ-ள். ஊற்றம்மிகு - வலிமிகுந்த, வெம்காரா கொன்ற - கொடியமுதலை யைக்கொன்ற, விடை ஊர் - (திருமாலாகிய) விடையைச் செலுத்தின, விரிஞ்சைவாழ் சங்கரா - திருவிரிஞ்சைச் சங்கரனே, கங்காதரா - கங்காதரனே, சோற்றுக்கும் தண்ணீர்க்கும் - சோற்றின் பொருட்டும் தண்ணீர்ப்பொருட்டும், துக்கப்பட்டு - துன்பப்பட்டு, எஞ்ஞான்றும் - எந்நாளும், காற்றின் ஒளியான் என்னை - காற்றோடுகூடிய நெருப்புப்போல மனமெரியாநின்ற அடியேனை, கண்பாராய் - கிருபைக்கண்ணால் நோக்கவேண்டும்—எ-று. (உ௪0)

கயவரெலாங்கூடியொரு காரியத்தைச்செய்தும்
பயனடைவதுண்டோவிப் பாரில்—வியலிலுறும்
சோதினிமுன்னும்பின்னுஞ் சோர்ந்துதேய்ந்தும்பயனை
யாதுமடையாவாறு போல்.

இ-ள். வியலில் உறும் - காட்டிலுண்டாகிய, சோதினி - துடைப்பமானது, முன்னும் பின்னும்-முன்பக்கமும் பின்பக்கமும், சோர்ந்துதேய்ந்தும்-மெலிந்துதேய்ந்தும், பயனை - பிரயோஜனத்தை, யாதும்-சிறிதும், அடையா ஆறுபோல் - அடையாத விதம்போல, இப்பாரில் - இவ்வுலகத்தில், கயவர் எல்லாங்கூடி - கீழ்மக்களெல்லாம் ஒன்றாகச்சேர்ந்து, ஒருகாரியத்தைச் செய்தும் - ஒருகாரியத்தைச்செய்தும், (அச்செய்கையால்) பயன் அடைவது உண்டோ - பிரயோஜனம் அடைவதுண்டோ, (இல்லை)—எ-று. (உ௪௧)

பொன்னெல்லையெல்லாம் பொதிபொதியாப்பூசுரர்க்குச்
செந்நெல்லேபோலச் சிறந்தளித்தான்—பன்னகத்தின்
சீரார்மணியைவிலை செய்யானுஞ்செய்யகளத்
தூரானுஞ்செய்கரும மொன்று.

இ-ள். பொன் எல்லையெல்லாம் - பொன்னினது கோட்டைகளையெல்லாம், பொதிபொதியா - பொதிபொதியாக, பூசுரர்க்கு - அந்தணர்க்கு, செந்நெல்லேபோல - செந்நெல்லைப்போலவே, சிறந்து அளித்தான் - மிகக் கொடுத்தான், (ஆதலால்) பன்னகத்தின் - பாம்பினிடத்துண்டாகிய, சீர் ஆர் - சிறப்புப்பொருந்திய, மணியை - மாணிக்கத்தை, விலைசெய்யானும் - மதிக்காதவனும், செய்யகளத்தூரானும் - செவ்விய களத்தூரனும், செய்கருமம் - செய்யுங்காரியம், ஒன்று - ஒன்றேயாம்—எ-று. (உ௪௨)

ஈராறுமீரரையு மில்லையென்றேனுதலினால்
ஈராறுசொல்லா திருந்தீரோ—ஈராறு
கட்டியணைத்தேநீர் காதலுடனேசேர்த்தால்
வட்டியுடன்றானே வரும்.

இ-ள். ஈராறும் - ஈரையும், இல்லையென்றேன் ஆதலினால் - பதின் மூன்று இல்லையென்றேனையால், ஈராறு சொல்லாது இருந்தீரோ - பன்னிரண்டு சொல்லாதிருந்தீரோ, ஈராறு - பன்னிரண்டை, கட்டி அணைத்து-கட்டித் தொகுத்து, நீர்காதலுடனே சேர்த்தால் - நீர் ஆசையோடு சேர்த்தால், வட்டியுடன் தானேவரும் - வட்டியோடு தானேவரும்—எ-று.

நக்ஷத்திரங்களில் பதின்மூன்றாவது அத்தம் - பொன், பன்னிரண்டாவது உத்ரம் - பதில், வருடங்களில் பன்னிரண்டாவது வெகுதானிய-மிக்க தானியம், நான் பொன்கேட்டேன் - நீர் உத்திரஞ் சொல்லாதிருந்தீர், வெகு தானியத்தைக் கட்டிச்சேர்த்தால் வட்டியோடுதானேவரும் என்பதாம். இது ஒருசெல்வனை நோக்கி ஒருபுலவன் சொல்லியது. (உசந)

சீகாழி அருணாசல கவிராயரவர்கள் பாடியது.

பத்துருபாயனைநேர் பாப்பையவேளேயுனக்குப்
பத்துரூபாயென்ன பஞ்சமோ—முத்தநகை
வீழிவாய்ப்பாலுண்ட வேந்தன்பிறந்தசீ
காழியருணாசலன்யான் காண்.

இ-ள். பத்து உரு - தசாவதாரத்தையுடைய, உபாயனை நேர் - கபடநாடக சூத்திரதாரியாகிய திருமாலை நிகர்த்த, பாப்பையவேளே - பாப்பையன் என்னும் சீமானே, உனக்கு பத்து ரூபாய் என்ன பஞ்சமோ—, முத்தநகை-முத்துப்போலும் நகையினையும், வீழிவாய் - வீழிக்கனிபோலும் வாயினையுமுடைய உமாதேவியாரது, பால் உண்டவேந்தன் பிறந்த - திருமுலைப்பாலுண்ட வேந்தனாகிய சம்பந்தசுவாமிகள் அவதரித்த, சீகாழி அருணாசலன் யான்-சீகாழி அருணாசல கவிராயன் என்று சொல்லப் படுவோன்நான்-எ-று.

தன்னைப்புகழ்வானுஞ் சாக்ஷிசொல்லிநிற்பானும்
பொன்னைமிகத்தேடிப் புதைப்பானும்—ஒன்னலர்தம்
நண்புத்திகேட்பானு நாணமில்லாதானும்
பெண்புத்திகேட்பானும் பேய்.

இ-ள். தன்னைப் புகழ்வானும் - தன்னைத்தானே புகழ்ந்து கொள்வோனும், சாக்ஷிசொல்லி நிற்பானும் - சாக்ஷிசொல்லிநிற்பவனும், பொன்னைமிகத் தேடி புதைப்பானும் - பொன்னை மிகுதியாய்த் தேடிப்புதைத்து வைப்பவனும், ஒன்னலர்தம் நண்புத்தி கேட்பானும் - பகைவரது பொருந்திய புத்தியைக் கேட்பவனும், நாணம் இல்லாதானும் - வெட்கமில்லாதவனும், பெண் புத்தி கேட்பானும் - பெண்புத்திகேட்பவனும், பேய் - பேய்களாவர்—எ-று.

பொன்றேடிமண்புதையான் போரதனிற்புதையான்
மன்றேடிவந்தவரை வாழ்விப்பான்—நன்றேடும்

எப்பாவலரு மியம்பும்புதுவையில்வாழ்
அப்பாசாமிக்குநிக ரார்.

இ-ள். பொன்தேடி மண்புதையான் - பொன்னைச் சம்பாதித்து மண்ணிற்புதைத்து வைக்கமாட்டான், போரதனில் அம்புதையான் - போர்க்களத்திற்சென்று அம்புதைக்கப் படமாட்டான், மன்தேடிவந்தவரை வாழ்விப்பான் - மிகவும் தன்னைத்தேடிவந்தவரை வாழப்பண்ணுவான், (ஆகையால்) நன் தேடும் - நன்மையையே தேடுகின்ற, எப்பாவலரும் - எந்தப் புலவரும், இயம்பும் - புகழ்ந்துரைக்கின்ற, புதுவையில் வாழ் - புதுவையில் வாழ்கின்ற, அப்பாசாமிக்குநிகர் - அப்பாசாமிக்குநிகராவார், ஆர் - யார், (ஒருவருமில்லை) எ-று. (௨௪௬)

வெற்றிலைக்குமுன்னே வெறும்பிளவைவாயிலிட
நற்றிருவாமங்கை நடப்பளே—வெற்றிலையை
முன்னிட்டுப்பின்பிளவை மெல்குவரேயாமாயின்
மன்னரைப்போலாவார் மகிழ்ந்து.

இ-ள். (யாவராயினும்) வெற்றிலைக்குமுன்னே—, வெறும்பிளவை வாயில் இட - வெறும்பாக்குப்பிளவை வாயிலிட்டால், நல் திரு ஆம் மங்கை - நன்மையைத்தருகின்ற லக்ஷ்மியானவள், நடப்பள் - (அவனைவிட்டு) நீங்குவாள், வெற்றிலையைமுன் இட்டு - வெற்றிலையை முன்னேவாயிலிட்டு, பின் - பிறகு, பிளவை மெல்குவரே ஆமாயின் - பிளவை மெல்வாரேயானால், மகிழ்ந்து - களித்து, (அவர்கள்) மன்னரைப்போல் ஆவார் - அரசரைப்போலப் பெருஞ்செல்வராவார்—எ-று. (௨௪௭)

சோமனுடாவாழ்வுஞ் சோறிடாநல்லுறவும்
நாமநீறில்லாத நன்னுதலும்—ஓம
நெருப்பில்லாவேதியரு நெய்பாலுடனே
பருப்பில்லாப்போசனமும் பாழ்.

இ-ள். சோமன் உடா வாழ்வும் - சோமனுடுக்காத வாழ்க்கையும், சோறு இடா நல் உறவும் - சோறிடாத நல்ல உறவினரும், நாமம் நீறு இல்லாத நல் நுதலும் - நாமமாயினும் விபூதியாயினும் இல்லாத நல்லநெற்றியும், ஓம நெருப்பு இல்லாவேதியரும் - ஓமத்தீயில்லாத அந்தணரும், நெய்பாலுடனே பருப்பு இல்லா போசனமும் - நெய்பாலோடு பருப்பில்லாத சோறும், பாழ் - பாழாகும்—எ-று. (௨௪௮)

கால்வீழ்ந்துநம்மைக் கவிபாடச்சொன்னாரே
மேல்வீழ்ந்துநாமே விளம்பினோம்—நூலறிந்து

தந்தக்காற்றந்தானன் றராக்கானமதுமனம்
நொந்தக்காலென்னுகு மோ.

இ-ள். கால்வீழ்ந்து - காலில் விழுந்து, நம்மைக் கவிபாடச் சொன்னுே ேனா—, மேல்வீழ்ந்து—, நாமேவிளம்பினேம் - நாமேபாடினேம், நூல் அறிந்து - தருமநூலின் நெறியை அறிந்து, தந்தக்கால் தந்தான் - தந்தால் தந்தான், தாரக்கால் - தாராவிட்டால், நமதுமனம் நொந்தக்கால் - நமதுமனம நொந்தால், என் ஆகுமோ - யாதாய் முடியுமோ—எ-று.

ஒருபுலவன் ஒருசீமான்மீது கவிபாடி, அவன் ஒன்றும் கொடாமையால் தன்னைத்தானே நொந்து கூறியது. (உசகூ)

கடம்பவனஞ்சூழ்கூடற் கன்னிமதனம்பை
அடர்ந்தவிழியங்கயற்க ணம்மை—நடந்த
நடைக்குவமையன்ன நகைக்குவமைமுல்லை
இடைக்குவமையில்லை யினி.

இ-ள். கடம்பவனம்சூழ் - கடப்பங்காடு சூழ்ந்த, கூடல்-கூடலில், வாழ்கின்ற, கன்னி - கன்னியாகிய, மதன் அம்பை அடர்ந்தவிழி அங்கயற்கண்ணம்மை - மன்மதபாணத்தைவென்றவிழியையுடையமீனுக்ஷியம்மை, நடந்த நடைக்குவமை அன்னம் - நடந்த நடைக்குச் சமானமாவது அன்னத்தின் நடையேயாம், நகைக்கு உவமைமுல்லை - பல்வரிசைக்குச் சமானமாவதுமுல்லையரும்பின் வரிசையே, இனி இடைக்கு உவமை இல்லை - இனிஇடைக்குச் சமானமாவது இல்லவேயில்லை—எ-று. (உருO)

கூப்பிட்டேன்செங்கைதனைக் கூற்றுவனைக்கண்டஞ்சிக்
கூப்பிட்டேனென்னையாட் கொண்டருள்வாய்—கூப்பிட்டே
ஏனமாச்சென்ருற் கிளையவளேயட்டியின்னம்
ஏனமாகாமாக்ஷி யே.

இ-ள். செங்கைதனை கூப்பிட்டேன் - செங்கையைக்குவித்தேன், கூற்றுவனைக்கண்டு அஞ்சி கூப்பிட்டேன் - யமனைக்கண்டுபயந்து கூப்பிட்டேன், என்னை ஆட்கொண்டு அருள்வாய் - என்னை யடிமைகொண் டருள்வாயாக, ஏனம் ஆ - வராக வுருவாக, கூ பிட்டு சென்றற்கு - பூமியைப் பிளந்துகொண்டுபோன திருமாலுக்கு, இளையவளே - தங்கையே, அம்மாகாமாக்ஷியே—, இன்னம் அட்டி என் - (என்னையாட்கொள்வதற்கு) இன்னம்தடையாதுக்கு எ-று. (உருக)

வானவருமிந்திரரு மால்பிரமருஞ்செத்துப்
போனவிடம்புன்முளைத்துப் போகாதோ—ஞானமருள்

அத்தரருணேச ரன்பாகநஞ்சதனைப்
புத்தியுடன்கொள்ளாத போது.

இ-ள். ஞானம் அருள் - ஞானத்தை அருள்செய்கிற, அத்தர் - எமது தந்தையாராகிய, அருணேசர்-அருணசலேசர், அன்பாக - (தேவர்முதலியோரிடத்துள்ள கிருபையினல், நஞ்சதனை - ஆலாகலவிஷத்தை, புத்தியுடன்-ஊகத்தோடு, கொள்ளாதபோது - உட்கொள்ளாத பக்ஷத்தில், வானவரும்-தேவர்களும், இந்திரரும் - இந்திரர்களும், மால் பிரமரும் - திருமால் பிரமர்களும், செத்து - மாண்டு, போன இடம் - போன இடமும், புல்முளைத்துப் போகாதோ—எ-று.

பாற்கடலிற்பிறந்த நஞ்சைப் பரமசிவன் உண்ணுவிட்டால் தேவர்முதலியயாவரும் இறந்தொழிந்திருப்பார்கள் என்பதாம். (உ௫உ)

செங்கமலப்போதலர்ந்த செவ்விபோலும்வதனம்
தங்குமொழிசந்தன சீதம்போலும்—பொங்கிதயம்
கத்தரிகைபோலுமாங் காரிகையேவஞ்சமனக்
குத்திரர்பான்மூன்று குணம்.

இ-ள். காரிகையே - மாதே, வஞ்ச மனம் - வஞ்சகமான மனத்தினையுடைய, குத்திரர்பால் - துஷ்டரிடத்தில், மூன்றுகுணம் - மூன்றுகுணங்களுண்டு, (அவை எவையெனின்) வதனம் - (அவர்கள்) முகம், செங்கமலப்போது அலர்ந்த செவ்விபோலும் - செந்தாமரை மலர்மலர்ந்த அழகுபோலும், தங்கும்மொழி - அவர்களிடத்துள்ளவார்த்தை, சந்தனசீதம்போலும் - சந்தனத்தின் குளிர்ச்சிபோலும், பொங்குஇதயம் - கொதிக்கின்ற இருதயம், கத்தரிகைபோலும் - கத்தரிகைபோலும், ஆம் - ஆகும்—எ-று. (உ௫௩)

அனங்கனம்பாலந்தநடை யங்குழல்சொற்றையல்
அனங்கனம்பான்மெய்சோர்ந் தயர்ந்து—மனங்கலங்கி
வாடியென்றாள்பற்றியெழின் மாயவனைப்போயழைத்து
வாடியென்றாள்சேர்ந்தணைய வா.

இ-ள். அந்தம் நடை - அழகாகியநடை, அனம் - அன்னநடையைநிகர்க்கும், அம்குழல் - அழகியகூந்தல், கனம்-மேகத்தைநிகர்க்கும், சொல்-சொல், பால் - பாலின்சுவையை நிகர்க்கும், (இத்தன்மையையுடைய) தையல் - எங்கள்பெண்ணனவள், அனங்கன் அம்பால் - மன்மத பாணத்தால், மெய்சோர்ந்து - உடல்வாடி, அயர்ந்து - உடல்மறந்து, மனம் கலங்கி வாடி - மனமும் கலங்கி வாட்டமடைந்து, என் தாள் பற்றி - என்காலைப் பிடித்துக்கொண்டு, எழில்மாயவனை - அழகிய மாயோனை, போய் அழைத்து வாடி என்றாள்-

போய் அழைத்துவாடி என்றுசொன்னாள், (ஆதலால்) சேர்ந்து அணையவா- அவளைக்கூடித் தழுவவா—எ-று.

இது தோழி தலைமகனோடு சொல்லியது. (௨௫௪)

வாமாதூபோகே மனமேது துதுதுது
ஆமாபசுமாதை யத்தனார்—தாமாய்
நடித்தவர்பாகர் நடந்தவர்வேணி
முடித்தவர்கங்கணர்கேண் மோ.

இ-ள். மாபசுமாதை அத்தனார் - பெருமையமைந்த பசுமாதையிலெழுந்தருளிய இறைவர், வாதுநடித்தவர் - காளியோடு வாதுசெய்து நடித்தவர், மாதுபாகர் - உமாதேவிபங்கர், தூதுநடந்தவர் - (சுந்தரர்பொருட்டு) தூதுநடந்தவர், போதுவேணி முடித்தவர் - கொன்றைமலரைச் சடையில்முடித்தவர், கேது கங்கணர் - சர்ப்பகங்கணதீதையுடையவர்—எ-று. (௨௫௫)

கங்கொன்னுசோதுமறு கைறைகம்மன்பைகு
துங்கச்சடைமேற் றுலங்கவைத்தார்—மங்கையிடம்
பாகத்தர்மாதைப் பதியர்பசுபதிப்பேர்
ஆகத்தர்வைக்கு மவை.

இ-ள். மங்கை இடப்பாகத்தர் - உமாதேவியை இடப்பாகத்திலுடையவர், மாதைப்பதியர் - மாதைப்பதியையுடையவர், பசுபதிபேர் ஆகு அத்தர்- பசுபதியென்னும் பெயரையுடைய அத்தர், (அவர்) வைக்குமவை-தரிப்பவை யாவையெனின், "கங்கொன்னுசோதுமறு கைறைகம்மன்பைகு" இவைகளை துங்கம் - உயர்வாகிய சடைமேல் - சடையின்மீது, துலங்கவைத்தார் - விளங்கத் தரித்துக்கொண்டார்—எ-று.

கங் கொன் நா சோ தும் அறு என்பவற்றோடு முறையே க் றை கம் மன் பை கு என்பவற்றைச்சேர்த்து கங்கை, கொன்றை, நாகம், சோமன், தும்பை, அறுகு என்றுதல் காண்க. (௨௫௬)

வெண்ணெயுற்றுநெய்தேட வேண்டுமோதீபமுற்றும்
நண்ணுகனற்றேட னன்றுமோ—எண்மனத்தை
நாடிச்சிவனிருக்க நாடாமலூர்தோறும்
தேடித்திரிவதென்ன செப்பு.

இ-ள். வெண்ணெய் உற்றும் - வெண்ணெயைப் பெற்றிருந்தும், நெய் தேடவேண்டுமோ - நெய் வேறாயிருப்பதாக நினைத்து அதைத்தேடவேண்டுமோ, தீபம் உற்றும் - தீபத்தைப் பெற்றிருந்தும், நண்ணுகனல் தே

டல் நன்று ஆமோ - அதிற் பொருந்தி யிருக்கிற செருப்பு வேறுயிருப்பதாக நினைத்துஅதைத்தேடுதல் நன்மையாகுமோ, ஆகாது (அதுபோல), சிவன்-சிவபெருமான், என்மனத்தை நாடி இருக்க - தன்னை நினைக்கின்ற மனத்தையேநாடி வீற்றிருக்க, நாடாமல் - அவனை யாராய்ந்தறிந்து கொள்ளாமல், ஊர்தோறும் தேடித்திரிவது - ஊர்கள் தோறும் தேடித்திரிவதற்குக் காரணம், என்ன - யாது, செப்பு - சொல்லு—எ-று.

கடவுள் எல்லாருடைய மனத்திலும் வீற்றிருக்கும்போது, அவர்வேறெங்கேயோ இருக்கிறதாயெண்ணி ஊர்தோறும் சென்றுழல்வது அறியாமையென்பதாம். (உ௫எ)

நல்லவர்கள்வாயா னவிலுமொழிபொய்யாமல்
இல்லையெனுதுள்ளமட்டு மீவார்கள்—நல்லகுணம்
அல்லவர்கள்போவாவென் றுசைசொல்லிநாட்கழித்தே
இல்லையென்பாரிப்பாரி லே.

இ-ள். இ பாரிலே - இவ்வுலகத்தில், நல்லவர்கள் - நல்லவர்கள், வாயால் நவிலும்மொழி பொய்யாமல் - தம்வாயால் சொன்னசொல் பொய்த்துப் போகாமலும், இல்லை யென்னுது - இல்லையென்று சொல்லாமலும், உள்ளமட்டும் ஈவார்கள் - உள்ளமட்டில் இரப்பவர்க்குக் கொடுப்பார்கள், நல்லகுணம் அல்லவர்கள் - நல்லகுண மில்லாதவர்கள், போவாஎன்று ஆசைசொல்லி-போவாவென்று ஆசைவார்த்தைகளைச் சொல்லி, நாள்கழித்து - நாள்களைப் போக்கி, (முடிவில்) இல்லை என்பார் - இல்லை யென்று சொல்வார்கள்—எ-று. ()

ஞானம்பெருமை நயங்கருணையுண்மையபி
மானம்பொறுமை வணக்கமுயர்—தானமுடன்
சற்குணமாசாரந் தகுகல்விநீதிநெறி
துர்க்குணருக்கில்லென்றே சொல்.

இ-ள். ஞானம், பெருமை, நயம், கருணை, உண்மை, அபிமானம், பொறுமை, வணக்கம், உயர்தானமுடன், சற்குணம், ஆசாரம், தகுகல்வி, நீதிநெறி, (இவையாவும்) துர்க்குணருக்கு - துர்க்குண முள்ளவர்க்கு, இல்என்றுசொல் - இல்லை யென்று சொல்—எ-று.

நயம் - நன்மை, அபிமானம் - பக்ஷம், தானம் - ஈகை, ஆசாரம் - ஒழுக்கம். (உ௫க)

ஞானம்பெருமை நயங்கருணையுண்மையபி
மானம்பொறுமை வணக்கமுயர்—தானமுடன்

சற்குணமாசாரந் தருகல்விநீதிநெறி
சற்குணருக்குண்டென்றே சாற்று.

இ-ள். ஞானம்—நீதிநெறி - ஞானம் முதல் நீதிநெறி யிறுதியாகச்சொல்லப்பட்ட இவையாவும், சற்குணருக்கு உண்டு என்று சாற்று - சற்குணருக்கு உண்டென்று சொல்லு—எ-று. (உசுO)

நினைத்தவதுவொழிந்து நேரிடும்வேறொன்று
மனித்தகருமங்கள் வாயா—கனத்த
அயனமரராலு மரியாலுந்தெய்வச்
செயலினைக்காணப்படா தே.

இ-ள். நினைத்த - நம்மால் நினைக்கப்பட்ட, அதுஒழிந்து - அந்தக்காரியம் ஒழிந்து, வேறொன்றுநேரிடும் - வேறொருகாரியம் பலிக்கும், மனித்தகருமங்கள் வாயா - மனிதர்செய்யுங்காரியங்கள் பலிக்கமாட்டா, கனத்த - கனம்பொருந்திய, அயன் அமரராலும் - பிரமன் தேவர்கள் ஆகிய இவர்களாலும், அரியாலும் - திருமாலினாலும், தெய்வச்செயலினை காணப்படாது - தெய்வச் செயலைக் காணவொண்ணாது—எ-று. (உசுக)

உன்னைப்பணிந்தே னுனக்கடிமையாயினேன்
என்னைக்கருணைபுரிந் தீடேற்றாய்—கன்னியுமை
வாமாபசுமாதை வாசாவலர்ந்தகொன்றைத்
தாமா!பசுபதி நாதா.

இ-ள். கன்னி உமைவாமா - உமையவளை இடப்பாகத்திலுடையவனே, பசுமாதை வாசா - பசுமாத்தூரில் வாழ்பவனே, அலர்ந்த கொன்றைத்தாமா- அலர்ந்த கொன்றைமலர்மாலையை யுடையவனே, பசுபதிநாதா - பசுபதிநாதனே, உன்னைப் பணிந்தேன் - உன்னை வணங்கினேன், உனக்கு அடிமை ஆயினேன் - உனக்கு அடிமையானேன், கருணைபுரிந்து - கிருபைசெய்து, என்னை ஈடேற்றாய் - என்னையீடேற்ற வேண்டும்—எ-று. (உசுஉ)

குவளைத்தார்த்தேவர்கடங் கோவேதணிகைக்
கவளக்கரிக்கிளைய கந்தா—தவளச்
சலசத்தாள்கோவைத் தளைபூட்டியாக்கை
அலையச்செய்தாய்நன்மை யா.

இ-ள். குவளைத்தார் - குவளைமலர்மாலையை யணிந்த, தேவர்கள்தங்கோவே - தேவர்களுக்கிறைவனே, தணிகை - திருத்தணிகையில் வாழ்கின்ற,கவளம் கவளங்கொள்ளுகின்ற, கரிக்கு - யானைக்கு, இளைய - இளையவனாகிய, கந்தா - கந்தனே, தவளம் சலசத்தாள்கோவை - வெண்டாமரைப் பூவில் வா

ழ்கின்றவளாகிய சரசுவதிநாயகனாகிய பிரமனை, தலைகூட்டி - தலையிட்டு, யாக்கை - அவனுடம்பை, அலையச்செய்தாய் - வருந்தப்பண்ணினாய், நன்மையா (இது உனக்கு) நன்மையாகுமா—எ-று.

கவளம்—யானைக்கூட்டும் அரிசித்திரளை. (உசுரு)

பிஞ்சகதிங்கள் பிறங்கவரும்புனல்
அஞ்சவிகொன்றை யமர்ந்திட—வுஞ்சுத
பஞ்செய்தனவோ பசுபதிநாயக
விஞ்சியசெஞ்சடை மேல்.

இ-ள். பிஞ்சக - பிஞ்ஞகனே, பசுபதிநாயக - பசுபதிநாதனே, விஞ்சிய செஞ்சடைமேல் - (உனது) மேலாகிய செஞ்சடையின்மீது, திங்கள் - சந்திரனும், பிறங்கவரும்புனல் - விளங்கவரும் கங்கையும், அம்சவிகொன்றை-அழகிய ஒளியுள்ள கொன்றைமலரும், அமர்ந்திடவும்-அமர்ந்திருக்கவும், சு-நன்மையமாகிய, தபம்செய்தனவோ - தவஞ் செய்திருந்தனவோ—எ-று.

பிஞ்ஞகன் - தலைக்கோலத்தை யுடையவன். (உசுசு)

தென்னாலங்காட்டத்தா சேயிழைமேனாட்டத்தா
நன்ஞாயிறுதிங்க ணாட்டத்தா—வன்னிகையா
காலகாலாநாக கங்கணகண்டத்தில்
ஆலகாலாசங்க ரா.

இ-ள். தென்ஆலங்காடு அத்தா - தென்னாலங்காட்டில் வாழ்கின்ற அத்தனே, சேயிழை - உமாதேவியை, மேல்நாட்டு - உடம்பினிடத்து நிலைபெறுவித்த, அத்தா - அர்த்தபாகத்தையுடையவனே, நல் நாயிறுதிங்கள் - நல்லசூரியசந்திரர்களாகிய, நாட்டத்தா - திருக்கண்களையுடையவனே, வன்னிகையா - நெருப்புக்கையனே, காலகாலா - காலகாலனே, நாககங்கண - சர்ப்பகங்கணத்தையுடையவனே, கண்டத்தில் - கழுத்தில், ஆலகாலா - ஆலாகல விஷத்தையுடையவனே, சங்கரா - சங்கரனே, (என்னைக்காத்தருளல்வேண்டும் எ-று. (உசுஎ)

## கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

சாரங்கபாணி தலையிலிரந்துண்டான்
சீரங்கம்பாதி சிவனண்டான்—பாருங்கள்
பாற்கடலையாண்டான் பசுபதிநாராயணன்றான்
ஏற்கயிலையாண்டா னிவன்.

இ-ள். சாரங்கபாணி - திருமால், தலையில் இரந்துண்டான் - தலையோட்டில் இரந்துண்டவனாகிய சிவபெருமானது, சீர் அங்கம் பாதி ஆண்டான் -

சிறந்தபாதி யுடம்பையாண்டான், பசுபதி - பசுபதியாகிய, சிவன் - சிவபெருமான், எல் கயிலைஆண்டான் - தனக்குப் பொருத்தமாகிய கயிலாயத்தையாண்டான், நாராயண ன் இவன் - திருமாலாகியஇவன், பாற்கடலையாண்டான் பாருங்கள் - (இந்த அதிசயத்தைப்) பாருங்கள்—எ-று. (உசுசு)

மையிருண்டசோலை வளர்கச்சியேகம்பன்
கையிரண்டுஞ்சேர்த்துக் கலவாநாள்—ஐயிரண்டு
தேரோன்மதலைத் திருமஞ்சனமாடும்
நீரோவெழுந்த நிலா.

இ-ள். மை இருண்ட - அஞ்சனம் போலக் கறுத்த, சோலைவளர் - சோலைகள் வளராநின்ற, கச்சி - கச்சியி லெழுந்தருளிய, ஏகம்பன் - திருவேகம்பன், கையிரண்டும் சேர்த்து - கையிரண்டினாலும் அணைத்து, கலவாநாள் - என்னைக் கலவாத இந்நாளில்; எழுந்தநிலா - உதித்த நிலவானது, ஐயிரண்டு தேரோன்-தசரதனது, மதலை - குமாரனாகிய ஸ்ரீராமனது, திரு-நாயகியாகிய சீதை, திருமஞ்சனம் ஆடும் - திருமஞ்சனமாடின, நீரோ - நீராகிய அக்கினிதானோ—எ-று.

இது ஒரு தலைவி நிலவுகண்டு வருந்திச் சொல்லியது. இதற்குச் சந்திரோபாலம்பநம் என்று பெயர். (உசுஎ)

## இராமகவிராயர் உச்சிப்பிள்ளையார் தரிசநத்துக்குப் போகும்போது திருடன் இவரிடத்திலிருந்த முடிச்சை அவிழ்த்துக்கொள்ள, பிள்ளையாரை நிந்தாஸ்துதியாய்ப் பாடியது.

தம்பியோபெண்டிருடி தாயாருடன்பிறந்த
வம்பனேநெய்திருடி மாயனும்—அம்புவியில்
மூத்தபிள்ளையாரே முடிச்சவிழ்த்துக்கொண்டீர்நும்
கோத்திரத்துக்குள்ள குணம்.

இ-ள். தம்பியோபெண்திருடி - (உன்) தம்பியோ பெண்திருடுவோன், தாயாருடன் பிறந்த வம்பனே - (உன்) தாயாருடன் பிறந்த வம்பனே, நெய் திருடி மாயனும் - நெய் திருடுவோனாகிய மாயவனவன், அம்புவியில் - இவ்வுலகத்தில், மூத்தபிள்ளையாரே - விநாயகரே, முடிச்சு அவிழ்த்துக்கொண்டீர், (நீரோ) எனது முடிச்சை அவிழ்த்துக் கொண்டீர், நும்கோத்திரத்துக்கு உள்ளகுணம் - இது உமது கோத்திரத்துக்குள்ள இயற்கைக் குணமேயாகும் எ-று.

பெண் திருடினது - வள்ளிநாயகியைக் களவுசெய்தது. நெய் திருடினது திருவாய்ப் பாடியில் கிருஷ்ணாவதாரத்தில் செய்த லீலைகள். (உசுஅ)

## இராமகவிராயர் மாறைமதுக்குளுந்தான் செட்டிமேற் பாடியது.

கூறவில்லைமாதர்வசை கொள்ளவில்லைமாமரத்தில்
சீறுகுயில்கூப்பிட்டுச் செப்பவில்லை—மாறை
மதுக்குளுந்தானைப்பிரிந்தாண் மாதென்றேவேளுக்
கிதுக்குளுந்தான்சொன்னு ரெவர்.

இ-ள். மாதர் கூறவில்லை - மாதர்போய்ச்சொல்லவில்லை, வசைகொள்ளவில்லை - அலரெழவுமில்லை, மாமரத்தில் - மாமரத்தின் மேலிருந்து, சீறுகுயில் - சீறுகின்றகுயில், கூப்பிட்டு செப்பவில்லை - கூவிச் சொல்லவில்லை, (இப்படியிருக்க) மாது - நமது பெண், மாறைமதுக்குளுந்தானை பிரிந்தாள் என்று - மாறைமதுக்குளுந்தானைப் பிரிந்தாளென்று, வேளுக்கு - மன்மதனுக்கு; இதுக்குளுந்தான் சொன்னுர் எவர் - இதற்குள்ளேபோய்ச் சொன்னவர்யாவர்—எ-று.

மாறைமதுக்குளுந்தான் - ஒரு செல்வவானுகியசெட்டி. இது செவிலிகூற்று. (உசுகூ)

## இராமகவிராயர் பத்துத்தலையைச் சிவன் சுமந்தானேன்று பாடியது.

ஆழிகடைந்த வரவின்றலையைந்தும்
தாழ்வுபடாமானின் றலையொன்றும்—சூழ
இருந்தார்தலையிரண்டு மேற்றதலையொன்றும்
சுமந்தான்றலையோடும் பத்து.

இ-ள். ஆழிகடைந்த - பாற்கடலைக்கடைந்த, அரவின்தலை ஐந்தும்-(வாசுகியென்னும்) பாம்பின் தலை ஐந்தும், தாழ்வுபடா மானின் தலை ஒன்றும்-குறைவுபடாத மானின்தலை ஒன்றும், சூழ இருந்தார் தலை இரண்டும் - சூழ்ந்திருந்தவர்களாகிய உமாதேவி திருமால் என்பவரது தலை இரண்டும், எற்ற தலை ஒன்றும் - பலியேற்ற தலையொன்றும், சுமந்தான் தலையோடும் பத்து-சுமந்தவனுகிய பரமசிவன் தலையோடுங்கூடிப் பத்தாம்—எ-று. (உஎO)

## வன்சோல் விலக்கு.

மெய்யேபொருண்மேற் பிரிதியேல்வேறொரு
ஞ்தயலைநாட றகுமுனக்கு—நெய்யிலைவேல்
வள்ளல்பிரிவற்றம் பார்த்தெங்கள்வாழ்நாளைக்
கொள்ளவுழலுமாங் கூற்று.

இ-ள். நெய் - நெய் பூசப்பட்ட, இலை - அச்சவடிவையுடைய, வேல் - வேற்படையையேந்திய, வள்ளல் - வள்ளலே, பிரிவு அற்றம்பார்த்து - நீபிரியுஞ் சமயம்பார்த்து, கூற்று - யமனானவன், எங்கள் வாழ்நாளை - எங்கள் ஆயுளை, கொள்ள - அபகரிக்க, உழலுமாம் - திரிகிறானாம், (ஆதலால்) மெய்யே - உண்மையாகவே, பொருள்மேல் பிரிதியேல் - பொருளின் பொருட்டு எங்களைவிட்டுப் பிரிவையானால், வேறொரு தையலைநாடல் - வேறொருமாதைத் தேடுதல், உனக்குதகுட் - உனக்குத்தகும்—எ-று.

நீ எம்மைவிட்டுப் பிரிவையானால் யாம் இறந்துபடுவோம், நீ யெங்களை மீண்டுங் காண்பதரிது, ஆகையால் வேறொருமாதைத் தேடிக்கொள்ளுதல் உனக்குத் தகுதியாமென்பது கருத்து. இதுபொருண்மேற்பிரியுந்தலைமகனை வன்சொற்சொல்லி விலக்குதல். இது தோழிகூற்று. (௨௭௧)

## இகழ்ச்சி விலக்கு.

ஆசைபெரிதுடையே மாருயிர்மேலப்பொருண்மேல்
ஆசைசிறிது மடைகிலமால்—தேசு
வழுவாநெறியின் வருபொருண்மேலண்ணல்
எழுவாயொழிவா யினி.

இ-ள். ஆர் உயிர்மேல் - அரியவுயிரின்மீது, ஆசைபெரிது உடையேம் - பெரிதாகிய விருப்பமுடையோம், அப்பொருள்மேல் - (நீதேடப்போகிற) அந்தப் பொருளின்மீது, சிறிதும் ஆசை அடைகிலம் - சிறிதும் விருப்பமுடையோமல்லோம், (ஆதலால்) அண்ணல் - அண்ணலே, தேசுவழுவா நெறியின்வரு - புகழ்நீங்காத நன்னெறியால்வருகிற, பொருள்மேல் - பொருளின் பொருட்டு, இனி எழுவாய் ஒழிவாய் - இனிச்செல்வாய் அன்றி ஒழியக்கடவாய்—எ-று.

எம்முயிர் நீங்குதற்குக் காரணமாகிய அப்பொருளையா மிகழ்ந்தோம், இனி உமதுவிருப்பின்படியேசெய்யலாமென்பதுகருத்து. இதுதோழிகூற்று.

## துணைசெயல் விலக்கு.

விளைபொருண்மேலண்ணல் விரும்பினையேலீண்டெங்
கிளையமுங்கக்கேட்பதற்கு முன்னே—விளைதேன்
புடையூறுபூந்தார் புனைகழலாய்போக்குக்
கிடையூறுவாராம லேகு.

இ-ள். அண்ணல் - பெரியோய், விளை பொருள்மேல் - விருத்தியடைகின்ற பொருளின்மீது, விருப்பினையேல் - விருப்பத்தையுடையையாயின், விளைதேன்புடை ஊறு - விளைகின்றதேனானது பக்கத்தில் சுரந்தோடுகின்ற, பூதார் - மலர்மாலையையும், புனைகழலாய் - அலங்கரிக்கப்பட்டவீரக்கழலையும்

உடையவனே, ஈண்டு - இவ்விடத்தில், எம்கிளை அழுகை - எமதுசுற்றத்தார் அழுமோசையை, கேட்பதற்குமுன்னே - கேட்குமுன்னமே, போக்குக்கு - உன்செலவுக்கு, இடையூறுவாராமல் - தடையுண்டாகாமல், ஏகு-நீவிரைந்து செல்வாயாக—எ-று.

நீ பிரிந்தவுடனே யாம் இறப்போம், அதைக்கண்டு எமது சுற்றத்தார் அழுவார்கள், அந்த அழுகுரலோசை உன்செவியிற் புகுவதற்குமுன்பே நீ விரைந்து செல்வாயாக வென்பதாம். இது தோழிகூற்று. அழுகுரலோசை கேட்பது அசுபசகுனமாதலால் விரைந்துபோவென்றாள். (உஎ௩)

## முயற்சி விலக்கு.

மல்லணிந்ததோளாயி தென்கொலோவான்பொருண்மேல்
செல்கவிரைந்தென் றுளந்தெளிந்து—சொல்லுதற்கே
என்றுமுயல்வல்யா னேகனீயென் றிடையே
தோன்றுகின்றதென்வாயிற் சொல்.

இ-ள். மல் அணிந்த தோளாய் - மற்போரையுடைய தோளனே, வான் பொருள்மேல் - மேலாகிய பொருளின்மீது, விரைந்து செல்க என்று-விரைந்துபோவென்று, உள்ளம்தெளிந்து - மனந்தெளிந்து, சொல்லுதற்கே-சொல்லுவதற்கே, என்று முயல்வல்யான் - யான் பொருந்தி முயலாநின்றேன், இடையே - இடையில், என்வாயிற்சொல் - என் வாயிற்சொல்லானது, ஏகல் நீ என்று தோன்றுகின்றது - நீ போகாதேயென்று வெளிப்படுகின்றது, இது என்கொல் - இதென்னோ—எ-று. சூழ்ந்து வில் தோன்றி

யான் நீ விரைந்துபோவென்றுசொ... உரைப்பா ந்தாலும் என்வாயானது நீபோகாதேயென்று தானேசொல்லாநின்ற... ற்கு யானென்செய்வேன் என்பதாம். (உஎ௪)

## பரவச விலக்கு.

செல்கைதிருவுளமேல் யானறியேன்றேங்கமழ்தார்
மல்லகந்தங்கு மதர்விழியின்—மெல்லிமைகள்
நோக்குவிலக்குமே னோவாளிவள்காதல்
போக்கியகல்வாய் பொருட்கு.

இ-ள். செல்கை திருவுளமேல் - (இறைவனே) நீ செல்லுகையில் உனக்குத் திருவுளமானால், யான் அறியேன் - அதைக் குறித்துச்சொல்ல யான் ஒன்று மறிகிலேன், (ஆயினும்) தேம்கமழ்தார் - (உனது) தேன்மணக்கின்ற மலர்மாலையை, நோக்கு - நோக்குதலை, மல் அகம் தங்கும் மதர்விழியின்-உள்ளே செழுமைதங்கிய மதர்த்தகண்களின், மெல் இமைகள் - மெல்லிய

இமைகள், விலக்குமேல் - தடுக்குமானல், நோவாள் - மனம் வருந்துவாள், (ஆதலால்) இவள் காதல்போக்கி - இவளது ஆசையைநீக்கி, பொருட்கு அகல்வாய் - பொருளின்பொருட்டுப் பிரிவாயாக—எ-று.

உன்தோளிலணிந்த பூமாலையைப்பார்த்து மகிழ்கையில் இமைகள் சற்றுத்தடுத்தாலும் மனம்வருந்துவளே, அப்படிப்பட்ட மிக்கவேட்கை உன்மீதில்லா திருக்கும்படி அவள்மனத்தைத் திடப்படுத்தி, நீபொருட்குப் பிரிவாயாக என்பதாம். (உஎஙி)

## உபாய விலக்கு.

இன்னுயிர்காத்தளிப்பாய் நீயேயிளவேனில்
மன்னவனுங்கூற்றுவனும் வந்தணைந்தால்—அன்னோர்
தமக்கெம்மைத்தோன்ருத் தகையதோர்வித்தை
எமக்கின்றருள்புரிந்தே யேகு.

இ-ள். இன் உயிர் காத்து அளிப்பாய் - எமது இனியவுயிரைக் காத்துரக்ஷிக்கின்ற இறைவனே, இளவேனில் மன்னவனும் - மன்மதனும், கூற்றுவனும் - யமனும், வந்து அணைந்தால் - (நீபிரிந்தபின்) வந்துசேர்ந்தால், அன்னோர்தமக்கு - அவர்களுக்கு, எம்மை - எங்களை, தோன்ரு - தோற்றுவியாத, தகையது - தன்மையதாகிய, ஓர்வித்தை - ஒருவித்தையை, நீயே - நீதானே, இன்று - இப்பொழுதே, எ[illegible]க்கு அருள்புரிந்து - எமக்கு அருள்செய்து, ஏகு - செல்வாயாக—எ-று[illegible].

[illegible]ின்மீது, சிறிதும
உன்பிரி[illegible]ாம், (ஆதலால்) அப்பொருட்டு மன்மதனும் யமனும் வந்தால் அவர்கள் கண்[illegible]ுநீங்காத நன்னெறியால்[illegible]ருக்கும்படி ஒருவித்தையை எமக்கருள்செய்து நீ[illegible]னி எழுவாய் ஒழிவா[illegible]ாம். (உஎகூ)

அக்கா[illegible] [illegible]மமானைக்கைப்பிடிப்பான்
சொக்காளைப்பககஞ் சொருகுவான்—நக்கனவன்
ஆட்டையெடுப்பா னலம்பாலேயுண்டிடுவான்
காட்டிற்குடியிருப்பான் காண்.

இ-ள். நக்கன் அவன் - திகம்பரனுகிய அச்சிவபெருமான், அக்காளை ஏறுவான் - அக்காளைமேலேறுவான், அம்மானைக் கைப்பிடிப்பான் - அழகிய மானைக்கையில் தாங்குவான், சொக்காளை பக்கம் சொருகுவான் - சொக்கநாயகியை யிடப்பக்கத்தில் சொருகிக்கொள்வான், ஆட்டை எடுப்பான் - நடனத்தையே விரும்புவான், ஆலம்பாலே உண்டிடுவான் - நஞ்சாகிய பாலையே உண்பான், காட்டில் குடியிருப்பான்-கடம்பவனத்தில் குடியிருப்பான்-எ-று.

அக்காள்மீதேறுவான், அம்மானைகைப்பிடிப்பான், சொக்கு ஆளை பக்கஞ்சொருகுவான், ஆட்டையெடுப்பான், ஆலம்பாலே உண்டிடுவான், காட்டில்குடியிருப்பான், எனவேறுமொருபொருள்தோன்றுதல்காண்க. (உஎஎ)

ஆனெய்தனைப்பூநெ யருந்தினதுமல்லாமல்
பூநெய்தனையீயெடுத்துப் போனதுவும்—மானனைய
கண்ணாள்தலையதனிற் காய்காய்த்தறுத்ததுவும்
நண்ணாயறிந்து நவில்.

இ-ள். ஆனெய்தனை - ஆனெயை, பூநெய் அருந்தினதும் அல்லாமல் - பூனை உண்டதுமல்லாமல், பூநெய்தனை - பூனையை, ஈயெடுத்துப்போனதுவும்—, மான் அனைய கண்ணாள் தலையதனில் - பெண்கள் தலையில், காய்காய்த்து அறுத்ததுவும்—, நண்ணாய் அறிந்துநவில் - நன்றாயறிந்து சொல்வாயாக—எ-று.

ஆனெய் - பசுநெய், பூநெய் - தேன், மானனைய கண்ணாள் - தன்னி, (வாழை) நன்றாய் என்பது நண்ணாய் என்றாயிற்று. (உஎஅ)

கொங்கைகளங்கண்சொல் குழலிவையின்னாட்கென்று
செங்கமலவாவி திகழ்கூடற்—கங்கைகுலச்
சின்னத்தம்பிக்குத் தெரியவுரைப்பாரிலையே
வன்னத்தம்பிக்கு மழை.

இ-ள். இன்னாட்கு - இவளுக்கு, கொங்கைகளம் கண்சொல் குழல் இவை - கொங்கையும் கழுத்தும் கண்ணும் சொல்லும் குழலும் ஆகிய இவை, (முறையே) வல்நத்து அம்பு இக்குமழை என்று - சொக்கட்டான்காய் சங்கு அம்பு கரும்பு மேகம் என்பவற்றுக்கு நிகராமென்று வெவ மலவாவி திகழ் கூடல் - செந்தாமரைமலர்த்தடாகங்கள் சூழ்ந்து [illegible] ற கூடலில்வாழ்கின்ற, கங்கைகுலம் - கங்காகுலத்தில்தோன்றி[illegible] ம்பிக்கு - சின்னத்தம்பியென்னும் சீமானுக்கு, தெரிய உரைப்பா ந்தாலும் [illegible] - தெரியும்படி சொல்லுவாரில்லையே—எ-று. ற்கு யாவெ

இது தாய்க்கூற்று. (உஎகூ)

திருவிருத்திநாதர் திருவளியாதென்னைக்
கருவிருத்தியென்னபயன் கண்டார்—எருதுபோய்க்
கோட்டிபத்திலேறினரேர் கோவணம்போய்ப்பட்டாச்சோ
ஓட்டிலிரந்துண்டதும்போச் சோ.

இ-ள். திருவிருத்திநாதர்—, திரு அளியாது - பாக்கியத்தைக்கொடாமல், என்னைக்கரு இருத்தி - என்னைப்பிறப்பில் இருத்திவைத்து, (அதனால்) என்னபயன்கண்டார் - என்னபயனை யடைந்தார், (ஒன்றுமில்லை), அப்படியிருக்க என்னை யிப்படி பாராமுகம் செய்வதற்குக் காரணம் யாதென்று விசாரிக்கும்போது, எருதுபோய் - எருதேறுவதுபோய், கோட்டுஇபத்தில் ஏறினர் - கொம்புகளையுடைய யானைமீதேறினார், கோவணம்போய் - கோவணம் உடுத்

திருந்ததுபோய், பட்டு ஆச்சு - பட்டாடை உடுக்கலாச்சுது, ஓட்டில் இரந்து உண்டதும் போச்சு - தலையோட்டில் இரந்துண்டதும் போச்சுது, (இப்படி தாழ்ந்தநிலையை நீங்கி உயர்ந்தநிலையை யடைந்திருத்தலே காரணமென்று தோன்றுகின்றது—எ-று. (உ௮0)

கொங்கருடல்கிழியக் குத்தியிருகோட்டெடுத்து
வெங்கணழலில் வெதுப்புமே—மங்கையர்கள்
சூழத்தாமம்புனையுஞ் சுந்தரத்தோண் மீனவனுக்
கீழத்தானிட்ட விபம்.

இ-ள். மங்கையர்கள்சூழ - மாதர்கள்சூழ்ந்து நோக்கும்படி, தாமம்புனையும் - பூமாலையை யணிந்த, சுந்தரம் தோள் - அழகிய தோளையுடைய, மீனவனுக்கு - பாண்டியனுக்கு, ஈழத்தான் இட்ட இபம் - ஈழநாட்டரசன் கப்பமாகக்கட்டின யானைகள், கொங்கர் உடல்கிழியகுத்தி - கொங்கநாட்டரசருடைய உடல்கள் பிளக்கும்படி குத்தி, இருகோடுஎடுத்து - இரண்டுகொம்புகளால் எடுத்து, வெம்கண் அழலில் வெதுப்பும் - வெவ்வியகண் ணெருப்பில்சுடும் எ-று. (உ௮க)

கல்லினெறியக் கதியளித்தார்பூவினல்
மெல்லவெறிய விழித்தெரித்தார்—நல்லுடைவிட்
டுட்டருக்குண்டான வுவாவினுரிபோர்த்தார்
குட்டருக்குண்டான குணம்.

இ-ள். (பரமசிவனுனவர்) கல்லின் எறிய - ஒருவன் கல்லாலெறிய, கதி அளித்தார் - (அவனுக்கு) நற்கதியைக் கொடுத்தார், பூவினல் மெல்ல எறிய - ஒருவன் மலரினல் மெல்ல எறிய, விழித்து எரித்தார - (நெருப்புக்கண்ணை) விழித்து அவனை எரித்து விட்டார், நல் உடைவிட்டு - நல்ல ஆடையைவிட்டு, உள்தருக்கு உண்டான - மனத்தில் செருக்கையுடைய, உவாவின் உரி போர்த்தார் - யானைத்தோலைப் போர்த்துக்கொண்டார், (இதை நோக்குமிடத்து) குட்டருக்கு உண்டான குணம் - குழந்தைகளுக்குள்ள குணமாகத் தோன்றுகின்றது—எ-று.

கல்லாலெறிந்தவர் சாக்கியநாயனர், பூவினலெறிந்தவன் மன்மதன், உவா - யானை, குட்டர் - குழந்தைகள். (உ௮உ)

கமலாலயமில்லாங் காரோகணத்து
விமலாலயமில்லா மெய்யர்—அமலாமன்
றாடியபொற்பாதத் தியாகநெடுமாலன்று
தேடியபொற்பாதத் தியாகா.

இ-ள்: கமலாலயம் இல்லும் - திருவாரூரை யிடமாகப்பெற்ற, காரோகணத்து விமலா - காரோகணத்தி லெழுந்தருளின விமலனே, லயம் இல்லா மெய்யா - அழிவற்ற மெய்யனே, அமலா - அமலனே, மன்று ஆடிய - பொற்சபையிலாடிய, பொன்பாதம் தியாக - பொன்னடியையுடைய தியாகராயனே, நெடுமால் - திருமால், அன்று தேடிய - அந்நாளில்தேடின, பொன்பாதம் தியாகா - பொன்னடியையுடைய தியாகராயப் பெருமானே, (என்னையாண்டருளல் வேண்டும்.) —எ-று.

காயாரோகணம் - ஓர்தலம், அதுகாரோகணமென்றாயிற்று விமலன் அமலன் என்பன பரிசுத்தன் என்னும் பொருளன. (உ௮௩)

வாவிகணையன்றி மலராவயல்களுமப்
பாவிகணையன்றிப் பயிராகா—காவினிற்கால்
தேரோன்விருதன்றிச் சேராபிரிந்தவர்க்கு
ஊரோகுடிதாங்கி யூர்.

இ-ள். குடிதாங்கியூர் - குடிதாங்கியூரில், வாவி - தடாகங்கள், கணை அன்றிமலரா - (மன்மதனது) பாணத்தையல்லது வேறொன்றைப்பூப்பதில்லை, வயல்களும் - வயல்களும், அப்பாவிகணை அன்றிபயிராகா - அந்தப்பாவியின் பாணங்க ளல்லது வேறொன்று பயிராவதில்லை, காவினில் - சோலைகளில், கால்தேரோன் விருது அன்றிசேரா - தென்றற்காற்றாகிய தேரையுடையவனாகிய அம்மன்மதனது விருதேயன்றி வேறொன்றுசேர்வதில்லை, (ஆகையால் இது) பிரிந்தவர்க்கு ஊரோ - பிரிந்தவர்க்கு ஊராகுமோ—எ-று.

வாவிமலருங்கணை வயல்பயிராகுங்கணை என்றது தாமரை குவளை என்னும் இருவகைமலர்களை. கால்தேரோன் விருது என்றது குயிலை. (உ௮௪)

கண்டிருந்துங்கேட்டிருந்துங் கற்றிருந்துந்தோடமலர்
வண்டிருந்தபூங்குழன்மேல் மாலானேம்—பண்டை
வெறியோவிதியோ வெளிமயக்கோவையோ
முறையோவநியாய மோ.

இ-ள். கண்டிருந்தும்—, கேட்டிருந்தும்—, கற்றிருந்தும்—, தோடமலர் - இதழ்கள் விரிகின்ற, வண்டு இருந்த - வண்டுகள் தங்கப்பெற்ற, பூ - மலர்களை யணிந்த, குழல்மேல் - கூந்தலை யுடையவள்மேல், மால்ஆனேம் - ஆசைகொண்டோம், (இப்படி யாம் ஆசைகொண்டது) பண்டைவெறியோ-பூர்வபைத்தியமோ, விதியோ - விதிதானோ, வெளிமயக்கோ -வெளிமயக்கமோ, ஐயோ - அந்தோ, முறையோ - கிரமந்தானோ, அநியாயமோ—அநியாயந்தானோ—எ-று.

ஒருவன், தன்மனம் பிறர்மனைவிமீது சென்றபோது தன்விவேகத்தைக் கொண்டு அதனையாராய்ந்து தெளிகின்றானென்பது இதன்கருத்து. (உ௮௫)

தேங்குவளையன்னவிழித் தேமொழியார்க்குன்றந்தை
தாங்குவளைவிற்கத் தமியோங்கை—ஈங்குவளை
கொள்ளத்தலைப்பட்டாய் கோமயிலைச்செட்டிநீ
மெள்ளக்குலத்தொழிலை விட்டு.

இ-ள். தேம் - மணம்பொருந்திய, குவளை அன்னவிழி - குவளை மலர் போலும் விழியையுடைய, தேமொழியார்க்கு - பெண்களுக்கு, உன் தந்தை - உன் தந்தையானவன், தாங்குவளைவிற்க - தம்மால் சுமக்கப்பட்ட வளையலைவிற்கையில், கோ - அழகிய, மயிலைச்செட்டிநீ - மயில்வாகனக்கடவுளாகியசெட்டிநீ, மெள்ளக் குலத்தொழிலைவிட்டு—, ஈங்கு - இவ்விடத்தில், தமியோம் கை - தமியோங்களாகிய எங்கள் கைவளையலை, கொள்ளத்தலைப்பட்டாய்-வாங்கத்தொடங்கினாய், (இதுஉனக்குத் தகுதியாமோ)—எ-று.

மயிலைச்செட்டி - மயிலையில் வாழும் ஓர்செட்டி. தந்தைவளை விற்றது மதுரையில், அந்தச்செய்தி திருவிளையாடற்புராணத்தில் விரிவாய்க்காணலாம். (உஅசு)

விடுகதைபோற் கூறியது.

நாலெழுத்தாமேமத்தி னண்ணுமுதனீக்கிடினே
வேல்விழியிரண்டுவிடி னேநிசியாம்—காறலையும்
வல்லபுலிமுன்னிரண்டும் வாளியாநான்கிலொன்று
நல்லமதியீதெனையோ நாட்டு.

இ-ள். நால்எழுத்தாம் ஏமத்தில் - நான்கெழுத்தாலாகிய புதையல்என்பதில், நண்ணும் - பொருந்திய, முதல்நீக்கிடின் - முதலெழுத்தை நீக்கினால், வேல்விழி - ஒருதையல்ஆவள், இரண்டுவிடின் - முதலிரண்டெழுத்தை நீக்கினால், நிசிஆம் - அல்ஆகும், கால்தலையும் - முதலெழுத்தும் கடையெழுத்துஞ் சேர்ந்தால், வல்லபுலி - வன்மையாகிய புலியாம் (புல்), முன்னிரண்டும் வாளியாம் - முதலிரண்டெழுத்தும் அம்பாகும் (புதை), நான்கில்ஒன்று - நாலிலோரெழுத்து, நல்லமதி - சிறந்தமாசமாம், (தை), ஈது என்னையோ நாட்டு - இது என்னவோசொல்—எ-று.

ஏமம் - புதையல், பெண் - தையல், நிசி - அல், புலி - பல், அம்பு - புதை, நல்மதி - தை. (உஅஎ)

விடுகதைபோற் கூறியது.

வாசமாளி கருமுகில்வண்ணனற்
பாசமாம்பிர திப்பதந்தன்னிலே
ஓசைமுன்னடி வீறெழுத்தொக்குமே
காசியான மனோன்மணிதன்கணே.

இ-ள். வாசம் ஆளி கருமுகில்வண்ணன் ஆகிய இவற்றுக்குப் பிரதிபதமாயுள்ள, முருகு கோளரி முராரி, என்பவற்றின் முதல் நடு இறுதியெழுத்துக்களைச் சேர்த்தால் என்னருமோ அதுவேமனோன் மணியென்னும் தாசியின் கண்ணுக்குச் சமானமாம்—எ-று.

வாசம் - முருகு. ஆளி - கோளரி. முகில்வண்ணன் - முராரி. முளரி- தாமரை. (உஅஅ)

## நடுவெழுத் தலங்காரம்.

கட்டோம்புதலெனக் காமாதியாறுங்கரிசறுத்து
விட்டோம்புதவு திறந்தின்பவீடு புக்குச்செறிந்தோம்
சிட்டோம்புதல்வி மண்ணோருந்திகஞ்சந் தெளிவுமுன்பின்
விட்டோம்புதவுறு நள்ளெழுத்தான்முலை மேவப்பெற்றே.

இ-ள். சிட்டோம் - சிட்டராகியயாம், புதல்வி - குமாரி, மண்-காசினி, ஒருந்தி - (ஒருநதி) பாலாறு, கஞ்சம் - தாமரை, தெளிவு - துணிவு, (இவற்றில்) முன்பின்விட்டு - முன்பின் னெழுத்துக்களைவிட்டு, ஓம்பு உதவுறு நள் எழுத்தான் - எஞ்சிநின்ற நடுவெடுத்துப் பெயர்கொண்டவளது, முல்லை மேவப்பெற்று - திருமுல்லைவாயிலை யடைந்து, காமாதி ஆறும் - காம முதலிய ஆறனையும், புதல் எனக் கட்டோம் - புதல் களைவதுபோலக் களைந்தோம், கரிசு அறுத்துவிட்டோம்-குற்றங்களெல்லாவற்றையும் சேதித்துவிட்டோம், புதவுதிறந்து - கதவு திறந்துகொண்டு, இன்பவீடு புக்கு செறிந்தோம் - பேரின்ப வீட்டிற்புகுந்து நிலைபெற்றோம்—எ-று.

குமாரி, காசினி, பாலாறு, தாமரை, துணிவு, என்பவற்றின் நடுவெடுத்துக்களைச் சேர்த்தால் மாசிலாமணி என்றாகும். மாசிலாமணியீசனது திருமுல்லைவாயிலை யடைந்து காமாதிகளை யறுத்துப் பேரின்பவீட்டைப் பெற்றோம் என்பதாம். (உஅக)

## முகவை - இராமானுஜ கவிராயர் தோட்டிக்கலை வேதாசல முதலியார்மேற் பாடியது.

தரலாற்றுந்தொட்டிக் கலைத்தமிழ்வேதா சலன்றிகிரி
வரலாற்றுமங்கை கொங்கைக்கடிப்பட்ட வரைக்குலங்கள்
உரலாய்த்திரிகையதா யம்மியாய்ச்சின்ன வுண்டைகளாய்ப்
பரலாயுறுதுகளாய்ச் சிறுகாற்றிற் பறக்கின்றவே.

இ-ள். தரல் ஆற்றும் - (யாசிப்பவர்க்கு) தருதலைச்செய்கிற, தொட்டிக் கலை - தொட்டிக்கலையில் வாழ்கின்ற, தமிழ்-தமிழ்வேந்தாகிய, வேதாசலன்- வேதாசலன் என்னுஞ் சீமானது, திகிரி - மலையில், வரல் ஆற்றும் - வருத

லைசெய்த (தோன்றின), மங்கை - இந்தப்பெண்ணின், கொங்கைக்கு-தனங்களுக்கு, அடிப்பட்ட - அடிப்பட்டுதோற்ற, வரைக்குலங்கள் - மலைக்கூட்டங்கள், உரல் ஆய் - உரல்களாகி, திரிகையது ஆய் - திரிகைகளாகி, அம்மி ஆய் - அம்மிகளாகி, சின்ன உண்டைகள் ஆய் - சிறியவுண்டைகளாகி, பரல் ஆய் - பருக்கைக்கற்களாகி, உறுதுகள் ஆய் - மிக்கதூளியாகி, சிறு காற்றில் பறக்கின்ற - சிறுகாற்றிற்பறக்கின்றன—எ-று.

ஒருமாதின் கொங்கையை வியந்து ஒருவிடன்கூறியதுபோற் கூறியது. ()

## மேற்படி கவிராயர் கிருஷ்ணப்பநாயகன் குளத்தைப் புகழ்ந்து பாடியது.

விருத்தம்.

சாரவீடிருந்தோர்படிந்துசார்ந்திடிற்சீர்தரும்புகழிலையென்றேவீடு
தூரமாயினும்படிந்துவீடடையுந்தோற்றமற்றறிந்ததனாலே
வீரவேளலைத்தநுதற்கணான்சென்னிமேயதச்சுரநதியென்றால்
மாரகண்ணப்பநாயகன்குளத்துமகிமையாமுரைசெயுந்தகைத்தோ.

இ-ள். வீடுசார இருந்தோர் - வீட்டைச்சார இருந்தவர்கள், படிந்து-முழுகி, சார்ந்திடின் - வீட்டையடைந்தால், சீர்தரும்புகழ் இல்லை என்று-சிறப்பைத்தருகிற புகழில்லையென்று, வீடுதூரம் ஆயினும் - வீட்டுக்குத்தூரமாயிருப்பவர்களும், படிந்து - முழுகி, வீடு அடையும் - வீட்டையடைகின்ற, தோற்றம் - காட்சியை, அறிந்ததனாலே - அறிந்துக்கொண்டதனால், வீரவேள் அலைத்த - வீரமன்மதனையெரித்த, நுதல் கண்ணன் - நெற்றிக்கண்ணையுடையவனாகிய சிவபெருமானது, சென்னி - முடியை, அச்சுரநதி மேயது என்றால் - அந்தக் கங்காநதி அடைந்ததென்றால், மாரன் - மன்மதனுக்கு நிகரான அழகுள்ள, கிண்ணப்பநாயகன் குளத்து - கிருஷ்ணப்பநாயகன் குளத்து, மகிமை - பெருமையானது, யாம் உரைசெயும் தகைத்தோ - யாம்சொல்லத்தகும் தன்மைத்தோ—எ-று. (உ௬௬)

வேலாயுதவிழி பெட்டகமீது விறலரவைச்
சூலாயுதனை யநுமனைச்சண்பகத் தூமலரைப்
பாலாதரவால் வரித்தேகணவன்றன் பாங்கருய்த்தாள்
மாலாமதிப்புல் வீரிதன்பாவம் வகுத்திடுமே.

இ-ள். வேலாயுத விழி - வேலாயுதம்போலும் கண்களையுடையாளொருத்தி, பெட்டகமீது - ஒருபெட்டியில், விறல் அரவை - வெற்றியுள்ள சர்ப்பத்தையும், சூலாயுதனை - பரமசிவனையும், அநுமனை - அநுமானையும், சண்பகத்தூமலரை - பரிசுத்தமான சண்பகமலரையும், பால் ஆதரவால் - களங்கமற்ற ஆசையினால், வரித்து - வருவித்து, கணவன் தன்பாங்கர் உய்த்தாள்-

கணவனிடத்திற் கனுப்பினுள், மாலாமதிபுலவீர் - மயங்காத அறிவையுடையபுலவர்களே, இதன்பாவம் - இதன்கருத்தை, வகுத்திடும் - வகுத்துச் சொல்லுங்கள்—எ-று.

ஒருத்தி தாமரைமலரைப் பெட்டியில் வைத்துக் காற்ருனது வாசனையைக் கொண்டுபோகாமல் சர்ப்பத்தையும், மன்மதன் கொண்டு போகாமல் பரமசிவனையும், பிரமன் கொண்டுபோகாமல் அநுமானையும், வண்டுமுகராமல் சண்பகமலரையும் காவல்வைத்தாள், என்பதிதன்கருத்து. இந்தக் காவலினுல் பெட்டியிலடங்கி யிருப்பது தாமரைமலர் என்பது பெறப்பட்டது. (உகூஉ)

எண்ணான்குமுப்பத் திரண்டுபற்காட்டி யிசையுடனே
பண்ணுகச்செந்தமிழ் பாடிவந்தாலுமிப் பாரிலுள்ளோர்
அண்ணாந்துகேட்ப ரழகழகென்ப ரதன்பிறகு
சுண்ணாம்புபட்ட விலையுங்கொடார்கவி சொன்னவர்க்கே.

இ-ள். எண் நான்கு - எண்ணான்காகிய, முப்பத்திரண்டுபல்காட்டி-முப்பத்திரண்டுபற்களும் வெளிப்படக்காட்டி, இசையுடனே - இசையோடு, பண் ஆக - பண்ணும் உள்ளதாக, செந்தமிழ் - செந்தமிழ்ப் பாடல்களை, பாடிவந்தாலும் - ஒருபுலவன் பாடிக்கொண்டு வந்தாலும், அண்ணாந்து கேட்பர்-அண்ணாந்திருந்து கேட்பார்கள், அழகு அழகு என்பர் - அழகு அழகு என்பார்கள், அதன்பிறகு - அதன்பின்னே, சுண்ணாம்புபட்ட இலையும்கொடார்—, கவி சொன்னவர்க்கு—, (யாரென்ருல்) இப்பாரில் உள்ளோர் - இவ்வுலகத்திலுள்ளவர்களே—எ-று. (உகூங)

கலையளவெவ்வள வவ்வளவாம்விழி காமனுடைச்
சிலையளவெவ்வள வவ்வளவாநுதல் செந்திற்கந்தன்
மலையளவெவ்வள வவ்வளவாமுலை மாறுயிலா
லிலையளவெவ்வள வவ்வளவாம்வயி றேந்திழைக்கே.

இ-ள். ஏந்திழைக்கு - இந்தப்பெண்ணுக்கு, விழி - கண்கள், கலையளவு எவ்வளவு அவ்வளவாம் - மானின் அளவு எவ்வளவோ அவ்வளவேயாகும், நுதல் - நெற்றியானது, காமனுடை - மன்மதனது, சிலையளவு எவ்வளவு அவ்வளவாம் - வில்லளவு எவ்வளவோ அவ்வளவேயாகும், முலை - தனங்கள், செந்தில்கந்தன் - திருச்செந்தூர் முருகனது, மலையளவு எவ்வளவு அவ்வளவாம் - மலையினளவுஎவ்வளவோ அவ்வளவேயாம், வயிறு - வயிறானது, மால்துயில் - திருமாலுறங்குகின்ற, ஆலிலையளவு எவ்வளவு அவ்வளவாம் - ஆலிலையின் அளவு எவ்வளவோ அவ்வளவேயாம்—எ-று. (உகூச)

பாலொத்தவின்மொழித் தாண்டவபூபனிப் பாரினில்க்
காலத்தில்வந்திருந் தாலாதிசேடனுங் காற்றாண்பனே

மாலித்தரையை விழுங்குவனேசிவன் வாய்வைப்பனே
ஆலத்திலக்கட னீருண்பனேசொல் லகத்தியனே.

இ-ள். பால் ஒத்தஇன்மொழி - பாலையொத்தஇனியமொழியையுடைய, தாண்டவபூபன் - தாண்டவபூபன் என்னுஞ் சீமான், இப்பாரினில் - இவ்வுலகத்தில், அக்காலத்தில் வந்திருந்தால் - அக்காலத்தில் தோன்றியிருந்தால், ஆதிசேடனும் காறறு உண்பனோ—, மால் - திருமால், இத்தரையைவிழுங்குவனோ - இந்த மண்ணைவிழுங்குவானோ, சிவன்! ஆலத்தில் வாய்வைப்பனோ- சிவன் நஞ்சில்வாய்வைப்பானோ, அகத்தியன்—, அக்கடல் நீர் உண்பனோ- அந்தக் கடல்நீரைப்பருகுவானோ, சொல் - சொல்வாயாக—எ-று.

தாண்டவபூபன் அக்காலத்திருந்தால் ஆதிசேடன் காற்றையுண்ணமாட்டான், திருமால் மண்ணையுண்ணமாட்டான், சிவன் நஞ்சையுண்ணமாட்டான், அகத்தியன் உப்புநீரை யுண்ணமாட்டான் என்பதாம். (உகரு)

உண்ணுவிருந்து முதவிகொள்ளாத வுறவும்பொன்னை
எண்ணுக்கணிகையு மின்புலவோரு நல்லேவலரும்
தண்ணாரம்புல்லருந் தாமாவுங்காலுண்ணுஞ் சற்குருவும்
கண்ணரக்காணின் மகிழ்வார்கள்செல்வக் கயவர்களே.

இ-ள். உண்ணுவிருந்தும் - உண்ணுதவிருந்தினரும், உதவி கொள்ளாத உறவும் - உதவியை யேற்றுக்கொள்ளாத உறவினரும், பொன்னை எண்ணுகணிகையும் இன்புலவோரும் - பொன்னை மதியாத வேசையும் இனிய புலவோரும், நல் ஏவலரும் - நல்ல ஏவலாளிகளும், தண் ஆர் அம் புல் அருந்தா மாவும் - குளிர்ச்சிபொருந்திய புல்லைத்தின்னாத குதிரையும், கால் உண்ணும் சற்குருவும் - காற்றையுண்ணுகின்ற சற்குருவும், (ஆகிய இவர்களை) செல்வக் கயவர்கள் - செல்வத்தையுடைய கீழ்மக்கள், கண்ணரக்காணின் - கண்ணாரக் கண்டால், மகிழ்வார்கள் - களிப்படைவார்கள்—எ-று.

மகிழ்தற்குக் காரணம் செலவில்லாமை. (உகசு)

சுரம்போக்குத்துறை, தாய்க்கூற்று.

காயுங்கடுஞ்சுர மீதென்றுகாட்டிய கையுஞ்சொன்ன
வாயும்புகையெழும் பாலையிலேவணங் கார்மவுலி
தோயுங்கழற்பதச் சுந்தரபாண்டியத் தோன்றல்வெற்பில்
தாயுந்தமரு மிலாதவர்போலத் தவித்தனளே.

இ-ள். வணங்கார்மவுலி - வணங்காதவர்களுடைய கிரீடங்கள், தோயும்படிகின்ற, கழல் - வீரக்கழலையணிந்த, பதம் - பாதங்களையுடைய, சுந்தரபாண்டியத் தோன்றல்வெற்பில் - சுந்தரபாண்டியனாகிய பெரியோனது மலையில், காயும் கடுஞ்சுரம் ஈது என்று காட்டியகையும் - சுடுகின்ற கடுமையாகிய

யாலேநிலம் இதுவென்று சுட்டிக்காட்டினதையும், சொன்னவாயும் - சொல்லியவாயும், புகைஎழும் - புகையெழும்படியான, பாலையிலே - பாலைநிலத்தில், தாயும் தமருமு் இல்லாதவர்போல - தாயும் உறவினருமில்லாதவர்கள்போல, தவித்தனளே - என்பெண் தவித்தாளே—எ-று. (உகள)

வாதாம்பலகலை கற்றுவந்தாலுமிவ் வையந்தன்னில்
ஏதாம்பொருணல மில்லானெனினல் லிடமுந்தந்து
பீதாம்பரற்கொரு பெண்டந்தபாற்கடல் பின்புவந்த
வேதாந்தவித்தெனுங் கல்லம்பரற்கு விடந்தந்ததே.

இ-ள். வாதுஆம் பலகலைகற்றுவந்தாலும் - வாதுசெய்தற்குரிய பலகலைகளையுங் கற்றுவந்தாலும், இவ்வையம் தன்னில் - இவ்வுலகத்தில், பொருள் நலம் இல்லான் எனின் - பொருளினது நன்மையில்லானாயின், ஏதுஆம் - என்னபிரயோஜநம் கொடுக்கும், நல் இடமும் தந்து - நல்ல இடமுங்கொடுத்து, பீதாம்பரற்கு - பொன்னுடையையுடைய திருமாலுக்கு, ஒரு பெண் தந்த - ஒப்பற்ற பெண்ணைக்கொடுத்த, பாற்கடல் - பாற்கடலானது, பின்புவந்த - பிறகுவந்த, வேதாந்தவித்து என்னும் - வேதமுடிவினையறிந்தவர் என்று சொல்லப்பட்ட, கல்அம்பரற்கு - காவியாடையையுடைய சிவபெருமானுக்கு, விடம்தந்தது - நஞ்சைக்கொடுத்தது—எ-று.

பீதம் - பொன், அம்பரம் - ஆடை, வேதாந்தவித்து - வேதமுடிவையறிந்தவர், வேதாந்தத்தால் அறியப்பட்டவர். கல் அம்பரற்கு - கைலாயமலையையுடைய அழகிய பரமசிவனுக்கு எனினுமாம். (உகஅ)

தேமன்சுதனுக் கிளையோன்பிதாவைத் திகிரியினால்
கோமன்மறைத்து விசயனுயிரைக் கொடுத்ததுபோல்
காமன்பகைவன் றென்கூடற்சொக்கேசன் கனகிரிமேல்
வீமன்சுடரொளி நீக்கிநம்மாருயிர் மீட்டதுவே.

இ-ள். தேமன் - தேவராஜனாகிய இந்திரன், சுதனுக்கு - (அவன்) புதல்வனாகிய வாலிக்கு, இளையோன் - தம்பியாகிய சுக்ரீவன், பிதாவை - இவன் பிதாவாகிய சூரியனை, கோமன் - கோபாலகனாகிய க்ருஷ்ணன், மறைத்து - மறையப்பண்ணி, விசயன்உயிரைக் கொடுத்ததுபோல் - அர்ஜுநனது உயிரைக்கொடுத்ததுபோல, காமன் பகைவன் - மன்மதனுக்குப் பகைவனாகிய, தென்கூடல் சொக்கேசன் - தென்மதுரைக் கிறைவனாகிய சொக்கேசனது, கனகிரிமேல் - பெரியமலையின்கண், வீமன் - வண்டு, சுடர் ஒளிநீக்கி - விளக்கொளியைநீக்கி, நம் ஆருயிர்மீட்டது-நமது அரியவுயிரை மீள்வித்தது—எ-று.

பாலான வின்மொழித் தாண்டவபூபன் பனிவரையில்
மாலானவஞ்சியை நீபிரிந்தாற்கண்கள் வாருதியாம்

சேலாமறுமுகன் வேலாந்தமிழ்தெரி தென்னவன்றன்
காலாங்குறுமுனி கையாமிம்மங்கை கனதனமே.

இ-ள். பால்அன - பால்போன்ற, இன்மொழி - இன்சொல்லையுடைய, தாண்டவபூபன் - தாண்டவபூபனது, பனிவரையில் - குளிர்ந்தமலையினிடத்து, மால் ஆனவஞ்சியை - உன்மீது ஆசைகொண்ட இந்தப்பெண்ணை, நீ பிரிந்தால் - நீ பிரிந்தாயானால், கண்கள் வாரிதிஆம் - கண்கள் நீர்ப்பெருக்கால்கடலாகும், சேல்ஆம் - (நீரின்றிவாடும்) மீனும், அறுமுகன் வேல் ஆம்- அறுமுகன் வேல்போலக் கடையப்படும், தமிழ்தெரி - தமிழருமையறிந்த, தென்வன்தன் - பாண்டியனது, கால்ஆம் - காலினும், குறுமுனிகைஆம்- அகத்தியன் கையிலும் (அடங்கிய) கடல்போலமடங்கும், இம்மங்கை கனதனம் - இந்தப்பெண்ணின் பெரியகொங்கைகள்—எ-று.

இது தோழி கூற்று. (௩00)

பாலாறுபாய்தென் பழனுபுரீசர் பனிவரைமேல்
மேலாறுபாய்ந்திட நின்றனள்காணந்தி வேளைதனில்
காலாலரைப்பணமோ ராணைக்கீந்து கடைபுகுந்து
நாலாறியானையைக் கைக்கொண்டுவீசி நடந்தனளே.

இ-ள். பாலாறுபாய் - பாலாறு பாயாநின்ற, தென்பழனுபுரீசர் - தென்பழனுபுரீசரது, பனிவரைமேல் - குளிர்ச்சியாகிய மலையின்கண், மேலாறுபாய்ந்திட நின்றனள் - அருவியாறு தன்மேற் பாயும்படி நின்றவளாகிய ஒருபெண், அந்திவேளைதன்னில் - அந்திநேரத்தில் காலால் அரைப்பணம் - அரைக்கால்பணத்தை, ஓர் ஆனைக்கு ஈந்து - ஒரு களிற்றுமீனுக்கு விலையாகக்கொடுத்து, கடைபுகுந்து - கடையில் நுழைந்து, நாலாறு யானையை - இருபத்துநான்கு யானைகளை, கைக்கொண்டு - கையிலேந்திக்கொண்டு, வீசிநடந்தனள் - கைவீசி நடந்தாள்—எ-று.

நாலாறு யானைக்கு இரண்டுகடகம் என்றுபேர். இரண்டு கடகத்தை இரண்டுகையிலும் தரித்துக்கொண்டு, களிற்றுமீனை அரைக்கால் பணத்துக்கு வாங்கிக்கொண்டு கைவீசிநடந்தாள் என்பதாம் இது ஒரு பெண்ணைக்கண்ட ஒருவிடன்சொன்னதுபோல் சொல்லியது. (௩0க)

கடுவளைக்குங்கண்ணி காரென்றபோதினிற் கைகழன்று
விடுவளைக்குள்ள விசையிலையேமிதி லைச்சிலையே
நடுவளைக்குங்கொண்ட நூரணன்கேரள நாட்டிலண்டந்
தொடுவளைக்கும்பரித் தேர்வலவாநம தூர்பரிக்கே.

இ-ள். கடுவளைக்கும் கண்ணி - நஞ்சின் தன்மையைத் தன்னிடத்துக்கொண்ட கண்ணையுடையவளாகிய தலைவி, கார் என்றபோதினில் - கார்

என்றமாத்திரத்தில், கை கழன்றுவிடு - அவள் கையினின்றும் கழன்றேடு இன்ற, வளைக்கு உள்ளவிசை - வளையலுக் கிருக்கிற விசை, மிதிலைசிலை நடு வளைக்கும் - மிதிலாநகரத்திலிருந்த சிவன் வில்லை நடுவிற்பிடித்து வளைத்த, கொண்டல் - மேகவண்ணனாகிய, நாரணன் - நாராயணனது, சோள நாட்டில் - சோளநாட்டின்கண், அண்டத்தொடு வளைக்கும்பரிதேர்வலவா - அண்டங்களையெல்லாம் சுற்றிவரும்படியானகுதிரைபூட்டினதேர்ப்பாகனே, நமது ஊர்பரிக்கு - நம்மால் செலுத்தப்படுகிற குதிரைக்கு, இல்லையே-இல்லையோ, (தேரைவிரைந்து செலுத்துவாயாக.)—எ-று.

இது வினைமுற்றி மீண்டுவருந் தலைமகன் கார்ப்பருவங் கண்டு தலைவி வருந்துவள் தேரை விரைந்து செலுத்தென்று பாகனொடு சொல்லியது. ()

பவளவிதழ்ச்சி வெண்ணீறென்றபோதினிற் பைந்தரளத்
தவளவடத்தணி நீறுதந்தாளிளஞ் சாலிகளோங்
குவளவயற்குழந் தாபுரிவேலவர் கோலவெற்பில்
இவளவுனக்கில்லை யோவலவாபரி யேகுதற்கே.

இ-ள். பவள இதழ்ச்சி - பவளம்போன்ற அதரத்தையுடையவளாகிய தலை, வெண்ணீறு என்றபோதினில் - திருவெண்ணீறு என்றமாத்திரத்தில், பை - பசிய, தவளம் - வெண்மையாகிய, தரளவடத்து-முத்துவடத்தினது, அணி - அழகாகிய, நீறுதந்தாள் - நீற்றைத் தந்தாள், இளஞ் சாலிகள் - இளமையாகிய செந்நெற்பயிர்கள், ஓங்கு - உயர்ந்த, வளவயல் - வளமாகிய வயல்கள்சூழ்ந்த, குழந்தாபுரி வேலவர் - குழந்தாபுரி முருகரது, கோலவெற்பில் - அழகிய மலையின்கண், வலவா - பாகனே, பரி ஏகுதற்கு - நமது குதிரை விரைந்து செல்லுவதற்கு, இவளவு உனக்கு இல்லையோ - இவ்வளவு விரைவு உனக்கு இல்லையோ—எ-று.

தலைவி, வெண்ணீறென்ற மாத்திரத்தில், வெண்ணீற்றனாகிய முருகன் மேல் மோகங்கொண்டு, விரகத்தீயால் தன்முத்துவடம் பொரிந்து நீற்றுப் போன பொடியையெடுத்துக்கொடுக்கிருள், அவ்வளவுவிரைவும் நீசெலுத்துங் குதிரைக்கில்லையே என்பதாம். இதுவும் பாகனொடுசொல்லியது. ()

அக்காண்டியக்கை யணிவாண்டியாடை யவிழ்க்கச்சற்றும்
வெக்காண்டிமாமறை மீதிருப்பாண்டிநம் வீட்டில்வந்து
சிக்காண்டிதேடித் திரிவாண்டிகேளிந்தத் தென்மதுரைச்
சொக்காண்டிநாளை வருவாண்டியேண்டி துயருனக்கே.

இ-ள். அக்காண்டி - அக்காடி, அக்கை அணிவாண்டி - அக்குமணியைத் தரிப்பாண்டி, ஆடை அவிழ்க்க சற்றும் வெக்காண்டி - ஆடையை யவிழ்ப்பதற்குச் சிறிதும் வெட்கமாட்டாண்டி, மாமறைமீது இருப்பாண்டி - பெரிய

வேதத்தின் முடியிலிருப்பாண்டி, நம் வீட்டில்வந்து சிக்காண்டி - நமது வீட்டில்வந்து அகப்படமாட்டாண்டி, தேடித்திரிவாண்டி - நம்மைத்தேடித் திரிவாண்டி, கேள் - கேள், இந்தத்தென்மதுரைச் சொக்காண்டி - இந்தத் தென்மதுரையில் வாழ்கின்ற சொக்காண்டி, நாளைவருவாண்டி - நாளைக்கு வருவாண்டி, உனக்கு துயர் எண்டி - உனக்குத்துன்பம் யாதுக்கடீ—எ-று. ()

ஆடுஞ்சிதம்பர னம்பலவாண னணிவரைமேல்
நீடுங்கயற்கண்ணி ளுடந்தமோக நிறையவென்றும்
கோடுங்குளமுங் குளத்தருகேநின்ற குன்றுகளும்
காடுஞ்செடியு மவளாகத்தோன்றுமென் கண்களுக்கே.

இ-ள். ஆடும்சிதம்பரன் - நடனம்பண்ணுகிற சிதம்பரன், அம்பலவாணன் அணிவரைமேல் - அம்பலவாணனது அழகிய மலையின்மேல், நீடும் - நீண்ட, கயல் - கயல்மீன்போன்ற, கண்ணிளுள் - கண்களையுடையவள், தந்தமோகம் - தந்தமோகமானது, நிறைய - என்னிடத்தில் நிறைந்திருக்கையால், என்றும் - எப்பொழுதும், கோடும் - குளக்கரையும், குளமும் - குளங்களும், குளத்து அருகேநின்ற குன்றுகளும் - குளத்தினருகேநிற்கின்ற மலைகளும், காடும்செடியும் - காடுகளும் செடிகளும், என்கண்களுக்கு அவளாகத் தோன்றும் - என் கண்களுக்கு அவளாகவே காணப்படுகின்றன—எ-று.

இது தலைவியின் உருவெளிப்பாடுகண்ட தலைவன் சொல்லியது. ()

இந்திரன்மைந்தன் பகைவனுக்குப்பகை யேய்ந்தநகர்
வெந்தணலாக்கின வன்றந்தைமைந்தன்பின் றோன்றன்முன்னே
வந்தவனுண்ண மறையோர்களோட மயங்குநஞ்சிற்
சிந்தினநஞ்சின் பகைவன்றன்சேவைக்குச் சென்றனனே.

இ-ள். இந்திரன் மைந்தன் - இந்திரனுக்குப் புதல்வனுகிய வாலி, பகைவனுக்கு - இவன்பகைவனுகிய ஸ்ரீராமனுக்கு, பகை எய்ந்தநகர் - பகையாகப் பொருந்திய நகராகிய இலங்கை, வெந்தணல் ஆக்கினவன் - வெவ்வியநெருப்புக் இரையாக்கினவனுகிய அநுமான், தந்தை - இவன் தந்தையாகிய வாயு, மைந்தன் - இவன் மைந்தனுகிய பீமன், பின்தோன்றல் - இவனுக்குப் பின் றேனுகிய அர்ஜுனன், (இவனுக்கு நாராயணன் என்றும்பேர்) (நாராயணன் - திருமால்) முன்னேவந்தவன் - இவனுக்கு எதிரேவந்தோனுகிய பரமசிவன், உண்ண - உண்ணுநிற்க, மறையோர்கள் ஓட - வேதியர்களோட, மயங்கும் நஞ்சில் - கலக்கநஞ்சில், சிந்தின நஞ்சின் - சிந்தின விடத்தையுடைய பாம்பின், பகைவன் தன்சேவைக்கு - பகைவனுகிய கருடனதுசேவைக்கு, சென்றனன் - போனேன்—எ-று.

ஒரு புலவனை நோக்கி, ஊரிலுள்ளார் நீ எங்கேபோயிருந்தாயென்று கேட்க, அவன் நான் கருடசேவைக்குப் போனேனென்று சொல்லியது. ()

பேயோவெயின ரமுதாலயத்திற்பிறந்த வுன்னை
யேயோதினைப்புனங் காவல்வைத்தாரெழு பாருமுண்ட
வாயோன்றிருவுந்தி பூத்தோனரங்கண் மணிவரைமேல்
ஆயோவெனுங்குர லந்தோபுனத்தை யழிக்கின்றதே.

இ-ள். பேயோ - பேய்பிடித்ததோ, எயினர் - குறவர், அமுதாலயத்தில் பிறந்த - பாற்கடலிற்பிறந்த, உன்னையேயோ - உன்னையோ, தினைப்புனம் காவல்வைத்தார் - தினைப்புனங் காவலாயமைத்தார்கள், எழுபாரும் உண்ட - எழுலகத்தையுமுண்ட, வாயோன் - பெருவாயையுடையவனும், திருவுந்தி பூத்தோன் - திருவுந்தி மலர்ந்தவனும், அரங்கன் - திருவரங்கனும் ஆகிய அவனது, மணிவரைமேல் - அழகிய மலையின்மீது, ஆயோஎன்னும் குரல் - நீ ஆயோவென்று ஆயாலோட்டுங் குரலானது, அந்தோ - ஐயோ, புனத்தை அழிக்கின்றது - புனத்தை நாசப்படுத்துகின்றது—எ-று.

இது, தினைப்புனத்தில் ஆயாலோட்டுந் தலையின் இனிய குரலோசையைக் கேட்ட தலைமகன், வியந்து உன்குரல்கேட்ட கிளிகள் நம்மினமென்று கருதிக் கூட்டமாகவந்து தினைப்புனத்திலிறங்கி அழிக்கின்றதே யென்று அவளை முன்னிலையாக்கிக் கூறியது. (ரு0எ)

போரேற்றுவந்தமதன் படைக்கஞ்சிப் புகுந்தவென்னைக்
காரேற்றிநீலக் கருங்கடலேற்றிக் கனத்தகொங்கை
மேரேற்றியுந்திச் சுழியாற்றிலேற்றி விரகவல்குல்
தேரேற்றிக்காக்குந் திருவையென்றோகண்டு சேர்குவதே.

இ-ள். போர் எற்றுவந்த - போரிலெதிர்த்துவந்த, மதன்படைக்கு அஞ்சி - மன்மதன்படைக்குப் பயந்து, புகுந்த என்னை - அடைக்கலம்புகுந்த என்னை, கார்எற்றி - கார்போலுங் கூந்தலைக்கொண்டு மறைத்து, நீலக் கருங் கடல் எற்றி - நீலமாகிய கருநிறக்கடலிலேற்றி (கருணைசெய்து) கனத்தகொங்கைமேருஎற்றி - பெருத்ததனமாகியமேருமலைமேலேற்றி, உந்திசுழியாற்றில் எற்றி - உந்தியாகிய சுழியாற்றிலேற்றி, விரகஅல்குல் தேர்எற்றி - விரகத்தையுண்டாக்குகின்ற அல்குலாகிய தேர்மேலேற்றி, காக்கும் திருவை - காப்பாற்றுகின்ற திருமகள் போல்வாளை, கண்டுசேர்குவது - கண்டுகலப்பது, என்றோ - என்நாளோ—எ-று.

இது தலைமகன் கூற்று. (ரு0அ)

மதிசூடியதில்லை யம்பலவாணர் வரையிடத்தே
அதிசயமிக்க வதிசயமேயரன் வீதிவரத்
துதிசெய்துமுவெட்டுத் தும்பியுங்கொண்டு துவண்டொருபெண்
எதிர்நின்றிரண்டு மரங்கரத்தேபிடித் தேகினளே.

இ-ள். மதிசூடிய - பிறையையணிந்த, தில்லையம்பலவாணர்—, வரையிடத்தே - மலையினிடத்தே, அதிசயம் மிக்க அதிசயம்—, (என்னெனின்) அரன்வீதிவர - சிவபெருமான் வீதியிற்பவனிவர (கண்ட) ஒருபெண் - ஒருபெண்ணனவள், துதிசெய்து - துதித்து, மூவெட்டுத்தும்பியும் கொண்டு - இருப்பத்துநான்கு யானையையுங்கொண்டு (இரண்டு கடகங்களைக்கொண்டு), துவண்டு - துவளாநின்று, எதிர்நின்று - எதிரேநின்று, இரண்டுமரம் - இரண்டுமரங்களை, கரத்தேபிடித்து - கையிற்பிடித்து, ஏகினள் - போனாள்—எ-று.

இரண்டுமரம் - ஆல் அத்தி (ஆலத்தி.) கடகம் - கைவளை. (௩0௧)

பூமன்சிரங்கொய்த வண்ணாமலையர் பொருப்பிடத்தே
காமன்கணையுண்ட துவரக்காண்கிலன் கந்தனுக்கு
மாமன்மறைத்தவன் மைந்தன்பகைக்கொடித் தந்தைவந்தால்
நாமுங்கலந்திட லாங்காமனார்பத நாணிடவே.

இ-ள். பூமன் சிரங்கொய்த - தாமரைப்பூவில் வாழ்கின்ற பிரமன் தலையையறுத்த, அண்ணாமலையர் - அண்ணாமலை நாதரது, பொருப்பிடத்து - மலையினிடத்தில், காமன்கணை உண்டது - மன்மதபாணங்களை யுடைத்தாகிய வசந்தகாலம், வரக்காண்கிலன் - வரப்பார்த்திலேன், கந்தனுக்குமாமன் - கந்தனுக்குமாமனாகிய கிருஷ்ணன், மறைத்தவன் - அவனால் மறைக்கப்பட்டவனாகிய சூரியன், மைந்தன் - இவன்மைந்தனாகிய கர்ணன், பகைக்கொடி-இவனுக்குப்பகைவனாகிய அர்ஜுனன்கொடி (அநுமான்), தந்தை - அவன் தந்தையாகியவாயு, வந்தால்—, காமனார்பதம் நாணிட - இந்திரபதவியும் நாணும்படி, நாமும் கலந்திடலாம் - நாமும் கூடலாம்—எ-று.

காமனார் - கற்பகச்சோலைக்குத் தலைவனார். (௩௧0)

செவ்வந்திமாலை சிவந்ததென்றாடிங்கள் சேர்ந்ததென்றாள்
கைவந்தவண்டு கழன்றதென்றாள்கலை சோர்ந்ததென்றாள்
மைவந்தகண்ணி திருவொற்றியூரை மதுரையென்றாள்
எவ்வந்தியோவறியே னிவள்சொன்ன விடுவந்தியே.

இ-ள். செவ்வந்திமாலை - செவ்வந்தியாகிய மாலைக்காலம், சிவந்தது என்றாள் - சிவந்ததென்று சொன்னாள், திங்கள் சேர்ந்ததுஎன்றாள் - சந்திரனும்வந்து சேர்ந்ததென்றாள், கைவந்தவண்டு கழன்றது என்றாள் - கையிலுள்ள வளையல்கழன்றதென்றாள், கலைசோர்ந்தது என்றாள் - ஆடை அவிழ்ந்ததென்றாள், மைவந்த கண்ணி - அஞ்சனமெழுதப்பெற்ற கண்களையுடையவள், திருவொற்றியூரை மதுரையென்றாள்—, இவள்சொன்ன இடுவந்தி - இவள் சொன்ன அநியாயத்துக்கு, எவ்வந்தியோ - எந்தமுடிவு ஏற்படுமோ, அறியேன் - அறிகிலேன்—எ-று.

எவ்வந்தியோ என்பதற்கு எந்தமாலைக்காலமோ என்றும், செவ்வந்தி மாலை என்பதற்கு செவ்வந்திமலர்மாலை என்றும் பொருள் தோன்றுதல் காண்க. (ருகக)

அலைகுளிப்பாட்டுஞ் சலராசியேழு மடங்கவுண்டு
மலைகுளிப்பாட்ட வருங்கொண்டல்காள் தெவ்வர் மார்பில்வெவ்வேற்
கொலைகுளிப்பாட்டுங் குலசேகரன்கொற்கைக் கொம்பின்கண்ணீர்
முலைகுளிப்பாட்டவன்றோ வெம்மைநீர்விட்டு முந்துவதே.

இ-ள். அலைகுளிப்பாட்டும் - அலைகளைத் தம்மிடத்தில் குளிப்பாட்டுகின்ற, சலராசி ஏழும் - கடல்களேழையும், அடங்கவுண்டு - முழுதுமுண்டு, மலைகுளிப் பாட்டவரும் - மலைகளைக் குளிப்பாட்டும் பொருட்டு வருகிற, கொண்டல்காள் - மேகங்களே, தெவ்வர்மார்பில் - பகைவரதுமார்பில், வவ் வேல் கொலை குளிப்பாட்டும் - வெவ்விய வேலாயுதத்தின் கொலைத்தொழிலைக் குளிப்பாட்டுகின்ற, குலசேகரன் - குலசேகரனது, கொற்கை - கொற்கையிலுள்ள, கொம்பின் - பெண்ணினது, முலைகுளிப்பாட்ட அன்றோ- முலைகளைக் குளிப்பாட்டும் பொருட்டல்லவா, நீர் எம்மைவிட்டு முந்துவது- நீங்கள் எம்மைவிட்டு முந்திச் செல்லுவது—எ-று.

வினைமுற்றி மீண்டு வருந்தலைமகன் மேகங்களைநோக்கி, நீர் எம்மினும் முந்திச் செல்லுவது அவளை வருத்திக் கண்ணீரைப் பெருகச் செய்வதற்கே யென்பதாம். (ருகஉ)

குடக்கோடக்கொற்றக் குடைநீரிலோடக் கொடித்தடந்தேர்
வடக்கோடவாரியின் வாயோடவின்மத னோடமைமாத்
தடக்கோடணியுஞ் சிவகயிலாயத்துத் தையலர்வாய்
இடக்கோடநம்மன்பர் தேரோடிவந்த திளங்கொடியே.

இ-ள். குடக்கோடு - மேலைமலையிற் றோன்றுகின்ற, அக்கொற்றக் குடை - அந்த வெண்கொற்றக்குடை, நீரில்ஓட - நீரிலோடவும், கொடிதடம் தேர் - கொடிகள்கட்டிய பெரியதேர், வடக்கு ஓட-வடக்கேயோடவும், வாரியின் வாய்ஓட - கடலின்வாய் ஓடவும், வில்மதன்ஓட - (கருப்பு) வில்லையுடையமன்மதன் ஓடவும், மை - மேகங்களை, மாதடக்கோடு அணியும் - பெரிய விசாலமான சிகரங்களில் அணியப்பெற்ற, சிவகயிலாயத்து - சிவகைலாய மலையில், தையலர்வாய் இடக்குஓட - பெண்களின் வாய்ப்பழிமொழிகளோடவும், நம் அன்பர்தேர் - நம் அன்பரது தேரானது, ஓடிவந்தது - ஓடிவந்தது, இளங்கொடியே - இளங்கொடி போல்வாளே—எ-று.

குடக்கோடு - அஸ்தமனபர்வதம். கொற்றக்குடை - சந்திரன் இது தலைவன்தேர்வரவு தோழி தலைவிக்குச்சொல்லியது. (ருகங)

அத்திக்கொம்பாலை மிகநம்பினுலு மணிதரளப்
பத்திக்குவேறு பழுதுவந்தாலும் பழுதுபடாப்
புத்திக்குயூகிநந் திரண்டவபூபன் பொருப்பின்மன்னு
எத்திக்குமில்லை யுன்றிக்கையல்லாதென்ற னேந்திழைக்கே.

இ-ள். அத்திக்கொம்பு - யானைக்கொம்பானது, ஆலை - ஆலிலையை, மிகநம்பினுலும் - மிகவும்நம்பிச்சார்ந்தாலும், அணிதரளப்பத்திக்கு - அழகிய முத்துவரிசைக்கு, வேறுபழுதுவந்தாலும் - வேறுபழுதுண்டானாலும், பழுது படா - பழுதுபடாத, புத்திக்குயூகி - புத்தியில்யூகியாயிருக்கிறவன், நம்தாண்டவபூபன்—, பொருப்பில்மன்னு - மலையிலுள்ள வேந்தனே, என்றன் ஏந்திழைக்கு - எனது பெண்ணுக்கு, உன்திக்கையல்லது - உன்திக்கையன்றி, எத்திக்குமில்லை - வேறே எந்தத்திக்குமில்லை—எ-று.

அத்திக்கொம்பாலைமிக நம்புதலாவது - யானைக்கொம்புபோன்ற தனங்கள் ஆலிலைக்குச் சமானமான வயிற்றளவு தொங்குதல், தரளப்பத்திக்குப் பழுதுவருதலாவது பல் உதிர்ந்துபோதல். (௩௪௪)

தென்னன்பொருனைத் துறைவாசன்விக்ரமச் சிங்கன்வெற்பில்
பொன்னம்புரிசை யுறையூர்நின்றூர்க்குமிப் போதிரவில்
மன்னன்பிறந்த மதுராபுரிக்குநன் மாநகர்க்கும்
என்னன்பரானவர் காவிரிப்பூம்பட் டினமணங்கே.

இ-ள். தென்னன் - பாண்டியன், பொருனைத்துறை வாசன் - பொருனைத்துறையில் வாழ்பவன், விக்ரமச் சிங்கன்—, வெற்பில் - அவனது மலையில், பொன் அம்புரிசை - பொன்னினுற்செய்யப்பட்ட அழகியமதில்சூழ்ந்த, உறையூர்நின்று ஆர்க்கும் - உறையூர்நின்று கூப்பிடும், இப்போது இரவில் - இந்த இராப்பொழுதில், மன்னன்பிறந்த மதுராபுரிக்கும் நன்மாநகர்க்கும்—, என் அன்பர் ஆனவர் காவிரிப்பூம்பட்டினம்—, அணங்கே - பெண்ணே—எ-று.

உறையூர் - கோழி, மதுராபுரி - கூடல், காவிரிப்பூம் பட்டினம் - புகார். என் அன்பர் கோழிகூப்பிடும்போதும் கூடலுக்குவரார் என்பதாம். இது தலைவி தோழிக்குச் சொல்லியது. (௩௪௫)

வில்லும்பிறையுந் திறையிடுவாணுதன் மெல்லியலாய்
எல்லுங்குமுத மலருங்கண்டாயிரு கோங்கரும்பும்
கல்லும்பொருதும் வனமுலைக்கான மணியதன்பேர்
சொல்லும்பெட்டெழுது பிரமனுமானுந் தொழத்தகுமே.

இ-ள். வில்லும்பிறையும்—, திறையிடு - கப்பமிடுகிற, வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையுடைய, மெல்லியலாய் - பெண்ணே, எல்லுங்குமு

தம் அலரும் - பகற்காலத்திலும் குமுதமலர்மலராநிற்கும், இருகோங்கு அரும்பும் - இரண்டு கோங்கரும்புகளையும், வல்லும் - சூதாடுகருவியையும், பொருத - நிகர்த்த, வனமுலைக்கு ஆனமணி - அழகியமுலைக்கானமணி, அதன்பேர் சொல்லும்பொழுது - அதன்பேரைச் சொல்லும்போது, பிரமனும் மாலும் தொழுவார்கள்—எ-று.

• வனமுலைக்கானமணி - மாசிலாமணி திருமுல்லைவாயில் மாசிலாமணி. ()

அலையாழிநஞ்சை யமுதாவருந்தி யமரரெல்லாம்
நலியாமற்காத்த வருணைசலேசர்தந் நல்வரைமேல்
நிலையாயிருக்கும் விலைமாதரேயென்னை நீர்கொடுபோய்ப்
புலியூரைக்காட்டிக் கலையூரிற்சேர்த்திடிற் புண்ணியமே.

இ-ள். அலையாழி நஞ்சை - அலைகளையுடைய பாற்கடலில் உண்டாகிய விஷத்தை, அமுதா அருந்தி - அமுதாகப்புசித்து, அமரர் எல்லாம் - தேவர்களெல்லாம், நலியாமல் - வருந்தாமல், காத்த - காத்தருளின, அருணைசலேசர் தம்நல்வரைமேல்—, நிலையாயிருக்கும் விலைமாதரே—, என்னை நீர் கொடுபோய் - என்னை நீங்கள் அழைத்துக்கொண்டுபோய், புலியூரைகாட்டி—, கலையூரில் சேர்த்திடின்—, புண்ணியம் - உமக்குப்புண்ணியமுண்டாகும்—எ-று.

புலி - புண்டரீகம். (தாமரை - குசம்), கலையூர் - ஆடையூர் - (கடிதடம்)

தானோர்வலையினுந் தாழ்வுபடாமற் சகலரையும்
வானோரையுங்கொண்டு வாரிக்குளாலித்து வானரத்தின்
கோனோடெழுபது வெள்ளத்தொடேவந்து கொக்கைக்கொன்ற
மீனோதிருவல்லிக் கேணிக்குள்ளேவந்து மேவியதே.

இ-ள். தான் ஓர்வலையினும் தாழ்வுபடாமல் - தான் ஒருவலையிலும் அகப்படாமல், சகலரையும் வானோரையும் கொண்டு - எல்லாரையும் தேவரையும் கொண்டு, வாரிக்குள் ஆலித்து - கடலில் ஆரவாரித்து, வானரத்தின் கோனோடு - வானரராஜனாகிய சுக்ரீவனோடு, எழுபது வெள்ளத்தோடேவந்து - எழுபதுவெள்ளம் வானரப்படையோடு வந்து, கொக்கைகொன்ற - மூலநாளில் பிறந்த அசுரரைக்கொன்ற, மீனோ - மீன்தானோ; திருவல்லிக்கேணிக்குள்ளேவந்து மேவியது - திருவல்லிக் குளத்தினுள்ளேவந்து பொருந்தி வாழ்வது—எ-று.

கொக்கு - மூலநாள், (மூலநாளிற் பிறந்த அசுரர்.) (நுகஅ)

கிழக்கோதந்தெற்கி லிளந்தென்றன்மேற்கினிற் கீற்றுப்பிறை
அழற்கோலுமுத்தர திக்கினில்வாடை யதுவுமன்றிக்

குழற்கோகிலமென் குலக்கோகிலத்தைக் கொடுமைசெய்ய
வழக்கோசொல்சண்பக மாறுமதுரை வரோதயனே.

இ-ள். கிழக்கு ஓதம் - கிழக்கேகடல், தெற்கில் இளந்தென்றல்—, மேற்கினில்—, கீற்றுப்பிறை - பிறைக்கீற்று, அழல்சோலும் உத்தரதிக்கினில் வாடை - நெருப்பைக் கொண்டிருக்கிற வடதிசையில் வாடைக்காற்று, அதுவும் அன்றி—, குழல் கோகிலம் - வேய்ங்குழலோடுகுயிலும், என் - எனது, குலக் கோகிலத்தை - மேன்மையான குயில்போல்வாளாகியபெண்ணை, கொடுமை செய்ய - கொடுமைசெய்ய, வழக்கோ - நீதியோ, சொல் - சொல்லுவாய், சண்பகமாறு - சண்பகபாண்டியனே, மதுரை வரோதயனே - மதுரையில்வரத்தினால் அவதரித்தவனே—எ-று. (ருகக)

காவியனந்த மெடுத்தான்மதன்கைக் கரும்பெடுத்தான்
மேவியனந்த வனம்புகுந்தானினி வேட்டஞ்செய்வான்
ஆவியனந்தமுண் டோவுயிர்தானவிட் டகலுமுன்னே
தேவியனந்திக் கெதிரோடிவிண்ணப்பஞ் செய்திடுமே.

இ-ள். மதன் - மன்மதன், காவி அனந்தம் எடுத்தான் - குவளைமலர்கள் அநேகங்களாக எடுத்தான், கை - கையில், கரும்பு எடுத்தான் - கரும்புவில்லை யெடுத்தான், மேவி அனந்தவனம் புகுந்தான் - முடிவற்றதாகிய காட்டில் பிரவேசித்தான், (மேவு இயல் நந்தவனம் புகுந்தான் - பொருந்திய அழகை யுடைய நந்தவனத்தில் பிரவேசித்தான்) இனி வேட்டம் செய்வான் - இனி வேட்டையாடுவான், ஆவி அநந்தம் உண்டோ - பலவுயிர்களுண்டோ, உயிர் தான்விட்டு அகலுமுன்னே - இந்த ஒருயிரும்விட்டு நீங்குவதற்கு முன்பே, தே இயல் - அழகுபொருந்திய, நந்திக்கு - நந்தி யென்னும் சிவபெருமானுக்கு, எதிர் ஓடி - எதிரே விரைந்துசென்று, விண்ணப்பம் செய்திடும் - விண்ணப்பம் செய்திடுங்கள்—எ-று.

தேவியனந்தி - தெய்வத்தன்மைநிறைந்த நந்தியெனினு மமையும். ()

ஒன்றைவிட்டொன்றைவிட் டொன்றுவிட்டான்மத னொன்றுவிட்டா
நின்றைந்திலொன்றெடுத் தேவநின்றுமெனடுத் தேவுமுன்னே [ன்
குன்றையில்வாழ்க்கைத் தளவாய்குமாரநற் சாமிமுன்செங்
குன்றையிற்சென்றொரு காலிருகாற்சொலுங் கோதையரே.

இ-ள். மதன் - மன்மதன், ஒன்றை விட்டு - தாமரை மலராகிய ஒருபாணத்தைவிட்டு, ஒன்றைவிட்டு - மாமலராகிய மற்றொரு பாணத்தைவிட்டு, ஒன்றுவிட்டான் - முல்லைமலராகிய மற்றொருபாணத்தை விட்டான், ஒன்று விட்டான் - அசோகமலராகிய மற்றொருபாணத்தைவிட்டான், நின்று-நிதானித்து, ஐந்தில் ஒன்று - பஞ்ச பாணங்களில் ஒன்றாகிய நீலமலராம்பையும்,

எடுத்து எவ்கின்றான் - எடுத்துப் பிரயோகிக்க நிற்கிறான், எடுத்து ஏவ முன்னே—, குன்றை இல்வாழ்க்கை - குறைவில்லாச் செல்வத்தையுடைய, தளவாய் - தளவாயாகிய, நல் குமாரசாமிமுன் - அழகிய ஸ்ரீமாரசாமிக் கெதிரே, செங்குன்றையில்சென்று - திருச்செங்குன்றூரிற்போய், ஒருகால் இருகால் சொல்லும் - ஒருதரம் இரண்டுதரம் சொல்லுங்கள், கோதையரே - பெண்களே—எ-று.

கோதையர் - பூமாலையை யணிந்தவர், (கூந்த லழகுள்ளவர்.) (நஉக)

தண்டுஞ்சிவிகையுஞ் சிங்காதனமுந் தமிழ்க்குதவும்
கண்டன்புகார்வரைக் காரிகையே கருநீர்தனில்
உண்டுண்டெனக்குறி காட்டியவேந்தற் குயிரளித்த
வண்டுண்டுமிழ்ந்த தன்றோமடவீரிந்த வையகமே.

இ-ள். தண்டும் - படையும், சிவிகையும் - பல்லக்கும், சிங்காதநமும் - சிங்காதனமும், தமிழ்க்கு உதவும் - தமிழ்ப்பாடல்களுக்குப் பரிசிலாகக்கொடுக்கின்ற, கண்டன் - சோழனது, புகார்வரைக்காரிகையே - புகார் மலையிலுள்ளபெண்ணே, கழுநீரதனில் - பாவங்களைக் கழுவுகின்றநீரில், உண்டு உண்டு என - (சில) அநர்த்தங்கள் உண்டு உண்டு என்று, குறிகாட்டி - அடையாளங்காட்டின, அ எந்தற்கு - அந்த வீமராஜனுக்கு, உயிர் அளித்த - உயிரைத் தந்த, வண்டு - கிருஷ்ணனாகிய வண்டு, உண்டு உமிழ்ந்த தன்றோ - உண்டு உமிழ்ந்ததல்லவா, மடவீர் - அறியாமையுள்ள ஜநங்களே, இந்த வையகம் - இவ்வுலகம்—எ-று.

கழுநீர் - குவலயம், (பூமி) (தெய்வம்) உண்டுண்டெனக் குறிகாட்டிய வேந்தல் - பிரகலாதன், வண்டு - (அரி) திருமால். இப்படிச் சொல்லினும்பொருந்தும். கிருஷ்ணன் கதையை பாரதத்திற் காணலாம். (நஉஉ)

அரியெச்சில்செய்யு மரவெச்சிலும்மை யரியெச்சிலும்
எரியெச்சிலோடு முனியெச்சிலும்பொர வேந்திழையாள்
கரியெச்சிலாயினள் விக்ரமச்சோழன் கனத்தகுன்றில்
புரியெச்சிலுண்ட வரியெச்சிலும் புரப்பவனே.

இ-ள். விக்ரமச்சோழன் கனத்தகுன்றில் - விக்ரமச் சோழனது பெரிய மலையில், புரி எச்சில் உண்ட - முறுக்கப்பட்ட கயிற்றால் கட்டுண்ட, அரி எச்சில் - திருமாலின்எச்சிலாகிய பூமியை, நாளும் - நாள்தோறும், புரப்பவனே - காத்தருள்வோனே, அரி எச்சில்செய்யும் அரவு எச்சிலும் - கூடலை பெச்சிலாக்கின பாம்பினெச்சிலாகிய தென்றற்காற்றும், மை அரி எச்சிலும் - கருவண்டினுடைசையும், எரி எச்சிலோடு - எரிகின்ற (பாம்பின்) எச்சிலாகிய சந்திரனோடு, முனி எச்சிலும் - அகத்திய முனிவரது எச்சிலாகிய கடலும், பொர

பொருதலால், ஏந்திழையாள் - என்பெண், கரி எச்சில் ஆயினள் - யானையெச்சிலாகிய விளங்கனியானாள், (ஆதலால் இவளை ஆதரித் தருளவேண்டும்) எ-று.

இது தோழிகூற்று. (கஉக)

ஒருமானைச்சீதை பிடிக்கறியாம லுலகளந்த
பெருமானைமானைப் பிடியுமென்றேபிடி யாமற்கொல்ல
வரும்மானையேந்திய கைத்தலத்தார் திரு வல்லைவெற்பில்
இருமானைச்சேர்த்தொரு கையாற்பிடித்திட்ட தெவ்வண்ணமே.

இ-ள். சீதை - சீதாதேவியானவள், ஒருமானை பிடிக்கறியாமல் - ஒருமானைப் பிடிக்கவகையறியாமல், உலகு அளந்தபெருமானை - உலகங்களை அளந்தருளின ஸ்ரீராமமூர்த்தியைநோக்கி, மானை பிடியும் என்று - மானைப் பிடித்துத்தாரும் என்றுசொல்லி, (பெருமான்) பிடியாமல் கொல்ல - பிடிக்காமல் கொல்ல, வரும்மானை - தாருகாவனத் திருடியர் ஏவலால் வந்தமானை, ஏந்திய - தாங்கிய, கைத்தலத்தார் - திருக்கையை யுடையவராகிய சிவபெருமானது, திருவல்லை வெற்பில் - திருவல்லைமலையில், இருமானை - இரண்டு மான்களை, சேர்த்து - சேர்த்து, ஒருகையால் பிடித்திட்டது - ஒருகையினால் பிடித்திட்டது, எவ்வண்ணம் - எப்படி—எ-று.

இது நாணிக் கண்புதைத்தல் என்னுந்துறை. இடையூறுகிளத்தல் எனவுங் கூறுவர். சீதைபிடிக்கச்சொன்ன மான் மாரீசன். திருவல்லை - ஓர் சிவஸ்தலம். இருமான் என்றது இரண்டுகண்களை. (கஉச)

கங்கையர்தாளுடை யானரங்கேசன் கனகிரிமேல்
மங்கையென்னாவிகொல் கூற்றங்கொலோமற்றுங் கன்னல்வில்லேந்
துங்கையன்றானோ தெரியாதசோகஞ்செய் சூதமுல்லை
பங்கையம்விட்டிங்ங னேமுழுநீலங்கைப் பற்றியதே.

இ-ள். கங்கை - கங்கையை, அம் தாள் உடையான் - அழகிய திருவடியிலேயுடையவன், அரங்கேசன் - திருவரங்கநாதன், (அவனது) கனகிரிமேல் - பெரிய மலையின்மீதுள்ள, மங்கை - மங்கையானவள், என் ஆவிகொல் கூற்றம் கொல்லோ - என் உயிரைக் கொல்லுகின்ற யமன்தானோ, மற்றும் - மேலும், கன்னல்வில் ஏந்தும் கையன் தானோ - கருப்புவில்லைத் தாங்குகின்ற கையையுடையவனாகிய மன்மதன்றானோ, தெரியாது - அறியப்படாது, அசோகம் - அசோகமலர், செஞ்சூதம் - செவந்தமாமலர், முல்லை-முல்லைமலர், பங்கையம் - தாமரைமலர் (ஆகிய இவற்றை) விட்டு - ஒழித்து, இங்ஙனே - இவ்வாறு, முழுநீலம் - கருங்குவளை மலரை, கைப்பற்றியது - கைக்கொண்டதினால்—எ-று.

இதுவும் நாணிக் கண்புதைத்தல். முழுநீலம் என்றது கண்களை. (கஉரு)

விண்டீரிருவர்க்கு வேதப்பொருளைமெல் லாலடிக்கீழ்ப்
பண்டீரங்கொண்டு பகர்பிரமீசர் பனிவரையில்
கண்டீரவமெனும் நுண்ணிடையீரிந்தக் காவியங்கைக்
கொண்டீரருத்தமுஞ் செப்பிடினீரென் குலகுருவே.

இ-ள். ஈரிருவர்க்கு - சநகாதியர் நால்வருக்கு, வேதப்பொருளை - வேதார்த்தத்தை, மெல் ஆல் அடிக்கீழ் - மிருதுவாகிய கல்லாலி னிழலின்கீழே, பண்டு - முற்காலத்தில், ஈரங்கொண்டு - அன்புகொண்டு, பகர் - சொன்ன, பிரமீசர் - பிரமேசரது, பனிவரையில் - குளிர்ந்த மலையின்கண், கண்டீரவம் என்னும் நுண் இடையீர் - சிங்கமென்று சொல்லத்தகுந்த நுண்ணிய இடையையுடையவரே, இந்தக்காவியம் கைக்கொண்டீர் - இந்தக்காவியத்தைக்கைக் கொண்டீர், அருத்தமும் செப்பிடின் - பொருளும் சொல்லுவீரானால், நீரே என்குலகுரு - நீரே என்குலகுருவாவீர்—எ-று.

காவி - நீலமலர், (கண்) அங்கைக்கொண்டீர் என்றது கண்புதைத்தலை. இதுவும் நாணிக்கண் புதைத்தல். (கஉசு)

எறிக்கும்புகழ்க்கச்சி யேகாம்பரசம்ப னெண்டிசையும்
பொறிக்கும்புலியான் புயம்வேட்டபின்னிந்தப் பூவையன்னாள்
வெறிக்குங்குமக்கொங்கை மீதேவிழிசொரி வெள்ளந்துள்ளித்
தெறிக்குந்திவலை யழிக்குஞ்சிந்தூர திலகத்தையே.

இ-ள். எறிக்கும்புகழ் - வீசுகின்ற புகழையுடைய, கச்சி - கச்சியில் வாழ்கின்ற, ஏகாம்பர சம்பன்—, எண்திசையும் - அட்டதிக்குகளிலும், பொறிக்கும் - எழுதின, புலியான் - புலிக்கொடியை யுடையான்—, (அவனது) புயம் வேட்டபின் - தோள்களை விரும்பினபிறகு, இந்தப்பூவை அன்னாள் - இந்தப் பூவையை நிசர்த்தவளது, வெறி - வாசனை பொருந்திய, குங்குமம் - குங்குமக்குழம்பணிந்த, கொங்கைமீது - தனங்களின்மீது, விழிசொரி - கண்கள் பொழிகின்ற, வெள்ளம் - நீர்ப்பெருக்கானது, துள்ளித் தெறிக்கும் - ததும்பித்தெறிக்கின்ற, திவலை - துளியானது, சிந்தூரதிலகத்தை அழிக்கும் - சிந்தூரப்பொட்டினை அழிக்கின்றது—எ-று.

இது தோழிசொல்லியது. பூவை - நாகணவாய்ப்புள். (கஉஎ)

நேற்றினுமின்று மிகுந்ததுகாத லிலவெனுங்கூன்
கூற்றினுமன்னை கொடியள்கண்டாய்மள்ளர் கொன்றபழஞ்
சேற்றினுமேதிக் குளம்பானெருக்குண்ட செங்கருப்பஞ்
சாற்றினுஞ்சங்கந் தவழுங்கொல்லாபுரிச் சந்திரனே.

இ-ள். மள்ளர் கொன்ற - உழவர் துவைத்த, சேற்றினும் - சேற்றிலும், மேதிக்குளம்பால் - எருமைக்குளம்புகளால், நெருக்குண்ட - மிதியுண்ட, செ

ங்கருப்பஞ்சாற்றினும் - செங்கரும்பின் சாற்றிலும், சங்கம் தவழும் - சங்குகள் தவழ்கின்ற, கொல்லாபுரி - கொல்லாபுரியில் வாழ்கின்ற, சந்திரனே—, நேற்றினும் - நேற்றைப்பார்க்கிலும், இன்று - இன்றைக்கு, காதல்மிகுந்தது - ஆசை அதிகரித்தது, நிலவு என்னும் - பிறைஎன்கிற, கூன்கூற்றினும்-கூனலையுடைய யமனைப்பார்க்கிலும், அன்னை - தாயானவள், கொடியள் - கொடியவள் (ஆதலால் இவளையாதரிக்கவேண்டும்)—எ-று.

சந்திரன் - ஒரு சீமான், இது தோழிகூற்று. (௩௨அ)

சொல்லியற்சொல்லி லமுதானசொல்லியைச் சொற்கருப்பு
வில்லியைமோக விடாய்தணிப்பாளை விழியம்பினல்
கொல்லியைக்கொல்லியம் பாவையொப்பாளைக் குளிரொற்றியூர்
வல்லியைப்புல்லிய கைக்கேயிவள்வந்து வாய்த்ததுவே.

இ-ள். சொல் - சொல்லப்பட்ட, இயற் சொல்லில் - இயற்சொற்களில், அமுது ஆன சொல்லியை - அமிர்தம்போன்றசொல்லையுடையவளை, சொல்-புகழையுடைய, கருப்புவில்லியை - கரும்புவில்லையுடைய மன்மதனை, மோக விடாய் தணிப்பாளை - மோகவிடாயைத் தணிவிப்பவளை, விழி அம்பினல்-தன் கண்களாகிய அம்புகளால், கொல்லியை - ஆடவரைக்கொல்லுகிறவளை, கொல்லி அம்பாவை ஒப்பாளை - கொல்லியம் பாவையை நிகர்த்தவளை, குளிர் ஒற்றியூர் வல்லியை - குளிர்ந்த ஒற்றியூரில் ஒருகொடியை நிகர்த்தவளை, புல்லிய - தழுவின, கைக்கே - கைக்கோ, இவள்வந்து வாய்த்தது - இவள் வந்து கிடைத்தது—எ-று.

கொல்லியம்பாவை - கொல்லிப்பண்பாடுகின்ற அழகியபிரதிமை. இது நல்லகட்டழகியைத் தழுவின ஒருநாயகன் அவளில்லாதகாலத்தில் தனக்குக் கிடைத்த ஒருகுரூபிப்பெண்ணைக்குறித்து வெறுத்துச் சொல்லியது. (௩௨௯)

நீரகங்கொண்ட வயித்தியநாதர் நெடுங்கிரிவாய்ச்
சீரகங்கண்டுநற் காஞ்சித்தலத்தையுஞ் சேவைசெய்து
வாரகங்கொண்ட வடமலைமாலைமனத்தடக்கித்
தீரகங்கொண்ட நம்மன்பனைப்போலிச் செகத்திலையே.

இ-ள். வயித்தியநாதர் - வயித்தியநாதரது, நீர் அகம்கொண்ட - நீர் நிலைகள் சூழப்பெற்ற, நெடுங் கிரிவாய் - நெடிய மலையில், சீர் அகம்கண்டு - சிறப்பான தலங்களைத்தரிசித்து, நல்காஞ்சி தலத்தையும் சேவைசெய்து - நன்மையாகிய காஞ்சிக்ஷேத்திரத்தையும் சேவித்து, வார் அகம்கொண்ட-நீட்சியைத் தன்னிடத்தேகொண்ட, வடமலை - வடமலையில் வாழ்கின்ற, மாலை - திருமாலை, மனத்து அடக்கி - மனத்துக்குள்ளேயடக்கி, தீரகம்கொண்ட - தைரியத்தைக்கொண்டு நாட்டின, நம் அன்பனைப்போல - நமது தலைவனைப்போல, இச்செகத்து இல்லை - இவ்வுலகத்திலில்லை—எ-று.

காஞ்சித்தலம்-காஞ்சியென்னும் ஓர் ஆபரண விசேடத்தையணிந்த நிதம்பப்ரதேசம். வார் அகம்கொண்ட வடமலை - கச்சிடம்கொண்ட தனம். மாலை-ஆசையை, தீரகம் - தீரம், வடமலை - முத்துவடம் அலைகின்ற, திருவேங்கடமலை. (ருரு0)

கவிகற்றவர்க்குங் கணிகற்றவர்க்குங் கம்மாளருக்கும்
ஓவிகற்றவர்க்கு முபாத்திகளுக்கு முயர்ந்தமட்டும்
குவிவைக்குமொட்டர்க்குங் கூத்தாடிகட்குங் குருக்களுக்கும்
இவரெட்டுப்பேர்கட்கு நீங்காத்தரித்திர மென்றைக்குமே.

இ-ள். கவி கற்றவர்க்கும் - கவிசொல்லக் கற்றவர்களுக்கும், கணிகற்றவர்கட்கும் - சோதிடம் கற்றவர்கட்கும், கம்மாளருக்கும் - தட்டாருக்கும், ஓவிகற்றவர்க்கும் - சித்திரமெழுதக் கற்றவர்க்கும், உபாத்திகளுக்கும் - உபாத்தியாயர்களுக்கும், உயர்ந்தமட்டும் குவிவைக்கும் ஒட்டர்க்கும் - உயர்ந்த அளவுக்குச் சுவர்வைக்கும் ஒட்டருக்கும், கூத்தாடிகட்கும் - கூத்தாடுவோருக்கும், குருக்களுக்கும் - குருக்களுக்கும், இவர் எட்டுப்பேர்கட்கும் - இந்த எட்டுப்பேருக்கும், என்றைக்கும் - எந்நாளும், நீங்காதரித்திரம்-நீங்காததரித்திரமே குடிகொண்டிருக்கும்—எ-று.

கம்மாளர் என்பதில் தச்சன் கொல்லன் முதலியோர்களும் அடங்குவார்கள். (ருருக)

தனங்கடந்தானைகள் யாவையும்வெல்லுஞ் சரநயன
அனங்கடந்தானை நடைசொல்லிடைமுலை யாளுடனே
வனங்கடந்தானைநல் லாழ்வார்கள்பன்னிரு வர்க்குமிகத்
தனங்கடந்தானைத் துதிநெஞ்சமேநற் கதிபெறவே.

இ-ள். தனங்கள் - செல்வங்கள், தம்தானைகள்யாவையும் - நமது படைகள் ஆகிய எல்லாவற்றையும், வெல்லும் - வெல்லுகின்ற, சரநயநம் - அம்பு போன்ற விழியினையும், அனம் - அன்னத்தையும், கள் - தேனையும், தந்து-நூலிழையையும், ஆனை - யானையையும் நிகர்த்த, நடைசொல் இடைமுலையாளுடனே, நடையையும் சொல்லையும் இடையையும் தனங்களையும் உடையவளாகிய சீதாபிராட்டியுடனே, வனம் கடந்தானை - தண்டகாரணியத்தைக் கடந்தவனாகிய ஸ்ரீராமபிரானை, நல் ஆழ்வார்கள் பன்னிருவர்க்கும் - நன்மையையுடைய ஆழ்வார்கள் பன்னிருவருக்கும், மிகக்கனங்கள் தந்தானை - மிகவும்பெருமையைத் தந்தவனை, நல்கதிபெற - நற்கதியையடையும்பொருட்டு, நெஞ்சமே - மனமே, துதி - நீ தோத்திரம் பண்ணுவாயாக—எ-று. (ருருஉ)

மார்க்கட்டுறுத பருவமடாவிள வஞ்சிக்கொடி
பூக்கட்டடாமதம் பொங்கட்டடாமதம் பொங்கிப்பொங்கி

வேர்க்கட்டடாதன பாரமிரண்டும் வெளியிலெட்டிப்
பார்க்கட்டடாநீ பொறடாபராக்ரம பாண்டியனே.

இ-ள். பராக்ரம பாண்டியனே—, மார்கட்டு உருத பருவமடா - தனங்கள் அடி கோலாதபருவமடா, இளவஞ்சிக்கொடி பூக்கட்டடா - இளவஞ்சிக் கொடிபோல்வாள் பேரறிவை யடையட்டுமடா, மதம்பொங்கட்டடா - மதம் பொங்கிப் பொங்கி வேர்க்கட்டடா, தனபாரம் இரண்டும் வெளியில் எட்டிப் பார்க்கட்டடா,—(அதுவரைக்கும்) நீ பொறடா - நீபொறுத்திரடா—எ-று.

தலைமகளது இளமைத் தன்மையைத் தோழி தலைமகனுக்குச் சொல்லியது. (௩௩௩)

சின்னஞ்சிறுக்கிநற் சிற்றுடைக்காரிபொற் சிற்றிடைச்சி
அன்னநடையுடன் கைவீச்சொன்றேபெறு மைம்பதுபொன்
வன்னமுலையும் வில்நெற்றித்திலதமு மார்பழகும்
இன்னம்பெரியர் விலைசொல்லவஞ்சுவ ரேந்திழைக்கே.

இ-ள். சின்னஞ்சிறுக்கி—, நல் சிற்றுடைக்காரி—, பொன் சிற்றிடைச்சி - அழகிய, சிறிய இடையையுடையவள், அன்ன நடையுடன் - அன்ன நடைநடத்தலோடு, கைவீச்சு ஒன்றே - கைவீச்சு ஒன்று மாத்திரமே, ஐம்பதுபொன் பெறும் - ஐம்பதுபொன் விலைபெறும், வன்னம் முலையும் - அழகிய தனங்களும், வில் நெற்றி திலதமும் - வில்லை நிகர்த்த நெற்றிப் பொட்டும், மார்பு அழகும் - மார்பின் அழகும் (ஆகிய இவைகளையுடைய), ஏந்திழைக்கு - இந்தப்பெண்ணுக்கு, இன்னம் பெரியர் - இன்னமும்பெரியோர், விலை சொல்ல அஞ்சுவர் - விலைசொல்ல அஞ்சுவார்கள்—எ-று.

இது தோழி தலைமகளது அவயவத்தழகைத் தலைமகனோடு சொல்லியது. (௩௩௪)

மடைகெண்டைசூழ்வயற் றென்குருகாபுரி வஞ்சியுன்றன்
இடைகண்டவர்க்குப் பரலோகமுண்டுன் னிரண்டுவிழிக்
கடைகண்டவர்க்குக் கயிலாயமுண்டு கதலியடித்
தொடைகண்டவருக்குத் தேவேந்த்ரபோகமுந் தோன்றுறுமே.

இ-ள். மடைகெண்டை சூழ்வயல் - நீர்மடைகளில் கெண்டை மீன்கள் உலாவுகின்ற வயல்களையுடைய, தென் குருகா புரிவஞ்சி - தென்குருகையில் வாழ்கின்ற வஞ்சிக்கொடிபோல்வாளே, உன்றன் இடைகண்டவர்க்குபரலோகம் உண்டு - உன் இடையைக்காணப் பெற்றோருக்குப் பரலோக முண்டாம், உன் இரண்டுவிழிக் கடைகண்டவர்க்கு கயிலாயம் உண்டு - உன் இரண்டு கடைக்கண்களைக்கண்டவர்க்குக்கயிலாயவாசம்சித்திக்கும், கதலி அடி தொடை

கண்டவருக்கு - வாழைத்தண்டுபோன்ற, தொடையைக்கண்டவர்க்கு, தேவேந்த்ரபோகமும் தோன்றுறும் - தேவேந்த்ரபோகமும் உண்டாகும்—எ-று.

போகம் - சுகாநுபவம். இது தலைமகன்சொல்லியது. (நுடுரு)

காத்திருந்தாலுங் கலிதீருமேயென் கண்ணுட்டிமுகம்
பார்த்திருந்தாலும் பசிதீருமேயவள் பக்கத்திலே
வீற்றிருந்தாலும் வினைதீருமேமெல்லி மென்றனத்தைச்
சேர்த்தணைத்தாலுஞ் சிவயோகஞானமுஞ் சித்திக்குமே.

இ-ள். காத்திருந்தாலும் கலிதீருமே - இவளைக் காத்துக்கொண்டிருந்தாலும் வறுமைநீங்கிவிடுமே, என்கண்ணுட்டிமுகம் பார்த்திருந்தாலும் பசிதீருமே—, அவள்பக்கத்திலே வீற்றிருந்தாலும் - அவள் நமது பக்கத்திலே வீற்றிருந்தாலும், வினைதீருமே - நமது துன்பங்கள் நீங்கிவிடுமே, மெல்லி - மெல்லியலாளுடைய, மெல்தனத்தை - மெல்லிய தனங்களை, சேர்த்து அணைத்தாலும் - சேர்த்து அணைத்துக்கொண்டாலும், சிவயோகஞானமும் சித்திக்குமே - சிவயோகஞானங்களும் சித்தியாகும்—எ-று.

சிவயோகஞானம் - சிவயோகம் - சிவஞானம். சித்தித்தல் - கைகூடுதல். இது ஒருநாயகன் ஒருநாயகியைப் புகழ்ந்து சொல்லியது. (நுடுசு)

தாளத்தனத்தி யதிமோகவல்லிநற் சர்க்கரைப்பெண்
வாளொத்தவேல்விழி யுள்ளவள்காணிவள் மார்பின்முலை
ஆளைத்துரத்தி யெதிர்த்தோரைக்குத்தி யதட்டிநின்று
மீளத்திரும்பி யிளைஞரைப்பார்த்து வெருட்டியதே.

இ-ள். தாளம் - கைத்தாளம்போன்ற, தனத்தி - தனங்களையுடையவள், அதிமோகவல்லி - மிகுமோகத்தை யுண்டாக்குகின்ற ஒருகொடிபோல்பவள், நல் சர்க்கரைப்பெண் - நல்லசர்க்கரைபோலும் பெண், (இவள்) வாள் ஒத்த - வாள்போன்ற, வேல்விழி உள்ளவள் - வேற்கண்ணை யுடையாள், இவள்மார்பில் முலை - இவளது மார்பிலுள்ள தனம், ஆளை துரத்தி—, எதிர்த்தோரைக் குத்தி—, அதட்டிநின்று—, மீளதிரும்பி - மறுபடியும் திரும்பி, இளைஞரைபார்த்து வெருட்டியது - இளங்குமாரைப் பார்த்து அச்சுருத்தியது—எ-று.

இது ஒரு விடபுருடன் ஒருபெண்ணின் தனத்தை நோக்கிப் புகழ்ந்து சொல்லியது. (நுடுஎ)

மங்காதகீர்த்தியன் ருண்டவராய மகிபன்வெற்பில்
சங்கீதவல்லியை மார்போடணைத்துச் சரசஞ்செய்து
இங்கிதமாக விருவருங்கூடி யிருக்கையிலே
பொங்கோதவாரியின் மீதேநிலவு புறப்பட்டதே.

இ-ள். மங்காத கீர்த்தியன் - அழியாத கீர்த்தியையுடையவன், தாண்டவராயமகிபன் - தாண்டவராயபூபன், (அவனது) வெற்பில் - மலையில், சங்கீதவல்லியை - சங்கீதத்தில் வல்லவளாகிய இந்தப்பெண்ணை, மார்போடு அணைத்து—, சரசஞ்செய்து—, இங்கிதமாக - இனிதாக, இருவரும் கூடி இருக்கையிலே—, பொங்கு - பொங்குகின்ற, ஓதம் - அலைகளையுடைய, வாரியின்மீது - கடலின்முகட்டில், நிலவு புறப்பட்டது - சந்திரன் உதித்தது எ-று.

இது தலைவியோடு கூடி விளையாடிக்கொண் டிருக்கும் தலைமகன் நிலாத் தோற்றத்தைக் கண்டு களித்துச் சொல்லியது. (௩௩அ)

ஆறாருஞ்செஞ்சடை யம்பலவாண ரணிவரைமேல்
நீராடிப்போகின்ற நேரிழையேயந்தி நேரத்திலே
சீராடிக்குங்குமக் கொங்கையைக்காட்டிச் சிரித்தொருபெண்
போருள்பிடிபிடி யென்றேநிலவு புறப்பட்டதே.

இ-ள். ஆறுஆரும் - கங்கையாறுபொருந்திய, செஞ்சடை - செஞ்சடையையுடைய, அம்பலவாணர் - அம்பலவாணரது, அணிவரைமேல் - அழகிய மலையின்மேல், நீராடிப்போகின்ற நேரிழையே - நீரில்முழுகிவிட்டுப் போகிற பெண்ணே, அந்திநேரத்திலே—, சீராடி—, குங்குமக்கொங்கையை காட்டி—, சிரித்து—, ஒருபெண்போருள்—, பிடிபிடியென்று—, நிலவுபுறப்பட்டது - நிலவுவெளிப்பட்டது—எ-று.

இதுவுந் தலைமகன் சொல்லியது. (௩௩௯)

சித்தமகிழ்ந்து வருஞ்சொக்கநாதர் செழுங்கிரிமேல்
மெத்தைவிரித்ததின் மேலேயிருவரு மேவிச்செவ்வாய்
முத்தங்கொடுத்து முகத்தோடணைத்து முலைவருடி
நித்தமுங்கொஞ்சி விளையாடநல்ல நிலாவிதுவே.

இ-ள். சித்தமகிழ்ந்துவரும் - திருவுளமகிழ்ந்து வருகின்ற, சொக்கநாதர் செழுங்கிரிமேல் - சொக்கநாதரது செழியமலையின்மேல், மெத்தைவிரித்து—, அதின்மேலே—, இருவரும் மேவி - இருவரு மிருந்து, செவ்வாய் முத்தம் கொடுத்து—, முகத்தோடு அணைத்து—, முலைவருடி - தனத்தைநெருடி, நித்தமும் - நாள்தோறும், கொஞ்சிவிளையாட நல்லநிலா இது—எ-று.

இதுவும் நிலவைக்கண்டுமகிழ்ந்து தலைமகன்சொல்லியது. (௩௪0)

கொன்றையுந்தும்பையுஞ் சென்னியிற்சூடிக் கொழுமலைமான்
கன்றையுமேந்திய வம்பலவாணர் கனகிரிமேல்
பெண்ணையெடுத்து மடிமீதில்வைத்துப் பிரியத்துடன்
நன்னயம்பேசி விளையாடநல்ல நிலாவிதுவே.

இ-ள். கொன்றையும் தும்பையும் - சொன்றை மலரையும் தும்பை மலரையும், சென்னியில் சூடி - சிரத்தில் அணிந்து, கொழுமலை மான் கன்றையும் ஏந்திய - கொழுமையாகிய மலைமான் கன்றையும்தாங்கிய, அம்பலவாணர் கனகிரிமேல் - அம்பலவாணரது பெரிய மலையின்மேல், பெண்ணை எடுத்து மடிமீதில்வைத்து—, பிரியமுடன் - அன்போடு, நல்நயம்பேசி விளையாட- நல்ல இதமான வார்த்தைகள்பேசி விளையாடுதற்கு, இது நல்ல நிலா - இது நல்லநிலாக்காலம்—எ-று.

இதுவும் தலைமகன் நிலவைப் புகழ்ந்துசொல்லியது. (ங.சக)

கொத்தொடுமாங்கனி செந்தேனொழுக்குங் குருகைவரு
சித்தினிப்பெண்ணிவ ளண்ணாந்துவிம்மிச் செறிந்திலங்கு
முத்தணிகொங்கையை முன்போலவேகை முகந்தணைய
எத்தனைநாட்செல்லுமோ வறியேனென்ற னேழைநெஞ்சே.

இ-ள். கொத்தொடு மாங்கனி - கொத்தோடுகூடிய மாம்பழங்கள், செந்தேன் ஒழுக்கும் - செந்தேனைக் கொட்டுகின்ற, குருகைவரு - குருகாபுரியில் தோன்றிய, சித்தினிப்பெண் இவள் - சித்தினிப்பெண்ணாகியஇவளது, அண்ணாந்து விம்மி - அண்ணாந்து பருத்து, செறிந்து - ஒன்றோடொன்று நெருங்கி, இலங்கும் - விளங்குகின்ற, முத்து அணி கொங்கையை - முத்துவடமணிந்த தனத்தை, முன் போலவே - முன்புபோலவே, கைமுகந்து - கையினாற்பற்றி, அணைய - தழுவுதற்கு, எத்தனைநாள் செல்லுமோ—, அறியேன்- என்றன் ஏழைநெஞ்சே - எனது அறியாமையுள்ள மனமே—எ-று.

தலைமகன் தலைமகளைத் தான் பிரியுங்காலத்தில் தன்நெஞ்சொடுசொல்லியது. (ங.சஉ)

நரிக்குப்பொருளை யுபதேசம்செய்தந் நரிகளைப்பின்
பரிக்குச்சரிதந்த வம்பலவாணர் பனிவரைமேல்
முருக்கிற்சிவந்த விதழமுதுண்டு முலையிரண்டும்
நெருக்கிப்பிடித்து விளையாடநல்ல நிலாவிதுவே.

இ-ள். நரிக்கு - நரிகளுக்கு, பொருளை - மெய்ப்பொருளை, உபதேசம் செய்து - உபதேசித்து, அ நரிகளை - அந்நரிகளை, பின் - பிறகு, பரிக்குசரி தந்த - குதிரைகளுக்குச் சரியாக்கித்தந்த, அம்பலவாணர் பனிவரைமேல்- அம்பலவாணரது குளிர்ந்த மலையின்மீது, முருக்கின் சிவந்த - முருக்கம் பூவினும் சிவந்த, இதழ் - அதரத்திலுண்டாகிய, அமுது உண்டு - அமிர்தத்தையுண்டு; முலையிரண்டும் - இருதனத்தையும், நெருக்கிப்பிடித்து விளையாட—, நல்லநிலா இது—எ-று.

இதுவும் தலைமகன் நிலவைப்புகழ்ந்துரைத்தது. (ங.சங)

மாலேநிகர்க்குநற் சந்திரவாணன் வரையிடத்தே
பாலேறிப்பாய்ந்திடத் தேன்மாரிபெய்யநற் பாகுகற்கண்
டாலேயெருவிட மூப்பழச்சாற்றி னமுதவயல்
மேலேமுளைத்த கரும்போவிம்மங்கைக்கு மெய்யெங்குமே.

இ-ள் மாலே நிகர்க்கும் - திருமாலையே நிகர்க்கின்ற, நல் - நல்ல, சந்திரவாணன் - சந்திரவாணனது, வரையிடத்தே - மலையினிடத்தே, பால் ஏறிப் பாய்ந்திட - பால்மிஞ்சிப்பாய, தேன்மாரிபெய்ய - தேன்மழைபொழிய, நல் பாகுகற்கண்டாலே எருவிட - நல்லபாகு கற்கண்டு என்பவற்றாலே எருவிட, முப்பழச்சாற்றின் - முப்பழச்சாறாகிய, அமுதம் - நீர்ப் பாய்ச்சலையுடைய, வயல்மேலே - வயலில், முளைத்தகரும்போ—, இம்மங்கைக்கு மெய்யெங்கும்- இம்மாதின் சரீரமுழுதும்—எ-று.

முப்பழம் - வாழை மா பலா இம்மூன்றுவகைக் கனிகள். (௩௪௪)

காலப்புயலனையான் கருமாணிக்கன் கற்பவெற்பில்
ஏலக்கருங்குழ லார்மோகவெள்ளம தென்னளவோ
மாலுக்குமாரள வாய்மலரோனுக்கு வாயளவாய்
ஆலத்தையுண்டவர்க் கோதலைமேற்சென் றளாவியதே.

இ-ள். காலப்புயல் அனையான் - (கொடையால்) கார்கால மேகத்தை நிகர்த்தவன், கருமாணிக்கன்—, கற்பவெற்பில் - கற்பமலையில், ஏலம்-மயிர்ச்சாந்து அணிந்த, கருங்குழலார் தந்தமோகவெள்ளம் - கரிய கூந்தலையுடைய மாதர் தந்தமோகமாகிய பெருக்கு, என் அளவோ - என்னளவுதானோ, மாலுக்கு மார் அளவாய் - மாலுக்கு மாரளவாகி, மலரோனுக்கு வாயளவாய்-பிரமனுக்கு வாயளவாகி, ஆலத்தை உண்டவர்க்கோ - நஞ்சையுண்ட சிவபெருமானுக்கோ, தலைமேல்சென்று அளாவியது - தலைமேலோடிக்கலந்தது-எ-று.

ஏலம் - மயிர்ச்சாந்து. (௩௪௫)

காரைப்பழித்த கையான்கருமாணிக்கன் கற்பவெற்பில்
ஆரைச்சுடாதிந்தக் காமச்செந்தீயித னாலல்லவோ
வாரிக்குண்மாய னொளித்தானயனு மலர்புகுந்தான்
நீரைச்சுமந்துநின் றான்கொன்றைசூடிய நின்மலனே.

இ-ள். காரை பழித்தகையான் - (கைம்மாறு கருதாது எல்லாப்பொருள்களையுங் கொடுத்தலால்) மேகத்தையும் பழித்த கையினையுடையவனாகிய, கருமாணிக்கன்—, கற்பவெற்பில்—, இந்தக் காமச் செந்தீ - இந்தக் காமமாகிய செந்தீயானது, ஆரைசுடாது - யாரைத்தான் சுடாது, இதனால் அல்லவோ - இதனாலல்லவோ, மாயன் வாரிக்குள் ஒளித்தான் - திருமால்

கடலில் ஒளித்துக்கொண்டான், அயனும் மலர் புகுந்தான் - பிரமனும் தாமரைமலரிற் புகுந்தான், கொன்றை சூடிய நின்மலன் - கொன்றை மலரைத் தரித்தநிர்மலனாகிய பரமசிவன், நீரை சுமந்து நின்றான் - கங்கையைச்சுமந்து நின்றான்—எ-று.

வாரி - கடல், அயன் - பிரமன்.

தடந்திசையெட்டை மகமேருவெற்பினைத் தாண்டியப்பால்
கடந்தபெரும்புக ழான்கருமாணிக்கன் கற்பவெற்பில்
அடர்ந்துபடர்ந்த குவிமுலையாடந்த வாசையின்னும்
படர்ந்துபடர்ந்து கொழுந்தோடுதென்மனப் பந்தலிலே.

இ-ள். தடம்திசை எட்டை - பெரியதிக்கு எட்டையும், மகமேருவெற்பினை - மகமேருமலையையும், தாண்டி - கடந்து, அப்பால்கடந்த - அப்புறத்தையும் கடந்த, பெரும்புகழான் - பெரும்புகழையுடையவனாகிய, கருமாணிக்கன்—, கற்பவெற்பில்—, அடர்ந்து படர்ந்த - நெருங்கிப்பரந்த, குவி முலையாள் தந்த ஆசை - குவிதனத்தை யுடையவள்தந்த ஆசையானது, இன்னும் படர்ந்து படர்ந்து - இன்னமும் படர்ந்து படர்ந்து, என்மனப் பந்தலிலே கொழுந்தோடுதே - என்மனமாகிய பந்தலிலே கொழுந்துவிட் டோடாநின்றது—எ-று.

(ருசஎ)

நாடாதுநாடினை யோகல்விகேள்வி நலமிலர்பால்
ஊடாடிநெஞ்சந் தளர்ந்தனையோவொன் னலரையெல்லாம்
காடாளவைத்தவன் மால்கருமாணிக்கன் கற்பவெற்பில்
வாடாதுவாடின தேன்மன்னவாநின் வரைப்புயமே.

இ-ள். ஒன்னலரை யெல்லாம் - பகைவரை யெல்லாம், காடு ஆளவைத்தவன் - காட்டையாளும்படி நியமித்துவைத்தவன், மால் - பெரிய, கருமாணிக்கன்—, கற்பவெற்பில்—, மன்னவா - அரசனே, நின்வரைப்புயம் - உன் மலைபோலுந்தோள், வாடாது - ஒருகாலத்திலும் வாடாது, வாடினது என் - (அப்படிப்பட்டதோள்) வாடினது யாதுக்கு, நாடாது நாடினையோ - விரும்பத்தகாத பரம்பொருளை விரும்பினையோ, கல்வி கேள்வி நலம் இலர்பால் ஊடாடி - கல்விகேள்விகளின் நன்மை யில்லாதவர்களிடத்தில் பழகி, நெஞ்சம் தளர்ந்தனையோ - மனந்தளர்ந்தாயோ—எ-று.

பாங்கன் தலைவனையுற்றதுவினாதல், காடாளவைத்தலாவது வனவாசம் செய்யக் கட்டளையிடுதல்.

(ருசஅ)

நெஞ்சிரமும்வற்றி யுள்வாய்வறண்டு நினைவுதப்பி
எஞ்சிவனும்விட்டுப் போகுதையோவிள மாமயிலே
வஞ்சிக்கொடியிடைப் பெண்ணுள்குமுதநல் வாயமுதச்
சஞ்சீவிகொண்டுவந் தாற்பிழைப்பேனினிச் சாவில்லையே.

இ-ள். நெஞ்சு ஈரமும்வற்றி - மனத்திலுள்ள ஈரமும்வற்றி, உள்வாய் வறண்டு - உள்வாயுலர்ந்து, நினைவுதப்பி - நினைவுதடுமாறி, எம் சீவனும்விட்டுப்போகுது - எமது உயிரும் நீங்கிப்போகின்றது, ஐயோ - அந்தோ, இளமாமயிலே - இளமைபொருந்திய அழகிய மயில்போல்வாளே, வஞ்சிக் கொடி இடை - வஞ்சிக்கொடிபோலும் இடையையுடைய, பெண்ணாள் - பெண்ணினது, குமுதம் - செவ்வல்லிமலர்போன்ற, நல்வாய் - நல்லவாயிலுண்டாகிய, அமுதச்சஞ்சீவி கொண்டுவந்தால் - அமிர்த சஞ்சீவியைக் கொண்டுவந்தால், பிழைப்பேன் - உயிர்பிழைப்பேன், இனி சாவு இல்லை - இனியெனக்குமரணமேயில்லை—எ-று.

அமுதசஞ்சீவி யென்றது அதராமிர்தத்தை. சஞ்சீவி-உயிர்தருமருந்து. இது தலைமகன் தோழியோடு சொல்லியது. (கசகூ)

சீரானவேத புரிநாதர்கோயிற் றிருக்குளத்தில்
நீராடிப்போகின்ற நேரிழையேயென்ற னெஞ்சுவிடாய்
தீராமலாம்பற் செவ்வாய்திறவாமற் றிரும்பிமுகம்
பாராமற்போவத னாலேகிடைக்கும் பழியுனக்கே.

இ-ள். சீரான - சிறப்பாகிய, வேதபுரிநாதர் கோயில் - வேதபுரி நாதர் கோயிலிலுள்ள, திருக்குளத்தில் - திருக்குளத்திலே, நீராடிப்போகின்றநேரிழையே - நீரின் மூழ்கிப்போகின்ற பெண்ணே, என்றன் - எனது, நெஞ்சுவிடாய்தீராமல் - மனத்தளர்வைத் தீர்க்காமலும், ஆம்பல் செவ்வாய் திறவாமல் - செவ்வல்லி மலர்போலும் வாயைத் திறவாமலும், திரும்பி முகம்பாராமல் - திரும்பி யென்முகத்தைப் பாராமலும், போவதனாலே - போவதனால், உனக்குப் பழிகிடைக்கும் - உனக்குப் பழியுண்டாகும்—எ-று. (கருO)

சேன்மிஞ்சிப்பாயும் வயற்காஞ்சியூரன் செருக்களத்தில்
மேன்மிஞ்சுமையம் பெருமாண்மகிபன் வியன்சிலம்பில்
மான்மிஞ்சியான்சொன்ன வார்த்தையுமிஞ்சித்தன் மட்டுமிஞ்சிக்
கான்மிஞ்சிக்காரன்பின் போனாளென்னைவிட்டுக் கைமிஞ்சியே.

இ-ள். சேல் - சேல்மீன்கள், மிஞ்சிப்பாயும் - அதிகமாகப் பாய்கின்ற, வயல் - வயல் சூழ்ந்த, காஞ்சியூரன் - காஞ்சி நகரத்தான், செருக்களத்தின் மேல்-போர்க்களத்தின்மீது, மிஞ்சும் - மேற்படுகிற, ஐயம்பெருமாள்மகிபன்- ஐயம்பெருமாள்மகிபனது, வியன் சிலம்பில் - பெரியமலையினிடத்து, மால் மிஞ்சி - ஆசை அதிகரித்து, யான்சொன்ன வார்த்தையும் மிஞ்சி - நான் சொன்னசொல்லை அதிக்ரமித்து, தன்மட்டு மிஞ்சி - தன் அளவைக் கடந்து, என்னைவிட்டுக்கைமிஞ்சி-என்னைவிட்டுக் கைகடந்து, கால்மிஞ்சிக்காரன்பின் போனாள்—எ-று.

கால்மிஞ்சிக்காரன் - காலில்மிஞ்சி யணிந்தவன். இது தாய்க்கூற்று. ()

தத்தடியாய் சதங்கையுந்தண்டையுஞ் சார்ந்துகொஞ்சச்
சித்தடிவைத்து வருமையனேசெகத் தோர்புகழும்
சுத்தமனத்தனைச் சுந்தரஞானச் சுகுணனையே
எத்தியழைத்துவந் தாற்றருவேன்முலை யின்னமுமே.

இ-ள். தத்தடியாய - தடுமாற, சதங்கையும் தண்டையும் சார்ந்து கொஞ்ச - சதங்கையும் தண்டையும் அணியப் பட்டொலிசெய்ய, சித்தடிவைத்து வரும் - சிற்றடியைப் பெயர்த்து வைத்துவருகிற, ஐயனே - புதல்வனே, செகத்தோர் புகழும் - உலகத்தோர் புகழ்கின்ற, சுத்தமனத்தனை - சுத்த இருதயத்தையுடையவனை, சுந்தரஞானச் சுகுணனை - அழகிய ஞானமாகிய சுகுணத்தையுடையவனை, எத்தி அழைத்துவந்தால் - ஏமாற்றியழைத்துவந்தால், இன்னமும் முலைதருவேன்—எ-று.

முலைதருதல் - முலையுண்பித்தல். இது ஒருநாயகி தன்பாலகனை நோக்கிச் சொல்லியது. "சுத்தமனத்தனைச் சுந்தரஞானச் சுகுணனை" யென்றது நாயகனை. (௩௫௨)

கூரிட்டவேல்விழி மாதரசேயுன்றன் கோவமெல்லாம்
ஆரிட்டவஞ்சனை யோவறியேனடி யாயிழையே
ஏரிட்டிங்கென்முகம் பாராமனீயு மிருப்பதனால்
கோரிட்டுஞாயத்தைச் சொல்லுவன்பாரடி கோமளமே.

இ-ள். கூரிட்ட வேல்விழி - கூர்மையாகிய வேல்போன்ற கண்களையுடைய, மாதரசே - பெண்ணரசே, உன்றன் கோவமெல்லாம் - உன் கோவ முழுமைக்கும் காரணம், ஆர் இட்ட வஞ்சனையோ - யார்செய்தவஞ்சனையோ, அறியேன் - அறிகிலேன், அடி ஆயிழையே - அடிபெண்ணே, இங்கு - இங்கே, என்முகம் - என்முகத்தை, ஏரிட்டுப் பாராமல் - ஏறெடுத்துப் பாராமல், நீயும் இருப்பதனல் - நீயும் இருக்கையாலே, அடிகோமளமே - அடிமெல்லியலே, கோரிட்டுஞாயத்தைசொல்லுவன் - கோரிகியாயத்தைச்சொல்லுவேன், பார் - நீகாண்பாயாக—எ-று.

கோமளம் - மென்மையாகிய இயல்பையுடையவள். (௩௫௩)

மறக்கப்படுதில்லை கச்சியில்வாழிள வஞ்சியைவிட்
டுறக்கம்வருதில்லை யூணில்லையானந்த வூர்குறித்துப்
பறக்கவென்றாலுஞ் சிறகில்லையேபஞ்ச பாணன்றுன்பம்
பொறுக்கப்படவில்லை யென்றுவண்டேசொலப் பூங்கிளிக்கே.

இ-ள். கச்சியில்வாழ் - கச்சியில்வாழ்கின்ற, இள வஞ்சியைவிட்டு-இளையகொடி போல்வாளைவிட்டு, மறக்கப்படுதில்லை - மறக்கப் படுகிறதில்லை, உறக்கம் வருதில்லை - தூக்கம் வருவதில்லை, ஊண் இல்லை - உணவு இல்லை, யான்-

நான், அந்த ஊர்குறித்று - அவளிருக்கும் ஊரைக்குறித்து, பறக்கவென்றாலும் - பறந்துபோகலாமென்றாலும், சிறகில்லையே - எனக்குச் சிறகுகளில்லையே, பஞ்சபாணன் துன்பம் - பஞ்சபாணனாகிய மன்மதன்செய்யுந் துன்பம், பொறுக்கப்படவில்லை - சகிக்கக்கூடவில்லை, என்று - என்று, வண்டே - ஒவண்டே, அப்பூங்கிளிக்கு - அந்த அழகிய கிளிபோல்வாளுக்கு, சொல் - சொல்லுவாய்—எ-று.

இது தலைமகன் வண்டோடு சொல்லிப் புலம்பியது. (நடுச)

ஆற்றுமணலுக்கும் பால்போனிலவுக்கு மாருந்தென்றற்
காற்றுக்குமீப்புகழ்க் காளத்திநாதனைக் கண்டுமையல்
போற்றித்தனத்தினைக் கைபாற்பிடித்துநற் போகஞ்செய்யச்
சாற்றுமிந்நாள்விட வேறில்லையென்றுரை தாழ்குழலே.

இ-ள். ஆற்றுமணலுக்கும்—, பால்போல் நிலவுக்கும்—, ஆரும்தென்றற் காற்றுக்கும் - நிறைந்த தென்றற் காற்றுக்கும், மீப்புகழ் - மேலான புகழையுடைய, காளத்தி நாதனை - காளத்தீசனை, கண்டு - பார்த்து, மையல் போற்றி - என் மையலைச்சொல்லி, தனத்தினை கையால் பிடித்து - தனத்தைக் கையினாற்பற்றி, நல்போகம் செய்ய - இன்பக்கலவி செய்வதற்கு, சாற்றும் - சொல்லப்பட்ட, இந்நாள்விட - இந்த நாளைப்பார்க்கிலும், வேறு இல்லை யென்று - வேறுநாள் இல்லையென்று, உரை - சொல்லுவாயாக, தாழ் குழலே - பெண்ணே—எ-று.

தாழ்குழல் - நீண்ட கூந்தலையுடைய பெண். மையல் - காம மயக்கம். போகம் - கலவி. (நடுரு)

கேளாயிப்போது தணலாற்றுகைக்குக் கிணறுகெல்ல
நாளாகச்சொன்ன கதையொக்குமேநண் ணலரைவென்ற
வேளாளதீபன் களப்பாளனுத்தண்டன் மென்சிலம்பில்
வாளாருங்கண்ணி மணஞ்செய்துகூடென்ற வாசகமே.

இ-ள். நண்ணலரைவென்ற - பகைவரைவென்ற, வேளாளதீபன் - வேளாள குலத்துக்குத் தீபம்போன்றவன், களப்பாளன்—, உத்தண்டன்—, மென்சிலம்பில் - மென்மையாகிய மலையின்கண், கேளாய் - (தோழீ) நீ கேட்பாயாக, வாள் ஆரும் கண்ணி - வாள்போலுங் கண்களையுடைய எங்கள் பெண்ணை, மணம்செய்து கூடு - விவாகஞ்செய்துகொண்டுநீ கலப்பாயாக, என்ற வாசகம் - என்று நீ சொன்னசொல், இப்போது தணல் ஆற்றுகைக்கு - இப்போது நெருப்பை அவிப்பதற்கு, கிணறுகெல்ல - கிணறெடுக்கும்படி, நாள் ஆக சொன்ன - புதுமையாகச்சொன்ன, கதை ஒக்கும் - கதையை நிகர்க்கும் எ-று.

நாள் - புதுமை, நண்ணலர் - பகைவர், களப்பாளன் - கடற்றிடரையாள்பவன், உத்தண்டன் - ஒருசீமான். (நடுசு)

ஆய்க்குஞ்சடாக்கர மில்லாதநாவுக்கு மன்னையற்ற
சேய்க்கும்பசியற்ற நேரத்திலூணுக்குஞ் சீவித்தின்னுப்
பாக்கும்பெண்பாலற்ற நித்திரைக்கும்புதுப் பானைபுகும்
ஈக்குஞ்சுகமதுண்டோ வெள்ளைநாவ லிருப்பவனே.

இ-ள். ஆய்க்கும்-ஆராயப்படுகிற, சடாக்கரம் இல்லாத நாவுக்கும்-ஷடாக்ஷரமில்லாத நாவுக்கும், அன்னை அற்ற சேய்க்கும் - தாயற்ற பிள்ளைக்கும், பசி அற்றநேரத்தில் ஊணுக்கும் - பசியில்லாத நேரத்தில் உண்ணும் உணவுக்கும், சீவித்தின்னுப் பாக்கும் - சீவித்தின்னாத பாக்குக்கும், பெண்பால் அற்ற நித்திரைக்கும் - பெண்பக்கத்தி லில்லாத நித்திரைக்கும், புதுப்பானை புகும் - புதுப்பானையில் நுழைகிற, ஈக்கும் - ஈயினுக்கும், சுகமது உண்டோ - சுகமுண்டோ (இல்லை), வெள்ளைநாவல் இருப்பவனே - வெள்ளைநாவலின் கீழிருப்பவனே—எ-று.

சடாக்கரம் - ஆறெழுத்து, வெள்ளைநாவலிருப்பவன், திருவானைக்காவிலுள்ள சம்புகேச்சுரன். (நு௫எ)

என்றுதிரும்பி வருவீரெனத்துயி லேந்திழையாள்
நின்றுகுழலொரு கையாலொதுக்கிவெண் ணீறுதந்து
குன்றுநிகர்கொங்கை மீதேயணைத்துக் கொடுத்தவிடை
ஒன்றுநினைத்தல்ல வோவின்றெனெஞ்ச முருகுவதே.

இ-ள். என்று திரும்பிவருவீர் என - என்றைக்குத் திரும்பிவருவீரென்று, துயில் ஏந்திழையாள் - தூங்கிக்கொண்டிருந்த என்னாயகியானவள், நின்று - எழுந்துநின்று, குழல் - தன்கூந்தலை, ஒருகையால் ஒதுக்கி - ஒருகையினால் விலக்கி, வெண்ணீறுதந்து - விபூதிகொடுத்து, குன்றுநிகர் - மலையை நிகர்த்த, கொங்கைமீதே அணைத்து - தனங்களின்மேல் அணைத்து, கொடுத்த - தந்த, விடை ஒன்று நினைத்தலவோ - விடை யொன்றை நினைத்தல்லவோ, இன்று என்நெஞ்சம் உருகுவது-இன்று என்மனம் உருகுவது—எ-று.

இது ஒருநாயகன் தான்பிரியவிடைகேட்டபோது, நாயகி தடையில்லாமல் போய்வாருமென்று விடைகொடுத்தனுப்பினதைக் குறித்து இரங்கிக் கூறியது. (நு௫அ)

அற்புதமானநம் மம்பலவாண ரணிவரைமேல்
பொற்கொடியுன்னைவிட் டெப்படிப்போவது போகவென்று
நெற்கிடைதூர மொருகாலைத்தூக்கி நிலத்தில்வைத்தால்
விற்கிடைதூர மிழுக்குதென்னுசை விதிவசமே.

இ-ள். அற்புதமான - ஆச்சரியகரமான, நம் அம்பலவாணர் - நமது அம்பலவாணரது, அணிவரைமேல் - அழகிய மலையின்மீது, பொற்கொடி - பொ

ற்கொடிபோல்வாளாகியீ, உன்னைவிட்டு - உன்னைவிட்டு நீங்கி, எப்படிபோவது - எப்படிநான்போகிறத், போகவென்று - போகவேண்டுமென்று, ஒருகாலைத்தூக்கி - ஒருகாலையெடுத்து, நெற்கிடைதூரம் சிலத்தில் வைத்தால்-நெற்கிடைதூரம் பூமிமேல் வைத்தால், விற்கிடைதூரம் இழுக்குது - விற்கிடைதூரம் பின்னேயிழுக்கின்றது, (எதுவென்றால்) என் ஆசை - என்மிகு விருப்பமேயாம், (இதற்குக் காரணம்யாதெனின்) என்விதிவசமே - என்விதிவசமேயாம்—எ-று.

இது ஒருநாயகன் ஏதோவொரு காரியத்தின்பொருட்டுப் பிரியவேண்டி நாயகியை விடைகேட்டுப் பெற்றுக்கொண்டுபோக யத்தனித்துக் காலைத் தூக்கிவைக்க, காலெழாமல் பின்னேயிழுப்பதைக்கண்டு சொல்லியது. ()

கனம்பிரிந்தாலுமின் வான்பிரிந்தாலுங் கதிர்புனல்விட்
டனம்பிரிந்தாலும் புயல்போலுமேனி யரம்புயமின்
தனம்பிரிந்தாலுந் தென்னாரூர்த்தியாகர் தமதடியார்
மனம்பிரிந்தாலு முனைப்பிரியேனடி மாதங்கமே.

இ-ள். மின்கனம்பிரிந்தாலும் - மின்னற்கொடியானது மேகத்தைவிட்டுப்பிரிந்தாலும், கதிர்வான் பிரிந்தாலும் - இருசுடர்கள் ஆகாயத்தை விட்டுப் பிரிந்தாலும், அன்னம் புனல்விட்டுப் பிரிந்தாலும் - அன்னப் பறவை நீரைவிட்டுப்பிரிந்தாலும், புயல்போலுமேனியர் - நீலமேகம்போலுந் திருமேனியையுடையவராகிய திருமால், அப்புயமின் தனம்பிரிந்தாலும் - திருமகள் தனத்தைவிட்டுப் பிரிந்தாலும், தென் ஆரூர்தியாகர் - தென் ஆரூரிலெழுந்தருளிய தியாகராயப் பெருமானானவர், தமது அடியார் மனம் பிரிந்தாலும்-தமது அடியாருடைய மனத்தைவிட்டுப் பிரிந்தாலும், அடி மாதங்கமே-அடி பெருமைபொருந்திய சுவர்ணமே உன்னைப்பிரியேன்—எ-று.

மின்முதலியவை மேகம் முதலியவற்றைப் பிரிதல் அருமை, அப்படி ஒருக்கால் அவை பிரியநேரிட்டாலும் நான்மாத்திரம் உன்னைப் பிரியமாட்டேனென்று தலைமகன் உறுதிக்கூறியது, தலைவிமுன்னிலை. கனம்-மேகம். கதிர் - இருசுடர்கள் (சூரியசந்திரர்கள்.) புயல் - மேகம். அம்புயமின்-தாமரைமலரில் வாழ்கின்ற மின்கொடிபோல்வாளாகிய திருமகள். (நகூ0)

விளையாடும்பாலனை நின்சாயல்கண்டொரு மெல்லியலாள்
வளையாடுஞ்செங்கையி னாலெடுத்தாள்மக மேருவென்னுங்
கிளையாடகவிலராரூர்த்தியாகர்தங் கேழ்வரைமேல்
இளையாளெனவறிந் தேனவள்பேரென் னியம்புவிரே.

இ-ள். ஒருமெல்லியலாள் - ஒருபெண்ணானவள், நின் சாயல்கண்டு-உன் சாயலைக்கண்டு, விளையாடும்பாலனை - விளையாடிக் கொண்டிருந்த நமது பாலனை, வளை ஆடும் செங்கையினால் எடுத்தாள் - வளையல் அசையாநின்ற செங்கையினால் எடுத்தாள், (அவளை) மகமேரு என்னும் - மகமேரு என்கிற, கிளை

ஆடகம் வில்லர் - கிளைத்த பொன் மலையை வில்லாக வுடையவர், ஆரூர்தியாகர்-ஆரூர்த்தியர்காரயர் (அவரது), சேழ்வரைமேல் - ஒளியுள்ளமலையில், இளையாள் என அறிந்தேன் - என்தங்கையென் றறிந்தேன், அவள்பேர் என்-அவள்பேரென்ன, இயம்புவிர் - சொல்லுவீராக—எ-று.

சாயல் - நிறம், (சாடை) கிளைத்தல் - சிகரங்களோடு கூடியிருத்தல். ஆடகம் - நால்வகைப்பொன்னுள் ஒன்று. சேழ் - ஒளி. இது தலைமகள் தான் பரத்தையைக் கண்டதாகத் தலைமகனுக்குக் கூறியது. (௫சுக)

வண்டேகுழல்விட் டெழுந்திருங்கோளிந்த வஞ்சியிடை
பண்டேயிறும்தன பாரம்பொறுது பழிசுமக்கும்
தண்டேன்பொழில்வள ராரூர்த்தியாகர் தடஞ்சிலம்பில்
உண்டேதடாகமும் வாவியுஞ்சோலையு முங்களுக்கே.

இ-ள். வண்டே - வண்டுகளே, குழல்விட்டு எழுந்திருங்கோள் - கூந்தலைவிட்டு எழுந்திருங்கள், இந்தவஞ்சி இடை - இந்த வஞ்சிக்கொடிபோல்வாளது இடையானது, பண்டே இறும் - முன்பே முறிந்துபோவதா யிருக்கின்றது, (எதனால் எனின்), தனபாரம் பொறுது - தனங்களின் பளுவைச்சுமக்க மாட்டாமலே (இப்படி யிருக்கிறபோது, நீங்கள் கூந்தலிலேறி யிருக்கும்போது இடை முறியுமானால்) பழிசுமக்கும் - உங்கள்மேல் பழியேறும், (ஆதலால் விட்டு நீங்கவேண்டும்) (நீங்கி நாங்கள் தேனின்பொருட்டு எங்கே போவதெனின்) உங்களுக்கு தடாகமும் வாவியும் சோலையும் உண்டே - உங்களுக்குத் தடாகங்களும் வாவிகளும் சோலைகளும் உண்டே, (அவை யெவ்விடத்துள வெனின்) தண் தேன் பொழில் வளர் - குளிர்ச்சியாகிய தேனைச்சொரிகிற சோலைசூழ்ந்து வளராநிற்கின்ற, ஆரூர்தியாகர் தடம்சிலம்பில் - திருவாரூர்த்தியாகராயரது பெரியமலையினிடத்தே யுள்ளன—எ-று.

இது - வண்டோச்சி மருங்கணைதல். (மெய்தொட்டுப்பயிறல்) தலைமகன் வண்டுகளை முன்னிலையாக்கிக் கூறியது. (௫சுஉ)

ஏழையிடத்தவ ராரூர்த்தியாக ரெழிற்கிரிமேல்
யாழைப்பழித்த மொழியணங்கேயடு பாலன்னமும்
வாழைவருக்கைக் கனியொடுபாற்குடம் வைத்திருந்தும்
கூழையெனக்களித் தாய்மறுமாற்றங் கொடுத்தருளே.

இ-ள். ஏழை - உமாதேவியை, இடத்தவர் - இடப்பாகத்திலுடையவர், ஆரூர் தியாகர் - திருவாரூர்த்தியாகராயர், (அவரது) எழில்கிரிமேல்-அழகிய மலையின்மீது வாழ்கின்ற, யாழைப்பழித்தமொழி - வீணையோசையைப்பழித்தசொல்லையுடைய, அணங்கே - பெண்ணே, அடுபால் அன்னமும் - காய்ச்சின பாற்சோறும், வாழை வருக்கைக் கனியொடு - வாழை பலா இவற்றின்

கனிகளோடு, பால்குடம் - (இரண்டுபொற்குடங்களையும், வைத்திருந்தும்-உன்னிடத்தில் வைத்திருந்தும், கூழை எனக்கு அளித்தாய் - கூழை எனக்குக் கொடுத்தாய் (இது உனக்குத்தகுமோ), மறுமாற்றம் கொடுத்தருள் - மறுமொழிசொல்லி யருளவேண்டும்—எ-று.

இதுபுறங்காட்டல் என்னுந்துறை ஏழை - பெண். பாலன்னம் வாழைவருக்கைக்கனி என்றது அதரத்தை, பாற்குடம் என்றது தனங்களை. கூழ்-கேழ்வரகுமாவினால் செய்யப்பட்ட நெகிழ்ச்சியான ஓர்வகையுணவு. கூழை-கூந்தல். மாற்றம் - சொல். (௩௬௩)

வாழியிருந்திருவேநவநீதம் வரும்பொழுது
தாழியுடைந்த செயலொத்ததேதண் டரளச்சங்கம்
மேழியுடைத்திடு மாரூர்த்தியாகர் வியன்சிலம்பில்
கோழியிரைந்து விலக்கியவாறு கொழுநனையே.

இ-ள். இருதிருவே - பெருமையுள்ள திருமகளே, வாழி - வாழ்க, தண்தாளம் சங்கம் - குளிர்ந்த முத்துக்களையீனுகின்ற சங்குகளை, மேழி உடைத்திடும் - கலப்பைகள் உடைக்கின்ற, (வயல்சூழ்ந்த) ஆரூர் தியாகர் - திருவாரூர்த்தியாகராயரது, வியன்சிலம்பில் - பெரியமலையில், கொழுநனை - நமது தலைவனை, கோழி இரைந்து - கோழி உரக்கக்கூவி, விலக்கிய ஆறு - தடுத்த விதமானது, நவநீதம் வரும்பொழுது - வெண்ணெய்திரண்டு வரும்போது, தாழி உடைந்தசெயல்ஒத்தது - தாழி உடைந்துபோன செய்கையை நிகர்த்தது—எ-று.

நவநீதம் - வெண்ணெய். தாழி - சால் இரவுக்குறியில் தலைவன் வரவைக்கோழிகூவித் தடுத்தபோது தலைவிசொல்லியது. இது கோழி குறற்சாட்டுதல் என்னுந்துறை. (௩௬௪)

சோதிமறந்த சுரும்பினங்காளிந்தத் தோகையிடை
பாதியிறும்படிச் செய்கின்றதாலுமைப் பாவமுறும்
வீதிவிடங்கர் தென்னாரூர்த்தியாகர் வியன்சிலம்பில்
ஓதியிருந்து மறிவில்லையோசொல்லு முங்களுக்கே.

இ-ள். சோதிமறந்த - உணர்வைமறந்த, சுரும்பு இனங்காள் - வண்டுக்கூட்டங்களே, இந்தத்தோகை இடை - இந்தப்பெண்ணின் இடையானது, பாதி இறும்படி செய்கின்றதால் - பாதியாய் முறியும்படி செய்வதனால், உம்மைபாவம் உறும் - உங்களைப்பாவம் அடையும், வீதி விடங்கர் - வீதி விடங்கர் என்னுந்திருநாமத்தையுடையவர், தென் ஆரூர் தியாகர் - தென்திருவாரூர்த்தியாகர், (அவரது) வியன்சிலம்பில் - பெரியமலையினிடத்து, ஓதியிருந்தும் - நீங்கள் ஓதியிருந்தும், உங்களுக்கு அறிவு இல்லையோ - உமக்கு அறிவில்லையோ, சொல்லும் - சொல்லுங்கள்—எ-று.

தோகை - மயிற்சாயலையுடையவள். ஓதி - கூந்தல், படித்து, இதுவும் வண்டோச்சி மருங்கணைதல் (மெய்தொட்டுப் பயிறல்.) (௩௬௫)

தேர்கொண்டகாமன் கவிகையும்வேழமுஞ் செஞ்சிலையும்
போர்கொண்டவம்புங் குடமுங்கொண்டேயொரு புற்றிடத்தில்
வேர்கொண்டிருப்பவ ராரூரர்வீதி விடங்கர்வெற்பில்
கார்கொண்டகாவி லொருபசுந்தோகையென் கண்ணுற்றதே.

இ-ள். தேர்கொண்ட - தேரைக்கொண்ட, காமன் - மன்மதனது, கவிகையும் - குடையையும், வேழமும் - யானையையும், செஞ்சிலையும் - செவ்விய வில்லையும், போர்கொண்ட அம்பும் - போர்த்தொழிலைக்கொண்ட அம்புகளையும், குடமும் - குடங்களையும், கொண்டு - பெற்று, ஒருபுற்றிடத்தில் - ஒரு புற்றினிடத்தில், வேர்கொண்டிருப்பவர் - வேரூன்றியிருப்பவர், ஆரூரர் - திருவாரூரர், வீதிவிடங்கர் —, (அவரது) வெற்பில் - மலையில் உள்ள, கார் கொண்டகாவில் - மேகங்களைத் தன்மீது கொண்டிருக்கிற சோலையில், ஒரு பசுந்தோகை - ஒரு பசுமையாகியமயில், என்கண்ணுற்றது - என் கண்ணுக்குப் புலப்பட்டது — எ-று.

காமன்கவிகை - பூர்ணசந்திரன். (முகம்), வேழம் - யானை. (இருள் கூந்தல்) அன்றி வேழம் கரும்பு எனக்கொண்டு (தோள்) என்றுரைத்தலுங் கூடும். செஞ்சிலை - (புருவம்), அம்பு - கண்கள். குடம் - தனம். இது காட்சித் துறை. காட்சி - தரிசனம். (௩௬௬)

அன்றுகண்டோநஞ் சமுதத்தையாழியி லம்புயன்மால்
சென்றுகண்டேத்துந் தென்னாரூர்த்தியாகர் திருமிடத்தில்
ஒன்றுகண்டோமற்றங் கொன்றுவிண்ணுட ருலகிற்கண்டோம்
இன்றுகண்டோமிரண் டும்மிவள்பார்வை யிரண்டினுமே.

இ-ள். அன்று - அந்நாளில், நஞ்சுஅமுதத்தை - விடத்தையும் அமிர்தத்தையும், ஆழியில் கண்டோம் - திருப்பாற்கடலில் (ஒருங்கே) கண்டோம், (அதின்பிறகு) அம்புயன்மால் - பிரமனும் திருமாலும், சென்றுகண்டு - போய்த் தரிசித்து, ஏத்தும் - துதிக்கின்ற, தென் ஆரூர்தியாகர் - தென் ஆரூர்த் தியாகரது, திருமிடற்றில் - திருக்கழுத்தில், ஒன்று கண்டோம் - ஒன்றாகிய நஞ்சைத் தனியேகண்டோம், மற்று அங்கு ஒன்று - அவ்விடத்துத்தோன்றின இரண்டனுள் மற்றொன்றாகிய அமிர்தத்தை, விண்ணுடர் உலகில் கண்டோம் - தேவலோகத்தில் கண்டோம், இன்று - இந்நாளில், இரண்டும் - (நஞ்சுஅமிர்தம் என்னும்) இரண்டினையும், இவள்பார்வை இரண்டினும் - இவளது கண்பார்வை யிரண்டினிடத்தும், கண்டோம் - ஒருசேரக்கண்டோம் எ-று.

கண்பார்வையிரண்டனுள் ஒன்று நஞ்சின்தொழிலாகிய துன்பஞ்செய்தலாலும், ஒன்று அமிர்தத்தின்தொழிலாகிய இன்பஞ்செய்தலாலும், பார்வை

யிரண்டும் நஞ்சு அமிர்தங்களுக் குவமையாக்கி யுரைக்கப்பட்டன. வெள்விழி யையும் கருவிழியையும் நிறத்தினால் அமிர்தத்துக்கும் நஞ்சுக்கும் உவமையாக் கியுரைத்தலுமாம். பார்வையிரண்டு என்றது பொதுநோக்கம் சிறப்புநோக்கம் என்பவற்றை யெனினுமமையும். இது குறிப்பறிதல் என்னுந் துறை. (ந சுஎ)

செம்போதகவுரி யாரூர்த்தியாகர் விடங்கர்வெற்பில்
செம்போதகத்துத் திருவனையீருங்கள் செங்கையினால்
அம்போதிதன்னை யடக்கியநீர்வெற் படக்கினுமைக்
கும்போதயமுனி யென்றேத்துமிந்தக் குவலயமே.

இ-ள். வெம்போர்தகம்உரி - வெவ்விய யானையின்றோலைப் போர்வையாக வுடைய, ஆரூர்தியாகர் - திருவாரூர்த்தியாகர், விடங்கர் - வீதிவிடங்கர், (அவரது) வெற்பில் - மலையில், செம்போது அகத்து - செந்தாமரை மலரி னிடத்து வாழ்கின்ற, திரு அனையீர் - திருமகளை நிகர்த்தவரே, உங்கள்செங் கையினால் - உங்கள் செவந்தகையினால், அம்போதிதன்னை அடக்கியநீர் - கட லையடக்கியநீர், வெற்பு அடக்கில் - மலையையு மடக்கினால், இந்தக் குவலயம் - இந்தவுலகம், உம்மை - உங்களை, கும்போதயமுனி என்று ஏத்தும் - அகஸ் தியமுனியென்று துதிக்கும்—எ-று.

அகஸ்தியர்செய்த இரண்டுசெய்கைகளில் ஒன்றாகிய கடலடக்கல் உம் மிடத்திற் காணப்பட்டது, மலையடக்கலும் காணப்பட்டால் உம்மை அகஸ் தியரென்றே சொல்லலாம் என்பதாம். கடலடக்கலாவது கண்புதைத்தல், மலையடக்கலாவது தனத்தை மறைத்தல். அகஸ்தியர் கடலை ஆசமநம் செய் ததும், விந்தமலையை யடக்கினதும் புராணப்பிரசித்தமான கதைகள். இது நாணிக்கண்புதைத்தல் என்னுந்துறை, தலைமகன்கூற்று. (ந சுஅ)

அடக்கேன்விரக மறியேன்சமயம தாய்ந்துசற்றும்
படுக்கேனொருவரைப் பாரேனிரவு பகன்முழுதும்
எடுக்கேன்மலரை முடிக்கறியேனும்மை யேநினைந்து
வடக்கேவழியையும் பார்த்திருந்தேன்கண்ணு மாசுற்றதே.

இ-ள். அடக்கேன் விரகம் - விரகத்தையடக்கமாட்டேன், சமயமது அறி யேன் - சமயத்தையும் அறியமாட்டேன், ஆய்ந்து - ஆராய்ந்து, சற்றும் படுக் கேன் - சற்றும்படுத்துறங்கேன், ஒருவரைப்பாரேன் - ஒருவரையும் பார்க்க மாட்டேன், இரவுபகல் முழுதும் - இரவுபகல்கள் முழுமையும், மலரைஎடுக் கேன் - மலரைப்பறியேன், முடிக்கறியேன் - முடிக்கவும்அறியேன், உம்மை யே நினைந்து—, வடக்கேவழியையும் பார்த்திருந்தேன்—, (நீர்வாராமையால்) கண்ணும் மாசுற்றது - கண்ணும்பூத்துப்போயிற்று—எ-று.

இது தலைவிகூற்று. (ந சுக)

போர்முந்துமோகன வல்லாளசுந்தரன் பூவைக்கிந்தத்
தேர்முந்துமோமதன் றேர்முந்துமோவிரு தேர்முந்துமுன்
கார்முந்துமோவது முந்துமுன்னேயிரு கண்கள்சொரி
நீர்முந்துமோவறி யேன்வலவாவென்ற னேரிழைக்கே.

இ-ள். போர் - போர்க்களத்தில், முந்தும் - முந்திச்செல்லுகிற, மோகனவல்லாள சுந்தரன் - மோகனவல்லாள சுந்தரனது (நாட்டிலுள்ள,) பூவைக்கு - பூவைபோல்வாளுக்கு, இந்தத்தேர்முந்துமோ - இந்தத்தேர் முந்திச்செல்லுமோ, மதன்தேர் முந்துமோ - மன்மதனது தேர்முந்திச்செல்லுமோ, இருதேர் முந்துமுன் - இவ்விரண்டுதேர்களும் முந்துவதற்குமுன்பே, கார் முந்துமோ - மேகம்முந்துமோ, அதுமுந்துமுன்னே - அது முந்துவதற்கு முன்பே, இருகண்கள்சொரி - இருகண்ணும் பொழிகின்ற, நீர்முந்துமோ - நீர்முந்திவிடுமோ, வலவா - தேர்ப்பாகனே, என்றன் நேரிழைக்கு - என்றன் நாயகிக்கு, (எதுமுந்துமென்று) அறியேன் - அறிகிலேன்—எ-று.

மதன்தேர் - தென்றற்காற்று. இதுபாகனொடுசொல்லல் என்னுந்துறை.

வழிமேல்மனமும் மனமேல்மயலும் வளைத்தமணற்
சுழிமேல்விரலும் விரன்மேற்றுளியுமென் சோகமெலாம்
கழிமேலிருக்குங் குருகினங்காள்சென்று காத்திலிரேல்
பழிமேற்சுமக்குமென் றேசொல்லுவீரந்தப் பாதகர்க்கே.

இ-ள். வழிமேல் மனமும் - (இறைவர்வருகிறவழிமேலே) மனமும், மனமேல்மயலும் - மனத்தின்மேல் மையலும், வளைத்தமணற்சுழிமேல் விரலும் - வளைக்கப்பட்ட மணற்சுழிகளின்மேல் விரலும், விரல்மேல் துளியும் - விரலின்மேல் கண்ணீர்த்துளியும், (இந்தவிதமாயிருக்கிற) என்சோகம் எல்லாம் - என்சோகம் முழுதும், கழிமேல் இருக்கும் குருகு இனங்காள் - கழியிலிருக்கும் நாரைக்கூட்டங்களே, சென்றுகாத்திலிரேல் - விரைந்துபோய்க் காத்திலீராயின், பழி - பழியானது, மேல்சுமக்கும் என்று - உம்மீது சுமக்குமென்று, அந்தப் பாதகர்க்குசொல்லும் - அந்தப் பாதகருக்குச் சொல்லுங்கள்—எ-று.

மணற்சுழி - கூடற்சுழி, பாதகர் - பாவத்தையுடையவர். சோகம் - துன்பம். பழி - நிந்தை. இது நாரைவிடுதூது. (ஙஎக)

நீவந்தெனக்குமுன் னேநின்றமாயமு நீள்தழையோ
டாய்வந்தமாயமும் யாதுகொலோவன்று நூற்றுவர்பால்
போய்வந்தநேமிப் பெருமாளரங்கர் பொருப்பிடத்தே
வேய்வந்ததோளியெற் கென்சொல்லினுள்கொலை வேலவனே.

இ-ள். கொலைவேலவனே - கொலைத்தொழிலையுடைய வேலாயுதத்தை யேந்தினவனே, நீவந்து எனக்குமுன்னே நின்றமாயமும் - நீவந்து எனக்கெதிரேநின்ற மாயமும், நீள்தழையோடு ஆய்வந்த மாயமும் - நீண்டதழையைக் கைக்கொண்டுவந்த மாயமும், யாதுசொல்லோ - என்னவோ, அன்று - அந்நாளில், நூற்றுவர்பால் போய்வந்த - துரியோதனன் முதலிய நூற்றுவரிடத்திற்குத் தூதுபோய்வந்த, நேமி - சக்கராயுதத்தையுடைய, பெருமாள் அரங்கர் - பெருமாளாகிய அரங்கநாதரது, பொருப்பிடத்து - மலையில், வேய்வந்த தோளி - மூங்கில்போலுந் தோள்களையுடையாள், எனக்கு என்சொல்லினள் - எனக்கு யாதுசொன்னாள், (சொல்லும்)—எ-று.

இது தோழிகூற்று. (ருஎஉ)

நானஞ்செறிபுயர் காளத்திநாதர்நன் னாட்டினிலே
கானஞ்செறிகுழற் காரிகையாரிரு கண்களுக்கு
மானஞ்சுமம்பஞ்சு மாவஞ்சும்வண்டஞ்சும் வாரியஞ்சும்
மீனஞ்சுநஞ்சஞ்சும் வேளஞ்சும்வாளஞ்சும் வேலஞ்சுமே.

இ-ள். நானம் செறிபுயர் - கஸ்தூரிபூசப்பட்ட புயங்களையுடையவர், காளத்திநாதர் - காளத்தீசர் (அவரது) நல்நாட்டினிலே - நல்லநாட்டின்கண், கானம் செறிகுழல் - வாசனையும் அழகும்பொருந்திய கூந்தலையுடைய, காரிகையார் - மாதரது, இருகண்களுக்கு - இரண்டுகண்களுக்கு, மான் அஞ்சும்—, அம்பு அஞ்சும்—, மா அஞ்சும் - மாவடு அஞ்சும், வண்டு அஞ்சும்—, வாரி அஞ்சும் - கடல் அஞ்சும், மீன் அஞ்சும்—, நஞ்சு அஞ்சும்—, வேள் அஞ்சும் - மன்மதன் அஞ்சுவான், வாள் அஞ்சும்—, வேல் அஞ்சும்—எ-று.

ஒருநாயகன் காளத்திநாதர்மலையில் வாழ்கின்ற பெண்களின் கண்ணழகைப் புகழ்ந்துசொல்லியது, இதைக்கண்ணயப்புரைத்தல் என்னுந் துறையின்பாற் படுத்தலாம். (ருஎங)

மாலோன்பதியை யரன்பதிதேடி வரினுமழைக்
காலோதிபாலி னிறமேபெறினுங் கனகரத்ந
வேலோங்குதிண்கரன் விக்ரமச்சோழன் வியன்சிலம்பில்
சேலோங்குகண்ணியை யெந்நாளுங்காக்குந் திறனுனக்கே.

இ-ள். மாலோன்பதியை - திருமாலினிடமாகிய ஆலிலையை, அரன்பதி - சிவனிடமாகியமலை, தேடிவரினும் - தேடிவந்தாலும், மழைக்காலோதி - மழைக்காலிருளானது, பாலின்நிறமேபெறினும் - பாலினது நிறத்தையேபெற்றாலும், கனகரத்நவேல்ஓங்குதிண்கரன் - கனகரத்நவேல்விளங்குகின்றதிண்ணியகையையுடையவனாகிய, விக்ரமச்சோழன் - விக்ரமச்சோழனது, வியன்சிலம்பில் - பெரியமலையின்கண், சேல் ஓங்குகண்ணியை - சேல்போலவிளங்குகின்ற

கண்களையுடைய இந்தமாதை, எந்நாளும் காக்கும் திறன் - எக்காலத்திலும் காக்கும்படியான் கடமை, உனக்கே - உன்னதேயாகும்—எ-று.

ஆலிலை - வயிறு, மலை - தனம், பாலினிறம் - வெண்மை, தனம் வயிறு வரைக்குந் தொங்கினாலும், இருண்டகூந்தல்நரைத்துவெளுத்தாலும் இவளை நீங்கைவிடாமல் காக்கவேண்டும் என்பதாம். இது தோழி தலைமகளைத் தலைமகனுக்குக் கையடைகொடுத்தல். (நஎச)

கணிமாதவர்புகழ் தென்பழனுபுரிக் கந்தர்வெற்பில்
துணியாகியவெண் மதிநுதலீரெனைச் சூழ்ந்தமையற்
பிணியாற்றுதற்குங் களையாற்றுதற்கும் பிறங்குசிந்தா
மணிமாத்திரையல்ல வோவஞ்சிமீர்கொஞ்சும் வாயிதழே.

இ-ள். கணி - நினைத்து, மாதவர்புகழ் - பெருந்தவத்தோர் புகழ்கின்ற, தென் பழனுபுரி கந்தர்வெற்பில் - தென்பழனுபுரிக் கந்தரதமலையில், துணி ஆகிய - துண்டமாகிய, வெண்மதி நுதலீர் - வெள்ளிய பிறைபோலும் நெற்றியையுடையீர், என்னைச்சூழ்ந்த - என்னை வளைந்துகொண்ட, மையல்-காம மயக்கமாகிய, பிணி ஆற்றுதற்கும் - பிணியை நீக்குதற்கும், களை ஆற்றுதற்கும் - விடாய் தீர்ப்பதற்கும், வஞ்சிமீர் - வஞ்சிக்கொடிபோல்பவரே, கொஞ்சும்வாயிதழ் - நுமது கொஞ்சுதற்குரிய அதரமானது, பிறங்கு - விளங்குகின்ற, சிந்தாமணி மாத்திரை அல்லவோ - சிந்தாமணி மாத்திரையல்லவோ எ-று.

கணி - மதிக்கத்தகுந்த எனினுமாம். துணி - துண்டம் (துண்டு.) இது தலைமகன்கூற்று. நுமது அதராமிர்தத்தைத்தந்தால் என்காமநோய்தீருமென்பதாம். (நஎரு)

ஊழிக்கருங்குங் ணீக்கவெய்யோனை யுறவழைக்கும்
கோழிக்குலத்தை வளர்ப்பதல்லாற்கொடுங் காலின்மள்ளர்
மேழித்தமிழ்மணக் கும்நெல்லைநாதன் வியன்சிலம்பில்
பாழுக்குயான்வளர்த் தேன்கிள்ளையைப்பழம் பால்பகிர்ந்தே.

இ-ள். ஊழி - கற்பகாலம்போல நீண்ட, கருங்கங்குல்நீக்க - கருமையாகிய இரவை நீக்கும்பொருட்டு, வெய்யோனை - சூரியனை, உற அழைக்கும் - மிகவும் கூவியழைக்கின்ற, கோழிக்குலத்தை வளர்ப்ப தல்லால்-கோழிக்கூட்டத்தை வளர்ப்பதையன்றி, கொடுங்காலின் மள்ளர் - உறுதியாகிய கால்களையுடைய உழவரது, மேழி தமிழ்மணக்கும் - கலப்பையினும் தமிழ் மணக்கின்ற, நெல்லைநாதன் - திருநெல்லைநாதனது, வியன்சிலம்பில் - பெரியமலையில், யான் - நான், பழம்பால் பகிர்ந்து - (நான் உண்ணும) பால் பழங்களைப் பகிர்ந்தூட்டி, கிள்ளையை - கிளியை, பாழுக்கு வளர்த்தேன் - வீணுக்கு வளர்த்தேன்—எ-று.

விரைவில் விடியாமையால் இரவு ஊழிக்கருங் கங்குல் எனப்பட்டது, மேழித்தமிழ்மணக்கும் நெல்லை என்றது தமிழ்மிகுதியாய் வழங்குந் திருநெல்லையென்றபடி. (ருஎசு)

மாலடிதேடியுங் காணுதசொக்கர் வரையிடத்தே
பாலடிதேட வருங்கிளிகாளொரு பாவையென்னை
வேலெடுத்தேகுத்தி வேயிணைக்கேகட்டி மேருவின்பால்
ஆலடிக்கீழ்வெளிக் கேபறித்தாளு யிரத்தத்தையே.

இ-ள். மால் - திருமாலானவர், அடிதேடியும் - திருவடியைத் தேடியும், காணுத - காணப்பெறுத, சொக்சர் - சொக்கேசரது, வரையிடத்தே - மலையின்கண்ணே, பால் அடிதேடிவரும் - பால்பற்றின அடி நெல்லைத் தேடிவருகின்ற, கிள்ளைகாள் - கிளிகளே, ஒருபாவை - ஒரு பாவைபோலும் பெண், வேலெடுத்து குத்தி - வேலெடுத்துக்குத்தி, வேயிணைக்கு கட்டி - இரட்டை மூங்கிலிற்கட்டி, மேருவின்பால் - மேருமலையின்பக்கத்திலிருக்கிற, ஆல் அடிகீழ் - ஆலமரத்தடியில் உள்ள, வெளிக்கு - வெள்ளிடையில், உயிர் அத்தத்தை - என் உயிராகியதனத்தை, பறித்தாள் - பறித்துக்கொண்டாள்—எ-று.

வேல் என்றது கண்களை, வேயிணை என்றது தோள்களை, மேரு என்றது தனங்களை, ஆல் என்றது வயிற்றை. இது தலைமகன் கிள்ளைகளோடு சொல்லியது. கிளிகாள் என்பதற்கு உறவினரேயெனப் பொருள்கொண்டு, நீங்களித்தனைபேரிருந்தும் ஒருபெண் என் பொருளைப் பறித்துக் கொள்ளப் பார்த்திருந்தீர்களேயென் றுரைத்தலுமொன்று. (ருஎஎ)

குறித்தாள்குறித்தொன்றைக்கூறப்படாதென்றுகொய்தழையைப்
பறித்தாள்பறித்துப் பவளச்செவ்வாய்வைத்துப் பையப்பையக்
கறித்தாள்கறித்தபின் கண்டம்புகாதென்று காந்தளங்கை
முறித்தாள்முறித்தபின் னேநினைத்தாளவர் மொய்ம்பினையே.

இ-ள். ஒன்றை குறித்தாள் - ஒன்றை நினைத்தாள், குறித்து-நினைத்து, கூறப்படாது என்று - சொல்லவொண்ணுதென்று, கொய்தழையை - கொய்தற்குரிய தழைகளை, பறித்தாள்—, பறித்து—, பவளம் - பவளம்போன்ற, செவ்வாய்வைத்து - செவந்தவாயிலிட்டு, பையப்பையக் கறித்தாள் - மெல்ல மெல்லக்கடித்தாள், கறித்த பின் - கடித்த பிறகு, கண்டம் புகாது என்று-கழுத்திற் புகாதென்று, காந்தள் அங்கைமுறித்தாள் - காந்தள் மலர்போலும் அகங்கையைமுறித்துக்கொண்டாள், முறித்தபின்னே—, அவர்மொய்ம்பினை நினைத்தாள் - அவர்தோள்களை நினைத்தாள்—எ-று.

இப்படி செய்ததனல் இவள்குறிப்பு இன்னதெனத் தெளியேன் என்பது கருத்து. இதுதோழி செவிலிக்குச்சொல்லியது. (ருஎஅ)

அராமேவிடுபுயன் காளத்திநாத னணிவரையில்
இராமேசுரத்தினுக் கேகுவனென்றன ளேழைபுத்தி
வராமேயுயர்புத்தி வந்ததென்றேகனி வாய்மலர்ந்தேன்
அராமேவியவல்கு லாள்சொன்னசூதை யறிந்திலனே.

இ-ள். அரா - பாம்பை, மேவிடுபுயன் - மேலேயணிந்துகொண்ட திருத்தோள்களையுடையவனாகிய, காளத்திநாதன் - காளத்தீச்சுரனது, அணிவரைமேல் - அழகிய மலையின்மீது, (என்பெண்ணானவள்) இராமேசுரத்தினுக்கு - இராமேச்சுரத்துக்கு, ஏகுவன் என்றனள் - போவேனென்றாள், (அதைக்கேட்டநான்) ஏழை புத்திவாராமே - பெண் புத்தியுண்டாகாமல், உயர் புத்தி வந்தது என்றே - உயர்ந்த புத்தி உண்டாயிற்றென்று நினைத்தே, கனிவாய் மலர்ந்தேன் - கனிவாய்திறந்து அப்படியே போய்வாவென்றேன், அரா - மேமேவிய அல்குலாள் - பாம்பின் படம்போலும் அல்குலையுடையவள், சொன்னசூதை அறிந்திலன் - சொன்ன சூது வார்த்தையை அறிந்திலேன்—எ-று.

இராமேசுரம் - ஓர் சிவஸ்தலம். இராமேசுரத்தினுக்கு ஏகுவன் என்று சொன்னசொல்லில் சூதாவது இங்கேயிராமல் சுரத்துக்குப் போவேனென்றது, சுரம் - பாலை நிலம், இராமேசுரத்துக்குப் போகிறாளென் றிருந்தேன் அவள் இராமல் பாலை நிலத்துக்குப் போனாள் இந்தச் சூதை யறிந்திருந்தால் போகவொட்டேன் என்பதாம். (௬எக)

வாரிக்கிராகவன் மாரனுக்கீசன் மதிக்குந்தென்றற்
றேருக்கும்பாந்தள் மருவார்க்குநாந்தகஞ் சென்றவர்க்குத்
தாருக்குநேருறத் தானஞ்செய்தாண்டவன் றண்சிலம்பில்
பூரிக்கும்பெண்ணுக்குச் சஞ்சீவிநீதந்த பூந்தழையே.

இ-ள். சென்றவர்க்கு - தன்னைநாடிவந்தவர்க்கு, தாருக்கு நேர் உற-கற்பகதருவுக்குச் சமானமாக, தானம்செய் - தானம் செய்கின்ற, தாண்டவன்-தாண்டவராயனது, தண்சிலம்பில் - குளிர்ந்தமலையில், நீதந்த பூந்தழை-நீகொடுத்த அழகிய தழையானது, வாரிக்கு இராகவன்-கடலுக்கு ஸ்ரீராமனாயிற்று, மாரனுக்கு ஈசன் - மன்மதனுக்குச் சிவபிரானாயிற்று, மதிக்கும் தென்றல் தேருக்கும்பாந்தள் - சந்திரனுக்கும் தென்றற்றேருக்கும் பாம்பாயிற்று, மருவார்க்குநாந்தகம் - பகைவருக்கு வாளாயிற்று, பூரிக்கும்பெண்ணுக்குசஞ்சீவி-மனங்களிக்கின்ற எமது பெண்ணுக்குச் சஞ்சீவியாயிற்று—எ-று.

தழை கடலோசையையடக்கித் துன்பஞ்செய்யாமல் தடுத்ததனால் இராகவனாயிற்றென்றும், மன்மதன் செய்யும் துன்பத்தைத் தணித்ததனால் ஈசனாயிற்றென்றும், சந்திரனாலும் தென்றற்காற்றினாலும் உண்டாகுந் துன்பத்தை நீக்கினமையால் பாந்தளாயிற்றென்றும், அலர்தூற்றுவார் வாயையடக்

குதலால், நாந்தகமென்றும், உயிர்நீங்காமல் சாப்பாற்றுதலால் சஞ்சீவி யென்றும் கூறலாயிற்று.

சஞ்சீவி - உயிர்தரு மருந்து. (ருஅ0)

தண்டமிழ்நாவலன் மாவலிவாணன் றடஞ்சிலம்பில்
வண்டெழுபாலைக்கு ளெவ்வாறுசென்றனள் மாநிலத்தில்
கொண்டபெண்ணுணவள் வேறேயொருவனைக் கூடிவரக்
கண்டவன்றன்மனம் போலேயெரியுங் கடுஞ்சுரமே.

**இ-ள்.** தண் தமிழ் நாவலன் - இனிய தமிழ்நாவலன், மாவலிவாணன்—, (அவனது) தடம் சிலம்பில் - பெரியமலையில், வண்டு எழு பாலைக்குள் - வண்டுகள் தொனித்துத்திரிகிற பாலைவனத்தில், எவ்வாறு சென்றனள் - எப்படி போனாள், கொண்ட பெண்ணுனவள்—, வேறே ஒருவனைக்கூடிவர - வேறொருபுருடனைக்கூடிவாழ்ந்துவருதலை, கண்டவன் மனம்போலே எரியும் கடுஞ்சுரம் - பார்த்தவனது மனம்போலே யெரியாநின்ற கடுமையாகிய பாலைவனமாயிற்றே—எ-று.

எரியும் கடுஞ்சுரமாகிய பாலைக்குள் எவ்வாறு சென்றனள் எனக் கூட்டுக. பாலைவனம் - நீரில்லாத மணல்வெளி. இது நிலமைந்தனுள் ஒன்று. இது செவிலித்தாய் சொல்லியது. (ருஅக)

எட்டியுந்தீந்து விடத்தேருங்கள்ளியு மீரம்வற்றிப்
பொட்டுப்பொறியெழும் பாலையிலேபுரி யாருடலை
வெட்டிச்செயங்கொண்ட விக்ரமச்சோழன் வியன்சிலம்பில்
கட்டித்திரவிய மெப்படிப்பாடகக் கால்வைப்பளே.

**இ-ள்.** புரியார் உடலைவெட்டி - தன்னை விரும்பியடையாதவாதுஉடம்பைவெட்டி, செயம் கொண்ட - வெற்றிகொண்ட, விக்ரமச் சோழன் - விக்ரமச்சோழனது, வியன்சிலம்பில் - பெரியமலையினிடத்து, எட்டியும்தீந்து-எட்டிமரங்களும் தீந்து, விடத்தேரும் கள்ளியும் - விடத்தேரை மரங்களும் கள்ளிச்செடிகளும், ஈரம்வற்றி - ஈரம் புலர்ந்து, பொட்டு பொறி எழும்-வட்டவடிவாகிய தீப்பொறிகள் எழுகின்ற, பாலையிலே - பாலைநிலத்திலே, கட்டித்திரவியம் - தங்கக்கட்டிபோன்றவளாகிய என்பெண், எப்படி - எவ்வாறு, பாடகக் கால்வைப்பள் - பாடகமணிந்த பாதத்தைவைப்பாள்—எ-று.

புரியார் - பகைவர். திரவியம் - பொன் (தங்கம்.) பாடகம் - மாதர் காலில் அணியும் ஓராபரணம். பொட்டு - வட்ட வடிவு. (ருஅஉ)

காண்டாவனஞ்செறி பாலையிலேசென்ற காளையிங்கே
மீண்டாலணங்கோ ரடிசெல்லுமோவென் விதிவசமோ

ஆண்டார்களந்தைப் புறவேயதிசய மன்றனுமன்
றாண்டாதெரிகதி ரோன்முன்புபோயின் சூழ்ச்சியதே.

இ-ள். காண்டாவனம் - செறிபாலையிலேசென்ற, எரிகின்ற காண்டவ வனத்தைப்போல - தீநெருங்கின பாலைநிலத்திலே சென்ற, காளை - காளை போல்பவனாகியதலைவன், இங்கேமீண்டால் - இங்கே திரும்பிவந்தால், அணங்கு நமதுபெண்ணானவள், ஓர் அடிசெல்லுமோ - (தனித்து) ஓரடியெடுத்து நடப்பாளோ, (நடக்கமாட்டாள். இந்த அடிச்சுவட்டை நோக்குமிடத்தில்) ஆண்டார் - ஆண்டவராகிய சிவபெருமான் எழுந்தருளிய, களந்தை - திருக்களந்தையிலுள்ள, புறவே - புறவே, அதிசயம் - இது அதிசயமாயிருக்கின்றது (என்னெனின்) அன்று - அந்நாளில், அனுமன் - அநுமானானவன், தீண்டாது - தாண்டிவிடவேண்டாமல், எரி - தானேயெரிகின்ற, கதிரோன் - கிரணங்களையுடைய சூரியனுக்கு, முன்பு - எதிரே, போயின - கல்வி கற்றுக்கொண்டேசென்ற, சூழ்ச்சியதே - உபாயமேபோலும், என்விதிவசமோ - (இவ்வாறன்றி என்ன) விதிவசத்தால் நடந்தகாரியமோயான் அறிகிலேன்—எ-று.

அநுமான் சூரியனிடத்தில் பாடம்படிக்கும்போது தன் விசுவரூபங்கொண்டு உதயகிரியில் ஒருகாலும் அஸ்தமநகிரியில் ஒருகாலும் ஊன்றி நின்றுஎதிர்முகமாகவே சென்றான் என்பது புராணகதையாதலால், அவ்வாறே இத்தலைவனும் நமதுபெண்ணை எதிர்முகமாய் நோக்கிக்கொண்டேசென்றதாகத் தோன்றுகின்றதென்பதாம். இது செவிலி அடிச்சுவடு கண்டுசொல்லியது.()

மாக்கண்வடுக்கண்ணி சண்பகநாதர் வரையிடத்தே
பூக்களெடுக்கப் பொறிவண்டுகூவப் புல்வாய்க்கதற
மூக்கைவழித்தே யழுதகண்ணீரை முகந்துபுலி
நாக்கைநனைக்குஞ் சுரத்திலெவ்வாறு நடந்தனளே.

இ-ள். மாக்கண் வடுகண்ணி - மாமரத்திலுள்ள வடுவகிர்போன்ற கண்களையுடையவளே, சண்பகநாதர் வரையிடத்து - சண்பகநாதரது மலையில், பொறிவண்டு - புள்ளிகளையுடைய வண்டுகள், பூகள்எடுக்க - மலர்த்தேனையெடுக்கும்பொருட்டு, கூவ - ஒலிக்க, புல்வாய்கதற - கலைமான்கதற, மூக்கை வழித்து அழுதகண்ணீரை - மூக்கைவழித்துநின்று அழுதகண்ணீரை, புலி முகந்து-புலிகள்பருகி, நாக்கைநனைக்கும் - நாக்கைநனைத்துக்கொள்ளுகின்ற, சுரத்தில் - பாலைநிலத்தில், எவ்வாறுநடந்தனள் - (நமதுபெண்) எப்படி நடந்தாள்—எ-று.

வடு - மாம்பிஞ்சு. வடுக்கண்ணியென்றது தோழியை. கள் - தேன். புல்வாய் - மான். கண்ணீரை முகந்துஎன்றது கண்ணீரை நக்கியென்றபடி. இது சுரத்தியல்பை நினைந்து செவிலி தோழிக்குச் சொல்லியது. (நஅச)

மாலயன்போற்று மதுராபுரிச்சொக்கர் மால்வரைமேல்
சோலைவரிக்கிளிக் கின்னமுதூட்டச் சுடச்சுடவப்
பாலையெனக்குத் தருதியென்றாணன்று பாவையென்றேன்
ஆலைமொழிச்சிறி யாள்சொன்னசூதை யறிந்திலனே.

இ-ள். மால் அயன்போற்றும் - திருமாலும்பிரமனும்வணங்குகின்ற,மதுராபுரி - மதுராபுரியி லெழுந்தருளிய, சொக்கர் - சொக்கநாதரது, மால்வரைமேல் - பெரிதாகிய மலையின்கண், சோலை வரிகிளிக்கு-சோலையில் வாழ்கின்ற கீற்றுக்களையுடைய கிளிப்பிள்ளைக்கு, இன் அமுதூட்ட - இனியசோற்றை யுண்பிக்கும்பொருட்டு, சுடச்சுட - சுடச்சுட, அ பாலை-அந்தப்பாலை, எனக்கு தருதிஎன்றாள் - எனக்குத் தருவாயாகவென்றாள், (அப்படிஎன்பெண்கேட்டதற்கு நானும்) பாவை - பாவைபோல்வாளே, நன்று என்றேன் - நல்லதுஎன்றேன், ஆலைமொழி - கருப்பஞ்சாறுபோலும் இன்சொல்லையுடைய,சிறியாள் - சிறுபெண், சொன்னசூதை - சொன்னசூது வார்த்தையின் உட்கருத்தை, அறிந்திலன் - முன்னே அறிந்திலேன்—எ-று.

அமுது - சோறு, பாலைதருதி என்றதற்குப் பாலைத்தருவாய் என்றுநான் பொருள்கொண்டேன், அவள் பாலைவனத்துக்குப்போக விடைதர்தாளென க்கருதிச்சென்றாள் என்பதாம். சூது - சூதுவார்த்தை. (இருபொருள்படச் சொல்லுஞ்சொல்) ஆலை - கரும்பு. (ரு அரு)

விழுதுவிட்டோடிய குற்றாலநாதர் வியல்சிலம்பில்
பழுதுபட்டாவி பதைக்குதையோபஞ்ச பாதகனைத்
தொழுதுவிட்டேன்வரச் சொல்லிவிட்டேன்வரச்சொல்லிச் சொல்லி
எழுதிவிட்டேனன்ன மேயினியோலைக் கிடமில்லையே.

இ-ள். விழுதுவிட்டு ஓடிய - விழுதுவிட்டுப் படர்ந்த, குற்றாலநாதர் - திருக்குற்றாலநாதரது, வியன்சிலம்பில் - பெரியமலையில், பழுதுபட்டு - அழிந்து, ஆவி - உயிரானது, பதைக்குது - பதைக்கின்றது, ஐயோ-அந்தோ, பஞ்சபாதகனை - பஞ்சமாபாதகனை, தொழுதுவிட்டேன் - வணங்கினேன், வரச் சொல்லிவிட்டேன் - வரச்சொன்னேன், வரச்சொல்லி—, எழுதிவிட்டேன் - எழுதியனுப்பினேன, அன்னமே - அன்னம்போல்வாளே, இனிஓலைக்கு இடமில்லை - இனி ஓலையில் இடமில்லை—எ-று.

அன்னமேயென்றது பாங்கியை. இது தலைமகள்சொல்லியது. குற்றாலம் - ஓர்சிவஸ்தலம். (ரு அகூ)

உழுமேழியாளன் களப்பாளனுத்தண்ட ஞேங்குவெற்பில்
எழுமேகமுஞ்செலு மேலவாவெனைத் தேடிமயில்

அழுமேதெருநிற்கு மேயஞ்சுமேகெஞ்சி யப்பணைமேல்
விழுமேமறித்தெழு மேசென்றநாளை விரலெண்ணுமே.

இ-ள். உழும் - உழுகின்ற, மேழியாளன் - மேழிச்செல்வத்தை யுடையவன், களப்பாளன் —, உத்தண்டன் —, (அவனது) ஓங்குவெற்பில் - உயர்ந்த மலையில், எழும் மேகமும் செல்லுமே - எழுகின்ற மேகங்களும் செல்லுமே, வலவா - தேர்ப்பாகனே, மயில் - மயில்போல்வாளாகிய என்பிராணநாயகி, என்னைத்தேடி அழுமே - என்னைநாடி அழுவாளே, தெரு நிற்குமே - (என்வரவுநோக்கி) வீதியில்நிற்பாளே, அஞ்சுமே - (மன்மதவேதனைமுதலியவைகளுக்கு அஞ்சுவாளே, கெஞ்சி-மன்றாடி, அப்பு அணைமேல்-மன்மதபாணங்களாகிய தாமரை முல்லைமுதலிய மலர்களைப் பரப்பியிருக்கிற சயனத்தின்மேல், விழுமே - விழுவாளே, மறித்துஎழுமே - மீண்டும் எழுந்திருப்பாளே, சென்றநாளை விரல்எண்ணுமே - (நான்பிரிந்தபிறகு) கழிந்தநாள்களைவிரலால் எண்ணிப் பார்ப்பாளே, (ஆதலால் அவளுக்கு இப்படிப்பட்ட அவஸ்தைகளெல்லாம் உண்டாவதற்கு முன்பே, நீ நமது தேரைவிரைந்து செலுத்துவாயாக எ-று.

இது வினைமுற்றி மீண்டுவரும் தலைமகன் தன்தேர்ப்பாகனோடு சொல்லியது. (நஅஎ)

திரைவேலைசுற்றிய குற்றாலநாதர் தினம்பவனி
வரல்வேலைநீயு மயல்கொளல்வேலையம் மாரனம்பு
பொரல்வேலைநீசங்கம் போட்டிடல்வேலை புதியவளை
தரல்வேலையாகு மகளேயுனைப்பெற்ற தாலெனக்கே.

இ-ள். திரைவேலை சுற்றிய - அலைகளையுடைய கடல்சூழ்ந்த, குற்றாலநாதர் - திருக்குற்றாலத்துக் கதிபாகிய சிவபெருமான், தினம் - நாள்தோறும், பவனிவரல் வேலை - பவனிவருதலே (அவருக்கு) வேலையாகும், நீயும்- (அந்தப்பவனியைக்கண்ட) நீயும், மயல்கொளல்வேலை - மையல்கொள்ளுதலே (உனக்கு) வேலையாகும், அ மாரன் - அந்தமன்மதன், அம்புபொரல்வேலை அம்புகளைக்கொண்டு போர்செய்தலே (அவனுக்கு) வேலையாகும், நீ - (அந்தப் போருக்கு இலக்காகிய) நீ, சங்கம்போட்டிடல் வேலை - சங்கவளையலைச் சிந்துதலே (உனக்கு) வேலையாகும், மகளே - புதல்வீ, உன்னைப்பெற்றதால்-உன்னையீன்றதனால், எனக்கு - எனக்கு, புதியவளை தரல்வேலை - புதியவளையலைத் தருதலே வேலையாகும்—எ-று.

இது தாய்க்கூற்று. (நஅஅ)

வானைந்தரும்புகழ்க் காளத்திநாதர் வரைத்துறைவற்
கானக்குழலினிற் காற்றளைபூட்டிக் கண்வேலைதனால்

ஊனப்படக்குத்தி யல்குற்பொற்றேரைவிட் டேர்ந்துகொங்கை
யானைக்கிரையிடுவே னொருநாள்வந் தகப்படினே.

இ-ள். வானைதரும் - (தன் அடியாருக்கு இம்மையின்பத்தையேயன்றி) மறுமையின்பத்தையும் தருகின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, காளத்திநாதர் வரை - காளத்தீச்சுரரது மலையிலுள்ள, துறைவன் - நமது துறைவனே, கான் ஐகுழலினில் - மணம்பொருந்திய அழகிய கூந்தலால், கால்தளைபூட்டி - காலுக்கு விலங்குபூட்டி, கண்வேலதனால் - கண்களாகிய இரண்டுவேல்களால், ஊனப்பட குத்தி-காயப்படும்படிகுத்தி, அல்குல்பொன்தேரைவிட்டுஊர்ந்து-அல்குலாகிய பொற்றேரைவிட் டிடறச்செய்து, கொங்கையானைக்குஇரையிடுவேன் - தனங்களாகிய இரண்டுயானைகளுக்கும் இரையூட்டுவேன், ஒருநாள் வந்து அகப்படின் - ஒருநாள்வந்து அகப்பட்டால்—எ-று.

ஒருநாள்வந்து அகப்பட்டால் இப்படி செய்வேன்என்பதாம். இதுதலைவி பாங்கியொடு சொல்லியது. கான் - மணம், ஐ - அழகு. தளை - விலங்கு. ()

பொய்யாதவாசகன் சங்கரநாரண பூபனிரு
கையாலணைக்கக் கனவுகண்டேன்முலைக் காம்பினகம்
தையாதணையு மெனவுரைத்தேனதிற் சண்டைவந்து
மெய்யாவென்னவிழித் தேனொளித்தானென் விழியினுள்ளே.

இ-ள். பொய்யாதவாசகன் - பொய்க்காதசொல்லையுடையவன், சங்கரநாரணபூபன் - சங்கரநாரணபூபதி, (அவன்) இருகையால் அணைக்க - இருகையினாலும் என்னைத்தழுவ, கனவுகண்டேன் - கனக்கண்டேன், (கண்டபோது) முலைக்காம்பில் - முலைக்காம்பிலே, நகம் தையாது - நகம்பதியாமல், அணையும் எனவுரைத்தேன் - தழுவும்என்று சொன்னேன், அதில் - அந்தக் கனவில், சண்டைவந்து - சண்டையுண்டாக, மெய்யாஎன விழித்தேன்-(இந்தச் சண்டை) மெய்தானென்று விழித்துப்பார்த்தேன், (அவன்) என்விழியினுள்ளே ஒளித்தான்-என்கண்ணுக்குள்ளே மறைந்துவிட்டான்—எ-று. ()

பொய்யாத வாசகன் - சத்தியவாக்கையுடையவன். சங்கரநாரணபூபன்- ஒருசிமான். இது தலைமகள் கனவுநலிபுரைத்தல். (நகூ0)

துளவத்தொடையணி சங்கரநாரணன் றோய்ந்தணைந்த
களவத்தனையு மிதழ்சொல்லுமேயடி கள்ளிநந்தம்
வளவத்தனையு மிதுவார்த்தையாச்சுது வன்முலைபாக்
களவத்தனையில்லை யெயுனக்கேனிந்தக் காயகமே.

இ-ள். துளவத்தொடை அணி - துளவமாலையை யணிந்த, சங்கரநாரணன் - சங்கரநாரணபூபன், தோய்ந்து அணைந்த- தழுவி யணைந்த, களவு அத்

தனையும் - திருட்டுத்தனம் முழுதையும், இதழ்சொல்லுமே - உன் அதரமே சொல்லாநின்றதே, அடிகள்ளி - அடிதிருடி, நந்தம்வளவு அத்தனையும் - நமது வீடுமுழுதும், இதுவார்த்தை ஆச்சுது - இதுவே வார்த்தையாய்விட்டது; வல்முலை - சொக்கட்டானை நிகர்த்த தனங்கள், பாக்கு அளவு அத்தனை இல்லையே - பாக்களவாகிய அத்தனையு மில்லையே, உனக்கு இந்தக்காயகம் என்னை - உனக்கு இந்த மருட்டுவித்தை யாதுக்கு—எ-று.

துளவம் - துளசி, தொடை - மாலை, இதழ் - அதரம், வளவு - வீடு, காயகம் - காமப்பிராந்தி எனினுமாம். இது செவிலித்தாய்சொல்லியது. (கூகக)

போவென்றிரவைச் சிறகாலடித்துப் பொழுதையிங்கே
வாவென்றழைப்பதற் கோவளர்த்தேன்வர்ணச் சேவலைநான்
தாவென்றவர்க்குத் தருமுருகையன் றடஞ்சிலம்பில்
ஆவென்றவாய்கிழிப் பேன்பொறுத்தேன்வளர்த் தாசைகொண்டே.

இ-ள். இரவை - இராக்காலத்தை, போவென்று சிறகால் அடித்து-போவென்று சிறகாலேயுடைத்து, பொழுதை - சூரியனை, இங்கே வாவென்று அழைப்பதற்கோ-இங்கே வாவென்று அழைக்கும்பொருட்டோ, நான்-யான், வர்ணச்சேவலை வளர்த்தேன் - அழகிய சேவலைவளர்த்தேன், தா என்றவர்க்கு - கொடு என்று யாசித்தவர்க்கு, தரும் - (அவர்விரும்பினவற்றைத்) தருகின்ற, முருகையன் - முருகையனது, தடம் சிலம்பில் - பெரிய மலையில், ஆ என்ற வாய்கிழிப்பேன் - ஆவென்று திறந்து கூவின வாயைக்கிழித்து விடுவேன், வளர்த்த ஆசைகொண்டு பொறுத்தேன் - (அதை) நான்வளர்த்தவிருப்பத்தினால் பொறுத்துக்கொண்டேன்—எ-று.

பொழுதை - பொழுதுஐ - சூரியன். வர்ணம் - நிறம் எனினுமாம். முருகையன் - ஒருசீமான். நான் என் உயிர்த் துணைவனோடு கூடி யின்புறுகின்ற இராக்காலத்தைப் போவென்றடித்துப் பகற்காலத்தையுண்டாக்குவோனாகிய சூரியனையழைத்து எனக்கு விரோதியாயிருக்கையால் இந்தச் சேவலின் வாயைப் பிளந்துவிடுவேன், ஆனால் இதைவளர்த்த ஆசையால் பொறுத்தேன் என்பதாம். இது தலைமகள் பாங்கியொடு சொல்லியது. (கூகஉ).

வெள்ளியங்கார்வரை யான்புவிநாதன் வியன்சிலம்பில்
கள்ளியங்காடுசென் றாய்மகளேயுன் கருத்தறிந்து
பள்ளியங்கார்படுப் பார்பனிநீரையுன் பஞ்சணைமேல்
அள்ளியங்கார்தெளிப் பாரெனைப்போலுன் னருகிருந்தே.

இ-ள். வெள்ளி - வெள்ளியினாலாகிய, அம் - அழகிய, கார்வரையான் - பெரியமலையையுடையவனாகிய, புவிநாதன் - புவிநாதனது, வியன்சிலம்பில் - பெரியமலையினிடத்து, கள்ளியங்காடு சென்றாய் - கள்ளிக்காடாகிய பாலை

நிலத்தில் போயினாய், மகளே - என்புதல்வீ, உன்கருத்து அறிந்து - உன்கருத்தையுணர்ந்து, பள்ளி - சயநத்தை, அங்கு ஆர்படுப்பார் - அவ்விடத்தில் யார் பரப்புவார்கள், உன்பஞ்சணைமேல் - உன் பஞ்சணையின்மீது, பனி நீரை அள்ளி - பனிநீரைவாரி, அங்கு - அவ்விடத்தில், என்னைப்போல் - என்னைப்போல, உன் அருகு இருந்து - உன்சமீபத்திலிருந்துகொண்டு, ஆர் தெளிப்பார் - யார்தெளிப்பார்கள்—எ-று.

புவிநாதன் - ஒருசிமோன். கள்ளிக்காடு என்றது பாலைவனத்தை. இது செவிலித்தாய் சொல்லியது. (ருகரு)

மன்னனில்லாதவிவ் வாசல்வந்தாய்மதி யேயுனையச்
சின்னக்குதிரை மரத்தேறிக்கூவுஞ் சிறுகுயிலைக்
கன்னற்சிலையைப் பிடித்தோனையென்றன் கணவன்வந்தால்
வின்னப்படுத்தியென் வாசல்வராமல் வெருட்டுவனே.

இ-ள். மன்னன் இல்லாத - அரசனில்லாத, இவ்வாசல்வந்தாய் - இந்த வாசலில்வந்தாய், மதியே - சந்திரனே, என்கணவன் வந்தால் - என் நாயகன் வந்தால், உன்னை - உன்னையும், அ - அந்த, சின்னக்குதிரை மரத்துஏறி-சின்னமாமரத்தின் மேலேறி, கூவும் - கூவாநின்ற, சிறுகுயிலை - சிறியகுயிலையும், கன்னல் சிலையைபிடித்தோனை - கருப்புவில்லைக் கைப்பிடித்தவனாகிய மன்மதனையும், வின்னப்படுத்தி - பின்னம்செய்து, என்வாசல்வராமல் - என் வாசலில் வரவொட்டாமல், வெருட்டுவன் - வெருட்டிவிடுவேன்—எ-று.

மதி - சந்திரன். குதிரைமரம் - மாமரம். கன்னல் - கரும்பு. இது தலைமகள் கூற்று. (ருகச)

பெரும்பாரளந்தவ ரேயரனேந்தும் பெரியவரே
அரும்பாமலரணை யாதவரேயெம தண்ணலென்னும்
விரும்பினர்க்காத்திடுங் காளத்திநாதர் வியன்சிலம்பில்
கரும்பாமொழிச்சியெங் கேஉத்தர்போனிற்குங் காவலரே.

இ-ள். எமது அண்ணல் என்னும் - எமது பெரியோனென்கிற, விரும்பினர்க்காத்திடும் - விரும்பினோரைக் காக்கின்ற, காளத்தி நாதர் - காளத்திநாதரது, வியன்சிலம்பில் - பெரிதாகிய மலையில், பெரும்பார் அளந்தவரே - பெரியபூமியையளந்தவரே, அரன் எந்தும் பெரியவரே - சிவபெருமான்கையிலேந்துகின்ற பெரியவரே, அரும்பாமலர் அணையாதவரே - அரும்பாத மலரைச்சேராதவரே, உத்தர்போல் நிற்கும் காவலரே - உஉத்தர்கள் போலே நிற்கின்ற காவலர்களே, கரும்பு ஆம் மொழிச்சி - கருப்பஞ்சாறுபோன்றஇன்சொல்லையுடையவளாகிய எமதுபெண், எங்கே - எங்கேபோயினாள்—எ-று.

பெரும்பார் அளந்தவர் - அரிதாள், (அறுத்தவினைத்தாள்) அரன் எந்தும் பெரியவர் - மான். அரும்பாமலர் அணியாதவர் - வண்டுகள். தாவலர் - சோலையிலுள்ள மலர்கள். இது வறும்புனங்கண்ட தலைமகன் சொல்லியது.()

திருத்தேர்புகழ்நந்தி தேசபண்டாரிதெள் ளாரவெற்பில்
மருத்தேர்குழலிக்குக் கார்முந்துமாகில் மகுடரத்நப்
பரித்தேரும்பாகனு மென்பட்டவோவென்று பங்கயக்கை
நெரித்தேவயிற்றில்வைத் தேநிற்பளே வஞ்சி நெஞ்சுலர்ந்தே.

இ-ள். திருத்து - திருத்தப்பட்ட, ஏர் - அழகையும், புகழ் - புகழையுமுடைய, நந்திதேசபண்டாரி - நந்திதேசபண்டாரியின், தெள் ஆரவெற்பில் - தெளிந்த சந்தனமலையில், மருத்தேர் குழலிக்கு - வாசனை வீசுகின்ற குழலையுடையவளாகிய என்காதலிக்கெதிரே, கார்முந்துமாகில் - மேகங்கள் முந்தினால், மகுடரத்நம் - ரத்நகிரீடத்தைத்தரித்த, பரி - குதிரைபூண்ட, தேரும் - ரதமும், பாகனும் - தேர்ப்பாகனும், என்பட்டவோ என்று - என்ன கதியை அடைந்தனவோவென்று, பங்கயக்கை நெரித்து - தாமரைமலர்போன்ற கைகளைநெரித்து, வயிற்றில்வைத்து - வயிற்றில் வைத்துக்கொண்டு, வஞ்சி-வஞ்சிக்கொடிபோலும் என்காதலி, நெஞ்சு உலர்ந்து நிற்பளே - நெஞ்சுலர்ந்து நிற்பாளே, (ஆதலால் நீவிரைந்து தேரைச் செலுத்துவாயாக)—எ-று.

நந்திதேசபண்டாரி - ஓர்பிரபு. ஆரம் - சந்தனமரம், இது தலைமகன் பாகனோடு சொல்லியது. (ருகசு)

வானொத்தகையன் முருகப்பபூபன் வரும்பவனிக்
கேநத்தைக்கொண்டு திரிந்தனையேயடி யேமகளே
நீநத்தைப்போடவு நானத்தைத்தேடவு நித்தம்வரும்
சீநத்துக்கப்பலுண் டோவதைநீசற்றுந் தேர்ந்திலையே.

இ-ள். வான் ஒத்தகையன் - மேகம்போலும் கொடைக்கையினையுடையவன், முருகப்பபூபன் - முருகப்பபூபதி, (அவன்) வரும்பவனிக்கு - வருகின்ற பவனிக்கு, ஏநத்தைக்கொண்டு திரிந்தனை - ஏன் விருப்பங்கொண்டு திரிந்தாய், அடியேமகளே—, நீநத்தைப்போடவும் - நீ சங்குவளையலைச் சிந்தவும், நான் அத்தைத்தேடவும் - அதை நான்தேடவும், நித்தம்வரும் - நாள் தோறும் வருகின்ற, சீநத்துக் கப்பல் உண்டோ - சீனத்துக் கப்பலுளதோ (இல்லையே), அதை நீ சற்றும் தேர்ந்திலையே - அதைநீ சிறிதும் தெளிந்திருந்தாயில்லை—எ-று.

நத்து - விருப்பம், நத்துஜ - நத்தை - விருப்பத்தை, நத்து - சங்கு(சங்கவளையல்) இது செவிலித் தாய்க்கூற்று. (ருகஎ)

தலைவாசனிற்பள் தலைமயிர்கோதுவள் தையனல்லாள்
முலைமார்பைக்காட்டுவள் வாவென்றழைப்பள்தன் முன்புவரின்
கலைதானெகிழ்ப்பள் மிகுபொருள்கேட்பள தில்லையென்றால்
தலைதான்வலிக்குது நீர்போமென்றே புறந்தள்ளுவளே.

இ-ள். தலைவாசல் நிற்பள் - தலைவாசலில் நிற்பாள், தலைமயிர்கோதுவள் - தலைமயிரைக் கோதுவாள், தையல்நல்லாள் - மாதுநல்லாள், முலைமார்பைக்காட்டுவள் - முலையோடுகூடிய மார்பைக்காட்டுவாள், வாவென்று அழைப்பள்—, தன்முன்புவரின் - (அழைக்கப்பட்டவர்) தனக்கெதிரேவந்தால், கலைதான் நெகிழ்ப்பள் - ஆடையை நெகிழ்விப்பாள், மிகு பொருள் கேட்பள் - மிக்க பொருளைக் கேட்பாள், அது இல்லையென்றால் - அது இல்லையென்று சொன்னால், தலைதான் வலிக்குது - தலைநோகின்றது, நீர்போம் என்று - நீர்போமென்று சொல்லி, புறம்தள்ளுவள் - வெளியில் தள்ளிவிடுவாள்—எ-று.

ஒருவிடபுருஷன் வேசையர்வீடே கதியாயுழன்று அவர்களால் தன்கைப்பொருள்யாவுமிழந்து அவமானமடைந்து சொல்லியது. (நூசுஅ)

கட்டாரியேந்திய காளத்திநாதர் கனகவெற்பில்
பொட்டானனத்திட்டுப் போறபெண்ணேநின் பொலன்கலையைத்
தொட்டால்மணக்கும் புனுகுசவ்வாது கஸ்தூரியுமே
தட்டானடித்த சிமிழ்போற்றனத்தைத் தருகுவையே.

இ-ள். கட்டாரிஏந்திய - சூலத்தைத் தாங்கிய, காளத்திநாதர் - காளத்திநாதரது, கனகவெற்பில் - பொன்மலையில், ஆனனத்து - முகத்தில், பொட்டுஇட்டு - திலகமிட்டு, போறபெண்ணே - போகிறமாதே, நின்பொலன்கலையைத்தொட்டால் - உன்பொன்மயமான ஆடையைத்தீண்டினால், புனுகுசவ்வாது கஸ்தூரியுமேமணக்கும் - புனுகும் சவ்வாதும் கஸ்தூரியுமே பரிமளியாநின்றன, தட்டான் அடித்த சிமிழ்போல் - கம்மாளன் அச்சடித்தசிமிழ்போன்ற, தனத்தை - உன் கொங்கைகளை, தருகுவை - எனக்குத் தரக்கடவாய் எ-று.

கட்டாரி இஃவிடத்தில்சூலத்துக்காயிற்று. ஆனனம் - முகம். பொலன்-பொன், கலை - ஆடை. இது ஒருநாயகன் ஒருநாயகியை நோக்கிச்சொல்லியது. (நூசுக)

சேலுங்கலையுஞ் சிலையம்பும்வண்டுஞ் செழித்தவொரு
வேலும்பழித்தவிம் மெல்லியமெய்த விழியம்பினால்
மாலுளதாகி மயங்கித்தியங்கி மதிதினமென்
பாலுளவேலைவிட் டெய்த்தேன்மருந்தென்ன பைங்கிளியே.

இ-ள். சேலும் - சேல்மீனையும், கலையும் - மானையும், சிலை அம்பும்-வில்லிற்கோத்த அம்பையும், வண்டு - வண்டையும், செழித்த ஒருவேலும்-தழைத்த ஒப்பற்ற வேலாயுதத்தையும், பழித்த - இகழ்ந்த, இம்மெல்லியல் - இந்த மெல்லியலாள், எய்த - பிரயோகித்த, விழி அம்பினால் - கண்களாகிய அம்பினால், மால் உளது ஆகி-காமமயக்கமுண்டாகி, மதி மயங்கி—, தியங்கி-திகைத்து, தினம் - நாள்தோறும், என்பால் உள்ள வேலைவிட்டு - என்னிடத்திலுள்ள வேலையைவிட்டு, எய்த்தேன்-இளைத்தேன், (ஆதலால்) பைங்கிளியே-பசுங்கிள்ளையே, மருந்து என்ன - (என்மதிமயக்கம் நீங்குவதற்கு) மருந்தாவது யாது (நீயேசொல்லக்கடவாய்)—எ-று.

மெல்லியலாள் - மிருதுவாகிய இயற்கையையுடையவள். மால் - காமமயக்கம், தியங்குதல் - திகைத்தல், எய்த்தல் - இளைத்தல். இது ஒருநாயகன் ஒரு நாயகியைநோக்கி, நீ தந்தநோய்க்கு நீயே மருந்துஞ் சொல்லவேண்டுமென்று கூறியது. (சOO)

## தலைவியை விட்டுப்பிரிந்து போகின்ற தலைமகன் சந்திரனைநோக்கிக் கூறியது.

மதியேயென்பாங்கி தன்வாசலுறேல்யான் வருமளவும்
சதியேநினைத்தங்குத் தான்போவையேற்குயில் தான்றொனிக்கும்
கதியேமிகுத்தநற் கன்னற்கதிபன் கணைதொடுப்பான்
பதியேபுகாதிரு சென்றாற்பகைவரும் பாவைக்குமே.

இ-ள். மதியே - சந்திரனே, நான்வருமளவும் - நான்வருமட்டும், என்பாங்கி தன்வாசல் உறேல் - என்நாயகியின் வாசலிற்போகாதே, சதியேநினைத்து - சற்பனையையே நினைத்து, அங்கு போவையேல் - அவ்விடத்திற்போவாயானால், குயில்தொனிக்கும் - குயில்சத்திக்கும், கதிமிகுத்த - வேகத்தில் மிகுந்த, நல் - அழகாகிய, கன்னற்கு அதிபன் - கருப்புவில்லுக்கிறைவனாகிய மன்மதன், கணைதொடுப்பான் - பாணப்பிரயோகம் பண்ணுவான், பதிபுகாதுஇரு - (ஆகையால்) அவளது இடத்துக்குப்போகாதிருப்பாயாக, சென்றால் - போவாயானால், பாவைக்கும் - பாவைபோலும் உருவுடைய என்காதலிக்கும், பகைவரும் - அநேகமாகிய பகைகள் உண்டாகும்—எ-று.

பகையென்றது குயில்கூவுதலும் மன்மதன் கணைதொடுத்தலுமேயன்றி புஷ்பசயனம் சுடுதல், கடலிரைதல், முத்துமாலை, சந்தனப்பூச்சு என்பவைவெப்பமாயிருத்தல் முதலாயின. (சOக)

தலைவன் பொருள்வயிற்பிரிவானாக நினைத்து, தலைவிக்குப் பிரி

வுணர்த்த அஞ்சித் தன்னுள்ளே சொல்லியிரங்குதல்

தேவெனவேந்தர் பணிமுருகையன்றன் றென்சிலம்பில்
ஓவெனத்தேறிப் பிரிவுசொல்வேனொரு நாளிரவில்
காவென வன்றிற் பெடைகூவிடக்கை நெகிழ்க்குமுன்னே
ஆவென்றலறிப் பதைத்தனளேயந்த வாயிழையே.

இ-ள். வேந்தர் - பிறதேசத் தரசர்கள், தே என - தெய்வமாகநினைத்து, பணி - வணங்குகின்ற, முருகையன் - முருகையனது, தென்சிலம்பில்-பொதிகைமலையில், ஓ எனத்தேறி - இது தகுமென்று துணிந்து, பிரிவுசொல்வேன் என் பிரிவைத் தலைவிக்குரைப்பேன், (ஆனால்) அந்த ஆயிழை - அந்தப்பெண்ணனவள், ஒருநாள் இரவில் - ஒருநாள் இராக்காலத்தில், அன்றில் பெடை கா என கூவிட - அன்றிற் பெடையானது காவென்று அரற்றினவுடனே, கை நெகிழ்க்குமுன்னே - (அதையோட்டுதற்பொருட்டுத் தன்னை யிறுகத்தழுவின) கைகளை நான்நெகிழ்க்குமுன்னே, ஆ என்று அலறி - ஆவென்றலறி, பதைத்தனளே - பதைத்தாளே, (அத்தன்மையாட்கு என்பொருட்பிரிவை எவ்வாறுணர்த்துவேன்—எ-று.

ஒருநாளிரவில் சற்றுக்கை நெகிழ்த்தளவில் பிரிவாற்றாது வருந்தினவளுக்கு நெடுநாட்பிரிவை எவ்வாறு உணர்த்துவேனென்பதுகருத்து. (சOஉ)

தலைமகள் தன்வருத்தத்தைப் பாங்கியோடு கூறல்.

பைங்கிளியென்றிடு மாதேவிழியம்பு பட்டவெற்குக்
கொங்கையிணைத்தடந் தந்தவள்வாய்மருந் தேகொடுத்துச்
சங்கையில்லாமதன் பொற்றேர்க்கடிதடஞ் சாரவைத்தால்
பங்கமில்காம விடநோய்தணிந்திடும் பாரமன்றே.

இ-ள். பைங்கிளி என்றிடும் மாதே - பசுங்கிளியென்று கண்டோர்சொல்லுதற்குரிய பெண்ணே, விழி அம்புபட்டஎற்கு - உங்கள்மாதின் கண்ணாகிய அம்புதைக்கப்பெற்ற எனக்கு, கொங்கையின் ஒத்தடம்தந்து - தனங்களால் ஒத்தடங்கொடுத்து, அவள்வாய்மருந்தே கொடுத்து - அவள்வாயமுதாகிய மருந்தையேகொடுத்து, சங்கையில்லா - சங்கையற்ற, மதன் - மன்மதனது, பொன்தேர் - அழகிய ரதமாகிய, கடிதடம் சாரவைத்தால் - நிதம்பத்தைப் பொருந்தவைத்தால், பங்கம்இல் - பழுதில்லாத, காமவிடநோய் - காமமாகிய விஷநோயானது, தணிந்திடும்-சாந்தப்படும், பாரம்அன்று-கஷ்டமல்ல-எ-று.

வாய்மருந்து - அதராமிர்தம். (சOங)

ஒருநாயகன் ஒருநாயகியை விரும்பிச்செல்லும்போது அவள் அவனைக் கண்ணெடுத்துப் பாராதிருந்ததனால் அவன் மனம்வருந்தி அவளைநோக்கிக் கூறியது.

மையிட்டகூந்தலு மானிட்டகண்ணு மதிமுகமும்
கையிட்டகிள்ளையும் வாரிட்டகொங்கையுங் காதினிற்பொன்
செய்திட்டவோலையுஞ் சிற்றடியிட்ட செழுஞ்சிலம்பும்
மைதிட்டமாக வருபவளேயென்னைக் காண்கிலையே.

இ-ள். மையிட்டகூந்தலும் - மேகம்போன்ற கூந்தலும், மான்இட்ட கண்ணும் - மான்போன்ற கண்களும், மதிமுகமும் - பூர்ணசந்திரன்போன்ற முகமும், கையிட்டகிள்ளையும் - கையிற்பிடித்தகிளியும், வார்இட்டகொங்கையும் - கச்சணிந்த தனங்களும், காதினில் - காதிலணிந்த, பொன்செய்திட்ட ஓலையும் - பொன்னாற் செய்யப்பட்ட ஓலையும், சிற்றடி இட்டசெழுஞ்சிலம்பும் - சிற்றடியிலணிந்த செழுஞ்சிலம்பும், (இவையாவும்) மைதிட்டமாக - ஒழுங்கானமுறைமையாக அணியப்பெற்று, வருபவளே - வருகிறவளே, என்னைகாண்கிலையே - என்னைப்பார்க்கிலையோ—எ-று.

மையிட்டகூந்தல் - கருமையமைந்த கூந்தல் எனினுமமையும். (௪௦௪)

அவ்வாறுகூறியிரங்கின தலைமகனைநோக்கித் தலைமகள்கூறியது.

காண்கிலையென்றிடுங் காமனைநேருமென் கட்டழகா
ஆணரசேயெனைக் காணவருபவ ராயிரம்பொன்
வேணமட்டுங்கொணர்ந் தீகுவர்நீயுமவ் வாறுசெயின்
வாணகையோடுனைச் சேர்ந்தின்பமீகுவன் மானவனே.

இ-ள். காண்கிலைஎன்றிடும் - பார்க்கவில்லையென்று சொல்லுகின்ற, காமனைநேரும் - காமனைநிகர்த்த, என்கட்டழகா - என்கட்டழகனே, ஆணரசே - ஆடவர்க்கரசனே, என்னை காணவருபவர் - என்னைப்பார்க்கவருவோர், ஆயிரம்பொன் - ஆயிரத்தொகைபெற்ற பொன்னை, வேணமட்டும் - நான்விரும்பு மட்டும், கொணர்ந்து ஈகுவர் - கொண்டுவந்து கொடுப்பார்கள், நீயும் அவ்வாறு செயின் - நீயும் அப்படி செய்வாயாயின், மானவனே - பெருமையுள்ளவனே, வாள்நகையோடு - ஒளியமைந்த நகையுடனே, உன்னைசேர்ந்து - உன்னைக் கூடி, இன்பம் ஈகுவன் - சுகந்தருவேன்—எ-று.

கட்டழகு - பேரழகு. இன்பம் - காமவின்பம். (௪௦௫)

தலைவியைநோக்கித் தலைவன்கூறியது.

மானேயென்னுடையர் சத்தியமாய்ச்சொன்ன வார்த்தையைநீ
தேனேமறந்து தியங்கவைத்தாயது தீங்கலவோ

வானேர்புதுவைநற் காளத்திநாதர் வரையணங்கே
நானேவலியவந் துன்குறைதீர்ப்ப னறுங்கிளியே.

இ-ள். மானே - மான்போல்வாளே, என்னோடு - என்னுடனே, உயர்மிகுந்த, சத்தியமாய்ச் சொன்னவார்த்தையை - சத்தியமாய்ச் சொன்னசொல்லை, தேனே - தேன்போல்வாளே, மறந்து - மறந்து, தியங்கவைத்தாய்-என்னைத்திகைக்கவைத்தாய், அது - அப்படிசெய்தது, தீங்குஅல்லவோ-தீமையன்றோ, வான்நேர் - மேகத்தைநிகர்த்த, புதுவைநல் காளத்திநாதர்-புதுவையில் வாழ்கின்ற அழகிய காளத்திநாதரது, வரை - வரையிலுள்ள, அணங்கே-பெண்ணே, நானேவலியவந்து—, உன்குறைதீர்ப்பன் - உன்குறையை நீக்குவேன், நறுங்கிளியே - நல்ல கிளிப்பிள்ளை போல்வாளே—எ-று.

மான் - மருண்டநோக்கத்தால் உவமை, தேன் - இன்சொல்லால் உவமை, கிளி - கொஞ்சிப்பேசுவதனால் உவமை. (௪0௬)

தலைவி தலைவனைநோக்கிச் சொல்லியது.

கிளியென்றுசொல்லிய காதலனேயொன்று கேட்டிடுதி
எளியவளாகிய யான்செய்தகுற்றமென் னேந்திழையார்
பழிபலசொல்லவும் நின்னாசையானறும் பாலன்னமுந்
தளியுனையேநினைந் தல்லும்பகலுந் தவிக்கின்றனே.

இ-ள். கிளியென்றுசொல்லிய காதலனே - கிளியென்றுசொன்ன என்பிராணநாதனே, ஒன்றுகேட்டிடுதி - ஒருசெய்தியைக் கேட்பாயாக, எளியவளாகிய யான் - ஏழையாகியநான், செய்தகுற்றம் என் - செய்தகுற்றம்யாது, ஏந்திழையார் - பெண்கள், பழிபலசொல்லவும் - பழிகளைச்சொல்லிக்கொண்டிருக்கவும், நின்ஆசையால் - உன்மீது நான்வைத்த ஆசையினால், நறு - நறுமணமுள்ள. பால் அன்னமும் - பாற்சோறும், தளி - தள்ளி, அல்லும்பகலும் இரவும்பகலும், உன்னையே நினைந்து—, தவிக்கின்றனன் - தவிக்கிறேன்-எ-று.

தலைவன் தலைவிக்குச் சொல்லியது.

தவிக்கின்றகாரணமேதோயான்செய்திட்ட தாழ்ச்சியென்னோ
புவிக்குட்சிறந்திடுங் காளத்திநாதர் புதுவைவெற்பில்
தவிக்கின்றமென்முலை மாதேமறக்கிலன் சாற்றுமென்னைக்
கவிக்கின்றமாமயல் தீரம்ருந்கொன்று காட்டுவையே,

இ-ள். தவிக்கின்ற காரணம் ஏதோ - தவிப்பதற்குக் காரணம் யாதோ, யான்செய்திட்ட தாழ்ச்சி என்னோ - நான்செய்த குறையாதோ, புவிக்குள் - உலகத்துள், சிறந்திடும் - உயர்ந்திட்ட, காளத்திநாதர்-காளத்திநாதருடைய, புதுவை வெற்பில் - புதுவை மலையில், தவிக்கின்ற - தவித்துக்கொண் டிருக்கிற, மென்முலை - மெல்லிய தனங்களையுடைய, மாதே - பெண்ணே, மறக்கிலன் - நான்மறக்கமாட்டேன், சாற்றும் என்னை - சொல்லப்பட்ட என்னை, கவிக்கின்ற - மூடிக்கொள்ளுகிற, மாமயல் - பெரியமயக்கமானது, தீர - நீங்கும்படி, மருந்து ஒன்றுகாட்டுவை - ஒருமருந்தைக் காட்டுவாயாக—எ-று.

கவித்தல் - மூடுதல். (ச 0 அ)

தலைவி தலைவனுக்குச் சொல்லியது.

காட்டமருந்திது காலமன்றேயென்றன் காதலனைக்
கூட்டியபின்புனைக் கூடுவதற்கொரு குற்றமில்லை
நாட்டும்புகழ்ப்புது வாபுரிக்காளத்தி நாதர்வெற்பில்
பாட்டுக்கிறையவ னேமறவேனுனைப் பல்தினமே.

இ-ள். மருந்துகாட்ட - மருந்தைக் காட்டுவதற்கு, இதுகாலம் அன்றே - இதுகாலமல்லவே, என்றன் காதலனை - என்காதலனை, கூட்டியபின்பு - சேர்த்தபிறகு, உன்னை கூடுவதற்கு - உன்னைச்சேர்வதற்கு, ஒரு குற்றம் இல்லை - ஒருகுற்றமுமில்லை, நாட்டும்புகழ் - நிலைபெறுத்தப்பட்ட புகழையுடைய, புதுவாபுரி - புதுவை நகரில் வாழ்கின்ற, காளத்திநாதர் வெற்பில் - காளத்திநாதரது மலையில் உள்ள, பாட்டுக்கு இறையவனே-பாடலுக் கதிபனே, உன்னை பல்தினம்மறவேன் - உன்னை நெடுநாளும் மறவேன்—எ-று.

காதலன் - தலைவன், புதல்வன். (ச0க)

தலைவன் தலைவிக்குச் சொல்லியது.

மறந்தனையான்சொன்ன வாசகந்தன்னை மதர்விழியாய்
அறந்தழைக்கும்புது வாபுரிக்காளத்தி யப்பன்வெற்பில்
உறந்தருநம்மிரு வோருயிரொன்று முடலிரண்டாய்
திறந்தரநின்றதை நோக்கினவரெவர் தேமொழியே.

இ-ள். மதர்விழியாய் - மதர்த்த கண்களையுடையவளே, யான்சொன்ன வாசகம் தன்னை - நான்சொன்னவார்த்தையை, மறந்தனை-மறந்துவிட்டாய், அறம் தழைக்கும் - தருமங்கள் செழித்தோங்குகின்ற, புதுவாபுரி - புதுவை நகரில்வாழ்கின்ற, காளத்தியப்பன் வெற்பில் - காளத்தியப்பன் மலையில், உறம்தரும் - உறுதியைக்கொடுக்கின்ற, நம் இருவோர் உயிர் ஒன்றும் - நம்

மிருவருடைய உயிரொன்றாகவும், உடல் இரண்டு ஆய் - உடலிரண்டாகவும், திரம்தரூநின்றதை - திறமாய்நின்றதை, நோக்கினவர் எவர் - பார்த்தவர் யாவர், தேமொழியே - தேன்போலும் இன்சொல்லையுடையாளே—எ-று.

உரம் என்பது எதுகையின்பம்நோக்கி உறம் எனவந்தது. (சசO)

தலைவன் தலைவிக்குச் சொல்லியது.

தேமொழியேநிற்குச் சொன்னநற்புத்தியைத் தேறுகிலாய்
போமுழியெங்கணும் போவதுசெய்தனை போதவுமே
நீமதமாகியே யின்னமுஞ்செய்ய நினைகுவையேல்
தாமதமின்றிக் கொடுந்தீங்கடைகுவை சாற்றினனே.

இ-ள். தேமொழியே - பெண்ணே, நிற்குசொன்ன நற்புத்தியை - உனக்கு நான்சொன்ன நல்லபுத்தியை, தேறு கிலாய் - தெளிகின்றிலை, போம் உழி எங்கணும் - போகவேண்டிய இடங்களெல்லாம், போதவும் - மிகவும், போவதுசெய்தனை - போனாய், நீமதம் ஆகி - நீமதங்கொண்டு, இன்னமும் - இனிமேலும், செய்யநினைகுவையேல் - அப்படிசெய்ய நினைப்பாயானால், தாமதம் இன்றி - தாமதமில்லாமல் (விரைவில்), கொடுதீங்கு அடைகுவை - கொடியதுன்பத்தை யடைவாய், சாற்றினன் - சொல்லினேன்—எ-று.

உழி - இடம். கொடுந்தீங்கு - சகிக்கக்கூடாத துன்பம். (சசக)

இதுவும் தலைவன் சொல்லியது.

சாற்றினனின்மே லுளவன்பினாலிதைத் தாழ்குழலே
போற்றுவைநீயுமென் பாலன்புளேயெனிற் போதநன்காம்
ஆற்றலுறும்புது வாபுரிக்காளத்தி யண்ணல்வெற்பில்
தூற்றினையாயினின் மேலுறுமன்பு தொலைவுறுமே.

இ-ள். தாழ்குழலே - நீண்ட கூந்தலையுடையாளே, நின்மேல் உள்ள அன்பினால் - உன்மீதுள்ள அன்பினால், இதை சாற்றினன் - இதைச்சொன்னேன், என்பால் அன்பு உளே எனின் - என்னிடத்தில் அன்புடையையாயின், நீயும் போற்றுவை - நீயும் இதை அங்கீகரிப்பாய், போத நன்கு ஆம் - (அங்கீகரிப்பாயானால்) மிகவும் உனக்கு நன்மையுண்டாகும், ஆற்றல் உறும் - ஆற்றல்மிகுந்த, புதுவாபுரி - புதுவைநகரில் வாழ்கின்ற, காளத்தி அண்ணல் வெற்பில் - காளதத்தியண்ணலின் மலையில், தூற்றினை ஆயின் - தூற்றினையானால், நின்மேல் உறும் அன்பு - உன்மேலெனக்கிருக்கிற அன்பு, தொலைவுறும் - நீங்கிப்போம்—எ-று.

ஆற்றல் - எடுத்தகாரியத்தை முடிக்கும் வல்லமை. அண்ணல் - பெருமையுடையோன். (சசஉ)

## அலர்க்குறி.

காம்பாயர்தெய்வத்தின் பேரீரெழுத்தின் கடையெழுத்தை
யாம்பாதிசெய்தது வேகுறியாமலர்ப் பாவையங்கப்
பூம்பாவையாக்குநல் லண்ணுமலையர் பொருப்பிடத்தே
தாம்பாதிவைத்தும் வராதிருந்தாலென்ன சாற்றுவதே.

இ-ள் மலர்ப்பாவை - அழகினுல் திருமகளை நிகர்த்தவளே, அங்கம்-எலும்பை, பூம்பாவைஆக்கும் - அழகிய பெண்ணுருவாகச்செய்த, நல்அண்ணுமலையர் - சிறந்த அண்ணுமலைநாதரது, பொருப்பு இடத்து - மலையின் கண்ணுள்ள, காம்பு - வேய்ங்குழலையுடைய, ஆயர் - முல்லைநில மாக்களாகிய இடையரது, தெய்வத்தின் - தெய்வமாகிய திருமாலின், பேர் ஈரெழுத்தின்- இரண்டெழுத்தாலாகிய திருநாமத்தின், கடை எழுத்தை-இறுதியெழுத்தை, ஆம் பாதிசெய்து - நடுப்பாதிசெய்து, அதுவே குறியா - அதனையே குறியிடமாகக்கொண்டு (அதனிடத்தில்), தாம்பாதி - தாமரையை,வைத்தும் - வைத்திருந்தும், வாராது இருந்தால்-வாராமலிருந்தால், என்னசாற்றுவது - (யாம்) என்னசொல்லுவது—எ-று.

காம்பு - மூங்கில், அது இவ்விடத்தில் வேய்ங் குழலுக்காயிற்று. (வேய்ங் குழல் - புள்ளாங்குழல்) திருமாலின் ஈரெழுத்துப்பெயர் அரி, இதில்கடையெழுத்து,ரி, இந்த ரி என்பதில் அரைப்பங்கு பாதிரி. தாம்=பாதி, தாம்-அரை-தாமரை. அங்கம் பூம்பாவை ஆக்கினது திருமயிலையில். அங்கம்பூம் பாவை யாக்கினது திருஞானசம்பந்தசுவாமிகளேயாயினும் அவர் முருகக்கடவுளின் அவதாரமாதலாலும் அம்முருகக்கடவுளுக்கும் சிவபெருமானுக்கும்பிதா புத்ர சம்பந்தமாகிய ஒற்றுமையுண்டாயிருத்தலாலும் "அங்கம்பூம்பாவையாக்கு நல்லண்ணுமலையர்" என்ருர் பாதிரிமரத்தின்மீது தாமரைமலர் இருந்தது என்பதாம். இது தலைமகள் இரவுக்குறியிடைச் சென்றுநின்று தலைமகன் கண்ணுக்குப் புலப்படாமற் போயினமையால் வந்த தலைமகன் தான்வந்தகுறியிடைநின்று வைகறையில் மீண்டுபோயினதற்கு அறிகுறியாகத் தன்கையிற் கொணர்ந்த தாமரைமலரை அவ்விடத்துள்ள ஓர்பாதிரிமரத்தின்மீது வைத்துப்போயினமையைத் தெரிவிக்குந் துறை. இதற்கு அலர்க்குறிஎன்றுபெயர். மலர்ப்பாவைஎன்றது தோழியை. இது தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

## இதுவுமது.

வாரணமாங்கள மாமலையாமுலை யாரணங்கே
வாரணஞ்சூழ்புவி நாடியதேவந்தை வந்தவன்பால்
வாரணமாமரு ணசலவீர வசந்தன்வெற்பில்
வாரணமேலொரு வாரணமேறிவதிந்ததுவே.

இ-ள். வாரணம் ஆம் களம் - சங்கினை நிகர்த்த சமுத்திரையும், மாமலை ஆம் முலை - பெரியமலையினை நிகர்த்த தனங்களையுமுடைய ஆரணங்கே - பெண்ணே, வாரணம் சூழ் - கடல் சூழ்ந்த, புவி - உலகத்தி லுள்ளார், நாடிய - விரும்புகின்ற, தேவந்தை வந்த - தேவைநகரத்தி லவதரித்த, அன்பால்வாரணம் ஆம் - (உயிர்கள்மீதுவைத்த) அன்பினுக் சமுத்திரத்தை நிகர்த்த, அருணசல வீரவசந்தன் வெற்பில் - அருணசல வீரவசந்தனது மலையின்கண், வாரணமேல் - ஒரு வாரணத்தின் மீது, ஒருவாரணம் - மற்றொரு வாரணமானது, ஏறிவதிந்தது - ஏறியிருந்தது—எ-று.

வாரணம்சூழ் என்ற இடத்தில் வார் அண் அம் எனப் பிரித்து, நீட்சி பொருந்திய நீரையுடைமது எனப்பொருளுரைத்துக் கடலுக்காக்குக. தேவந்தை - தேவைநகர் என்பதன் மரூஉ. வாரணம் - யானையின் பரியாயம், அதற்குப்பரியாயம் - அத்தி, வாரணம் - யானை, இதன்பரியாயம் ஆம்பல். அத்திமரத்தின்மீது அல்லிமலர் வைக்கப்பட்டிருந்தது என்பதாம். (சுகச)

இதுவுமது.

பார்க்கவனைத்தனிக் கண்ணெறிமாயன் பகைத்திலகன்
பார்க்கவனைத்தகு சீரான்வடமலைப் பார்த்தன்வெற்பில்
பார்க்கரனைக்கடிந் தேயில்கானனப் பைங்கிளியே
பார்க்கரனைச்சுமந் தேயிருந்தாளொரு பார்க்கரனே.

இ-ள். பார்க்கவனை - சுக்கிரனை, தனி கண் எறி - ஒரு கண்ணைக் கெடுத்த, மயன் - மாயவன், பகைத்து - முன்னே பகைத்து, இலகு அன்பு ஆர்க்க - பின்னே அன்பைச்செய்தால், அனை தகு சீரான் - (அவர்கள்மேல்) தாய்போன்ற கருணைக் குணமுள்ளவன், வடமலை பார்த்தன் - வடமலையிலுள்ள பார்த்தன், வெற்பில் - அவனதுமலையில், பார்க்கரனை கடிந்து-பூர்ண சந்திரனை அழகழித்து, இலகு - பிரகாசிக்கிற, ஆனனம் - முகத்தையுடைய, பைங் கிளியே - பச்சைக் கிளிபோல்வாளே, ஒரு பார்க்கரன்—, (வேறொரு) பார்க்கரனை சுமந்திருந்தான்—எ-று.

பாற்கரன் பார்க்கரன் என எதுகைநோக்கிவந்தது. பாற்கரன் - சூரியன். அரி, அரி - மூங்கில், பார்க்கரன் - அலரி, மூங்கிலின்மேல் அலரிமலர் இருந்தது என்பதாம். (சுகரு)

இதுவுமது.

சிரணிகொன்றை வினைதீர்த்தநாதர் செழுங்கிரியில்
காரணமாமிது காரணமேயரன் கன்னிகையும்
நாரணன்றேவியும் வேறுசெய்தாருடை நன்முடிமேல்
ஈரணைமூவண மாமலர் சூனும் தெய்தியதே.

இ-ள். சீர் அணிகொன்றை - சிறப்புப்பொருந்திய கொன்றைமலரை யணிந்த, வினைதீர்த்தநாதர் - வினைதீர்த்தநாதரது, செழுங்கிரியில் - செழிய மலையின்மீது, இது - இதோகாணப்படுவது, காரணம் ஆம் காரணமே - ஆச்சரியமாகிய ஆச்சரியமே, அரன் கன்னிகையும்-சிவபிரான் தேவியாகியஉமையின்கையிற் பிறந்த சங்கையையும், நாரணன்தேவியும் - திருமாலின் தேவியாகிய பூமிதேவியும் (மண்ணையும்) வேறுசெய்தார் உடை - வேறுபடுத்தினவருடைய, நல்முடிமேல் - அழகிய உச்சியில், ஈரணை மூவணமாமலர்தானும்-ஐவணமலரும், வந்து இருந்தது - வந்திருந்தது—எ-று.

நீரையும் மண்ணையும் வேறுபிரிக்கின்ற தேற்றான்கொட்டை மாத்தினுச்சியில் ஐவணமலர் வந்திருந்தது என்பதாம். ஈரணைமூவணம் - இரண்டணைந்த மூவணம்; இதன்பொருள் ஐவணம் என்பது. (சகசு)

## இதுவுமது.

அலைகடலிற்றுயி லாரணன்றேடற் கரியரண்ணா
மலையர்தம்வெற்பினண் பாமயிலேவண்டு ணாமரத்தில்
சிலைமலைகொண்டவன் சேய்மாதுலன்றந்தை சேய்க்கிரங்கா
மலரிணைவைத்தகன் றார்கண்டுவந்தோ மதிசயமே.

இ-ள். அலைகடலில் துயில் - அசைகின்ற திருப்பாற்கடலில் கண்படுகின்ற, நாரணன் - திருமால், தேடற்கு அரியர் - தேடுதற்கு அரியராயிருந்தவராகிய, அண்ணாமலையர் - அண்ணாமலைநாதரது, வெற்பில் - மலையிலுள்ள, நண்பு ஆம் மயிலே - என்னிடத்து அன்புள்ள மயில்போல்வாளே, வண்டுணாமரத்தில் - சண்பகமரத்தின்மேல், மலைசிலைகொண்டவன் - மலையாகிய வில்லைக் கைக்கொண்ட பரமசிவனுக்கு, சேய் - பிள்ளையாகிய முருகருக்கு, மாதுலன் - மாமனாகிய இந்திரனுக்கு, தந்தை-தந்தையாகிய காசிபனுக்கு, சேய்க்கு - பிள்ளையாகிய சூரியனுக்கு, இரங்கா - இரங்காமல் (சளிக்கின்ற), மலரிணை - தாமரைமலரை, வைத்து அகன்றார் - வைத்துநீங்கினார், கண்டு உவந்தோம்- கண்டு களித்தோம்—எ-று.

சண்பகமரத்தின்மேல் தாமரைமலர் இருந்த தென்பதாம். (சகஎ)

## இதுவுமது.

ஒருமரக்காலிட் டொன்றிட்டுப்பத்திட் டுடனரைக்காற்
பரவுமெழுத்தினிற் பாதிமுன்பின்னிற் பகிர்ந்தமலர்
கருமுகிலனைர்தரு மால்சென்னிபூபன் கனவரையில்
அரிமுன்னெழுபதி னுயிரஞ்சேர்மரத் தானதுவே.

இ-ள். கருமுகில் நேர்தருமால் - நீலமேகத்தை நிகர்த்த திருமால் போலக் காத்தற்றொழிலையுடைய, சென்னி பூபன்-சோழராசனது, கனவரையில்-பெரியமலையில், ஒருமாக்கால் இட்டு - ஒரு மாக்காலைவைத்து, ஒன்று இட்டு-ஒன்றைவைத்து, பத்து இட்டு - பத்தைவைத்து, உடன்-அதனோடு, அரைக்கால்பரவும் எழுத்தினில்பாதி - அரைக்காலிற் பாதியாகிய வீசத்தை, முன் பின்னில் பகிர்ந்த - முன்னும் பின்னுமாகப் பகிர்ந்துவைத்த, மலர் - பூவானது, அரிமுன் எழுபதினாயிரம்சேர் - திருமால்முற்காலத்தில் எய்த, மாத்து-மாத்தின்மீது, ஆனது - இருந்தது—எ-று.

ஒருமாக்கால் - குறுணி (ங்), ஒன்று - (க), பத்து - (ய), அரைக்காலிற் பாதி - வீசம் (பூ), முன் - ப, பின் - ரு, இதன்பொருள் - பங்காயம், முன் அரி - முன்னே திருமால், எழுபதினாயிரம் - எய்த, மாத்து - மாராமாத்தில், (இதன்பொருள் - மாராமாத்தின்மேல் தாமரைமலர் இருந்தது என்பதாம்.) ()

## இதுவுமது.

ஆம்பன்முகன்குகன் றம்மையளித்த வருட்கடலாம்
பாம்பனடியைத் தொழுங்கந்தசாமி பணிவரையில்
காம்பரிவெண்மதி தோள்விழிவாண்முகக் கன்னிகையே
வேம்பன்புதல்வன் றலையுங்கலப்பையு மேந்தினனே.

இ-ள். ஆம்பன்முகன் குகன்தம்மை அளித்த - யானை முகத்தோனாகிய விநாயகன் முருகன் என்பவர்களை யீன்ற, அருள்கடல் ஆம் - கருணைக்கடலாகிய, பாம்பன் - சர்ப்பாபரணனாகிய பரமசிவனது, அடியை - திருவடியை, தொழு - வணங்குகின்ற, கந்தசாமி - கந்தசாமியென்னும் சீமானது, பணி வரையில் - குளிர்ச்சியமைந்த மலையின்கண், காம்பு அரி வெண்மதி - மூங்கிலையும் வண்டையும் பூர்ணசந்திரனையும், தோள் விழி வாள் முகம் - தோளாகவும் விழியாகவும் ஒளிபொருந்திய முகமாகவும் படைத்த, கன்னிகையே-பெண்ணே, வேம்பன் புதல்வன் - வேப்பமலர் மாலையைத்தரித்த பாண்டியன்மகன், தலையும் கலப்பையும் ஏந்தினன் - தலையையும் கலப்பையையும் தாங்கினான்—எ-று.

வேம்பன் மகன் - தென்னன் பிள்ளை, தலை - கம், கலப்பை - அலம், இதன்பொருள் - கமலம், (தென்ன மாத்தின்மேல் தாமரைமலர் இருந்தது என்பதாம்.) (சகக)

## இதுவுமது.

கட்டளையாகப் புவிராஜர்மெச்சக் கடியுலகைத்
திட்டமிட்டேபணி தெள்ளவல்லான்றிறை யாவரையும்

மட்டவிழ்சோலைத் திருமலைராய மகிபன்வெற்பில்
செட்டிபெண்டாட்டியை வண்ணாத்திசேரச் சுமந்தனளே.

இ-ள். புவி ராஜர் - இவ்வுலகத் தரசர், மெச்ச - மெச்சும்படி, கட்டளையாக - நியமமாக, கடி உலகை - விளக்கமாகிய வுலகத்தை, திட்டமிட்டு-திட்டப்படுத்தி, யாவரையும் - எல்லா அரசரையும், பணிதிறைகொள்ளவல்லான்-பணியும் திறையும் கொள்ளவல்லவனாகிய, மட்டு அவிழ்சோலை - தேனோடு மலர்கள் விரிகின்ற சோலைசூழ்ந்த, திருமலைராய மகிபன்வெற்பில் - திருமலைராய பூபதியின் மலையில், செட்டி பெண்டாட்டியை - செட்டியின்மனைவியை, வண்ணாத்திசேர சுமந்தனள் - வண்ணாத்தி ஒருமிக்கத் தாங்கினாள்—எ-று.

செட்டி - முருகக்கடவுள், பெண்டாட்டி - அவரது தேவியாகியவள்ளி, வண்ணாத்தி - வளமாகிய ஆத்திமரம், (ஆத்தி மரத்தின்மீது வள்ளிக்கொடியிருந்தது என்பதாம்.) (கஉ0)

இதுவுமது.

நறைமலர்ச்சோலை மலிதணிகாசல நாதன்வெற்பில்
நிறைமதிநேர்முக மாதேபுதுமை நிகழ்த்திடக்கேள்
பிறவிக்குருடன் மகன்றன்கொடியும் பெருமுனிவன்
தறையிற்புதைத்த திகிரியுமேபுலி தாங்கியதே.

இ-ள். நறை மலர் சோலை மலை - வாசனை பொருந்திய பூஞ் சோலைகள் மிக்குசூழ்ந்த, தணிகாசலநாதன் வெற்பில் - தணிகாசல நாதனது மலையில், நிறைமதி நேர்முகம் - பூர்ண சந்திரனை நிகர்த்த முகத்தையுடைய, மாதே-பெண்ணே, புதுமை - ஒரு அதிசயத்தை, நிகழ்த்திடகேள் - நான்சொல்லக் கேள், (என்னெனின்) பிறவிக்குருடன்மகன்கொடியும் - பிறவிக்குருடன்மகனது கொடியையும், பெருமுனிவன் - தவத்தாற் பெரியோனாகிய அகத்திய முனிவன், தறையில்புதைத்த - நிலத்தில் அழுத்தின, திகிரியும் - மலையையும், புலிதாங்கியதி - புலிசுமந்தது—எ-று.

பிறவிக் குருடன் - திருதராட்டிரன், மகன் - துரியோதனன், கொடி-அரா, பெருமுனிவன் தரையில்புதைத்த திகிரி - விந்தம், (அரவிந்தம்) புலி-வேங்கை, (வேங்கைமரத்தின்மீது தாமரைமலர் இருந்தது என்பதாம்.(கஉக)

இதுவுமது.

அடன்மிகுசூர்ப்பகை யார்தணிகாசல வண்ணல்வெற்பில்
கடகரிமாவரி நற்றனங்கண்ணிடை யாகக்கொண்ட
மடமயிலேயென் புதுமைகண்டாயிந்த மாநிலத்தில்
திடவரவல்குல் வடத்தருபூமியைத் தாங்கியதே.

இ-ள். அடல்மிகு - வலிமிகுந்த, சூர்பகையார் - சூரனுக்குப் பகைவரா கிய, தணிகாசல அண்ணல்வெற்பில் - தணிகைமலை முருகர்மலையில், கடகரி மா அரி - மதயானையையும் வண்டையும் சிங்கத்தையும், நல்தனம்கண்இடை ஆகக்கொண்ட - (முறையே) அழகிய தனங்களாகவும் கண்களாகவும் இடை யாகவும் படைத்த, மடமயிலே - இளமயில்போல்வாளே, தட அர அல்குல்- பெரியபாம்பின் படம்போலும் அல்குலையுடையாளே, என்புதுமைகண்டாய் என்ன அதிசயம் பார்த்தாயா, (என்னெனின்) இந்த மாநிலத்தில் - இந்தப் பெரியநிலவுலகத்தில், வடத்தரு - ஆலமரம், பூமியை தாங்கியது - பூமியைச் சுமந்தது—எ-று.

பூவி - குவலயம். (ஆல்மரத்தின்மீது நீலோற்பலமலர் இருந்தது என்ப தாம்.) (சஉஉ)

## இதுவுமது.

கருதுங்கயல்கடு வேல்கடல்வாளி கருவிளையைப்
பொருதும்விழிபணங் கேதமிழாய்ந்த புலவருக்கு
விருதும்பலகையு மீந்தருள்கூட லிறைவர்வெற்பில்
எருதும்பசுவும் புலியுமோரானையி லேறியவே.

இ-ள். கருதும் - நினைக்கத்தக்க, கயல்கடுவேல் கடல்வாளிகருவிளையை- சேல்மீன்விடம வேலாயுதம் கடல் அம்பு கருவிளைமலர் ஆகிய இவைகளை, பொருதும - நிகர்த்த, விழி - கண்களையுடைய, அணங்கே - பெண்ணே, தமிழ் ஆய்ந்த புலவருக்கு - தமிழாராய்ந்த சங்கப்புலவருக்கு, விருதும்பலகை யும ஈந்தருள் - விருதையும் சங்கப் பலகையையும கொடுத்தருளின, கூடல் இறைவர் வெற்பில் - மதுரைச் சொக்கநாதரது மலையில், எருதும் பசுவும் புலியும—, ஓர் ஆனையில் ஏறிய - ஒருயானைமே லேறின—எ-று.

எருது - நந்தி, பசு - ஆ, புலி - வட்டை, ஆனை - அத்தி. (அத்திமரத் தின்மேல் நந்தியாவட்டமலர் இருந்தது என்பதாம்.) (சஉங)

## இதுவுமது.

பாவேந்தர்மூவர்தம் பாக்கொண்டுபன்றிக் குருளைகொன்று
சேவேந்துபாலக் கணக்கனிருந்திடு சீர்க்கிரிவாழ்
மாவேந்துகண்மட மானேயதிசய மானதுகேள்
பூவேந்தன்றூங்கினன் பொன்னேரியான்மனை புக்கிடமே.

இ-ள். பாவேந்தர் மூவரின் பாகொண்டு - பா வேந்தாகிய மூவரு டைய பாடலையேற்று, பன்றிக்குருளைகொன்று-பன்றிக்குட்டியைக்கொன்று, சேவந்த பாலக்கண் - செம்மை நிறமுள்ள நெற்றிக்கண்ணையுடைய, நக்கன்-

சிவபிரான், இருந்திடு - வாழ்கின்ற, சீர்கிரிவாழ் - சிறப்பையுடைய மலையில் வாழ்கின்ற, மாவகிர்கண் - மாவடு வகிர்போன்ற கண்களையுடைய, மடமானே - இளமானே, அதிசயம் ஆனது சேள் - அதிசயமானதாகிய செய்தியொன்றைக் கேட்கக்கடவாய், (என்னெனின்), பொன்னேரியான் மனைபுக்கிடம் - பொன்னேரியான் மனைவி புகுந்திடத்தை, பூவேந்தன் தாங்கினன் - பூவேந்தனானவன் சுமந்தான்—எ-று.

பாவேந்தர் மூவர் - அப்பர் சுந்தரர் சம்பந்தர்.

பூவேந்தன் - பூவரசு, பொன்னேரியான் - திருமால், மனைபுக்கிடம் - தாமரை, (பூவரசமரத்தின்மேல் தாமரைமலர் இருந்தது என்பதாம்.) (சஉச)

இதுவுமது.

தினந்தினம்பாவலர் தம்மிடிதீர்ந்திடச் சேணுறையும்
கனந்தருநாணுங் கொடையாளன்வேலன் கனகிரிவாய்
அனந்தருநன்னடைப் பாவைநல்லாயிவ் வதிசயங்கேள்
அனந்தன்குபேரன் வனமனையங்கி யமர்ந்தனனே.

இ-ள். தினம்தினம் - நாள்தோறும், பாவலர் - வித்வான்கள், தம்மிடி தீர்ந்திட - தம்வறுமை நீங்கும்படி, சேண்உறையும் - ஆகாயத்தில் வாழ்கின்ற, கனம்தருநாணும் - மேகமும்ஜந்தருவும் நாணுதற்கேதுவாகிய, கொடையாளன் - கொடையாளனாகிய, வேலன் - வேலனது, கனகிரிவாய் - பெரியமலையின்கண், அனம்தருநல் நடைபாவை நல்லாய் - அன்னம்போன்ற அழகிய நடையை யுடைய பெண்களிற் சிறந்தவளே, இ அதிசயம்கேள் - இந்தப்புதுமையைக் கேட்பாயாக, அனந்தன் குபேரன்வனம் மனை அங்கி அமர்ந்தனள்—, எ-று.

அனந்தன் - அரவு, குபேரன் - சந்திரன், இந்து - வனம், நீர் - அம், மனை - அகம், அங்கி - தீ, (அகத்திமரத்தின்மேல் அரவிந்தமலர் இருந்தது என்பதாம்.) (சஉரு)

ஒலிக்குறி.

பாலொத்தசெஞ்சொ லளகேசசுந்தர பாலன்வெற்பில்
வேலொத்தகண்மட வீர்பின்னைவேறொன்று மில்லைகண்டீர்
காலற்றபோதுபின் வாலுளதாய்ப்பின்பு காலுளதாய்
வாலற்றபோதுதன் பேர்பெற்றபாவிசெய் வஞ்சனையே.

இ-ள். பால்ஒத்த செஞ்சொல் - பால்போன்ற இனிய சொல்லையுடைய, அளகேச சுந்தரபாலன் வெற்பில் - அளகேசசுந்தரபாலன் மலையில், வேல் ஒத்த - வேல்போன்ற, கண் - கண்களையுடைய, மடவீர் - பெண்களே, பின்னை வேறொன்றும் இல்லை—, கண்டீர்—, கால்அற்றபோது - காலில்லாத போது, பின்வால் உளதாய் - பின்னே வாலுளதாகி, பின்புகால் உளதாய் - பின்பு

கால்சளுமுளதாகி, வாலிஅற்றபோது - வாலில்லாதபோது, தன்பேர் பெற்ற பாவி - தன்பேர்பெற்ற பாவியானவன், செய்வஞ்சனையே - செய்கின்ற வஞ்சனையேயாகும்—எ-று.

காலற்றபோது வாலுண்டானது தலைப்புரட்டை, வாலற்றபோது காலுண்டாய்த் தன்பேர்பெற்றது தவளை, (தலைவன் குறியன்று, தவளைகிணற்றிற் குதித்தது, தவளைக்கு வாலுண்டானபோது காலிராது, அப்போது தலைப்புரட்டையென்றும், காலுண்டானபோது வாலிராது, அப்போது தவளையென்றும்பெயர்) இது இரவுக்குறி மருண்ட தலைவிக்குத் தோழிசொல்லியது எ-று. (௬௨௬)

## ஒலிக்குறியும் அலர்க்குறியும்.

முக்கணன்வில்வெற்பை முறித்துவரியிட்டகால்
முக்கணனையப்பில்விழ மோதாதோ—முக்கணன்றன்
வேணிக்காகாமலர்வைத் தேகினன்மெல்லியலே
சாணிற்குறைந்தான் றலை.

இ-ள். முக்கணன் வில்வெற்பை - மூன்றுகண்களையுடைய சிவபெருமானுக்கு வில்லாகிய மேருமலையை, முறித்து - தன்வலியால் முறித்து, உவரியிட்டகால் - கடலிலெறிந்த காற்றானது, முக்கணனை - மூன்றுகண்களையுடையவனை, அப்பில்விழ - நீரில்விழும்படி, மோதாதோ - அடிக்காதோ, மெல்லியலே - மெல்லியலையுடையாளே, சாணிற்குறைந்தான் தலை - சாணிற்குறைந்தவன் தலையிலே, முக்கணன் தன்வேணிக்கு ஆகாமலர்வைத்து - சிவபெருமான் சடையி லணிபத்தகாத மலரைவைத்து, ஏகினன் - போனான் எ-று.

முக்கணன் - தேங்காய், முக்கணன் தன்வேணிக்காகாமலர் - தாழம்பூ, சாணிற்குறைந்தான் - ஒட்டைச்செடி, (காற்றடித்துத் தேங்காய் நீரில்விழுந்தது என ஒலிக்குறியும் - ஒட்டைச்செடிமேல் தாழம்பூ இருந்ததென அலர்க்குறியும்வந்தன, இது இரவுக்குறி மருண்ட தலைவிக்குத் தோழிசொல்லியது.()

## புறங்காட்டல்.

தலைமகன் நெருங்கிவரக்கண்ட தலைமகள்நாணி முதுகுகாட்டி
நிற்கக்கண்ட தலைமகன்சொல்லியது.

வாகானகொன்றை மழவரங்கேசன்பொன் மால்வரையீர்
சோகாதிகந்தரு காமவிகாரச் சுரந்தனக்கு
ஆகாதுபச்சை யிளநீரென்றுந்தம கத்திலுன்னித்
தாகாதிகத்திற்கு வெந்நீரளித்த தயவுநன்றே.

இ-ள். வாகுஆனகொன்றை - அழகாகிய கொன்றைமர்நகரத்தில் வாழ்வோனாகிய, மழவ்ரங்கேசன் - மழவரங்கேசனது, பொன்மால்வரையீர் - அழகிய பெரிய மலையிலுள்ளவரே, சோகாதிகம்தரும் - துக்கமிகுதியை யுண்டாக்குகின்ற, காமவிகாரச் சுரந்தனக்கு - காமவிகாரச் சுரத்துக்கு, பச்சைஇளநீர் ஆகாது என்று - பச்சிளநீர்கள் ஆகாதென்று, உந்தம் அகத்தில் உன்னி - உமது மனத்தில் நினைத்து, தாகாதிகத்திற்கு - அதிகதாகத்துக்கு, வெந்நீர் அளித்த - வெந்நீர்கொடுத்த, தயவுநன்று - கருணைமிகச்சிறந்தது—எ-று.

வெந்நீர் அளித்த—முதுகைநீர் கொடுத்த, காமவிகாரச்சுரம் - காமவிகாரத்தாலுண்டான வெப்பம். பச்சையிளநீர் - தனங்கள். (சஉஅ)

இதுவுமது.

அக்கரவம்புனை யாரூர்த்தியாக ரணிவரையில்
இக்கினைவென்ற மொழியணங்கேபுறந் தானினிது
சக்கரையோர்புறங் கைப்பதுண்டோவது தானுமன்றி
அக்கரையிக்கரை யென்பதுண்டோகங்கை யாடுதற்கே.

இ-ள். அக்கு அரவம்புனை - அக்குமணியையும் பாம்பையுமணிந்த, ஆரூர் தியாகர் - திருவாரூர்த்தியாகரது, அணிவரையில் - அழகியமலையில், இக்கினை வென்ற-(இனிமைமிகுதியால்) கரும்பைவென்ற, மொழி - சொல்லையுடைய, அணங்கே - பெண்ணே, புறம்தான் இனிது - புறமும்இனிதேயாம், சக்கரை ஓர்புறம் கைப்பது உண்டோ-சர்க்கரை ஒருபக்கத்தில் கசக்குவது உண்டோ, அது தானும் அன்றி - அதுவுமல்லாமல், கங்கை ஆடுதற்கு - கங்கையில்மூழ்குவதற்கு, அக்கரை இக்கரை என்பது உண்டோ - அக்கரை இக்கரையென்றாராயவேண்டுவதுண்டோ, —எ-று.

அக்கு - சங்குமணி, இக்கு - கரும்பு. (சஉகூ)

இதுவுமது.

நதியமர்வேணிக் கரனூர்வழித்துணை நாதன்வெற்பில்
மதிநுதலீரென்ன வாறுசெய்தீரென்செவ் வாய்க்கினிய
அதிரசமுங்கண்டத் தோசையுநற்பணி யாரமுங்கேட்
டெதிரடைந்தேனவை தாராமற்றேன்குழ லீந்தனிரே.

இ-ள். நதி அமர்வேணி - கங்கைதங்கிய சடாபாரத்தையுடைய, கரனூர் வழித்துணை நாதர்வெற்பில் - கரனூர் மார்க்கசகாயநாதரதுமலையில், மதிநுதலீர் - பிறைமதிபோலும் நெற்றியையுடையீர், என்னவாறுசெய்தீர் - என்னவிதஞ்செய்தீர், என்செவ்வாய்க்கு இனிய - என்செவந்தவாய்க்கு இனிதாகிய, அதிரசமும் - அதிரசத்தையும், கண்டம் தோசையும் - துணிக்கைகளாகிய

சோலையையும், நல்பணியாரமும் - நல்லபணியாரத்தையும், கேட்டு - கேட்டுக்கொண்டே, எதிர் அடைந்தேன் - உமக்கெதிரே வந்துசேர்ந்தேன்; (நீர்) அவையீயாமல் - (நான்விரும்பின) அவற்றைக்கொடாமல், தேங்குழலீந்தனிர் தேங்குழலைக் கொடுத்தீர், —எ-று.

அதிரசம் - மேன்மையாகிய அதரச்சுவை, கண்டத்தோசை - குரலோசை, பணிஆரம் - ஆபரணம் முத்துமாலை, பணிஆர்அம் - ஆபரணங்களின் நிறைந்த அழகு (தனம்) தேன்குழல் - வண்டுகள்மொய்க்கின்றகூந்தல், மலர்த்தேனையுடைய கூந்தல். (சுகo)

## இதுவுமது.

தானே தனக்கொத்த சோணசலேசர் தமைப்பணியும்
ஆனேயெனுங்கொடைச் சம்பந்தராய னணிவரையில்
மானேயரவின்றி வெற்பின்றிச்சூழ்ந்திடும் வாரியின்றி
நானேயமுது கடைந்தேனிதுமெத்த நாணயமே.

இ-ள். தானே தனக்கொத்த - தானே தனக்குவமையாகிய, சோணசலம் - அருணசலத்துக்கு, ஈசர்தமை - இறைவராகியபரமசிவனை, பணியும் - வணங்குகின்ற, ஆனே என்னும் - காமதேனுவேயென்று சொல்லத்தகுந்த, கொடை - கொடையாளனாகிய, சம்பந்தராயன் - சம்பந்தராயனது, அணிவரையில் - அழகியமலையில், மானே - மான்போல்வாளே, அரவு இன்றி - பாம்பில்லாமலும், வெற்புஇன்றி - மலையில்லாமலும், சூழ்ந்திடும் வாரிஇன்றி - சூழ்ந்த கடலில்லாமலும், நானே - நானொருவனே, அமுதுகடைந்தேன் - அமுதைக்கடைந்தெடுத்தேன், இதுமெத்தநாணயம் - இதுமிகவும்நாணயம்-எ-று.

அரவு - வாசுகி-சடிதடம், வெற்பு - மந்தரம்-தனம், வாரிதி - பாற்கடல்-கண், அமுதுகடைந்தேன் - அமுதுகு அடைந்தேன். சம்பந்தராயன் ஒரு சீமான். (சுகக)

## இதுவுமது.

சோமன்பதியுந் திருமால்பதியுந் துலங்குகொன்றைத்
தாமன்பதியுநின் பங்கில்வைத்தாய்தமி யேன்புகழும்
வீமன்புகழ்கொண்ட விக்ரமச்சோழன் வியன்சிலம்பில்
காமன்பகைவன் பதியோவென்பங்கின் கடைப்பிரிவே.

இ-ள். சோமன்பதியும் - சந்திரனிடத்தையும், திருமால்பதியும்-ஸ்ரீமகாவிஷ்ணுவினிடத்தையும், துலங்கு கொன்றைதாமன்பதியும் - விளங்குகின்ற கொன்றைமாலையையுடைய பரமசிவனிடத்தையும், நின்பங்கில் வைத்தாய் - உன்பங்கில் வைத்துக்கொண்டாய், தமியேன்புகழும் - தமியேனாகிய யான்

புகழ்கின்ற; வீமன் புகழ் கொண்ட விக்ரமச் சோழன் - வீமனது புகழைப் படைத்த விக்ரமச்சோழனது, வியன், சிலம்பில் - பெரிய மலையின்கண், காமன் பகைவன் பதியோ - கற்பகச்சோலைக் கிறைவனாகிய இந்திர சித்தினிடமோ, என்பங்கின் கரைப்பிரிவு - என்பாகத்தின் முடிவாகிய யாகம்—எ-று.

சோமன்பதி - முகம், திருமால்பதி - வயிறு (ஆலிலை), கொன்றைத் தாமன்பதி - கைலாயம், மலை (தனம்) வீமன் - கருடனுக்குப் பதியாகிய திருமால், காமன் - இந்திரன், பகை - இந்திரசித்து, பதி - அவனுக் கிடமாகிய மேகம். (கூந்தல்.) (சநஉ)

இதுவுமது.

மாகத்தைமேவும் புகழ்க்குன்றயூரன் மணிவரையில்
பாகொத்தமென்மொழிப் பாவைநல்லீரென் பருவிரக
தாகத்தைத்தீர்க்குநற் கும்பமுந்தாம்புந் தனிக்கிணறும்
ஆகத்திருக்கவிண் மேகத்தைக்காட்டுத லன்பலவே.

இ-ள். மாகத்தைமேவும் - சுவர்க்கலோகத்தையும் அடைகின்ற, புகழ்-கீர்த்தியையுடைய, குன்றையூரன் - குன்றையூரனது, மணிவரையில் - அழகிய மலையில், பாகு ஒத்த - சர்க்கரைப் பாகுபோன்ற, மென்மொழி - மிருதுவசனத்தையுடைய, பாவை நல்லீர் - பிரதிமை போல அழகுள்ளவரே, என்-எனது, பரு விரகதாகத்தை - பெரிய விரகமாகிய தாகத்தை, தீர்க்கும் - நீக்குதற்குரிய, நல் கும்பமும் - நல்ல குடமும், தாம்பும் - தாம்புக் கயிறும், தனிகிணறும் - ஒப்பற்ற கிணறும், ஆகத்து இருக்க - உமது சரீரத்திலேயிருக்க, விண்மேகத்தை காட்டுதல் - ஆகாயத்திலுள்ள மேகத்தைக்காட்டுதல், அன்பு அல்ல - அன்பன்று—எ-று.

கும்பம் - குடம், (தனம்), தாம்பு - உரோமரேகை, கிணறு - கடி தடம், மேகம் - கூந்தல். (சநந)

இதுவுமது.

மாகமதிக்கரன் பூம்பாவைவேலப்ப மன்னனருள்
மோகன்குழந்தைக் குருநாதன்வெற்பினின் மோடிவைத்துப்
பாகமொழிக்கவின் மாதேவிரித்துப் படமெடுக்கும்
நாகமறைத்துக் குழலெமக்கீத னலமல்லவே.

இ-ள். மாகம் - மேகமும், மதி-மதிக்கின்ற, கரன் - கொடைக் கையினையுடையவனாகிய, பூம்பாவை வேலப்ப மன்னன்—, அருள் - ஈன்றருளின, மோகன் - (கண்டார்க்கு) விருப்பத்தை யுண்டாக்குவோன், குழந்தை குருநாதன் - குழந்தைக் குருநாதனது, வெற்பினில்-மலையில், மோடிவைத்து—,

பாகம்மொழி - சர்க்கரைப்பாகுபோன்ற மொழியினையுடைய, கவின் மாதே - அழகியபெண்ணே; விரித்து படம் எடுக்கும் - படம் விரித் தெடுக்கின்ற, நாகம் மறைத்து - பாம்பை மறைத்து, குழல் எமக்கீதல் - குழலை யெமக்குக் கொடுத்தல், நலம் அல்ல - நன்மையன்று—எ-று.

படமெடுக்கு நாகம் - அல்குல், குழல் - அளகபாரம். (சருச)

இதுவுமது.

வண்டுமதுவுண் டிசைபாடுஞ்செந்திலின் மாரன்வரக்
கண்டுமிருந்தும் வடிவேலிரண்டுங் கருப்புவில்லுங்
குண்டுமருந்தும் பொற்றேருந்தராமற் குழலைத்தந்தால்
தண்டுகொண்டெப்படி வென்றிடலாமடி தாழ்குழலே.

இ-ள். வண்டு - வண்டுகள், மது உண்டு - மதுவைக் குடித்து, இசை பாடும் - இராகம் பாடுதற் கிடமாகிய, செந்திலில் - திருச் செந்தூரில், மாரன் வரக்கண்டும் இருந்தும் - மன்மதன் வரக்கண்டிருந்தும், வடிவேல் இரண்டும் - வடித்த வேல்களிரண்டையும், கருப்பு வில்லும் - கரும்பு வில்லையும், குண்டு மருந்தும் - குண்டுகளையும் மருந்தையும், பொன் தேரும் - பொற் றேரையும், தராமல் - கொடாமல், குழலைத் தந்தால் - குழலைத் தந்தனையாயின், அடி தாழ் குழலே - அடி நீண்ட குழலாளே, தண்டு கொண்டு - சேனைகளைக் கொண்டு, எப்படி வென்றிடலாம் - எவ்வாறு வெல்லலாம்—எ-று.

வேலிரண்டு - கண்கள், கருப்பு வில் - புருவம், குண்டு - திரள்கல் (தனம்), மருந்து - அமிர்தம் - (அதரம்), தேர் - கடிதடம், தண்டு - கோசம்.

இதுவுமது.

ஏழைக்கிரங்கிடும் வன்மீகநாத ரெழில்வரையில்
யாழைவருத்து மொழிமடவீர்நல் லனமிருக்க
வாழைவருக்கைக் கனியிருபாற்குடம் வைத்திருந்தும்
கூழையெனக்களித் தீர்மறுமாற்றங் கொடுத்திடுமே.

இ-ள். ஏழைக்கு இரங்கிடும் - ஏழைகளுக்கு இரக்கஞ்செய் தருள்கின்ற, வன்மீக நாதர் - வன்மீக நாதரது, எழில் வரையில் - அழகியமலையில், யாழை வருத்தும் - யாழோசையை வருத்துகின்ற, மொழி - மொழியை யுடைய, மடவீர் - பெண்ணே, நல் அன்னம் இருக்க - நல்ல அன்ன மிருக்க, வாழை வருக்கைக்கனி இருபாற்குடம் வைத்திருந்தும் - வாழைத்தண்டு பலாக்கனி இரண்டு பாற்குடங்கள் இவையாவும் வைத்திருந்தும், கூழை எனக்கு அளித்தீர் - எனக்குக் கூழைக் கொடுத்தீர், (இதற்குக் காரணம் யாது) மறுமாற்றம் கொடுத்திடும் - மறுமொழி சொல்லும்—எ-று.

அன்னம் - நடை, வாழை - தொடை, வருக்கை - பலா. (சொல்), பாற்குடம் - தனம், கூழை - கூந்தல். (சுகசு)

இதுவுமது.

அழலைத்தரித்த திருவிரிஞ்சேச ரணிவரையில்
மழலைச்சுரமெனு மந்த்ரோதயமு மணிமருந்தும்
தழலைப்பொருதிய பாம்புங்குடமுந் தராமல்வெறுங்
குழலைத்தந்தாலினிப் பாம்பாட்டுவதெங்ஙன் கூறுதிரே.

இ-ள். அழலைத்தரித்த - அக்கினியைத் தாங்கிய, திருவிரிஞ்சேசர் - திருவிரிஞ்சை யிறைவரது, அணி வரையில் - அழகிய மலையில், மழலைச்சுரம் என்னும் மந்த்ரோதயமும் - மழலைச் சுரமாகிய மந்த்ரோதயத்தையும், மணிமருந்தும் - மணிமருந்துகளையும், தழலைப் பொருந்திய பாம்பும் - நெருப்புப்போன்ற பாம்பையும், குடமும் - குடத்தையும், தராமல் - கொடுக்காமல், வெறும் குழலை தந்தால் - வெறுங்குழ லொன்றை மாத்திரமே கொடுத்தால், இனி பாம்பு ஆட்டுவது எங்ஙன் - இனிப் பாம்பாட்டுவது எப்படி, கூறுதிர்-சொல்லும்—எ-று.

மழலைச் சுரம் - மழலைச் சொல், மணி மருந்து - அதராமிர்தம், குழல்-கூந்தல். (சுகஎ)

இதுவுமது.

அறங்காட்டியகரத் தைவேலசதி யணிவரையில்
நிறங்காட்டுங்கஞ்சத் திருவனையிர்முக நீண்டகுமிழ்த்
திறங்காட்டும்வேலுஞ் சிலையுங்கொல்யானையுந் தேருங்கொண்டு
புறங்காட்டவுந்தகு மோசிலைக்காமன்றன் பூசலிலே.

இ-ள். அறம் காட்டிய கரத்து - (ஈகையாகிய) தர்மத்தைச் செய்கின்ற கையினையுடைய, ஐவேலசதி - ஐவே லசதி யென்பவனுடைய, அணிவரையில் - அழகிய மலையில், நிறம் காட்டும் - ஒளி செய்கின்ற, கஞ்சம் - செந்தாமரை மலரில் வாழ்கின்ற, திரு அனையீர் - இலக்குமியை நிகர்ப்பவரே, முகம் நீண்ட - முகத்தில் நீண்ட, குமிழ் - குமிழம் பூவின், திறம் காட்டும் - இயல்பைக் காட்டுகின்ற, வேலும் - வேலா யுதத்தையும், சிலையும் - வில்லையும், கொல் யானையும் - கொல்லுகிற யானையையும், தேரும் - தேரையும், கொண்டு - கைக்கொண்டு, சிலைக்காமன் தன் பூசலிலே - கருப்பு வில்லையுடைய மன்மதனது போரில், புறங் காட்டவும் தகுமோ - நீ புறங் காட்டவுங் கூடுமோ—எ-று.

புறங் காட்டல் - பின் புறங்காட்டி யோடல், குமிழ் - நாசி, வேல் - கண், சிலை - புருவம், யானை - தனம், தேர் - கடிதடம். (சுகஅ)

இதுவுமது.

விருத்தம்.

சேலூரும்வயல்சூழு முமைபாகர்திருக்காமி யீசர்நாட்டில், பாலூறுமொழிமானே யுனக்குநல்லீர்ங்கலசப்பாக்கமாச்சு, வேலூருமுனதாச்சுப் பெருங்கொண்டையெமக்களித்தீர் வேண்டாங்கண்டீர், காலூரைப்பிடிப்பதற்கு விதப்பட்டேகொடுங்காணுங் கடுகத்தானே.

இ-ள். சேல் ஊரும் வயல் சூழும் - சேல்கள் தவழ்கின்ற வயல் சூழ்ந்த, உமைபாகர் - உமாதேவியை யிடப்பாகத்திலுடைய பரம சிவன், திருக்காமியீசர் - திருக் காமீசன், (அவனது) நாட்டில் - நாட்டின் கண், பால் ஊறும் மொழி - பால் போலும் இன் சுவை யமைந்த மொழியினையுடைய, மானே - மான் போல்வாளே, உனக்கு—, நல்ல - நன்மையாகிய, ஈர் - குளிர்ச்சி பொருந்திய, கலசப்பாக்கம் ஆச்சு - கலசப்பாக்கம் அமைந்தது, வேலூரும் உனது ஆச்சு—, பெருங் கொண்டை எமக்கு அளித்தீர் - பெருங் கொண்டையை எமக்குக் கொடுத்தீர், வேண்டாம் - எமக்கு அது வேண்டாம், காலூரைபிடிப்பதற்கு—, கடுக - விரைவாக, விதப்பட்டே கொடும் காணும் - விதப் பட்டினையே தாருங்காணும்—எ-று.

கலச பாக்கம் - கலசம் போன்ற தனம், வேலூர் - வேல் போன்ற கண், ஊர் - கால், வண்டில் - தேருருள்போன்ற கடிதடம். (சுஙக)

வெறிவிலக்கல்.

தலைவியானவள் தலைவன்மீதுள்ள விருப்பத்தால் மிகவருந்தி மயங்குப்போது, நற்றாய் முதலானோர் இவளுக்குப் பேய்பிடித்ததென்றெண்ணி அதற்குப் பரிகாரமாக ஆட்டைப் பலிகொடுத்து வெறியாடுதலைச் செய்ய விரும்ப, தோழியானவள் உண்மை யின்னதென்றறிவித்து அவ்வெறியாடலை விலக்கல்.

மருப்பங்கயக்கண்ணன் றண்ணுயர்பாடி வரதன்வெற்பில்
பொருப்பங்கயக்கொம்பு போலிளங்கொங்கைபொன் பூப்பவுயர்
திருப்பங்கயனம் புகைத்துளம்வாடித் தியங்குமிந்தத்
திருப்பங்கயமென் பழிபூண்டதோசொலுஞ் சேடியரே.

இ-ள். மரு - மணம் பொருந்திய, பங்கயக் கண்ணன் - தாமரைக் கண்ணன், தண் ஆயர்பாடிவரதன் - குளிர்ந்த திருவாயர் பாடி வரதன், வெற்பில்-

(அவனது) மலையில், பொருப்பு அமையம் சொம்புபோல் - மலையையும் அழகிய யானைக்கொம்பையும்போன்ற, இளங்கொங்கை - இளமையாகிய தனங்களில், பொன்பூப்ப - பசலைநிறம்படர, உயர் - உயர்ந்த, திருப்பங்கயன்-அழகிய தாமரைமலராகிய அம்பையுடைய மன்மதனது, அம்புதைத்து-பாணங்கள் பட்டு, உள்ளம்வாடி தியங்கும் - மனம்வாடித்திகைக்கின்ற, இந்த திருபங்கு-இந்தத்திருமகளை நிகர்த்தவள்பங்கில், அயம்என்பழிபூண்டதோ - அடுஎன்ன பாவத்தைச்செய்ததோ, சேடியரேசொல்லும்-பாங்கியரேசொல்லுங்கள்-எ-று.

அடு ஒருபாவமுஞ் செய்யவில்லையே, அப்படியிருக்க அதையேன்சொல்லப்போகிறீர்கள் என்பது கருத்து. (சசO)

## இதுவுமது.

புள்ளார்மலர்ப்பொழில் சூழ்தணிகேசன் புயத்திலணி
கள்ளார்கடப்பங் கொணர்ந்திடின்மாற்றுங் கருத்திற்சற்றும்
உள்ளாவகையென்ன வையோவிவட்கிங்ங னுங்கொருவு
தள்ளாவிசனத்தை மாற்றுங்கொலோசொலை தாழ்குழலே.

இ-ள். புள் ஆர் - வண்டுகள்நிரம்பின, மலர்ப்பொழில்சூழ் - பூஞ்சோலைகள் சூழ்ந்த, தணிகேசன் - தணிகாசலத்துக்கு இறைவனாகிய முருகக்கடவுளது, புயத்தில் அணி - திருத்தோளிலணிந்த, கள் ஆர் - தேன்பொருந்திய, கடப்பம் - கடப்பமலர்மாலையை, கொணர்ந்திடின் - கொண்டுவந்தால், மாற்றும் - இந்நோயைத் தீர்க்கும், (இதனை) கருத்தில் சற்றும் உள்ளாவகையென் - மனத்தில் சிறிதும் நினையாதவிதம் என்ன, ஐயோ - அந்தோ, ஒருவு-இந்த ஆடானது, இவட்கு - இவளுக்கு, இங்ஙன் ஒங்கு - இவ்வாறு மிகுந்த, தள்ளாவிசனத்தை - நீக்கப்படாத விசனத்தை, மாற்றுங்கொலோ - நீங்குமோ, சொல்லை - சொல்லுவாயாக, தாழ்குழலே - நீண்ட கூந்தலையுடையவளே—எ-று.

ஒரு - ஆடு. (சசக)

## நற்றாயிரங்கல்.

யமகம்.

தணிகாசலத்தி லமர்முருகன்பாதந் தலைக்கணியும்
தணிகாசலத்தின மீந்திடுகற்பகத் தாருவொத்தோய்
தணிகாசலத்தி னலர்கொடுமாரன் வீசுந்தணலைத்
தணிகாசலத்தி னவிந்திடுமென்றன் றணிக்கொடிக்கே.

இ-ள். தணிகாசலத்தில் - தணிகை மலையில், அமர் - வீற்றிருக்கின்ற, முருகன்பாதம் - முருகக்கடவுளின் திருவடியை, தலைக்கு அணியும் - சிரசுக்கு

இ-ள். திருவல் இக்கு எணி - திருமகள் சூதாடுகருவி கரும்புபெண்மான் முறையே இவற்றிற்கு நிகரான வடிவம் தனம் சொல்கண் உருவமும் தனங்களும் சொல்லும் கண்களும் அமையப்பெற்ற சீர்சிலம்புஅதிர் - சிறந்த சிலம்பணிகாலில் ஒலிக்கப்பெற்ற, உ வல்லிக்கு - இந்தப் பூங்கொடிபோல்வாளாகிய என்பெண்ணுக்கு, எண்இயல் அல்கு முன்னே - பெரிய அறிவானது கெடுமுன்னமே, அருள்செய்ய எழுந்திரு - இவளுக்குக் கருணைசெய்யும்பொருட்டு எழுந்திருப்பாயாக, வல் இ கேள் - வலிய மனத்தினையுடைய இந்த வுறவினர், நிபம் சொல்லின் - பழிசொல்வார்களானால், கண் - இவள்கண்களில், முத்தம்சிந்தும் - நீர்த்துளிகளாகிய முத்துக்கள் சிந்தாநிற்கும், திருவல்லிக்கேணி மருவிய - திருவல்லிக்கேணியில் எழுந்தருளிய, சங்கம் - சங்கத்தைத்தரித்த, திருக்கரனே - திருக்கையையுடையவனே—எ-று. (சசஎ)

## ஒலிக்குறி.

### யமகம்.

அவதாரத்தாதி விழிமயிலேயங் கொருவரில்லை
அவதாரப்பாதிக் கரன்பதியீந்திடு வல்லவென்றால்
அவதாரப்பாதிப்பின் பின்னோன்பின்சென்ற வதிசயங்கேள்
அவதாரந்தக் கனியப்பில்வீழ்ந்த வதிசயமே.

இ-ள். அவதாரத்துஆதி - திருமாலவதாரத்தில் முதலவதாரமாகியமீன்போன்ற, விழி - கண்களையுடைய, மயிலே - மயிற்சாயலையுடையவளே, அங்கு ஒருவர் இல்லை - அங்கேவேறொருவருமில்லை, அவதாரப்பாதிக்கு - நடுப்பாதியாகிய ஐந்தாம் அவதாரத்துக்கு, (வாமனனுக்கு - பிள்ளைக்கு), அரன்பதி ஈந்திடு - சிவனுக்கிடமாகிய மலையைக் கொடுப்பாயாக (முலைகொடுப்பாயாக), அல்லவென்றால் - அல்லவெனின், அவதாரப் பாதிப்பின் பின்னோன் - ஐந்தாம் அவதாரத்துக்குப் பின்னோனாகிய ஸ்ரீராமனுக்கு, பின் - பின்னோனாகிய இலக்குமணன், (இலக்கு குறி) சென்ற - நிகழ்ந்த, அதிசயம்கேள் - அதிசயத்தைக்கேட்பாயாக, (என்னெனின்) அவதாரத்து அந்தம் - அவதாரத்தின் முடிவாகிய அவதாரம்கற்கி, (குதிரை-மா,) கனி - பழம், அப்பில்வீழ்ந்த அதிசயம் - நீரில்விழுந்த புதுமையேயாம்—எ-று.

மாங்கனி நீரில்வீழ்ந்தது என்பது கருத்து. (சசஅ)

## புதுமை.

ஒருநாகம்விட்டுயர் நாகத்தின்மீதினி லொண்டொடியாள்
ஒருநாகம்வைத்தே யொருசுனையாட வொருபுதுமை
ஒருநாகங்காட்ட வொருநாகம்பார்த்திட வோடையிலே
ஒருநாகநாகத்தி னுச்சியிலேறி யுறைந்திட்டதே.

இ-ள். ஒரு நாகம் விட்டு - ஒப்பற்ற ஆகாயத்தை விட்டு (மானத்தை விட்டு), உயர் நாகத்தின் மீதினில் - உயர்ந்த புன்னை மரத்தின்மேலே, ஒண்டொடியாள் - ஒரு பெண்ணானவள், ஒரு நாகம் வைத்து - ஒப்பற்ற ஆடையை வைத்து, ஒரு சுனை ஆட - ஒரு சுனையில் மூழ்க, ஒரு புதுமை - ஒரு புதுமையாக, ஒரு நாகம் காட்ட - ஒரு பாம்பின் படம்போன்ற நிதம்பம்தோன்ற, ஒருநாகம் பார்த்து - ஒரு குரங்கு பார்த்து, உடன் - உடனே, ஓடையிலே - ஓடும்போது, (அதைக்கண்ட) ஒரு நாகம் - ஒரு யானையானது, நாகத்தின் உச்சியில் ஏறி - மலை யுச்சியிலேறி, உறைந்திட்டது - தங்கியிருந்தது—எ-று.

நாகத்தைநாகத்தி னாலேமறைத்தொரு நங்கைநல்லாள்
நாகத்திலேறி மலர்கொய்யும்போதொரு நாகம்வந்து
நாகத்தைநாகம் பிடித்துக்கொண்டேயொரு நாண்முழுதும்
நாகத்தைநாக மணுகக்கண்டஞ்சி நடுங்கினளே.

இ-ள். நாகத்தை - (நிதம்பமாகிய) பாம்பை, நாகத்தினாலே மறைத்து - ஆடையால் மறைத்து, ஒரு நங்கை நல்லாள் - ஒரு பெண்ணானவள், நாகத்தில் ஏறி - புன்னை மரத்திலேறி, மலர் கொய்யும் போது - பூப் பறிக்கும் போது, ஒரு நாகம் வந்து - ஒரு குரங்கு வந்து, நாகத்தை நாகம் பிடித்துக் கொண்டு - ஆடையைக் குரங்கு பிடித்துக் கொள்ள, ஒருநாள் முழுதும்—, நாகத்தை நாகம் அணுகக் கண்டு - மலையை யானைவந்து சேரக்கண்டு, அஞ்சி நடுங்கினள் - பயந்து நடுங்கினாள்—எ-று.

நாகம் - கடித்டம், நாகம் - ஆடை, நாகம் - புன்னைமரம், நாகம்-குரங்கு, நாகம் - மலை. (சடுO)

ஞாயிறுந்திங்களுஞ் சூடியநாத ரருணைவெற்பில்
ஞாயிறுந்திங்களும் நாமருவோமந்த நாயகனார்
ஞாயிறுந்திங்களுங் கூடுமிடந்தனை நாடிநின்றால்
ஞாயிறுந்திங்களு மொன்றாயிருந்திடு நம்மளவே.

இ-ள். ஞாயிறும் திங்களும் சூடிய நாதர் - சூரியனையும் சந்திரனையும் இரண்டு கண்களாகக் கொண்ட இறைவரது, அருணை வெற்பில் - அருணகிரியில், ஞாயிறும் திங்களும் - பகலினும் இரவினும், நாம் மருவோம் - நாம் கூடியிரோம், அந்த நாயகனார் - அந்தத்தலைவர், ஞாயிறும் திங்களும் கூடும் இடம் தனை - பகலு மிரவும் கூடலைச் செய்கின்ற பாத்தையிடத்தை, நாடி நின்றால் - விரும்பி நிற்பாரானால், ஞாயிறும் திங்களும் - சூரியனும் சந்திரனும், நம் அளவு - நம்மட்டில், ஒன்றா யிருந்திடும் - ஒரு தன்மைய வாகவே யிருக்கும், (ஒருதன்மையவாகவே சுடும்.)—எ-று.

இரண்டாமடியிலுள்ள ஞாயிறும் திங்களும் அவற்றா லுண்டாக்கப்பட்ட பகலையும் இரவையும் உணர்த்தின. மூன்றாமடியிலுள்ள ஞாயிறும் திங்களும்

கூடுமிடம் என்பதற்கு பகலுமிரவும் கூடற்சுழிகளை யிழைக்கும் பாத்தையிட மெனவும் பகலு மிரவும் கூடிச் சுகிக்கின்ற பாத்தையிட மெனவும் பொருள் கொள்க. (சருக)

## தாய்வினாவும் மகள்விடையும்.

நாகஞ்செறிந்த மலர்க்காவிற்போய்வரு நன்னுதலே
நாகஞ்சரிந்திட்ட வாறுசொல்லாய்நம னார்தமைப்போல்
நாகந்துரத்திய தாலேயென்மேனி நடுநடுங்கி
நாகஞ்சரிந்த திடீயென்னையீன்றரு ணாயகமே.

இ-ள். நாகம் செறிந்த - புன்னை மரங்கள் நெருங்கின, மலர்க் காவில் போய்வரும் - பூஞ் சோலையிற் போய் வருகின்ற, நல் நுதலே - அழகிய நெற்றியையுடைய பெண்ணே, நாகம் சரிந்திட்ட ஆறு சொல்லாய் - உன் ஆடை நெகிழ்ந்த தற்குக் காரணம்யாது அதனைச் சொல்லக் கடவாய், (இது தாய் வினா) நமனார் தமைப்போல் - யமனைப்போல, நாகம் துரத்தியதாலே - யானை துரத்தினதனால், என்மேனி நடு நடுங்கி - என் உடல் மிக நடுங்கினதனால், நாகம் சரிந்தது அடீ - ஆடை நெகிழ்ந்த தடீ, என்னை ஈன்றருள் நாயகமே - என்னைப் பெற்றருளின இறைவியே, (இதுமகள்விடை)—எ-று. (சருஉ)

## முருகர் துதி.

கண்டநந்தந்த மயிற்சாயலாள்செழுங் கைவனசம்
கண்டநந்தந்த மயில்செண்டரும்பு கனிமொழிகற்
கண்டநந்தந்த நடையாள்குறவள்ளி காதலனைக்
கண்டநந்தந்தரந் தண்டனிட்டேன்வினைக் கட்டறவே.

இ-ள். அந்தம் - அழகாகிய, மயிற் சாயலாள் - மயிற் சாயலை யுடையவளும், நந்து கண்டம் - சங்கத்தை நிகர்த்த கழுத்தையும், வனசம் செழுங் கை - தாமரை மலர்போன்ற செழிய கையினையும், அயில் செண்டு அரும்பு - வேலினையும் பூஞ்செண்டினையும் முல்லை யரும்பையும் நிகர்த்த, கண் தனம் தந்தம் - கண்களையும் தனங்களையும் பல்லினையும், கற்கண்டு - சற்கண்டை நிகர்த்த, கனி மொழி - கனிவாகிய சொற்களையும், அநம் தந்த நடையாள் - அன்ன நடைபோன்ற நடையினையுமுடையவளுமாகிய, குறவள்ளிகாதலனை - குறத்தியாகிய வள்ளி நாயகிக்குப் பிராண நாயக னாகிய முருகக் கடவுளை, கண்டு - தரிசித்து, அநந்தம் தரம் - அநேகந் தரம், வினைக் கட்டு அற - என் வினைக்கட்டு ஒழியும்படி, தண்டனிட்டேன் - கும்பிட்டேன்—எ-று. (சருந)

## தாய்க்கூற்று.

கனகாசலங்கரிக் கும்பூணிளமுலைக் கன்னியுன்மேல்
கனகாசலையுற் றனள்பார்கடைக்கட் கருணையமோ

கனகாசலதி முரசாமதிக்குடைக் கன்னல்விலா
கனகாசலநிதித் தாண்டவமூர்த்திகங் காதரனே.

இ-ள். கனம் - மேலான, காசு - இரத்தினங்களால், அலங்கரிக்கும் - அலங்கரித்துச் செய்யப்பட்ட, பூண் - ஆபரணங்களை யணிந்த, இள முலை - இள முலைகளையுடைய, கன்னி - என் பெண்ணானவள், உன்மேல் - உன்மீது, கனம் காசலை உற்றனள் - பெருங் காதல் கொண்டாள், (ஆதலால் இவளை) கருணை கடைக் கண்பார் - கருணையோடு கூடிய உன் கடைக் கண்ணால் நோக்குவாயாக, அமோகநகா - மிகுந்த ஆசை மலையா யிருப்பவனே, சலதி முரசம் - கடலாகிய பேரிகையையும், மதிக்குடை - சந்திரனாகிய குடையையும், கன்னல் விலா - கரும்பாகிய வில்லையு முடையவனாகிய மன்மதனே, கனகா - பொன்னை நிகர்த்தவனே, (பொன் - தேவ குரு) சலநிதி - (கம்பீர முதலிய குணங்களால்) கடலை நிகர்த்த, தாண்டவமூர்த்தி கங்காதரனே - தாண்டவமூர்த்தி யென்று சொல்லப்பட்ட கங்காதரனே — எ-று. (௩௫௪)

## இதுவுமது.

மாதங்கமலை யிரண்டனகொங்கை மதர்விழிக்கு
மாதங்கமலை மருவரங்காகுல்லை மாலையருள்
மாதங்கமலைசற் றேனுமுண்ணாள்வள ருங்கங்குலோர்
மாதங்கமலை துரும்பாய்மெலிந்தனள் மாதரசே.

இ-ள். மாதங்கமலை இரண்டு அன்ன - பெரிய பொன்மலைக ளிரண்டை நிகர்த்த, கொங்கை - தனங்களையும், மதர் விழிக்கு - மதர்த்த கண்களையு முடையவளாகிய இவளுக்கு, அம் கமலை மாது - அழகிய திருமகள், மருவு அரங்கா - திருமார்பில் பொருந்தியிருக்கப்பெற்ற திருவரங்க நாதனே, குல்லை மாலை அருள் - உன் திருத்துழாய் மாலையை அருள் செய்யவேண்டும், மாது - இப்பெண், அங்கு - அந்தத் தாதியரிடத்து, அமலை - சோற்றை, சற்றேனும் உண்ணாள் - சிறிதாயினும் உண்ண மாட்டாள், வளரும் - வளரா நின்ற, கங்குல் - ஒரு இரவானது, ஓர்மாதம் - (இவளுக்கு) ஒரு மாச காலமா யிருக்கின்றது, மாது அரசு - இந்தப் பெண்ணரசி யானவள், கம் அலை துரும்பாய் மெலிந்தனள் - கடல்நீரில் விழுந்த துரும்புபோல அலைந்து உடல் மெலிந்தாள் எ-று. (௩௫௫)

## தலைவிகூற்று.

பஞ்சவனத்தத்தைக் காக்குந்தென்கூடற் பதிசுந்தரன்
பஞ்சவனத்தத்தைப் பார்ப்பதிக்கீந்தவன் பாலனக்கால்
பஞ்சவனத்தத்தை யானான்செந்தூரன் பதியிற்சென்று
பஞ்சவனத்தத்தை காள்சொல்லுவீரென்றன் பந்தத்தையே.

இ-ள். பஞ்சம் அனத்தத்தை - பஞ்சத்தினா லுண்டாகும் அனர்த்தத்தை, காக்கும் - தடுத்து, (ஏழைகளைக்) காக்கின்ற, தென் கூடல் பதி - தென் மதுரை

ஷரப் பதியிலெழுந் தருளியிருக்கிற, சுந்தர பஞ்சவன் - சுந்தர பாண்டியன், அத்தத்தை - தன் திருமேனியிற் பாதியை, பார்ப் பதிக்கு ஈந்தவன் - உமா தேவிக்குக் கொடுத்தவன், (அவனுக்கு) பாலன் - புதல்வனும், அக்கால் - அக் காலத்தில், பஞ்சவன் அத்தத்து - பஞ்ச கிருத்தியங்களையுடைய பரம சிவ னது கையில், ஐ ஆனன் - அழகா யிருந்தவனும், செந்தூரன் - திருச்செந்தூ ரையுடையவனும் ஆகிய முருகக் கடவுளுடைய, பதியில்சென்று - இடத்திற் போய், பஞ்ச வன்னம் தத்தைகாள் - பஞ்சவர்ணக் கிளிகளே, என்றன் பந் தத்தை - எனது அன்பை, சொல்லுவீர் - சொல்லக்கடவீர்கள்—எ-று. ()

## சுரம்போக்கு.

### செவிலி கூற்று.

கச்சிக்குரங்கன் மனுநீதிவேந்தன் கனவரைமேல்
கச்சிக்குச்சொல்லி முலைபூணுமோசிறு கைகளள
கச்சிக்குவாரி முடித்திடுமோவின்றோர் காளைபின்னே
கச்சிக்கெனச்சென் றிராமேசுரங்கண்ட காட்சிநன்றே.

இ-ள். கச்சிக் குரங்கன் - கச்சியிலுள்ள ரங்கன், மனுநிதி வேந்தன்—மநு நீதியையுடைய அரசன், (அவனது) கனவரைமேல் - பெரிய மலையின்மீ துள்ள, இக்குச் சொல்லி முலை - கரும்புபோலும் இன்சொல்லையுடையாளது தனங்கள், கச்சு பூணுமோ—, சிறு கைகள் - சிறிய கைகள், அளகச் சிக்கு - கூந்தலின் சிக்கை, வாரிமுடித்திடுமோ - வாரிமுடிக்குமோ, இன்று ஓர் காளை பின்னே - இன்றொரு விடபுருடன் பின்னே, கச்சிக்கு எனச் சென்று - கச் சிக்கென்று சொல்லிப்போய், இராமேசுரம் கண்ட காட்சி நன்று - இராமே சுரத்தைக் கண்டகாட்சி நன்றாயிருந்தது—எ-று.

இராமேசுரம் கண்ட - இராமர் பாலைவனத்தைக்கண்ட. (சுருஎ)

### தோழிகூற்று.

சந்தநந்தந்தர ளங்கனந்தந்தஞ் சரங்கணம்பு
சந்தநந்தந்தர வானுசுப்பல்குன்மின் றந்தமெய்ப
சந்தநந்தந்தர சங்கசந்தம்பரஞ் சங்கிழந்து
சந்தநந்தந்தரஞ் சொன்னுள்வரச்சொல்லிச் சண்முகனே.

இ-ள். களம் தந்தம் - கழுத்தும்பல்லும், சந்தம் நந்து அம் தாளம் - அழ காகிய சங்கினையும் அழகாகிய முத்தினையும் நிகர்க்கும், கண் சரம் - கண் அம் பைநிகர்க்கும், தநம் அம்புசம் - தனம் தாமரை யரும்பை நிகர்க்கும், வான் நுசுப்பு அல்குல் - ஆகாயம்போலும் இடையும் அல்குலும், தந்து அர-நூலினை யையும் பாம்பின்படத்தையும்நிகர்க்கும், மின் தந்த மெய்பசந்து-மின்னுகின்ற மேனிபசலைநிறமடைந்து, அநம் தந்தாசம்கசந்து-அன்னாசலை கசந்து, அம்பரம்

சங்குஇழந்து - ஆடையையும் சங்கவளையலையும் இழந்து, அநேகந்தரம் வரச்சொல்லி - அநேகந்தரம் உன்னைவரச்சொல்லி, சந்துசொன்னாள் - என்னைத் தூதுசொல்லியனுப்பினாள், சண்முகனே - ஆறுமுகனே—எ-று. (சருஅ)

## பெரியபாளையம் சிதம்பரமுதலியார் தனக்கு ஆடையளித்ததைக் குறித்து ஒருவித்துவான் அவரைப்புகழ்ந்து பாடியது.

### விருத்தம்.

நத்தையார்வயல்சூழ் பெரும்பாளையநகரில் வாழுஞ்சிதம்பரமன்னவா, நத்தைநோக்கியரிபரந் தாமசநார்த்தநாவென்றழு மொருபெண்ணின்மா, நத்தையன்றளித்திட் டவன்போலென்மாநத்தை யின்றளித்திட்டாயென்றுன்னிதா, நத்தையானென்சொல்வே னிரண்டாயிர நாவுடைப் பணிநல்லரசன்றியே.

இ-ள். நத்தைஆர்வயல்சூழ் - சங்குகள்நிறைந்தவயல்சூழ்ந்த, பெரும்பாளைய நகரில்வாழும் - பெரியபாளைய நகரத்தில்வாழ்கின்ற, சிதம்பரமன்ன- சிதம்பரவேந்தனே, வாநத்தைநோக்கி - ஆகாயத்தைப் பார்த்து, அரிபரந்தாம சநார்த்தநா என்று—, அழும் - அழாநின்ற, ஒருபெண்ணின் மாநத்தை - ஒருபெண்ணினதுமாநத்தை, அன்று அளித்திட்டவன்போல்-அந்நாளில் காத்தவன்போல, என்மானத்தை இன்று அளித்திட்டாய்என்று - என்மாநத்தையின்றுகாத்தாயென்று, உன்நிதானத்தை - உன்பெருந்தன்மையை, இரண்டு ஆயிரம்நாஉடை - இரண்டாயிரநாக்களையுடைய, நல்-நல்ல, பணிஅரசு அன்றி- பரம்பரசனுகிய ஆதிசேஷனல்லாமல், யான் என்சொல்வேன் - நான் என்ன சொல்லவல்லேன்—எ-று.

வாநத்தைநோக்கியழு மொருபெண் - துரோபதை, அவள் மாநத்தையளித்திட்டவன் - ஸ்ரீகிருஷ்ணன். (சருக)

### தலைவிகூற்று.

அந்தரங்கண்டிடத்தேயு நெல்லிரும்புபோலிப்போ தகப்பட்டேன்யா
அந்தரங்கவாழிமுர சோனமரிற்படுந்துயர மகற்றுதற்கே [ன்
அந்தரங்கண்வளரமலர் முனிவருக்குமுனிவருக்கு மமுதையீந்த
அந்தரங்கமாயனையே யந்தரங்கமாயனையே யழைப்பிப்பாயே.

இ-ள். அந்து அரம்கண்டிட - அந்தையும் அரத்தையும் கண்டமாத்திரத்தில், தேயும் - தேய்ந்துபோகின்ற, நெல்இரும்புபோல் - நெல்லும் இரும்பும்போல, இப்போதுயான் அகப்பட்டேன் - இப்பொழுது நான்சிக்கினேன், அம் - அழகாகிய, தரங்கம் - அலைகளையுடைய, ஆழி - சமுத்திரத்தை, முரசோன் - முரசாகவுடையவனாகிய மன்மதனது, அமரில் - போரில், படும்துயரம் - படுகிறதுன்பத்தை, அகற்றுதற்கே - நீக்கும்பொருட்டே, அந்தரம்-ஆகா

டத்தில், கண்வளர் அமலர் - கண்வளர்கின்ற அமலருக்கும், முனிவருக்கும்-தேவர்களுக்கும், முனிவருக்கும் - முனிகளுக்கும், அமுதீந்த - அமிர்தத்தைக்கொடுத்த, அம்தரங்கமாயனையே - அழகிய திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டமாயவனையே, அந்தரங்கமாய் - இரகசியமாக, அன்னையே - தாயே, அழைப்பிப்பாயே - வரவழைக்கக்கடவை—எ-று. (சகூ௦)

## தாய்க்கூற்று.

### விருத்தம்.

அன்னமதுவீடென்றேகுடியிருக்குங்கொண்டைமுகமரவிந்தஞ்சீர்
அன்னமதுகண்டஞ்ச நடைபந்துகொங்கைசுர ரமுதந்தன்னை
அன்னமதுரம்போன்ற சொன்மாதுசிவாஜி யரசேயென்றும்
அன்னமதுவேம்பாகி மயலானளினிதாய்வந் தாளுவாயே.

இ-ள். கொண்டை - கூந்தலானது, அல் - இருள், நமது வீடுஎன்றே குடியிருக்கும் - இது நமது வீடென்றெண்ணியே குடியிருக்குமிடமாம், முகம் - முகமானது, அரவிந்தம் - தாமரை மலரைநிகர்க்கும், நடை - நடையானது, சீர் - அழகான, அன்னமதுகண்டு அஞ்சும் - அன்னப்பறவையானது கண்டு அஞ்சும்படியாயிருக்கும், கொங்கை - தனங்கள், பந்து-பந்துக்குநிகராயிருக்கும், சொல் - சொற்கள், சுரர்அமுதந்தன்னை அன்ன - தேவாமிர்தத்தையொத்த, மதுரம்போன்ற - மதுரத்தை நிகர்த்திருக்கும், மாது - இப்படிப்பட்ட அவயவங்களையுடைய என்பெண்ணனவள், என்றும் - எந்நாளும், அன்னமது வேம்புஆகி - அன்னமானது வேம்புக்கு நிகராய்க்கசந்து, மயல் ஆனள் - உன்மீது மோகங்கொண்டாள், (ஆதலால்) சிவாஜிஅரசே-சிவாஜி வேந்தனே, இனிதாய்வந்து ஆளுவாய் - அன்போடுவந்து இவளை ஆளக்கடவாய்—எ-று. (சகூக)

## கொடையாளிகளின் அளவுகுறிக்கின்றது.

### விருத்தம்.

சந்திரன்காற்காற் குமுணனேவரைக்காற் றனிக்கொடைக்கன்னனேவொருகால், கந்தரமிருகாற் பலியுமேமுக்காற் காழவிர்கொடையுடையவராம், இந்தமாநிலத்தின்முழுக்கொடையுடையோ னிதமலியெட்டயாபுரம்வாழ், சந்திரவதனன் மந்தரபுயத்தன் றனியருணசலதுரையே.

இ-ள். சந்திரன் கால்கால் - சந்திரன்வீசமும், குமுணன் அரைக்கால்-குமுணன் அரைக்காலும், தனிக்கொடை - ஒப்பற்ற ஈகையையுடைய, கன்னன் - கர்ணமஹாராஜன், ஒருகால் - ஒருசாலும், கந்தரம் இருகால் - மேகம் அரையும், பலியும் முக்கால் - பலிச்சக்கரவர்த்தியும் முக்காலும் ஆகிய, காழ் அவிர் - ஒளியோடு பிரகாசிக்கின்ற, கொடை உடையவர் ஆம் - ஈகையை

யுடையவர்களாவர், இந்தமாநிலத்தில் - இந்தப்பெரிய நிலவுலகத்தில், முழுக் கொண்டையுடையோன் - முழுக்கொண்டையுடையவன், இதம்மிலி-நன்மைமிகுந்த எட்டயாபுரம்வாழ் - எட்டயாபுரத்தில் வாழ்கின்ற, சந்திரவதனன் - பூர்ண சந்திரனைநிகர்த்த முகத்தை யுடையவனும், மந்தரபுயத்தன் - மந்தரகிரியை நிகர்த்த தோள்களையுடையவனும் ஆகிய, தனி-ஒப்பற்ற, அருணாசலதுரையே- அருணாசலதுரையே யாவன்—எ-று. (சுகூஉ)

## இரவலர்தன்மை

### விருத்தம்.

எண்சாணுகமிடியனுக்கிங் கிரத்தலுனிலேழ்நடையாறும்
கண்காணுமுன்னைந்தாகுங் காணினான்காங்கையேந்தில்
தண்கார்நிதியேயெனவோதிற் றவர்போன்மூன்றுமிரண்டாகும்
நண்பாவீதலிலையென்று னமன்பாலாம்பொன்பாலுயிரே.

இ-ள். இங்கு - இவ்வுலகத்தில், மிடியனுக்கு - தரித்திரனுக்கு, எண் சாண் ஆகம் - எட்டுச்சாணளவு கொண்டவுடம்பு, இரத்தல் உன்னில்-யாசித் தலை நினைத்தவளவில், எழ் - எழ்சாணுகும், நடை - இரக்கும்பொருட்டு நடக் குங்கால், ஆறுஆம் - ஆறுசாணுகும், கண்காணுமுன்ஐந்துஆகும் - (கொடை யாளியைக்) கண்ணினாற் காண்பதற்குமுன்னே ஐந்துசாணுகும், காணின் நான்குஆம் - கண்டால் நான்குசாணுகும், கைஏந்தில் - கையையேந்தினல், தவர்போல்மூன்றும் - தவசிகள்போல் மூன்றுசாணுகும், தண்கார்நிதியே என ஓதில் - குளிர்ந்தமேகமே நவநிதியே என்று அவனைப் புகழ்ந்து சொல்லுங் கால், இரண்டு ஆகும் - இரண்டுசாணுகும், நண்பாஈதல் இலையென்றல்- அன்போடுகொடுத்தல் இல்லையென்று சொல்லுவனாயின், பொன்பால் உயிர்- (அந்த யாசகனது) பொன்னிடத்துள்ள உயிரானது, நமன்பால் ஆம் - யம னிடத்துச்சேரும்—எ-று. (சுகூங)

## புகையிலையின்பெருமை.

### விருத்தம்.

சீராருந்திருநெடுமா லானிரைப்பின்புகையிலைக்காம் பெடுத்துக் கொண்டான், வாராருமுலையுமைசே ரரனேசம்புகையிலையில்வசிப்ப நானன், சீராருமக்கினிக்குப் புகையிலையேயென்றுற்பின் சிவன்போ கும், பேராரும்புகையிலைதன் பெருமைதனையெவராலும் பேசொண் தே.

இ-ள். சீர் ஆரும் - சிறப்புப்பொருந்திய, திரு - திருமகளையுடைய, நெடு மால் - நெடுமாலானவன், ஆன்நிரைப்பின் - பசுக்கூட்டத்தின்பின், புகை யிலைக்காம்பு எடுத்துக்கொண்டான்—; வார் ஆரும்முலை - கச்சணிந்த தனங்

கூடுமிடம் என்பதற்கு பகலுமிரவும் கூடற்சுழிகளை யிழைக்கும் பாத்தையிட மெனவும் பகலு மிரவும் கூடிச் சுகிக்கின்ற பரத்தையிட மெனவும் பொருள் கொள்க. (சருக)

## தாய்வினவும் மகள்விடையும்.

நாகஞ்செறிந்த மலர்க்காவிற்போய்வரு நன்னுதலே
நாகஞ்சரிந்திட்ட வாறுசொல்லாய்நம னார்தமைப்போல்
நாகந்துரத்திய தாலேயென்மேனி நடுநடுங்கி
நாகஞ்சரிந்த தடீயென்னையீன்றரு ணாயகமே.

இ-ள். நாகம் செறிந்த - புன்னை மரங்கள் நெருங்கின, மலர்க் காவில் போய்வரும் - பூஞ் சோலையிற் போய் வருகின்ற, நல் நுதலே - அழகிய நெற்றியையுடைய பெண்ணே, நாகம் சரிந்திட்ட ஆறு சொல்லாய் - உன் ஆடை நெகிழ்ந்த தற்குக் காரணம்யாது அதனைச் சொல்லக் கடவாய், (இது தாய் வினா) நமனார் தமைப்போல் - யமனைப்போல, நாகம் துரத்தியதாலே - யானை துரத்தினதனால், என்மேனி நடு நடுங்கி - என் உடல் மிக நடுங்கினதனால், நாகம் சரிந்தது அடீ - ஆடை நெகிழ்ந்த தடீ, என்னை ஈன்றருள் நாயசமே - என்னைப் பெற்றருளின இறைவியே, (இதுமகள்விடை)—எ-று. (சருஉ)

## முருகர் துதி.

கண்டநந்தந்த மயிற்சாயலாள்செழுங் கைவனசம்
கண்டநந்தந்த மயில்செண்டரும்பு கனிமொழிகற்
கண்டநந்தந்த நடையாள்குறவள்ளி காதலனைக்
கண்டநந்தந்தரந் தண்டனிட்டேன்வினைக் கட்டறவே.

இ-ள். அந்தம் - அழகாகிய, மயிற் சாயலாள் - மயிற் சாயலை யுடையவளும், நந்து கண்டம் - சங்கத்தை நிகர்த்த கழுத்தையும், வனசம் செழுங் கை - தாமரை மலர்போன்ற செழிய கையினையும், அயில் செண்டு அரும்பு - வேலினையும் பூஞ்செண்டினையும் முல்லை யரும்பையும் நிகர்த்த, கண் தனம் தந்தம் - கண்களையும் தனங்களையும் பல்லினையும், கற்கண்டு - கற்கண்டை நிகர்த்த, கனி மொழி - கனிவாகிய சொற்களையும், அநம் தந்த நடையாள் - அன்ன நடைபோன்ற நடையினையுமுடையவளுமாகிய, குறவள்ளிகாதலனை - குறத்தியாகிய வள்ளி நாயகிக்குப் பிராண நாயகனாகிய முருகக் கடவுளை, கண்டு - தரிசித்து, அநந்தம் தரம் - அநேகந் தரம், வினைக் கட்டு அற - என் வினைக்கட்டு ஒழியும்படி, தண்டனிட்டேன் - கும்பிட்டேன்—எ-று. (சருங)

## தாய்க்கூற்று.

கனகாசலங்கரிக் கும்பூணிளமுலைக் கன்னியுன்மேல்
கனகாசலையுற் றனள்பார்கடைக்கட் கருணையமோ

கனகாசலதி முரசாமதிக்குடைக் கன்னல்விலா
கனகாசலநிதித் தாண்டவமூர்த்திகங் காதரனே.

இ-ள். கனம் - மேலான, காசு - இரத்தினங்களால், அலங்கரிக்கும்- அலங்கரித்துச் செய்யப்பட்ட, பூண் - ஆபரணங்களை யணிந்த, இள முலை- இள முலைகளையுடைய, கன்னி - என் பெண்ணானவள், உன்மேல் - உன்மீது, கனம் காசலை உற்றனள் - பெருங் காதல் கொண்டாள், (ஆதலால் இவளை) கருணை கடைக் கண்பார் - கருணையோடு கூடிய உன் கடைக் கண்ணால் நோக்குவாயாக, அமோகநகா - மிகுந்த ஆசை மலையா யிருப்பவனே, சலதி முரசம் - கடலாகிய பேரிகையையும், மதிக்குடை - சந்திரனாகிய குடையை யும், கன்னல் விலா - கரும்பாகிய வில்லையு முடையவனாகிய மன்மதனே, கனகா - பொன்னை நிகர்த்தவனே, (பொன் - தேவ குரு) சலநிதி - (கம்பீர முதலிய குணங்களால்) கடலை நிகர்த்த, தாண்டவமூர்த்தி கங்காதரனே- தாண்டவமூர்த்தி யென்று சொல்லப்பட்ட கங்காதரனே - எ-று. (சுருச)

## இதுவுமது.

மாதங்கமலை யிரண்டனகொங்கை மதர்விழிக்கு
மாதங்கமலை மருவரங்காகுல்லை மாலையருள்
மாதங்கமலைசற் றேனுமுண்ணாள்வள ருங்கங்குலோர்
மாதங்கமலை துரும்பாய்மெலிந்தனள் மாதரசே.

இ-ள். மாதங்கமலை இரண்டு அன்ன - பெரிய பொன்மலைக ளிரண்டை நிகர்த்த, கொங்கை - தனங்களையும், மதர் விழிக்கு - மதர்த்த கண்களையு முடையவளாகிய இவளுக்கு, அம் கமலை மாது - அழகிய திருமகள், மருவு அரங்கா-திருமார்பில் பொருந்தியிருக்கப்பெற்ற திருவரங்க நாதனே, குல்லை மாலை அருள் - உன் திருத்துழாய் மாலையை அருள் செய்யவேண்டும், மாது- இப்பெண், அங்கு - அந்தத் தாதியரிடத்து, அமலை - சோற்றை, சற்றேனும் உண்ணாள் - சிறிதாயினும் உண்ண மாட்டாள், வளரும் - வளரா நின்ற, கங்குல் - ஒரு இரவானது, ஓர்மாதம் - (இவளுக்கு) ஒரு மாச காலமா யிருக்கின் றது, மாது அரசு - இந்தப் பெண்ணரசி யானவள், கம் அலை துரும்பாய் மெ லிந்தனள் - கடல்நீரில் விழுந்த துரும்புபோல அலைந்து உடல் மெலிந்தாள் எ-று. (சுருரு)

## தலைவிகூற்று.

பஞ்சவனத்தத்தைக் காக்குந்தென்கூடற் பதிசுந்தரன்
பஞ்சவனத்தத்தைப் பார்ப்பதிக்கீந்தவன் பாலனக்கால்
பஞ்சவனத்தத்தை யானுன்செந்தூரன் பதியிற்சென்று
பஞ்சவனத்தத்தை காள்சொல்லுவீரென்றன் பந்தத்தையே.

இ-ள். பஞ்சம் அனத்தத்தை - பஞ்சத்தினா லுண்டாகும் அநர்த்தத்தை, காக்கும் - தடுத்து, (ஏழைகளைத்) காக்கின்ற, தென் கூடல் பதி - தென் மது

லேயுடைய, உமைசேர் அரன் - உமையோடுகூடிய சிவபெருமான், நேசம் புகையிலையில் வசிப்பது ஆனுன் - அன்போடு புகையிலையில்தானே வாழ்வதானுன், சீர் ஆரும் அக்கினிக்கு - சிறப்புப்பொருந்திய அக்கினிதேவனுக்கு, புகைஇலையே யென்ருல் - புகைஇல்லையே யென்று சொன்னுல், பின் சீவன் போகும் - அதன்பின்னே உயிர்நீங்கும், (ஆதலால்) பேர்ஆரும் - பிரபலமான, புகையிலை தன்பெருமைதனை - புகையிலையின் பெருமையை, எவராலும் பேசொணுது - எவராலும் சொல்லிமுடியாது—எ-று.

ஆனிரைப்பின் புகையிலைக்காம்பு எடுத்துக்கொண்டான் - என்பதற்கு பசுக்கூட்டத்தின் பின்செல்லுங்கால் - அழகிய வேய்ங்குழலையெடுத்துக்கொண்டானென்றும், அரனே சம்புகையிலையில் வசிப்பதானுன் என்பதற்கு சம்மாரகர்த்தாவாகிய. சம்புவானவன் கையிலையில் வாழ்வதானுன். என்றும், அக்கினிக்குப் புகையிலையே. யென்ருல் பின்சீவன் போகும் என்பதற்கு. நெருப்புக்குப் புகையில்லையென்ருல் பிறகு. சீவனே இல்லையென்றும், புகையிலையே என்று நினைத்தமாத்திரத்தில் ஜீவன்போகுமென்றும் பொருளுரைத்துக்கொள்க. (சகசு)

## கிருஷ்ணன்விஷயம்.

குன்றுகுடையாவெடுத்துக் கோவைக்காத்த
கோபாலாநின்பெருமை கூறக்கேண்மோ
அன்றுமலர்வந்தவடன் வீட்டைவிட்டே
ஆயர்மனைவந்ததனு லாயர்மாதர்
கன்றுகட்டுந்தாம்புகொண்டே யுரலிற்கட்டிக்
கரியதிருமேனிசிவப் பேறமத்தால்
என்றுமழியாப்பெயராற் றிருடனென்றே
எற்றியதுமுன்றலையி லெழுத்துத்தானே.

இ-ள். குன்று - கோவர்த்தனமலையை, குடையாஎடுத்து - குடையாகத்தூக்கி, கோவைகாத்த - பசுக்களைக் காத்தருளின, கோபாலா - கண்ணனே. நின்பெருமை - உன்பெருமையை, கூறக்கேண்மோ - யான்சொல்லக்கேட்பாயாக, அன்று - அந்நாளில், மலர்வந்தவள் தன்வீட்டைவிட்டு - திருமகளுடைய மனையைவிட்டு (திருப்பாற்கடலைவிட்டு), ஆயர்மனை வந்ததனுல்- ஆயர்வீட்டுக்கு வந்ததனுல், ஆயர் மாதர் - இடைப்பெண்கள், கன்றுகட்டுந்தாம்புகொண்டு - கன்றைப்பிணிக்குங் கயிற்றினுல், உரலில்கட்டி - உரலிற்சேர்த்துப் பிணித்து, கரியதிருமேனி - உனது கருமையாகிய திருமேனியில், சிவப்புஏற - செந்நிறமுண்டாகும்படி, மத்தால் - மத்தைக்கொண்டு, என்றும் அழியாபெயரால் - என்றும் அழியாத பெயரினுலே, திருடன்என்று எற்றியதும்-திருடனென்று புடைத்ததும், உன்தலையில் எழுத்துத்தானே-உன்தலையில் எழுதப்பட்ட எழுத்தின்பயனே—எ-று. (சகரு)

## தாய்க்கூற்று.

விருத்தம்.

சேல்வண்டுவசமளியே நாணாயிப்பெண்ணின்மேற் சினந்தேயைந்து
கோல்வண்டுமுனைதீட்டிக் கழைகுழைத்தங்கசனெய்த கொடுமைதன்
பால்வண்டுநிறைபழன வாதிபுரித்தியாகேசர் பாலிலாறு [னால்
கால்வண்டேபோயுரைமின் கைவண்டுபூமுகந்த கணக்கைத்தானே.

இ-ள். சேல் - மீனை, வண் துவசம் - வளவிய கொடியாகவும், அளியே நாணாய் - வண்டையே நாணாகவுங் கொண்டு, அங்கசன் - மன் மதன், இப் பெண்மேல் சினந்து - இந்தப் பெண்ணின்மேற் கோபங் கொண்டு, கழை குழைத்து - கரும்பு வில்லை வளைத்து, ஐந்து கோலம் வண்டு - அழகிய ஐந்து பாணங்களை, முனை தீட்டி - முனையைக் கூர்மை செய்து, எய்த கொடுமை தன்னால் - எய்த கொடுமையால், பால் வண்டு நிறை - வெண்மையாகிய சங் கங்கள் நிறைந்த, பழனம் - வயல் சூழ்ந்த, ஆதிபுரி - திருவொற்றியூரிலெழுந் தருளிய, தியாகேசர் பாலில் - தியாகேச ரிடத்து, ஆறு கால் வண்டே - ஆறு கால்களையுடைய வண்டே, கை வண்டு - கை வளையல், பூமுகந்த கணக்கை- நிலத்திற் சிந்தின விதத்தை, போய் உரை மின் - போய்ச் சொல்லுங்கள் எ-று. (௪௬௬)

## ஒருபெண்ணின் அவயவவர்ணனை.

விருத்தம்.

கட்பூக்குழல்மாவடுவண்டாங் கழைவிற்புதல்கூரசிநாட்டம்
எட்பூத்துண்டமுருக்கோட்ட மிலகுவிதுவாநநம்பாணி
தட்பூச்சுவர்க்கஞ்சிலம்பிடைநூ னிதம்பமகிப்பைவராற்றாள்சொல்
வெட்பால்குரல்கோகிலமன்ன நடையும்வடமீன்கற்புடையாள்.

இ-ள். கள் பூகுழல் - தேனுள்ள பூங்குழல், மா அடு வண்டு ஆம் - அழகுள்ள வண்டுபோலும், புதல் - புருவம், கழைவில் - (மன் மதனது) கரும்பு வில்லை நிகர்க்கும், நாட்டம் - கண், கூர் அசி-கூர்மையாகிய வாளைநிகர்க்கும், துண்டம் - நாசி, எள்பூ - எள்ளின் பூப்போலும், ஒட்டம் - அதரம், முருக்கு- முருக்கம் பூப்போலும், ஆநநம் - முகம், இலகு விது - விளங்குகின்ற பூர்ண சந்திரன்போலும், பாணி - கை, தண் பூ - தண்ணிய தாமரைப் பூவை நிகர்க் கும், சுவர்க்கம் - தனம், சிலம்பு - மலையை நிகர்க்கும், இடை-இடையானது, நூல் - நூலிழைபோலும், நிதம்பம் - அல் குல், அகிபை - பாம்பின் படம் போலும், தாள் - கணைக் கால், வரால் - வரால்மீனை நிகர்க்கும், சொல்வெண் பால் - சொல் வெண்மையாகிய பாலின் சுவைபோலும், குரல் - குரலானது, கோகிலம் - குயிலை நிகர்க்கும், நடை - நடை, அன்னம் - அன்ன நடையை

கிசர்க்கும், (இவள் இத்தன்மையான அவ்வயவங்களை யுடையவளாயிருத்தலே யன்றி) வடமீன் கற்பு உடையாள் - அருந்ததி போலும் கற்பினையும் உடையாள்—எ-று. (சகூஎ)

பரமசிவனைக்குறித்து ஒரு அடியவர் இரங்கிக்கூறியது.

*விருத்தம்.*

தருக்காலுமலர்ப்பொழில்சூ ழாரூரர்தமைப்புலமைத் தருக்குத்தன்னால், பெருக்காலுமிவரருமைப் பெம்மானென்றெண்ணாமற் பெண்பித்தேறி, முருக்காலும்வெலற்கரிய விதழ்ப்பரவை யிணங்கும்வகை மொழிந்துவாவென், றிருக்காலுநடத்தினா னொருக்காலுந்தமிழ்க்கிரங்கி யிருக்கொணாதே.

இ-ள். தருகாலும் - மரங்கள் உதிர்க்கின்ற, மலர் - மலர்களையுடைய, பொழில் சூழ் - சோலைகள் சூழ்ந்த, ஆரூரர் தமை - திருவாரூர்த் தியாகேசரை, புலமைத் தருக்குத்தன்னால் - புலமையின் அகங்காரத்தாலே, பெருக்கு ஆலும் இவர் - செல்வப் பெருக்கையுடைய இவர், அருமை பெம்மான் என்று எண்ணாமல் - கிடைத்தற்கு அரியபெருமான் என்று நினையாமல், பெண்பித்து ஏறி - பெண் பைத்தியம் அதிகரித்து, முருக்காலும் வெலற்கரிய இதழ் - முருக்கம் பூவினாலும் வெல்லுதற் கரிதாகிய அதரத்தையுடைய, பரவை - பரவை நாய்ச்சியார், இணங்கும் வகை - சம்மதிக்கும்படி, மொழிந்துவா என்று - சொல்லி வா வென்று, இருக்காலும் நடத்தினான் - இரண்டு தரம் நடத்தினான் (நாவலூரான்) ஆதலால் இறைவர், ஒருக்காலும் - ஒரு காலத்திலும், தமிழ்க்கு - அடியவாது தமிழ்ப்பாடலுக்கு, இரங்கி யிருக்கொணாது - இரக்கங் கொண்டிருக்கலாகாது—எ-று. (சகூஅ)

*விருத்தம்.*

அருக்கன்மதி யுதித்துவரு மம்புவியி லதிசயங்க ளன்பாய்க்கேளீர், உருக்குமந்த வுடலீரா றொன்றனையுமொன்றனையு முகந்துகொண்டு, இருக்குமந்த விடந்தனிலே நாலிரண்டு விதமான திருக்கக்கண்டேன், திருக்குளத்துப் படித்துறையிற் கலுக்கெனவே சிறுக்கியவள் சிரிக்கின்றாளே.

இ-ள். அருக்கன் மதி - சூரியனும் சந்திரனும், உதித்துவரும் - உதயஞ்செய்து வருகின்ற, அம் புவியில் - இவ் வுலகத்தில், அதிசயங்கள் - புதுமைகளை, அன்பாய் கேளீர் - அன்போடு கேட்கக் கடவீர், உருக்கும் - (கண்டோரது மனத்தை) உருகப்பண்ணுகிற, உடல் ஈராறு ஒன்றனையும் ஒன்றனையும் உகந்துகொண்டு - பதினொன்றை யேற்றுக்கொண்டு, இருக்கும் அந்த இடந்தனிலே - இருக்கின்ற அந்த இடத்திலே, நாலிரண்டு விதமானது இருக்கக்

கண்டேன்—, திருக்குளத்துப் படித்துறையில்—, சிறுக்கி அவள்—, கலுக் கெனவே சிரிக்கின்றாளே—எ-று.

பதினைந்து - சோதி நக்ஷத்திரம், சோதியுருவு.

கொண்டிருக்குமிடம், கோயில், நாவிரண்டு - கன்னி. (சசுக)

விருத்தம்.

திருக்குளத்திற் றிருக்குளசுந் தரக்கடவுள் விருப்பமொடு சிறந் துவாழும், இருக்களந்த குருக்கள்மனைத் தெருக்கணிறை புதுவையி னி லெனைப்பார்த்தன்பா, மருக்கிளர்ந்த முருக்கிதழ்ச்செந் திருக்கம லம் பெருக்கமொடு வதிந்துதோன்றும், திருக்குளத்தங் கரையருகே சிறுக்கிநின்று கலுக்கெனவே சிரிக்கின்றாளே.

இ-ள். திருக் குளத்தில்-அழகிய நெற்றியில், திருக்கு உள-கண்ணுள்ள, சுந்தரக் கடவுள் - சோம சுந்தரக்கடவுள், விருப்பமொடு சிறந்து வாழும்- விருப்பத்தோடு பெருமைபெற்று வாழ்கின்ற, இருக்கு அளந்த - வேதங்களைக் கரைகண்ட, குருக்கள் மனை - குருக்கள் வீடுகளுள்ள, தெருக்கள்நிறை - தெ ருக்கள் நிறைந்த, புதுவையினில் - புதுவை நகரத்தில், எனைப் பார்த்து- என்னை நோக்கி, அன்பா - அன்போடு, மருகிளர்ந்த - மணமிகுந்த, முருக்கு இதழ் - முருக்கம் பூப்போலும் அதரத்தையுடைய, செந் திரு - திரு மகளுக் குரிய, கமலம் - தாமரை மலர்கள், பெருக்கமொடு வதிந்து தோன்றும் - மிகு தியாய் உண்டாகிக் காணப்படுகின்ற, திருக் குளத்தங் கரை அருகே—, சிறு க்கி நின்று கலுக்கெனவே சிரிக்கின்றாளே—எ-று. (சஎ0)

சந்த விருத்தம்.

அக்கப்புநற்சசியை மிக்கச்சடைக்குளணி யத்தற்குமெய்ப்புதல் வனர், உக்ரக்கோழிக்கொடியர் பச்சைப்பரிக்குமர ருற்றுச்செழித்த வரைமேல், கைக்கிட்டதன்வளையி னற்பொற்சரத்தினொளி கப்பத் தெருக்களளவும், செக்கச்சிறுக்கியவள் பக்கச்செருக்கிலுயிர் சிக்கிக் கொளத்திரியுமே.

இ-ள். அக்கு அப்பு நல்சசியை - அக்கு மணியையும் நீரையும் நல்லசந்தி ரனையும், மிக்க சடைக்குள் அணி - மேன்மையாகிய சடையிலணிந்த, அத் தற்கு - பரம சிவனுக்கு, மெய் புதல்வனர் - உண்மையானபுத்திரரும், உக்ரம் கோழிக் கொடியர் - (பகைவருக்கு) உக்கிரமாகிய கோழிக் கொடியையுடைய வரும், பச்சை பரி குமரர் - (மயிலாகிய) பச்சைக் குதிரையை யுடையவரும் ஆகிய முருகக்கடவுள், உற்று செழித்த வரைமேல் - பொருந்தித் தழைத்த மலைமேல், கைக்கு இட்ட - கையி லணிந்த, தன் வளையின் - தன் வளையலின், நல் பொன் சரத்தின் ஒளி - நல்ல பொன்மாலையினொளி, தெருக்கள் அளவும்

தீப - ஸ்ரீதிசள்வைக்கும் மூட, செக்கச் சிறுக்கி அவள் - செலுந்த சிறுக்கியாகிய அவளது,' பக்கச் செருக்கில் - (கொண்டையின்) பக்கச் செருகில், உயிர் சிக்கிக் கொளத்திரியும் - என் உயிர் அகப்பட்டுக்கொள்ளத் திரியாநின்றது—எ-று. (௬௭௧)

விருத்தம்.

கங்குலிலே நடப்பார்க்குக் காலிலே கண்வேண்டுங் கண்டீரந்தச், சங்கரனார் திருத்தாளிற் கண்ணிடந்து சாத்திவைத்த சமர்த்தைப்பாரீர், அங்கண்ண ராரூரராடவே கிண்கிணிக்கா வருமையெல்லாம், செங்கணெடு மாலனக்கே யல்லான்மற் றொருவருக்குந் தெரிந்திடாதே.

இ-ள். கங்குலிலே நடப்பார்க்கு - இரவில் நடப்பவர்களுக்கு, காலிலே கண் வேண்டும் - காலிலே கண்ணிருக்க வேண்டும், அந்த சங்கரனார் திருத்தாளில் - அந்தச் சிவபெருமானது திருவடியில், கண் இடந்து சாத்திவைத்த சமர்த்தை - கண்ணைத்தோண்டிச் சாத்தின சாமர்த்தியத்தை, பாரீர்-பாருங்கள், அங்கணனார் - கிருபைக்கண்ணர், ஆரூரர் - திருவாரூரர், ஆட - நடனஞ்செய்ய, கிண்கிணிக்கால் அருமை யெல்லாம் - கிண்கிணியைத் தரித்த திருவடியின் அருமை முழுதும், செங்கண்நெடுமால் தனக்கே அல்லால் - செவந்த தாமரைக் கண்களையுடைய நெடுமாலுக்கேயன்றி, மற்றொருவருக்கும் தெரிந்திடாது - வேறொருவருக்கும் தெரியாது—எ-று. (௬௭௨)

நிந்தாஸ்துதி.

விருத்தம்.

ஓர்குடிக்கேயோர்மகவாஞ் சிறுத்தொண்டன்பிள்ளைபழி யொன்றுபோதும், பார்குடிக்குட்செங்காட்டங் குடிமேவுமுத்தரா பதியாரேநீர், கார்குடிக்குங்கஞ்சுகமுங் கப்பறையும்பொக்கணமுங்கையிற்கொண்டே, ஆர்குடியைக்கெடுப்பதற்கிங் காண்டிவேடங்கொண்டேயலைகின்றீரே.

இ-ள். ஓர்குடிக்கு - ஒருகுடும்பத்துக்கு, ஓர்மகவுஆம் - ஒரேபிள்ளையாகிய, சிறுத்தொண்டன் பிள்ளைபழி ஒன்றுபோதும்—, பார்குடிக்குள் - உலகிலுள்ள குடிகளுக்குள்ளே, செங்காட்டங்குடிமேவும் - செங்காட்டங்குடியில் வாழ்கின்ற, உத்தராபதியாரே—, நீர்—, கார்குடிக்கும் கஞ்சுகமும் - (திருமேனியில்) கருமையாகிய போர்வையையும், கையில் - கையினிடத்தில், கப்பறையும் - திருவோட்டையும், பொக்கணமும்-பொக்கணத்தையும், கொண்டு-தாங்கி, ஆர்குடியைக் கெடுப்பதற்கு - யார்குடும்பத்தை யழிப்பதற்கு, இங்கு-இவ்விடத்தில், ஆண்டிவேடம்கொண்டு அலைகின்றீர்—எ-று.

சிறுத்தொண்டன்பிள்ளை - சீராளன், செங்காட்டங்குடி - ஓர்திருப்பதி, உத்தராபதியார் - அத்திருப்பதியிலெழுந்தருளிய சிவபெருமான், பொக்கணம் - சோளிப்பை. (சஎங)

ஒருவித்வான் பசித்துவந்து ஒருபிரபுவையடுக்க, அவர் இவர் பசி தீர அன்னமிடக் கட்டளையிட்டு, அவர் அவ்வாறே உண்டு பசிதீர்ந்து அந்தப்பிரபுவின்மேல் பாடியது.

விருத்தம்.

கொல்லாவிரதத்தமிழ்முனிவன் முதலோர்குண வாகடநூலில், எல்லாப்பிணிக்கு மருந்திசைத்தா ரியானுமவைதேர்ந்துறுதிகண்டேன், பொல்லாப்பசிநோய்க்கொருமருந்து புகலாமையின்யான்றேடிநின் றன், சொல்லாமெனவெண்ணுழியந்நோய் தொலைந்ததுறைசார்பறிகிலனே.

இ-ள். கொல்லாவிரதம் - கொல்லாவிரதத்தையுடைய, தமிழ்முனிவன் முதலோர் - அகத்தியன்முதலானோர், குணவாகடநூலில்—, எல்லாப்பிணிக்கும் - எல்லாவியாதிகளுக்கும், மருந்து இசைத்தார் - மருந்துசொன்னார்கள், யானும் - நானும், அவைதேர்ந்து - அவற்றையாராய்ந்து, உறுதிகண்டேன் - அவற்றின் உறுதியைக்கண்டேன், பொல்லாப்பசிநோய்க்கு - பொல்லாதபசிப்பிணிக்கு, ஒருமருந்து புகலாமையின் - ஒருமருந்து சொல்லாமையால், யான்தேடி - நான்தேடி, நின்றன்சொல் ஆம்என எண்ணுழி - உன்சொல்லே அப்பசிநோய்க்கு மருந்தென்று நினைத்தமாத்திரத்தில், அந்நோய் - அப்பசிப் பிணி, தொலைந்த - தொலைந்துபோன, துறைசார்பு அறிகிலன் - இடமும் சார்பும் - அறிகிலேன்—எ-று. (சஎச)

சிவபிரான்மீது ஒருஅன்பன்பாடின் நிந்தாஸ்துதி.

விருத்தம்.

அச்சுதனுநும்முடைய மச்சினனார்படியளந்தே யகிலங்காத்தார், நிச்சயமாம்வாழ்வுதரு மிலக்குமிதன்னுடன்பிறந்தீர் நிலைமையாக, உச் சிதமாம்பொன்மலையும் வெள்ளிமலையும்படைத்தீருமக்குச்சார்பாய்ப், பச்சைமரகதமிருக்கப் பிச்சையெடுத்துண்டதென்ன பட்டியாரே.

இ-ள். அச்சுதனார் - திருமாலானவர், உம்முடைய மச்சினனார்—, அவர் படியளந்து—, அகிலம்காத்தார் - உலகைக்காத்தருளினார், நிச்சயம்ஆம் - உறுதியாகிய, வாழ்வுதரும் - செல்வத்தைக்கொடுக்கின்ற, இலக்குமிதன்னுடன்

பிறந்தீர் - திருமகளோடுகூடப்பிறந்தீர், நிலைமையாக - நிலையாக, உச்சிதம் ஆம் - மேன்மையாகிய, பொன்மலையும் - மேருமலையையும், வெள்ளிமலையும் - கைலாயமலையையும், படைத்தீர் - சுவாதீனமாகப்பெற்றீர், உமக்குச்சார்பாய் - உமக்குச்சார்பாக, பச்சைமரகதம்இருக்க - பச்சையாகிய மரகதமலையுமிருக்க, பிச்சையெடுத்து உண்டதுஎன்ன - பிச்சையேற்றுண்டதற்குக்காரணம்யாது, பட்டியாரே - கள்வரே—எ-று.

படியளத்தல் - பூமியையளத்தல், பச்சைமரகதம் - உமாதேவியார். ()

விருத்தம்.

மாத்தவர்க்கெலாமுடலம் புளகிப்பவிநோதமாய் மகிழவாடும், கூத்தவர்க்குப்பார்த்தவர்கள் கொடுப்பதல்லாற் பார்த்தவர்க்குக்கொடுப்பதுண்டோ, நீத்தவர்களேகலந்த வொற்றியூர்த்தியாகேசர்நிருத்தங் கண்ணால், பார்த்தவர்க்குக்கேட்டதன்றிக் கிடையாதபரகதியும் பாலிப்பாரே.

**இ-ள்.** மாதவர்க்கு எல்லாம் - பெரியதவத்தோர்க்கெல்லாம், உடலம்புளகிப்ப - உடம்புபூரிக்க, விநோதமாய் - விசித்ரமாய், மகிழ ஆடும் - (அவர்கள் மனம்) மகிழும்படி யாடுகின்ற, கூத்தவர்க்கு - கூத்தாடிகளுக்கு, பார்த்தவர்கள் கொடுப்பது அல்லால் - (வேடிக்கை) பார்த்தவர்கள் கொடுப்பதல்லாமல், பார்த்தவர்க்கு - பார்த்தபேர்களுக்கு, கொடுப்பதுஉண்டோ - (ஆடுவோர்) கொடுப்பது உண்டோ, நீத்தவர்கள்கலந்த - துறவிகள் கூடியிருத்தற் கிடமாகிய, ஒற்றியூர் தியாகேசர்—, நிருத்தம் - தமது நடநத்தை, கண்ணால்பார்த்தவர்க்கு - கண்ணால்தரிசித்தவர்களுக்கு, கேட்டது அன்றி - அவர்கள்விரும்பி கேட்டதேயல்லாமல், கிடையாத - கிடைத்தற்கரிய, பரகதியும் - மேலான மோக்ஷகதியையும், பாலிப்பார் - கொடுப்பார்—எ-று. (சஎசு)

## இரகுநாத சேதுபதியின் யானையைப்புகழ்ந்தது.

விருத்தம்.

கடிவாங்குமலர்த்தடஞ்சூழ் சேதுபதிரகுநாதன் களிநல்யானை
அடிவாங்கிமுன்னடக்கில் வடகலிங்கங்கிடுகிடெனு மங்கதேசம்
குடிவாங்குங்கடலேழு முள்வாங்குமொன்னவர்கள் கோட்டைவாசற்
படிவாங்குமரசர்மணி முடிவாங்குஞ்சேடன்முடி படியுந்தானே.

**இ-ள்.** கடிவாங்கும் - மணம்பொருந்திய, மலர்த்தடம்சூழ் - மலர்ப்பொய்கைகள் சூழ்ந்த, சேதுபதி ரகுநாதன் - சேதுபதி ரகுநாதனது, களிநல் யானை - களித்தலையுடைய அழகியயானை, அடிவாங்கி முன்நடக்கில் - அடியெடுத்து முன்னேநடந்தால், வடகலிங்கம் கிடுகிடென்னும் - வடகலிங்கதேசம்

கிடுகிடென்று நடுங்கும், அங்கதேசம் குடிவாங்கும்-அங்கதேசம் குடிவாங்கிப் போம், கடல்எழும் உள்வாங்கும் - ஏழுகடல்களும் உள்ளேயிழுத்துக்கொள் ளும், ஒன்னலர்கள் - பகைவருடைய, கோட்டைவாசற்படிவாங்கும் - கோட் டைவாசற்படி தகர்ந்துவிழும், அரசர்மணி முடிவாங்கும் - வேந்தர்களுடைய ரத்நகிரீடங்கள் பொடிபடும், சேடன் முடிபடியும் - ஆதிசேடனுடைய முடி கள் கீழே யழுந்திப்போம்—எ-று. (௧எஎ)

## வண்டோச்சி மருங்கணைதல்.

### விருத்தம்.

சினம்பெரிதாய்மதனைவென்ற திருவாரூர்த்தியாகேசர் திகழு நாட்டில், இனம்பெரிதாமதுகரமே யிவளளகமீதிருத்த லியல்போவே றே, வனம்பெரிதாக்கிடையாதோ விடையொடிந்தாற்பழிசுமக்கு மார் பிற்கொங்கைக், கனம்பெரிதாயிடைசிறிதா யிருந்தாலுங்கொடிக்குக் காய் கனத்திராதே.

இ-ள். சினம்பெரிதாய் - பெருங்கோபங்கொண்டு, மதனைவென்ற-மன் மதனைவென்ற, திருவாரூர் தியாகேசர்—, திகழும்நாட்டில் - விளங்குகின்ற நாட்டில், இனம்பெரிதுஆம் மதுகரமே - பெருங்கூட்டமாகிய வண்டுகளே, இவள் அளகமீது இருத்தல் - இவள்கூந்தலின்மேல் இருப்பது, இயல்போ- உங்களுக்கு அழகோ, வேறேவனம் பெரிதாகிடையாதோ - வேறேபெரிய சோலைகிடையாதோ, இடைஒடிந்தால் -(இவளுடைய) இடைமுறிந்தால், பழி சுமக்கும் - உங்கள்மேல் பழிசுமக்கும், மார்பில் கொங்கைகனம் பெரிதாய் இடைசிறிதாய் இருந்தாலும் - மார்பிலுள்ள தனங்களின் பளுவுபெரிதாகவும் இடைசிறிதாகவும் இருந்தாலும், கொடிக்குக்காய் கனத்திராதே-கொடிக்குக் காய் கனத்திருக்காதல்லவா—எ-று. (௧எஅ)

## தலைவி கார்ப்பருவங்கண்டு புலம்பல்.

ஞானத்தாலிதாண்டுக் கொளிக்கவேத
னளிநத்தாயிரங்கதவு மடைக்கவீசன்
ஆனைத்தோல்போர்த்ததுவு மன்றிக்கையி
லனலேந்திச்சுடலையினின் றாடுங்காலம்
வானத்தாரையும்பனியும் வாடைக்காற்றும்
வருத்தநம்மைப்பிரித்ததெய்வம் வகுத்தகாலம்
சேனைத்தார்சிங்களத்தார் செகத்தார்போற்றுஞ்
சிவந்தெழுந்தபல்லவர்க்கோன் சேராக்காலம்.

இ-ள். ஞானத்தால் - முன்னேயறியுமறிவினால், அரி - திருமால், தூண்புக்குஒளிக்க - தூணிற்புகுந்து ஒளித்துக்கொள்ளவும், வேதன் - பிரமன், நளிநத்து - (தன்வீடாகிய) தாமரைமலரின், ஆயிரம்கதவும் அடைக்க - (இதழ்களாகிய) ஆயிரங்கதவுகளையும் அடைத்துக்கொள்ளவும், ஈசன் - சிவபெருமான், ஆனைத்தோல் போர்த்ததுவும் அன்றி - ஆனைத்தோலைப் போர்வையாகப் போர்த்துக்கொண்டது மல்லாமல், கையில் அனல்ஏந்தி - கையில்நெருப்பையேந்தி, சுடலையில்நின்று ஆடுங்காலம் - மயானத்தில்நின்று நடிக்குங்காலம், வானத்தாரையும் - விண்ணுலகத்தாரையும், பனியும் வாடைக்காற்றும்—, வருத்த - வருத்தாநிற்க, நம்மைப்பிரித்ததெய்வம் - நம்மைப்பிரிவித்தவிதி, வகுத்தகாலம் - வகுக்கப்பட்டகாலம், சீனத்தார் சிங்களத்தார் செகத்தார்போற்றும்-சீனதேசத்தாரும் சிங்களதேசத்தாரும் மற்றுமிவ்வுலகிலுள்ள யாவரும் வணங்குகின்ற, சிவந்தெழுந்த பல்லவர்கோன்—, சேராக்காலம்-நம்மைக் கூடாதகாலம்—எ-று. (௬௯)

கன்றினிதூட்டிக் கறந்ததீம்பாலுங் கலவியின்மகளிரும் பறவை, தின்றதீங்கனியும் வேட்டையின்ஞமலி கறித்திடுகின்றமென்றசையும், ஒன்றையுமெச்சி லெனவிகழ்ந்துரையாருணர்ந்துளோருறுகடன்பொருட்டும், நன்றுடன்வேள்வி வேட்டிடும்பொருட்டும் நனிபொருள்வழங்கனன்றாமால்.

இ-ள். கன்று இனிதுஊட்டி - கன்றை யினிதாகவுண்பித்து, கறந்த தீபாலும் - கறந்துகொண்ட இனியபாலும், கலவியில் மகளிரும் - கலவிக்குடன்பட்டமாதரும், பறவைதின்ற தீங்கனியும் - பறவைகோதின மதுரமான கனிகளும், வேட்டையில்—, ஞமலி கறித்திடுகின்ற மெல்தசையும்-நாய்கடித்த இறைச்சியும், (ஆகிய) ஒன்றையும் - ஒருபொருளையும், உணர்ந்துளோர் - அறிவுடையோர், எச்சில்என இகழ்ந்து உரையார் - எச்சிலென்று அவமதித்துச்சொல்லார், உறுகடன்பொருட்டும் - மிகுந்தகடனுக்காகவும், நன்றுடன்வேள்வி வேட்டிடும்பொருட்டும்-நன்மையோடுகூடிய வேள்விசெய்யும்பொருட்டாகவும், நன்பொருள்வழங்கல் - மிக்கபொருளைக்கொடுத்தல், நன்றுஆம் - நன்மையாகும்—எ-று. (௭0)

## குன்னரங்கன்என்னும் அரசன் இறந்துபோனபோது சுப்ரதீபக்கவிராயர்பாடியது.

தென்னரங்கனரங்கனென்பார் வாய்திறவான்கண்விழியான்றிருநம்பிப்பிரான், என்னரங்கன்றாங்கரங்க னேழையர்பாற்கருணையுடனிரங்காரங்கன், மன்னரங்கன்றமிழ்ப்பெருமான் மழவரங்கனளித்தருளு மைந்தனென, குன்னரங்காவெனக்கிரங்காய் கொண்டுவந்ததமிழ்க்கிரங்கிக் குழைந்தெழாயே.

இ-ள். தென்னரங்கன் - தென்னரங்கனே, அரங்கன் என்பார் - அரங்னென்று சொல்லுவார்கள், (அவன்) வாய் திறவான்—, கண் விழியான்—, திரும்பிப்பாரான்—, என் - என்று சொல்லப்பட்ட, அரங்கன் - அரங்கநாதன், தூங்கு அரங்கன் - நித்திரைசெய்கிற அரங்கன், ஏழையர்பால் - ஏழைகளிடத்தில், கருணையுடன் - கிருபையோடு, இரங்கா ரங்கன் - இரங்காத அரங்கன், (இதுநிற்க) மன்னர் அங்கன் - அரசரையெல்லாம் தனக்கு அங்கமாகவுடையவன், தமிழ்ப்பெருமான் - தமிழ்க்கிறைவன், மழவரங்கன் அளித்தருளும் மைந்தனுன - மழவரங்கன் ஈன்றருளின புதல்வனுகிய, குன்னரங்கா - குன்னரங்கனே, எனக்கு இரங்காய் - எனக்கு இரக்கஞ்செய்யாய், (ஆயினும்) கொண்டுவந்த - நான் பாடிக்கொண்டுவந்த, தமிழ்க்கு இரங்கி - தமிழ்ப் பாடலுக்கிரங்கி, குழைந்து எழாய் - மனங்கரைந்து எழுந்திருப்பாயாக-எ-று.

## இதுவும் அவர்பாடியது.

எண்டிசையும்புகழ்படைத்த குன்னரங்கமகிபாலா வினிமேலிந்த
மண்டலத்தையரசாள வொப்பிலாநின்புதல்வன் மழவன்போதும்
விண்டலத்திலிந்திரனுக் கரசுநிலையில்லாமல் வெகுநாளாக
நண்டளந்தநாழியாக் கிடக்குதந்தவிண்ணுள நடந்திடாயே.

இ-ள். எண் திசையும் - எட்டுத்திக்குகளிலும், புகழ்படைத்த - கீர்த்தியைப்பெற்ற, குன்னரங்கமகிபாலா - குன்னரங்கமகிபாலனே, இனிமேல்—, இந்தமண்டலத்தை - இந்த மண்ணுலகத்தை, அரசு ஆள - அரசாட்சிசெய்ய, ஒப்பிலா நின் புதல்வன் - ஒப்பற்றவுன் புதல்வனுகிய, மழவன்போதும் - மழவரங்கன் அமையும், விண்தலத்தில்—, இந்திரனுக்கு - தேவேந்திரனுக்கு, அரசு நிலையில்லாமல் - அரசாட்சி நிலைத்திராமல், வெகுநாளாக-நெடுநாளாக, நண்டு அளந்த நாழி ஆ - நண்டளந்த நாழியாக, கிடக்குது - கிடக்கின்றது, (ஆதலால்) அந்த விண் ஆள - அந்த விண்ணுலகத்தை யாளும்பொருட்டு, நடந்திடாய் - நடக்கக்கடவாய்—எ-று.

நண்டளந்தநாழி - பழமொழி. (சஅஉ)

## எல்லார்க்கும் நற்சீர்பிருக்க வேண்டுமெனல்.

சிறியராயினோர் சார்பினைவிழையன்மின் றிறல்கெழுபெரியோராம்
அறிஞராயினோர் சார்பினைவிழைமினோ வலரிதழ்விரிகொன்றை
வெறிநறுந்தொடை யெம்பிரான்சார்பினை விழைதலாலுரகங்கள்
மறுவிலாற்றல்சால் கலுழனைவிஞயின வாழ்ந்தனேயோவென்ன.

இ-ள். சிறியராயினோர் சார்பினைவிழையல்மின்-சிறியரானவர்களுடைய சிநேகத்தை விரும்பாதேயுங்கள், திறல் செழு பெரியோராம் - வெற்றி பொருந்திய பெரியோராகிய, அறிஞராயினோர் சார்பினை-அறிஞரது சிநேகத்தை,

விழைழின் - விரும்புங்கள், அலர் - பரந்த, இதழ் விரி - இதழ்கள் விரிந்த, கொன்றை - கொன்றை மலர்களாற் செய்யப்பட்ட, வெறி - வாசனையுள்ள, நறுந்தாடை - நல்லமாலையைத் தரித்த, எம்பிரான் சார்பினை விழைதலால்- சிவபெருமானது சார்பை விரும்புதலால், உரகங்கள் - பாம்புகள், மறு இல்- குற்றமில்லாத, ஆற்றல்சால் - மிக்கவெற்றியுள்ள, கலுழனை - கருடனை, வாழ்ந்தனையோ என்ன - வாழ்ந் திருக்கிறாயோ வென்று, வினயின - கேட்டன எ-று. (சஅங)

திருவாரூர்த் தியாகராயர்பேரில் நிந்தாஸ்துதி.

ஒருமாடுமில்லாமல் மைத்துனருலகமெல்லா முழுதேயுண்டார்
நரைமாடோவொன்றிருக்க வுழுதுண்ணமாட்டாம னஞ்சையுண்டீர்
இருநாழிநெல்லிருக்க விரண்டுமைந்தர்தாமிருக்க விரந்தேயுண்டீர்
திருநாளுமுண்டாச்சே செங்கமலைப்பதிவாழுந் தியாகனாரே.

இ-ள். செங்கமலைப் பதிவாழும் தியாகனாரே - கமலாலயத்தில் வாழ்கின்ற தியாகராயரே, மைத்துனர் - உமக்கு மைத்துனராகிய திருமாலானவர், ஒரு மாடும் இல்லாமல்—, உலகம் எல்லாம் - பூமி முழுமையும், உழுது உண்டார்—, (உமக்கு) நரைமாடோ ஒன்று இருக்க - வெள்ளை மாடு ஒன்றிருக்கவும், உழுது உண்ணமாட்டாமல் நஞ்சை உண்டீர்—, இரு நாழி நெல் இருக்க - (உமது தேவியாரிடத்தில்) இருநாழி நெல்லிருக்க, இரண்டு மைந்தர் தாம் இருக்க - இரண்டு புதல்வ ரிருக்க, இரந்தே உண்டீர் - பிச்சையெடுத்தே உண்டீர், (இப்படிப்பட்ட உமக்கு) திருநாளும் உண்டாச்சே-திருநாளும் உண்டாச்சுதே, (இது உமது அதிஷ்டம்.)—எ-று. (சஅச)

சுப்ரதீபக்கவிராயர் சதுராநநபண்டிதன்மனைவி தமக்குச்செய்த வுபசாரத்தினால் அவளைப் புகழ்ந்து பாடியது.

கலிவிருத்தம்.

நடக்கிலன்னமும் மாநிற்கில்வஞ்சியாம்
கிடக்கிலோவியப் பாவைகிடந்தவா
றடக்கையான்சது ராநநபண்டிதன்
மடத்துளாளென் மனத்துறைவல்லியே.

இ-ள். றடக் கையான் - (ஈகையால்) பெரிய கையினையுடையவனாகிய, சதுராநநபண்டிதன் - சதுராநந பண்டிதனது, மடத்து உள்ளாள் - மடத்தினுள்ளவளாகிய, என்மனத்து உறைவல்லி - என்மனத்திலும் வாழ்கின்றபூங்கொடிபோல்வாள், நடக்கில் அன்னமும் ஆம் - நடந்தால் அன்னத்தையும் போல்வாள், நிற்கில் வஞ்சி ஆம் - நின்றால் வஞ்சிக் கொடிபோல்வாள், கிடக்கில் ஓவியப்பாவை கிடந்த வாறு - கிடந்தால் சித்திரப் பாவை போல்வாள் எ-று. (சஅரு)

இதுவும் அக்கவிராயர்சீனக்கன் அன்னமிட்டதைக்
குறித்துப் புகழ்ந்து பாடியது.

அளிக்கொளுந்தொடை யானரசைக்குமன்
ஒளிக்கொள்சீனக் கனின்றுவந்திட்டசீர்ப்
புளிக்குஞ்சோறுமென் புந்தியிற்செந்தமிழ்
தெளிக்குந்தோறெலாந் தித்தியாநிற்குமே.

இ-ள். அளிகொள்ளும் தொடையான் - வண்டுகள் மொய்க்கின்ற பூமாலையை யணிந்தவனாகிய, அரசைக்குமன் - அரசூருக்கு வேந்தன், ஒளி கொள் சீனக்கன் - புகழைக்கொண்ட சீனக்கன், இன்று - இந்நாள், உவந்து இட்ட - சந்தோஷித்துப் படைத்த, சீர் - சிறப்பாகிய, புளிக்கும் சோறும் - புளிஞ் சோறும், என் புந்தியில் - என்மனத்தில், செந்தமிழ்தெளிக்குந்தோறெலாம் - செந்தமிழை யாராயும்போதெல்லாம், தித்தியா நிற்கும் - மதுரித்துக்கொண்டிருக்கின்றது—எ-று. (சஅ௬)

ஒரு தாசியானவள் தனக்குக்கொடுத்த சுகத்தை
நினைத்து ஒருவித்துவான் பாடியது.

விருத்தம்.

படைத்தமதன் றனையெரித்த பழமலையார் நன்னாட்டிற் பாவை போல்வாள், கடையரிக்கண் ணான்மருட்டி மயல்பூட்டி வரவழைத் துக் கைக்குள்ளாக்கி, இடைதுவள முலைகுலுங்க வெனையணைத்த சுகத்தைநினைத் தேங்கியேங்கி, அடைமழையு முளைவழியும் பொதி யெருது மொருவனும்போ லலைகின்றேனே.

இ-ள். படைத்த - (பிரமனால்) படைக்கப்பட்ட, மதன்தனை எரித்த - மன்மதனை (நெற்றிக்கண்ணால்) எரித்த, பழமலையார் - பழமலை நாதருடைய, நல்நாட்டில் - நல்ல நாட்டின்கணுள்ள, பாவைபோல்வாள் - சித்திரப் பாவை போல்வாள், அரிகடைக் கண்ணால்மருட்டி - (என்னை) வரிபரந்த கடைக்கண்ணினால்மயக்கி, மயல் பூட்டி - மையலேற்றி, வரவழைத்து - தன்னிடத்திற்கு வரவழைத்து, கைக்குள் ஆக்கி - தன்கைவசப்படுத்தி, இடை துவள—, முலை குலுங்க—, என்னை அணைத்த சுகத்தை நினைத்து - என்னைத் தழுவின சுகத்தைநினைந்து, ஏங்கி ஏங்கி - மிகவும் ஏங்கி, அடைமழையும் - விடாமழையும்; உளைவழியும் - சேற்றுவழியும், பொதி எருதும் - பொதிமாடும், (இவற்றோடு கூடின) ஒருவனும் போல் - ஒருவனும்போல, அலைகின்றேன் - மனங்கலங்குகின்றேன்—எ-று. (சஅஎ)

ஜெகந்நாதன் என்னும் சீமான்மீது ஒரு சால்வை
பெற விரும்பிப் பாடியது.

சூல்வைக்கு நெல்வயல்சூழ் சிங்கரிவாழ் செகநாத சுகுணமேன்மைச், சால்வைக்கு மனம்வைத்து மாலயன்சங் கரரையுற்றேன் சலம்பூக்கல்லாம், ஆல்வைக்குஞ் சயநனென்று நூல்வைக்கு மார்பனென்று மசையும்வேழத், தோல்வைக்கு மாகனென்று நாணியவருனைக் காட்டிச் சொன்னார்மன்னே.

இ-ள். சூல் வைக்கும் - கரு முதிர்ந்த, நெல் வயல் சூழ் - நெல் வயல் சூழ்ந்த, சிங்கரிவாழ் - சிங்கேரிநகரத்தில் வாழ்கின்ற, செகநாத சுகுண - ஜெகந்நாதன் என்னுஞ் சுகுணனே, மேன்மை - மேன்மையாகிய, சால்வைக்கு மனம்வைத்து - சால்வையின்மீது மனவிருப்பங்கொண்டு, மால் அயன் சங்கரரை உற்றேன் - திருமால் பிரமன் சிவன் என்பவரை அடைந்தேன், (அவர்கள்முறையே தமக்கு இடம்) சலம் ஆம் என்றும் பூ ஆம் என்றும் கல் ஆம் என்றும் —, பாற்கடல் என்றும் தாமரைமலரென்றும் கைலாயமலையென்றும், ஆல் வைக்கும் சயநன் என்றும் நூல்வைக்கும் மார்பன் என்றும் அசையும் வேழத்தோல்வைக்கும் ஆகன் என்றும் - ஆலிலையே படுக்கையாகக் கொண்டவன் என்றும் நூலையணிந்த மார்பினையுடையவன் என்றும் அசையாநின்ற யானைத்தோலைப்போர்த்த சரீரத்தை யுடையவனென்றும் சொல்லி, நாணி - நாணமடைந்து, அவர் - அம் மூவரும், உன்னைகாட்டிசொன்னார் - (சால்வை கொடுக்கத்தகுந்த பிரபு என்று) உன்னைச் சுட்டிக்காட்டிச் சொன்னார்கள் எ-று. (௪அ௪)

கனவு நலிபுரைத்தல்.

வெண்பா.

எழிலொருகிரியா னேழிலையொன் றணிவான்
எழிலையொன்றீ யெனக்கேட்டான்—எழிலை
ஒன்றீயென்றேனுண்ப தோடென்றானோடென்றேன்
என்று மறிந்தவருக் கே.

இ-ள். எழில் ஒருகிரியான் - எழில் ஒரு மலையை யுடையவன், எழிலை ஒன்று அணிவான் - எழில் ஒருநதியை யணிந்தவன், எழிலை ஒன்று ஈ எனக் கேட்டான் - எழிலையொன்றைக் கொடுவென்று கேட்டான், எழிலைஒன்று ஈ என்றேன் - (நானும் அவனை) எழிலையொன்றைக் கொடுவென்று கேட்டேன், (அவன்) உண்பது ஓடு என்றான் - (நான்) உண்பது ஓட்டிலேயென்றான், என்றும் அறிந்தவருக்கு ஓடு என்றேன் - எக்காலத்தும் அறிவுடையோருக்கு உரியது ஓடுதான் கிடைக்குமென்றேன்—எ-று.

எழிலொருகிரி - கைலைமலை, எழிலே யொன்று - எழுநதிகளி லொன்றாகிய கங்கை, எழிலொன்று-வாரங்களேழிலே ஒன்றாகியசெவ்வாய் (செவந்த அதிரம்), எழிலொன்று - வியாழம் (பொன்.) (சஅகூ)

## ஒருபெண்ணின் அவயவ சௌந்தரியத்தைக்கண்ட ஒருவிடன் தன்தோழனோடு சொல்லியது.

மாரன்படைத்தலைவி மங்கைசிரோமணிபூந்
தாரிலகுமானு டனதெழிலோ—ஏர்பெரிய
துன்னுவிழிநான்மூன்று தாயதனநாலிரண்டு
பன்னிரண்டுசிற்றிடையாம் பார்.

இ-ள். மாரன்படைத்தலைவி - மன்மதன் சேனைக்கிறைவி, மங்கை சிரோமணி - மாதுசிரோமணி, பூந்தார் இலகும்மானுள் தனதுஎழிலோ-பூமாலையையணிந்து விளங்குகின்ற பெண்மான் போல்வாளது அவயவங்களின் அழகைச் சொல்லவேண்டு மென்றாலோ, (அவை) ஏர்பெரிய - அழகினுற் சிறந்தனவாயிருக்கின்றன, (எப்படியென்றால்) துன்னுவிழிநான்மூன்று-பொருந்தின விழி ஏழு, தாயதனம் நாலிரண்டு - பரிசுத்தமான தனங்கள் ஆறு, சிற்றிடை பன்னிரண்டுஆம் - சிறியஇடை பன்னிரண்டாகும், பார்-நீநோக்கு எ-று. (சகூ0)

ஒருகன்னிக்குவிழி மீனம், தனம் கும்பம், சிற்றிடை சிங்கம் என்பதாம்.

## பாலனைப்பழித்தல்.

கச்சிருக்கும்போது கரும்பானேன்கைக்குழந்தை
வச்சிருக்கும்போது மருந்தானேன்—நச்சிருக்கும்
கண்ணார்கரும்பானுர் காணவும்நான்வேம்பானேன்
அண்ணுமலையர சுக்கு.

இ-ள். அண்ணமலை அரசுக்கு - அண்ணமலையாசனுக்கு, கச்சுஇருக்கும் போது கரும்பு ஆனேன் - கச்சணிந் திருக்கும்போது கரும்பாயிருந்தேன், கைக்குழந்தை வைச்சிருக்கும்போது மருந்து ஆனேன் - கைக்குழந்தையை வைத்துக்கொண் டிருக்கும்போது மருந்தாய்விட்டேன், நச்சு இருக்கும் கண்ணார் கரும்புஆனுர் - நஞ்சுகுடிகொண்டிருக்கிற கண்களையுடைய வேசியர் கரும்பானுர், நான்காணவும் வேம்புஆனேன் - நான்பார்ப்பதற்கும் வேம்பாயினேன், (என்செய்வேன், இப்பாலனுல் எனக்கிந்தத் துன்பம் நேரிட்டது) எ-று. (சகூக)

## நீருக்கும் நாலுக்கும் சிலேடை.

### திருவாவடுதுறை சாமிநாதக்கவிராயர் பாடியது.

வெள்ளைநிறத்தாற்செயற்கை மேவியேவேறுநிறம்
கொள்ளலாற்றேய்க்குங் குறியினால்—வள்ளலென
வாழ்சந்திரசேகரக் கவிஞன்மால்வரையில்
ஆள்நீருநாலுநிக ராம்.

இ-ள். வெள்ளைநிறத்தால் - வெண்ணிறத்தாலும், செயற்கைமேவிவேறுநிறம்கொள்ளலால் - செயற்கையையடைந்து வேறுநிறத்தைக் கொள்ளுதலாலும், தோய்க்கும் குறியினால் - தோய்க்கின்ற அடையாளத்தினாலும், வள்ளலென - வள்ளல்போல, வாழ் - வாழ்கின்ற, சந்திரசேகரக் கவிஞன் மால்வரையில் - சந்திரசேகரக்கவிஞனது பெரியமலையில், ஆழ்நீரும் நாலும் நிகர் ஆம் - ஆழ்ந்தநீரும்நூலும் நிகராகும்—எ-று.

நீர்நூல் இரண்டும் - இயற்கையால் வெண்ணிறம், செயற்கையால்வேறுநிறம், ஆடைதோய்த்தல் சாயந்தோய்த்தல், என்றுபொருள்கொள்க. (சகஉ)

### திருவாவடுதுறை - சுப்பிரமணியதேசிகர்மீது, வித்வான், மீநாக்ஷி சுந்தரம்பிள்ளை பாடியது.

#### விருத்தம்.

உரவுபொலிமறைமுடிவாஞ் சிவக்கொழுந்தைப்பராநந்தத் துவாவைநாளும், கரவுதவிரன்பருளத் தகலாமலமுதூற்றுங் கருணைவாழ்வை, புரவுமலிமெய்ஞ்ஞான வாரிதியைத்துறவரசைப் பொருவிலாத, பரவுபுகழ்த்துறைசையிற் சுப்பிரமணியகுருமணியைப் பரவிவாழ்வாம்.

இ-ள். உரவு பொலிமறை முடிவு ஆம் சிவக்கொழுந்தை - நிலைபெற்று விளங்குகின்ற வேதாந்தத்தில் வீற்றிருக்கின்ற சிவக்கொழுந்தை, பராநந்தத் துவாவை - பேரின்பமாகிய பூர்ணசந்திரனை, நாளும் கரவுதவிர் அன்பர் உள்ளத்து அகலாமல் அமுதுஊற்றும் கருணைவாழ்வை - நாள்தோறும் வஞ்சநீங்கிய அன்பர் மனத்தினின்று நீங்காமல் அமுதஞ் சுரக்கின்ற கருணைச்செல்வத்தை, புரவுமலிமெய்ஞ்ஞான வாரிதியை - காக்குந் தொழிலிற்சிறந்த மெய்ஞ்ஞானக்கடலை, துறவு அரசை - துறவிகளுக்கு வேந்தனை, பொருவு இலாத - ஒப்பில்லாத, பரவுபுகழ் - யாவருந் துதித்தற்குரிய புகழையுடைய, துறைசையில் சுப்பிரமணியகுருமணியை - துறைசையில் வாழ்கின்ற சுப்பிரமணிய குருரத்நத்தை, பரவி - துதித்து, வாழ்வாம் - வாழக்கடவோம் (யாம்)—எ-று. ()

திருமணியைநிறத்தமைத்த நீன்மணிமெய்ம்மால்பிரமன், றேடிக்காணா, அருமணியென்னையும்பொருளா வாண்டசிந்தாமணியன்பரகத்தேமேய, ஒருமணியம்பலவாண சிரோமணிகண்மணியடிமை யுவந்தார்கண்ணுட், கருமணிவண்டுறைசையிற் சுப்பிரமணிய குருமணியைக் கருத்துள்வைப்பாம்.

இ-ள். திருமணியை நிறத்து அமைத்த - திருமகளாகிய பொன்மணியைத் திருமார்பி லமைத்துக்கொண்ட, நீல்மணிமெய் - நீலரத்நம் போன்ற திருமேனியை யுடைய, மால் - திருமாலும், பிரமன் - பிரமனும், தேடிகாணா அருமணி - தேடிக்காண வொண்ணாதிருந்த அருமையாகிய மணி, என்னையும் பொருளா ஆண்ட சிந்தாமணி - என்னையும் ஒருபொருளாகக் கொண்டாண்டருளின சிந்தாமணி, அன்பர் அகத்தேமேய ஒருமணி - அன்பர்மனத்திற்பொருந்திய ஒப்பற்றமணி, அம்பலவாண சிரோமணி கண்மணி - அம்பலவாண சிரோமணிக்குக் கண்மணி, அடிமை உவந்தார் கண்ணுள்கருமணி-தன் திருத்தொண்டை விரும்பினோர்களுடைய கண்ணிற்கருமணி, வள் துறைசையில் - வளவிய துறைசையில் வாழ்கின்ற, சுப்பிரமணிய குருமணியை-சுப்பிரமணியனென்னும் குருரத்நத்தை, கருத்துள்வைப்பாம் - எமதுமனச்செப்பில் பொதிந்துவைப்போம்—எ-று. (சகசு)

### திருவாவடுதுறை யாதீனவித்வான், தாண்டவராய சுவாமிகள் இயற்றியது.

#### விருத்தம்.

தருநாணுட்கொள்ளவருஞ் சற்குருமாமணியேயென் றாயேயுன்றன், மருநாண்மட்டலாகமல மலரடிகள்வந்திக்க வருநன்னாளே, திருநாள்வந்திக்கவராச் சிறுநாளேகரிநாளென் செய்கேனந்தோ, ஒருநாளுநினைமறவேன் விரைவினில்வந்துன்சேவை யுளங்கொள்வேனே.

இ-ள். தரு - கற்பகதருவும், நாண் உள்கொள்ள - நாணத்தை மனத்திற்கொள்ளும்படி, வரும் - வந்த, சற்குருமாமணியே - சற்குருவாகிய பெரிய மணியே, என்தாயே—, உன்றன் - உன்னுடைய, மரு - வாசனைபொருந்திய, நாள் - புதிய, மட்டு - தேனோடுகூடிய, அலர் - மலர்ந்த, கமலமலர் - தாமரை மலர்போன்ற, அடிகள் - திருவடிகளை, வந்திக்கவரும் - துதிக்கவருகின்ற, நல் நாளே - நல்லநாளே, திருநாள் - திருநாளாம், வந்திக்கவரா சிறுநாளே - வந்திக்கவராத சிறுநாளே, கரிநாள் - கரிநாளாகும், என்செய்கேன் - என்செய்வேன், அந்தோ-ஐயோ, ஒருநாளும் நினைமறவேன்—, விரைவினில் வந்து—,

உன்சேவை - உன்தரிசநத்தை, உளம்கொள்வேன் - மனத்துக்கொள்வேன் எ-று. (சஙரு)

தெள்ளியசெந்தமிழ்க்கடலைக் குறுமுனிவற்கெதிராகச் செவியா லுண்ட, எள்ளலிலாமுனிவர்குழா மலிதுறைசைப்பதியதனிலெவரும் போற்றும், வள்ளலெனத்திருவுருவா யெளியன்மனத்தருவாகி வதி யும்பிள்ளை, வெள்ளைமதிகரந்தருள்சுப் பிரமணியபிரானடியை வே ண்டுவேனே.

இ-ள். தெள்ளிய செந்தமிழ்கடலை - தெளிந்த செந்தமிழ்க் கடலை, குறுமுனிவற்கு எதிராக - அகஸ்தியமுனிவனுக்கு நிகராக, செவியால்உண்ட-செவியினாலுண்ட, எள்ளல்இலாமுனிவர்குழாம் - இகழ்ச்சியற்ற முனிவர் கூட்டங்கள், மலி - மிக்குவிளங்குதற்கிடமாகிய, துறைசைப்பதியதனில் - துறைசைப்பதியில், எவரும்போற்றும் - யாவரும் வணங்குகின்ற, வள்ளல்என-வள்ளல்போல, திருவுருவாய் - திருவுருக்கொண்டு, எளியன்மனத்து அருவாகி வதியும் - எளியேன்மனத்தில் அருவாகிவாழ்கின்ற, வெள்ளை - வெண்ணிறம் பொருந்திய, பிள்ளைமதி - பாலசந்திரனை, கரந்தருள் - மறைத்தருளின, சுப்பிரமணியபிரான் அடியை—, வேண்டுவேன் - விரும்புவேன்—எ-று. (சஙசு)

## ஊனுண்போருக்கஞ்சி விலங்குமுதலியவும் பலவிடங்களில் ஓடி யொளித்தனவென்று பாடியது.

தேனோடுமூனுண்ணு மானிடர்க்கஞ்சிச் சிவன்கரத்தில்
மானோடிப்புக்க தயங்கோழியோடின மைந்தனிடம்
மீனோடிப்புக்கன விண்ணினுஞ்சிந்தினும் வெவ்விலங்கும்
வானோடியேபல ராசிகளாயுயிர் வாழ்ந்தனவே.

இ-ள். தேனோடும் ஊன்உண்ணும் - மதுவோடும் மாமிசத்தையுமுண்ணுகின்ற, மானிடர்க்கு அஞ்சி - மனிதருக்கஞ்சி, மான் ஓடி—, சிவன்கரத்தில் புக்கது - சிவன்கையில் பிரவேசித்தது, அயம்கோழி - ஆடும்கோழியும், மைந்தனிடம்ஓடின - (அவன்) புதல்வனாகிய முருகனிடம் ஓடின, மீன்-மச்சங்கள், ஓடி - ஓடி, விண்ணினும் சிந்தினும் - ஆகாயத்திலும் கடலிலும், புக்கன - பிரவேசித்தன, வெவ்விலங்கும் - கொடிய விலங்குகளும், வான் ஓடி - ஆகாயத்தில் ஓடி, பலராசிகளாய் - பலராசிகளாகி, உயிர் வாழ்ந்தன - உயிர் பிழைத்திருக்கின்றன—எ-று. (சஙஎ)

## வேதியர் தீயொழுக்கம்.

ஆரணவாயினர்ழா டாடுகளையறுத்தவித்துப்
பாரணஞ்செய்யப்பழகிக் கொண்டார்மதுபானத்திலும்

பூரணராயின ரின்னவர்க்கிந்தத் துர்ப்புத்திதந்த
காரணங்கண்டயற் கோர்சிரங்கொய்தனன் கண்ணுதலே.

இ-ள். ஆரணவாயினர் - வேதவாயினராகிய பிராமணர், மாடு ஆடுகளை அறுத்து - மாட்டையும் ஆட்டையும் அருத்து, அவித்து - வேவித்து, பாரணம்செய்ய - உண்ண, பழகிக் கொண்டார் - பழக்கஞ் செய்துக் கொண்டார்கள், மது பானத்திலும் - மதுவைக் குடித்தலிலும், பூரணர் ஆயினர் - நிறைந்தவரானார்கள், இன்னவர்க்கு - இவர்களுக்கு, இந்த துர்ப்புத்திதந்த - இந்தக் கெட்டபுத்தியையுண்டாக்கின, காரணம் கண்டு - காரணத்தைநோக்கி, கண்ணுதல் - பரமசிவன், அயற்கு - பிரமதேவனுக்கு, ஓர்சிரம் கொய்தனன்-ஒரு தலையை அறுத்துவிட்டான்—எ-று.

பாரணம் செய்தல் - உபவாசமிருந்துண்ணல் எனினுமாம், மது - கள், சாராயம் எனினுமாம். (சஆஅ)

## பரத்தையர்க்கும் சிவபெருமானுக்கும் சிலேடை.

வரைவின்மாதராயிருத்த லாற்பதியிலாமாண்பால்
குரைகடற்புவிமாந்தர் செய்வினைத்திறங்குறித்துக்
கரைசெய்போகமங் குறுத்தலாற்கடையின்மங்கலத்தால்
உரைசெய்வேசைய ரரனெனற்கையமுமுளதோ.

### இதன்பொருள்.

பரத்தையர்—, வரைவு இல்மாதராயிருத்தலால் - கலியாணமில்லாத பெண்களாயிருத்தலால்,
பதி இலா மாண்பால் - கணவன் இன்னானென்றில்லாத மாட்சிமையால்,
குரைகடல் புவிமாந்தர் செய்வினைத்திறம்குறித்துகரைசெய் போகம் அங்கு உறுத்தலால் - ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த வுலகத்திலுள்ள ஆடவர்செய்யும்கொடைச்செயலுக்கேற்க அவர்களுக்கு வரையறை செய்யப்பட்ட போக சுகத்தைத் தருதலால்,
கடையில் மங்கலத்தால் - அமங்கலைகளாகாமையால்,

சிவபெருமான்—, வரைமாதர் இல்லாயிருத்தலால் - பர்வதராஜ குமாரி மனைவியாயிருத்தலால்,
பதி இலாமாண்பால் - தனக்கு நாயகனில்லாத பெருமையால்,

மாந்தர் செய் வினைத்திறம் குறித்து கரை செப் போக மங்குறுத்தலால் - மக்கள் செய்யும் வினைக் கூற்றிற் கிணங்க வரையறுத்த போகத்தைக் கொடுத்தலால்,
கடையில்மங்கலத்தால் - முடிவுபெறாத மங்கலகுணங்களை யுடைமையால்,
உரைசெய்வேசையர் - சொல்லப்பட்ட வேசையர், அரன் எனற்கு - சிவனென்றுசொல்லுவதற்கு, ஐயமும் உளதோ - சந்தேகமும் உண்டோ—எ-று. (சகூகூ)

மதுரைச் சம்பந்தசுவாமி மடத்துத் தம்பிரான் இராமநாதபுரம்

பொன்னுசாமிதேவற்மேற் பாடியது.

காரார்முகிலை மயிலினநோக்கிடுங் காதலித்தே
ஏரார்சகோர மதியினைநாடிடு மேயமுல்லைத்
தாரார்புயப்பொன்னுச் சாமிமகிபநின் சால்பிலகு
சீரார்வசனச் சுவைநோக்கிடுமென் சிரவணமே.

இ-ள். ஏய முல்லைதார் ஆர்புயம் - பொருந்திய முல்லைமலர் மாலையை யணிந்த தோள்களையுடைய, பொன்னுச் சாமி மகிப - பொன்னுச் சாமிமகிபனே, மயிலினம் - மயிற்கூட்டம், கார் ஆர் முகிலை நோக்கிடும் - கார்கால மேகத்தை நோக்கிடும், ஏர் ஆர் சகோரம் - அழகு நிறைந்த சகோரப் பறவை, மதியினை - சந்திரனை, காதலித்து நாடிடும் - விரும்பி நோக்கும், என் சிரவணம் - என்செவிகள், சால்பு இலகு - சால்போடுகூடிவிளங்குகின்ற, சீர் ஆர் - சிறப்புப்பொருந்திய, நின்வசனச் சுவை நோக்கிடும் - உன் சொற் சுவையை நோக்கிடும்—எ-று.

பாங்கிவிடுதூது.

பண்டுமைக்கோர்பால்கொடுத்த பண்பனைக்கோடீச்சுரத்துக்
கண்டுமையல்கொண்டவன்றாள் கண்ணுற்றாய்—ஒண்டொடியாய்
வந்திநின்றார்வந்தரக்கேண் மாலையெங்கண்மாதினுக்குத்
தந்திநின்றார்தந்திடென்று தான்.

இ-ள். ஆய் - ஆராய்ந்த, ஒள் தொடியாய் - ஒள்ளிய வளையலை யணிந்தவளே, பண்டு - முற்காலத்தில், உமைக்கு - உமா தேவிக்கு, ஓர் பால் கொடுத்த - ஒருபாகத்தைக் கொடுத்த, பண்பனை - அருட்குணமுடைய சிவபெருமானை, கோடீச்சுரத்து கண்டு - கோடீச் சுரத்தில் தரிசித்து, மையல் கொண்டு - விருப்பங்கொண்டு, அவன்றாள் கண்ணுற்று நின்று - அவன் திருவடிக் கண்ணே நின்று, எங்கள் மாதினுக்கு - எங்கள்பெண்ணுக்கு, மாலைதந்தி

காம மயக்கத்தைத் தந்தாய், நின் தார் தந்திடு என்று - உன் மாலையைத் தா வென்று, ஆர்வம் தாக்கேள் - ஆசையோடு கேட்பாயாக—எ-று. (ருOக)

வாக்குமனமு மெட்டாப்பரமேசர் வலியநம்மைக்
காக்கும்வணங்கங் கணங்கட்டிக்கொண்டனர் காய்ந்துநமைத்
தாக்கும்படியணு காதினிமாயைச் சனியனிதம்
பாக்கும்பணமும் வைத்தேயழைத்தாலும் படியகத்தே.

(இ-ள். வாக்கும் மனமும் எட்டா - வாக்கு மனங்களுக் கெட்டாத, பரமேசர் - பரமேசுவரர், வலிய - வலாத்காரமாய், நம்மை காக்கும் வணம் - நம்மைக்காக்கும்படி, கங்கணம் கட்டிக் கொண்டனர்—, இனி - இனிமேல், மாயைச்சனியன் - மாயையாகிய சனியன், படியகத்தே - உலகத்தில், பாக்கும் பணமும் வைத்து அழைத்தாலும்—, நிதம் - நாள்தோறும், காய்ந்து நம்மை தாக்கும்படி அணுகாது - கோவித்து நம்மை யெதிர்க்கும்பொருட்டு நெருங்காது—எ-று. (ருOஉ)

ஒரு சிமான் தனது நிலைமாறி வறியனான காலத்தில் பாடியது.

தண்டுகொண்டோட்டினும் போகாதுநம்மைத் தரிசிக்கவே
பண்டுவந்தோர்க்கின்று தாம்பூலம்வைத்துப் பரிந்தழைத்தும்
திண்டுமிண்டுஞ்சொல்லி வாராதொழிந்தனர் செய்கையெல்லாம்
கண்டுகொண்டோமினித் தொண்டுகொண்டோநங் கடவுளுக்கே.

(இ-ள். பண்டு - முற்காலத்தில், தண்டு கொண்டு ஒட்டினும் - தடியாயாலடித்துத் துரத்தினாலும், போகாது - போகாமல், நம்மை தரிசிக்க வந்தோர்க்கு - நம்மைத் தரிசநம் பண்ண வந்தவர்களுக்கு, இன்று - இந்நாளில், தாம்பூலம்வைத்து—, பரிந்து அழைத்தும் - விரும்பியழைத்தாலும், திண்டும் மிண்டும்சொல்லி - சாக்கும் போக்கும் சொல்லி, வாராது ஒழிந்தனர் - வாராதொழிந்தார்கள், செய்கையெல்லாம் கண்டுகொண்டோம் - (உலகத்தின்பொய்ச்) செயல்களெல்லாம்கண்டுகொண்டோம், இனி நம் கடவுளுக்குத்தொண்டு கொண்டோம் - இனி நமதுகடவுளின் திருத்தொண்டு பூண்டுகொண்டோம் எ-று. (ருOரு)

ஒருவன் தன் உத்தியோக மிழந்தபோது பாடியது.

வீடுநிலங்கள் பசுக்கள்விற்பாருண்டு மேதினியில்
நீடுமெண்சாண்மெய்யை யோர்சாணுதர நிமித்தம்விற்று
நாடுமரசர்க் கடிமையென்றேமுன்பு நாங்கொடுத்த
ஏடுகிழிபட்ட தந்தோவுத்தியோக மிழந்ததுவே.

இ-ள். வீடுநிலங்கள் பசுக்கள் விற்பார் உண்டு—, மேதினியில் - உலகத்தில், நீடும் எண்சாண்மெய்யை நீண்ட எட்டுச்சாணளவுகொண்ட சரீரத்தை, ஓர் சாண் உதரநிமித்தம் விற்று - ஒருசாணளவுகொண்டவயிற்றின்பொருட்டு விற்று, நாடும் அரசர்க்கு அடிமையென்று - (குற்றங்களைத்) தேடிக்கொண்டிருக்கும் அரசருக்கு, அடிமையென்று—, முன்பு நாம் கொடுத்த - முன்னே நாம் எழுதிக்கொடுத்த, ஏடு கிழிபட்டது—, அந்தோ - ஐயோ, உத்தியோகம் இழந்தது - உத்தியோகமும் இழக்கப்பட்டது—எ-று. (௫௦௪)

## இதுவுமது.

தோமிருந்ததொழிலொன்றே தொலைந்ததன்றியறிவொழுக்கஞ் சுகுணமோடு, நாமிருந்தோமுரையாட நாவுமிருந்ததுபழையநட்பி னோரும், தாமிருந்தாரவர்நடக்கத்தாளுமிருந்தனவேதுந்தடையொன் றின்றித், தேமிருந்தநம்மனைதான் றிறந்திருந்ததவர்வாராச்செய்கை யென்னே.

இ-ள். தோம் இருந்த - குற்றம் தங்கின, தொழில் ஒன்றே தொலைந்ததன்றி - உத்தியோகமொன்றுமாத்திரமே நீங்கிவிட்டதல்லது, அறிவு ஒழுக்கம் சுகுணமோடும்-அறிவொழுக்கம் நற்குணங்களோடு, நாம் இருந்தோம்—, உரையாட - வார்த்தை சொல்ல, நாவும் இருந்தது—, பழைய நட்பினோரும் தாம் இருந்தார் - பழமையாகிய சிநேகர்களும் இருந்தார்கள், அவர் நடக்க-அவர்நடந்துவர, தாளும் இருந்தன - கால்களும் இருந்தன, ஏதும் தடையொன்று இன்றி - யாதொருவகையான தடைகள் சிறிதுமில்லாமல், தேம் இருந்த - நமக்கிடமாயிருக்கிற, நம்மனை தான் திறந்து இருந்தது - நமதுவீடுந் திறந்திருக்கின்றது, (இப்படிக்கெல்லாமிருக்க) அவர் வாரா செய்கை என்னே - அந்த நட்பினர்வாராமைக்குக் காரணமென்னே—எ-று. (௫௦௫)

## ஆற்றாத் தலைவியைப் பாங்கி யாற்றுவிற்றல்.

பொருதுவட்டாடுஞ் சிரூர்வீதியைந்நதிப் புண்ணியன்முன்
ஒருதுவட்டாமகற் செற்றோன்பணிபர னுற்றிடுவான்
கருதுவட்டாவெனுஞ் சொல்லாய்பொறுத்துக் கணப்பொழுதிங்
கிருதுவட்டாமல் விடுமோமதன னிருங்கணையே.

இ-ள். பொருதுவட்டு ஆடும் - போர்செய்துவட்டாடுகின்ற, சீரூர்வீதி-இளைஞர்நிறைந்த வீதிகளையுடைய, ஐந்நதிபுண்ணியன் - பஞ்சநதம் (திருவையாறு) என்னும்திருப்பதியில் எழுந்தருளின தருமரூபி, முன்-முற்காலத்தில், ஒருதுவட்டாமகன் செற்றோன் பணியரன்-ஒப்பற்றதுவட்டாமகனாகியராவணனைக்கொன்றவனாகிய திருமால்வணங்குகின்ற மேலோன், உற்றிடுவான் - அ

டைந்திடுவான், கருது-யாவரும் விரும்புகின்ற, அட்டா என்னும்சொல்லாய் வெல்லமா என்று சொல்லுதற்குரிய இன்சொல்லையுடையவளே, கணப்பொழு துபொறுத்து இங்கிரு - க்ஷணகாலம் பொறுத்துக்கொண்டு இங்கேயிரு மதனன் - மன்மதனது, இருங்கணே - பெருமையமைந்தபாணங்கள்; துவட் டாமல்விடுமோ - நம்மைவாட்டாமல்விடுமோ—எ-று. (ருOசு)

தாய்க்கூற்று.

இளந்தென்றலைவட வானலமென்னு மெழின்மதன்கா
களந்தென்றலைநமன் காணெனவேங்குங் கடலகடு
பிளந்தென்றலையென் றொழித்திடுவானெனும் பேதையிவ்வா
றளந்தென்றலையி லெழுத்தெனுங்கூழை யரும்பொருளே.

இ-ள். இளந்தென்றலை வடவானலம்என்னும் - இளந்தென்றற்காற்றை வடவைத்தீயென்பாள், எழில்மதன் காகளம் - அழகிய மன்மதனது காகள மாகியகுயில், தென்தலை நமன்என எங்கும் - தென்றிசையிலுள்ள யமனே யாமென்று இரங்குவாள், கடல் அகடுபிளந்து - கடலின் வயிற்றைப் பிளந்து கொண்டு, என்று - சூரியனானவன், அல்லை - இருட்டை, என்று ஒழித்திடு வான் என்னும் - என்றுநீக்குவான் என்பாள், பேதை - பேதைப்பருவத்தை யுடைய என்பெண், இவ்வாறு - இந்தப்பிரகாரம், கூழை அரும்பொருள் அளந்து என் தலையில் எழுத்து என்னும் - முடிவான அரும்பொருள் என்னெனில் அளந்து என் தலையில் எழுதப்பட்ட எழுத்தேயாகும் என்பாள்—எ-று.()

இன்னதற் கின்னதழகென்றும் மூக்குத்தூளைச்

சிறப்பித்துப் பாடியது.

ஊசிக்கழகு முனைமழுங்காமை யுயர்ந்தபர
தேசிக்கழகிந் திரியமடக்க றிரண்முலைசேர்
வேசிக்கழகின் னிசைபலநூல்கற்ற வித்வசனர்
நாசிக்கழகு பொடியெனக்கூறுவர் நாவலரே.

இ-ள். ஊசிக்கு அழகு - ஊசிக்கு அழகாவது, முனைமழுங்காமை-முனை மழுங்காதிருத்தல், உயர்ந்த பரதேசிக்குஅழகு - உயர்ந்தசந்நியாசிக் கழகா வது, இந்திரியம் அடக்கல் - இந்திரியங்களை அடக்கியாளுதல், திரள்முலை சேர் வேசிக்குஅழகு - திரண்ட முலையினையுடைய வேசைக்கு அழகாவது, இன்இசை - இனிய இசைநூலில் வல்லவளாயிருத்தல், பலநூல்கற்ற வித்வ சனர் நாசிக்குஅழகு - பலநூல்களைக்கற்ற வித்வான்களுடைய நாசிக்கு அழ காவது, பொடிஎன - பொடியென்று, நாவலர் கூறுவர் - புலவர்கள் சொல் வார்கள்—எ-று. (ருOஎ)

துரிசுந்தரியலர் நேராஞ்சனனமுந் துன்மதியாம்
பரிசுந்தரிய லகமேநல்லூரிற் படர்செருக்காங்
கரிசுந்தரியலரோனுக்கெட்டாதமுக்கண்ணன்மகிழ்
கிரிசுந்தரியலங் காரியைப்போற்றுதி கேடறவே.

இ-ள். அகமே - மனமே, துரிசும் - பலவகைக்குற்றங்களையும், தரியலர்
நேர்ஆம்சனனமும் - பகைவருக்குநிகராகிய பிறவியையும், துன்மதிஆம் பரி
சும் - துர்ப்புத்தியாந்தன்மையையும், தரியல் - அடையாதே, நல்ஊரில்-நல்
லூரில், படர்செருக்குஆம்கரிசுஉந்து - மிக்கசெருக்காகிய குற்றம்மிகுந்த, அரி
அலரோனுக்கு - அரிபிரமர்களுக்கு, எட்டாத - எட்டவொண்ணாத, முக்கண்
ணன்மகிழ் - சிவபெருமான் மகிழ்தற்கேதுவாகிய, கிரிசுந்தரி அலங்காரியை-
பர்வதராஜகுமாரியாகிய கட்டழகியை, கேடுஅற - நமது கெடுதிகளெல்லா
மொழியும்படி, போற்றுதி - வணங்குவாயாக—எ-று. (ருOகூ)

தலைவியின்பிரிவாற்றாத ஒருதலைமகன்சொல்லியது.

விடவாளைவென்ற விழியாளைப்பூமியின் மேலதிர
நடவாளைப்பெண்கட னாயகமாமொரு நாயகத்தை
மடவாளையென்னுள் வதிவாளையின்ப மருவவென்சொற்
கடவாளையென்றெய்வ மேயென்றுபோயினிக் காண்பதுவே.

இ-ள். என்தெய்வமே - என்தெய்வமே, விடம்வாளை வென்றவிழி
யாளை - விடந்தோய்ந்த வாளைவென்ற கண்களையுடையவளை, பூமியின்மேல்
அதிரநடவாளை - பூமியின்மீது அப்பூமியதிரும்படி நடவாதவளை, பெண்கள்
தம்நாயகம்ஆம் ஒருநாயகத்தை-பெண்களுக்குத்தலைவியாகிய ஒரு பெண்ணர
சியை, மடவாளை - மடப்பத்தையுடையவளை, என்உள்வதிவாளை - என்மனத்
தின்கண்வாழ்பவளை, இன்பம்மருவ என்சொல்கடவாளை - இன்பம் பொருந்
தும்படி என்சொல்லைக்கடவாதவளை, இனிபோய் காண்பதுஎன்று - இனி
நான்போய்க்காண்பது எந்நாள்—எ-று. (ருசO)

ஒருவித்துவான் தனதுநோயைந்தீர்த்த ஈசன்என்னும்
வைத்தியன்மீது பாடியது.

வெண்பா.

தேசப்புகழுந் திருநெல்லையில்வாழும்
ஈசனைநம்மீசனுக்கொப் பென்னலாம்—ஈசன்
பிறவாமற்காப்பான் பிறந்தாரைநாளும்
இறவாமற்காப்பா னிவன்.

ஞ-ள். தேசம்புகழும் - உலகம் புகழ்தற்குரிய, திருநெல்வேலியில்வாழும்-திருநெல்வேலியில் வாழ்கின்ற, ஈசனை - ஈசனென்னும் வைத்தியனை, நம்மீசனுக்கு ஒப்புஎன்னலாம் - நம்மீசனுக்கு நிகராகச் சொல்லலாம், ஈசன் - ஈச்சுரன், பிறவாமல் காப்பான் - பிறவாமல் காத்தருளுவான், இவன்—, பிறந்தாரை - பிறந்தவரை, நாளும் - எந்நாளும், இறவாமல் காப்பான் - இறவாமல் காத்தருளுவான்—எ-று. (ருகக)

ஒருவித்துவான், தனக்குக் கடுக்கன்செய்துகொடுத்த
முத்துக்குமாரபத்தன்என்னும் தட்டான்
மீதில் பாடியது.

மொய்வேலைசூழுலகின் முத்துக்குமாரபத்தன்
கைவேலைபோல்நாங் கண்டதில்லை—அவ்வேலை
செய்யுமவற்குத் திறல்விச்சுவகருமன்
கையும்பொழியும்பொன் காண்.

இ-ள். மொய் - வலியுள்ள, வேலைசூழ் - கடல்சூழ்ந்த, உலகில் - உலகத்தில், முத்துக்குமாரபத்தன்—, கைவேலைபோல - கையினாற்செய்யும் வேலைபோல, நாம்கண்டதுஇல்லை-நாம் பார்த்ததில்லை, அவ்வேலைசெய்யும்அவற்கு-அப்படிப்பட்ட மேலான வேலைசெய்கிற அம்முத்துக்குமார பத்தனுக்கு, திறல் - பணிசெய்வதில் சிறந்த, விச்சுவகருமன்கையும் - விசுவகர்மனது கையும், பொன்பொழியும் - பொன்னைச்சொரியும்—எ-று. (ருகஉ)

## வெறிவிலக்கல்.

துறைசை-அம்பலவாண சுவாமிகள்மேல்
ஒருவித்வான் பாடியது.

இந்தவசமந்தவசந் தன்மலைதற்கேதுசெய்யும்
நொந்தவசமுற்றாட்கே நோக்குங்கால்—பைந்தொடியாய்
ஆண்டகுருத்தென்றுறைசை யம்பலவாணன்புயத்தில்
பூண்டநிறச்செங்கழுநீர்ப் பூ.

இ-ள். பைந்தொடி - பசும்பொன்வளையலை யுடையாளே, நொந்து அவசம்உற்றாட்கு - மனமெய்கள்வருந்திப்பாவசப்பட்ட நம்பெண்ணுக்கு, அந்தவசந்தன்மலைதற்கு - அந்தமன்மதன் போர்செய்வதனாலுண்டாகுந் துன்பத்துக்கு, இந்த அசம் - இந்தஆடானது, ஏதுசெய்யும் - யாதுபயனைத்தரும், (தாராதுஆதலால்) நோக்கும்கால் - நோக்குமிடத்தில், ஆண்ட - எம்மையாண்டருளின, குரு - சற்குருவாகிய, தென் துறைசை - தென்றுறைசையில் வாழ்கின்ற, அம்பல வாணன் - அம்பலவாணனது, புயத்தில் பூண்ட - தோளி

விணிந்த, நிறம் - ஒளியுள்ள, செங்கழு நீர்ப் பூ - செங்கழுநீர் மலர் மாலையை, ஆய் - தேடுவாயாக—எ-று. (ருகஉ)

திரிசிரபுரம் - வித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை பாடிய கவி.

செல்லார்க்கும்பெருமுழக்க மணமுழக்கமென்மேற்போய்த் திக ழ்மாடத்தால், சொல்லார்க்குங்கழனிகளாற் றொலையாதவளங்காட்டுந் துறைசைமேவிக், கல்லார்க்குமல்லார்க்கும் வல்லார்க்கும்வல்லார்க்குங் கணக்கிலாமற், றெல்லார்க்குமொப்பில்வைப்பாஞ் சுப்பிரமண்ணிய குரவ னிருதாள்போற்றி.

இ-ள். மணமுழக்கம் - மணமுழக்கமானது, செல் ஆர்க்கும் பெருமுழக் கம் என - மேக மொலிக்கின்ற பெரிய வொலி யென்னும்படி, மேல் போய்-மேலேசென்று, திகழ் மாடத்தால் - விளங்குகின்ற மாடங்களாலும், சொல் ஆர்க்கும் கழனிகளால் - புகழ்ந்து சொல்லுதற்குரிய கழனிகளாலும், தொலை யாதவளம்காட்டும் - தொலையாத செல்வத்தைத் தருகிற, துறைசை மேவி-துறைசையைப் பொருந்தி, கல்லார்க்கும் அல்லார்க்கும் - கல்லாத வர்க்கும் கற்றவர்க்கும், வல்லார்க்கும் வல்லார்க்கும் - வல்லவர்க்கும் வல்லவரல்லாத வர்க்கும், கணக்கு இல்லா - கணக்கற்ற, மற்றெல்லார்க்கும் - வெறெல்லாருக் கும், ஒப்பு இல் வைப்பு ஆம் - ஒப்பற்றவைப்பாகிய, சுப்பிரமண்ணியகுரவன்-சுப்பிரமணிய தேசிகரது, இருதாள்போற்றி - இரண்டு திருவடிகளுக்கு நமஸ் காரம்—எ-று. (ருகூ)

மாமேவுபுகழ்த்திருவா வடுதுறைச்சுப்பிரமணிய வள்ளலாய, தூமேவுகுரவன்பேர் சொற்றபொழுதென்பிறப்புத் தொலைந்ததம்மா, பாமேவுமிதுகண்டும் பிறப்பொழிப்பானிவனென்று பலருஞ்சொல் வார், தேமேவுநலந்தெரியென் வாயினையேபுகழாத செய்கையென் னே.

இ-ள். மாமேவுபுகழ் - பெருமைபொருந்திய புகழையுடைய, திருவாவடு துறை—, சுப்பிரமணியவள்ளல்—, ஆய - ஆகிய, தூமேவு - பரிசுத்தம் பொ ருந்திய, குரவன்பேர் - குருவின்பெயரை, சொற்றபொழுது - சொன்னபோ தே, என்பிறப்பு - என்பிறவி, தொலைந்தது - நீங்கிற்று, பாமேவும் இதுகண் டும் - பரவிய இந்தச்செய்தியைக் கண்டும், பிறப்பு ஒழிப்பான் இவன் என்று-பிறவியை நீக்குவோன் இவனென்று, பலரும் சொல்வார் - எல்லாரும்சொல் வார்கள், தேமேவு - அழகு பொருந்திய, நலம்தெரி - நன்மையைத் தெரிந்து சொன்ன, என் வாயினை - என் வாயை, புகழாத செய்கை என்னே - புகழா மைக்குக் காரணமென்னையோ—எ-று. (ருசு)

திருவூாவடுதுறையிற் சேர்வோரைமுத்தித்
திருவாவடுதுறையிற் சேர்கென்—றருளும்
குருசுப்பிரமணிய கோமான்ருணெஞ்சே
குருசுப்பிரமணியாக் கொள்.

இ-ள். திருவாவடு துறையில் சேர்வோரை - திருவாவடு துறையில் வந்தடைவோரை, முத்தி திருஆ அடுதுறையில் சேர்க என்று அருளும் - மோக்ஷசெல்வத்தை யடையக்கடவரென்று அருள்செய்கின்ற, குரு - சற்குருவாகிய, சுப்பிரமணிய கோமான் - சுப்பிரமணியப் பெருமானது, தாள் - திருவடிகளை, நெஞ்சே - மனமே, குரு - மேன்மையுள்ள, சுப்பிரம் - பரிசுத்தமாகிய, மணியா - இரத்தினமாக, கொள் - நீயுட்கொள்வாயாக—எ-று. (ருசசு)

## இராமநாதபுரம் முத்துராமலிங்க சேதுபதி யியற்றிய செய்யுட்கள்.

எந்தவுலகினுஞ்சைவப் பயிர்தழையவருண்மழைபெய் தெம்மனோர்போல், வந்தருள்சுப்பிரமணிய தேசிகதேசமைந்தகலை வலத்தாற்றீட்டித், தந்ததிருமுகச்செய்யுட் டனித்தனியாராயமகிழ் தந்ததுள்ளன், புந்தவெழுமானந்தப் பெரும்புணரிக்கெல்லையெடுத் துரைக்கொணுதே.

இ-ள். எந்த உலகினும் - எல்லாவுலகங்களிலும், சைவப் பயிர் தழைய - சைவசமயமாகிய பயிர் செழிக்கும் வண்ணம், அருள்மழை பெய்து - அருளாகிய மழையைச்சொரிந்து, எம்மனோர் போல் வந்து - எம்போலியர்போல மாநுடவுருவாயெழுந்தருளி, அருள் - அருள்செய்த, சுப்பிரமணியதேசிக - சுப்பிரமணியதேசிகனே, தேசு அமைந்த - புகழமைந்த, கலைவலத்தால் - நூலாராய்ச்சியின் வலிமையால், தீட்டிதந்த - எழுதிவிடுத்த, திருமுகச்செய்யுள்- திருமுகமாகிய செய்யுட்களை, தனித்தனி ஆராய-தனித்தனி ஆராயுமிடத்து, மகிழ்தந்தது உள் - மனமகிழ்ச்சியடையலாயிற்று, அன்பு உந்த எழும்-அன்புசெலுத்தவுண்டாகின்ற, ஆனந்தப் பெரும் புணரிக்கு - ஆநந்தமாகிய பெருங்கடலுக்கு, எல்லை - வரம்பை, எடுத்து உரைக்கொணுது - எடுத்துச் சொல்லப்படாது—எ-று. (ருசஎ)

## வித்வான் அருணசலம்பிள்ளை பாடியது.

### விருத்தம்.

சுந்தரவேடந்தாங்கிச் சுருதிநூற்புராணமியாவும்
சொந்தமாயுளத்திற்கொண்ட தோன்றலேசுகுணக்குன்றே

தந்தையுந்தாயுமாகித் தமியனையாண்டுகொண்ட
செந்தளிர்க்கழல்களன்றி மற்றொன்றுஞ்சிந்திக்கேனே.

இ-ள். சுந்தரவேடம் தாங்கி - அழகாகிய வேடந் தரித்து, சுருதி நூல் புராணம் யாவும் - வேதாகம புராணங்க ளெல்லாவற்றையும், சொந்தமாய் உளத்தில்கொண்ட - சொந்தமாக மனத்திற்கொண்ட, தோன்றலே - பெரியோனே, சுகுணக்குன்றே - நற்குணமலையே, தந்தையும் தாயும் ஆகி - பிதாவும் மாதாவுமாகி, தமியனை ஆண்டு கொண்ட - தமியேனை யாட்கொண்டருளின, செம் தளிர் கழல்கள் அன்றி - செந்தளிர் போன்ற திருவடிகளையல்லால், மற்றொன்றும் சிந்திக்கேன் - வேறொன்றையும் நினைக்க மாட்டேன் எ-று. (ருகஅ)

குருவுக்கு ஆடையனுப்பி அதை யாசிர்வதிக்கும் பொருட்டு அன்னங்களே நீங்கள்போய்ச் சொல்லுங்க ளெனல்.

கலித்துறை.

செந்தாமரையொரு வெண்டாமரையடி சேர்ந்ததுபோல்
அந்தாமரைத்தடம் வாழனங்காளன்று செய்தவத்தால்
எந்தாயுமீசனு மாகின்றகோமுத்தி யேர்க்குருபால்
வந்தோதுவீரங்ஙன் யான்விடுதூசினை வாழ்த்துதற்கே.

இ-ள் செந்தாமரை - செந்தாமரை மலரை, ஒருவெண் தாமரை - ஒரு வெண்டாமரைமலரானது, அடிசேர்ந்ததுபோல் - அடியிற் சேர்ந்தாற்போல, அம் - அழகிய, தாமரை தடம்வாழ் - தாமரை தடாகத்தில் வாழ்கின்ற, அனங்காள் - அன்னங்களே, அன்று - அந்நாளில், செய் தவத்தால் - செய்த தவப்பயனால், எந்தாயும் - எமது அன்னையும், ஈசனும் - ஈச்சுரனும், ஆகின்ற - ஆகாநின்ற, கோமுத்தி - திருவாவடு துறையில் வாழ்கின்ற, ஏர் - அழகிய, குருபால்வந்து - குருவினிடத்துச் சென்று, யான் விடு - நான் அனுப்பின, தூசினை - ஆடையை, வாழ்த்துதற்கு - ஆசீர்வதிக்கும் பொருட்டு, ஓதுவீர் - சொல்லுவீராக—எ-று. (ருகக)

குருவுக்குத் திருநீற்று வட்டகை யனுப்பிப் பாடியது.

வெண்பா.

அஞ்சக்கரத்தி னருள்வடிவாம் வெண்ணீற்றைக்
கஞ்சக்கரத்தளிராற் கற்பிக்க—மிஞ்சுபுகழ்
கொண்டோங்கிவாழ்கின்ற கோமுத்திதேசிகற்குத்
தொண்டனிவ்வட்டகைதான் றேய்ந்து.

இ-ள். அஞ்சு அக்கரத்தின் - ஸ்ரீபஞ்சாக்ஷரத்தின், அருள்வடிவு ஆம் - அருளுருவாகிய, வெண்ணீற்றை - திருவெண்ணீற்றை, கஞ்சம்கரம்தளிரால்

கற்பிக்க - தாமரைமலர்போன்ற கைத்தளிரால் ஆளும்படி, மிஞ்சு புகழ்கொண்டு - மேலான புகழைப் பெற்று, ஓங்கி வாழ்கின்ற - மேன்மையாய் வாழ்கின்ற, சோமுத்தி தேசிகற்கு - திருவாவடுதுறையில் வாழ்கின்ற குருநாதனுக்கு, இவ்வட்டகை - இந்த வட்டகையானது, தோய்ந்து தொண்டு ஆம் - பொருந்தித் தொண்டாயிருக்கக்கடவது—எ-று.

வட்டகை - திருநீற்றுச்சம்புடம். (௫௨0)

## மாயூரம் வேதநாயகம்பிள்ளை சூரியகிரகண காலத்தில் பாடிய செய்யுள்.

வெண்பா.

குருவுங்கிரகணமுங் கூடினுற்கங்குல்
மிகுமென்றுளமே வெருவல்—நகுதுறைசைச்
செப்பரியமாச்சுப் பிரமணியதேசிகனும்
அப்பரிதியிங்குதித்த லால்.

இ-ள். குருவும் கிரகணமும்கூடினுல்-அமாவாசையும் கிரகணமும் சேர்ந்தால், கங்குல் மிகும் என்று - இருள் அதிகரிக்குமென்று, உளமே - மனமே, வெருவல் - அஞ்சாதே, (ஏனென்றால்) நகுதுறைசை - விளங்குகின்றதுறைசையில் வாழ்கின்ற, செப்பு அரியமா - சொல்லுதற்கரிய பெருமையமைந்த, சுப்பிரமணியதேசிகன் ஆம் - சுப்பிரமணிய தேசிகனுகிய, அப்பரிதி - அந்தச் சூரியன், இங்கு உதித்தலால் - இங்கே உதிக்கையாலேதான்—எ-று. (௫௨௧)

## சூரியனுக்கும் சுப்பிரமணியதேசிகற்கும் சிலேடை.

மாதவசுப்பிரமணிய தேசிகமேலோயுவர்ப்பு வாரிமூழ்கும், ஆதவன்கீழ்த்திசையுதிக்குஞ் சுடுமணுகுமதியழிக்கு மத்தமிக்கும், சாதகமேற் றிசையுதிப்பாய் நிழலளிப்பாய் மதியளிப்பாய் தவாமனுளும், போதகுணக்கடற்படிவா யத்தமியாய்நினேக்கதிரோன் பொருவானன்றே.

இ-ள். மாதவ - பெருந்தவனே, சுப்பிரமணியதேசிக - சுப்பிரமணியதேசிகனே, மேலோய் - மேலோனே, ஆதவன் - சூரியன், உவர்ப்புவாரிமூழ்கும் - உப்புக்கடலிற்குளிப்பான், கீழ்திசை உதிக்கும் - கீழ்த்திசையில் உதிப்பான், சுடும் - சுடுவான், அணுகும்மதி அழிக்கும் - அணுகாநின்ற மதியை அழிப்பான், அத்தமிக்கும் - அஸ்தமிப்பான், (நீ) சாதகம் - வழக்கமாக, மேல்திசை உதிப்பாய் - மேற்குத்திசையில் உதிப்பாய், நிழல் அளிப்பாய்-நிழலைக் கொடுப்பாய், மதி அளிப்பாய் - மதியைக் கொடுப்பாய், நாளும் - தினந்தோ

றும், தவாமல் - கெடாமல், போதகுணக் கடல் படிவாய் - ஞான குணக்கடலில்மூழ்குவாய், அத்திமியாய் - ஈஸ்த மிக்க மாட்டாய், (ஆதலால்) நினை-உன்னை, கதிரோன் யொருவான் அன்று - சூரியன் நிகர்க்கமாட்டான்-எ-று.

கீழ்த்திசை மேற்றிசை என்பவற்றிற்குக் கீழாகியதிசை மேலாகியதிசையென்று மோர்பொருள், மதி - சந்திரன், அறிவு. (௫௨௨)

சுப்பிரமணியதேசிகர் அனுப்பின வித்வான் போய் சொன்னதைக் குறித்துப் பாடியது.

விதியிருந்தபதியெனுஞ்சுப் பிரமணியதேசிகமெய்ஞ் ஞானக்குன்றே, துதியிருந்தநின்புலவன் சொல்வழியேபல்வழியுந் தோன்றுநீயென், மதியிருந்தாய்பிரிந்திடவு மனம்பொருந்தாயென விருந்தேன் வான்கோமுத்திப், பதியிருந்தாயெனவந்த மாபுலவன்பொய்சொலவும் படித்தான்மாதோ.

இ-ள். விதி - பிர்மன்போன்ற, இரு - பெரிய, தபதி என்னும் - தவசியென்று சொல்லப்படுகிற, சுப்பிரமணிய தேசிக - சுப்பிரமணிய தேசிகனே, மெய்ஞ் ஞானக் குன்றே - மெய்ஞ் ஞான மலையே, துதியிருந்த நின்புலவன் சொல்வழியே - துதிக்கப்பட்ட நின்புலவன் சொல்வழியாகவே, பல்வழியும் தோன்றும் - பலநெறிகளும் தோன்றுகின்றன, (ஆயினும்) நீ என்மதி இருந்தாய் - நீயென் அறிவின் கண்ணிருந்தாய், பிரிந்திடவும் மனம் பொருந்தாய்-பிரியவும் மனமிசையமாட்டாய், என இருந்தேன்-என்று நினைந்திருந்தேன், வான் - மேலாகிய, கோமுத்திப்பதி இருந்தாய் என - திருவாவடுதுறையிலிருக்கிறுயென்று, அந்தமாபுலவன் - அந்தப் பெரியபுலவன், பொய்சொல்லவும் படித்தான் - பொய்சொல்லவுங் கற்றான்—எ-று.

மாது - ஓ, அசைகள். (௫௨௩)

திருவாவடுதுறை யாதீன வித்வான் தாண்டவராய சுவாமிகள் பாடியது.

வெண்பா.

ஐயன்றிருநாம மைந்தெழுத்துள் ளார்ந்தவன்றுள்
மெய்யன்பர்சொல்லருந்து மென்குழைக்குள்—நொய்யவென்சொல்
வெவ்வாறுமாமுகன்பே ருற்றகுருமாமணியே
எவ்வாறுட்போந்த விசை.

இ-ள். ஐயன் திரு நாமம் - இறைவனது திருநாம மாகிய, ஐந்து எழுத்து - ஸ்ரீ பஞ்சாக்ஷரம், உள் ஆர்ந்து - மனத்தில் பொருந்தப் பெற்றவ

ராய், அவன்தாள் - அவன் திருவடிகளுக்கு, மெய்அன்பர் - மெய்யன்பரா விருப்பவராத், சொல்அருந்தும் - சொற்களை நுகர்கின்ற, மெல்குழைக்குள் - மெல்லியசெவிக்குள்ளே, நொய்ய என்சொல் - அற்பமாகிய எனசொற்கள், எவ்வாறு - எவ்விதமாய், உள்போந்த - உள்ளேநுழைந்தன, இசை - சொல், ஒவ்வு ஆறுமாமுகன்பேர் உற்ற - ஒன்றற்கொன்றொப்பாகிய ஆறுதிருமுகங்களையுடைய முருகக்கடவுள் பெயரைக்கொண்ட, குருமாமணியே - தேசிகரத்நமே—எ-று. (௫உ௪)

## எங்கும் பேதியுண்டானகாலத்தில் வேதநாயகம்பிள்ளை பாடிய செய்யுள்.

கலித்துறை.

இலக்கணமெய்க்கரை மாத்திரையாமிவ் வளவுமின்றி
மலக்கண்விளைபிணி யாற்பலர்மாய்ந்தனர் மண்டுமிந்நோய்
விலக்கவருள்புரி மும்மலநோய்கெட வித்தகனாய்
நிலக்கணமர்சுப்பிர மணியாநந்த நின்மலனே.

இ-ள். மெய்க்கு இலக்கணம் அரைமாத்திரைஆம் - சரீரநிலைக்கு இலக்கணமாவது அரைமாத்திரை யளவினதாதலால், இவ்வளவுமின்றி - இந்த அளவுமில்லாமல், மலக்கண் விளைபிணியால் - மலத்தில் விளைகின்ற நோயால், பலர்மாய்ந்தனர் - பலர்மடிந்தார்கள், மண்டும்இ நோய்விலக்க - மிகுகின்ற இந்த நோயை விலக்கும்பொருட்டு, அருள்புரி - அருள்செய்வாயாக, மும்மல நோய்கெட - மும்மல நோய்நீங்கும்படி, வித்தகனாய் - ஞானவைத்தியனாய், நிலக்கண் அமர் - பூமியி லமர்ந்திருக்கின்ற, சுப்பிரமணியா—, ஆநந்த நின்மலனே—எ-று. (௫உ௫)

இல்வாழ்வுநீத்தற மேற்கொண்டநீபிற ரில்லகத்துச்
செல்வாழ்வுசற்றும் விரும்பாயென்பாரிது சித்திரமே
புல்வாழ்வுடையென்றன் வீடெங்குநீபரி பூரணனாய்
நல்வாழ்வுற்றாய்சுப்பிர மணியாநந்த நற்றவனே.

இ-ள். சுப்பிரமணியாநந்த நற்றவனே - சுப்பிரமணியன் என்னும் திருநாமம்பூண்ட ஆநந்தத்துக் கேதுவாகிய நல்லதவத்தையுடையோனே, புல்வாழ்வுஉடை - அற்பவாழ்வையுடைய, என்றன்வீடெங்கும் - என்வீடுமுழுதும், நீ பரிபூரணனாய் - நீ மிகவும் நிறைந்தவனாய், நல்வாழ்வு உற்றாய் - நல்லவாழ்வையடைந்தாய், (அப்படியிருக்க) இல்வாழ்வுநீத்து - இல்வாழ்க்கையைவிட்டு, அறம் - துறவறத்தை, மேற்கொண்டநீ - பூண்டநீ, பிறர் - பிறருடைய, இல்அகத்து - வீட்டுக்குள்ளே, செல்வாழ்வு-நுழைகின்றவாழ்வை, சற்

றும் விரும்பாய் - சிறிதும் விரும்பமாட்டாய், என்பார் - என்றுசொல்லுகிறார்கள் (உலகத்தார்), இது சித்திரமே - இது ஆச்சரியமே—எ-று. (ருஉசு)

வானென்றுதவ வருஞ்சுப்ரமண்ய வரோதயனே
தானென்றுவெண்ணரன் பாடையிந்நாட்டிற் றலையெடுக்க
ஏனென்றுகேட்பவ ரில்லாத்தமிழை யினிதளிக்க
நானென்றுகங்கணங் கட்டிக்கொண்டாயிந்த நானிலத்தே.

இ-ள். வான்என்றுஉதவவரும் - மேகம்போலக் கொடுக்கவந்த, சுப்ரமணியவரோதயனே-சுப்ரமணியனென்கிறவரோதயனே, வெள்நரன்பாடை-வெள்ளைக்காரனதுபாடை, இந்நாட்டில் - இந்தேசத்தில், தான்என்று தலையெடுக்க - தானென்று தலையெடுத்தலும், ஏனென்றுகேட்பவர் இல்லா தமிழை - ஏனென்றுகேட்போர் இல்லாதிருந்ததமிழ்ப்பாஷையை, இனிது அளிக்க - இனிதாய்க்காப்பாற்றுதற்கு, நான் என்று - நானிருக்கிறேனென்று, கங்கணம் கட்டிக்கொண்டாய்—, இந்தநானிலத்தே - இந்தவுலகின்கண்ணே எ-று.

வெள்நரன் - வெள்ளைமனிதன், வரோதயன் - வரத்தினால் அவதரித்தவன். (ருஉஎ)

சுருதியோருருக் கொண்டன்னசுப்பிர மணியதேவே
கருதியின்னொரு காலின்னைக்காணலா மெனுமவாவால்
பொருதியென்மனம் பின்னீர்க்கப்பொறையுறு பண்டிபூட்டும்
எருதுகள்முன்னே யீர்க்கவென்பதியடைந் தேன்மன்னே.

இ-ள். சுருதிஓர் உருகொண்டன்ன - வேதம் ஒருவடிவுகொண்டாற்போன்ற, சுப்பிரமணியதேவே - சுப்பிரமணியசுவாமியே, கருதி - நினைத்து, இன்னொருகால் - இன்னொருதரம், நின்னைகாணலாம்என்னும்அவாவால்-உன்னைக்காணவேண்டுமென்கிற ஆசையால், என்மனம்பொருதி - என்மனம் போரிட்டு, பின்ஈர்க்க - பின்னேயிழுக்க, பொறைஉறு - பாரம் அதிகரித்த, பண்டிபூட்டும் - வண்டியிற்கட்டப்பட்ட, எருதுகள் முன்னேஈர்க்க - எருதுகள்முன்னேயிழுக்க, என்பதி அடைந்தேன் - என் ஊரைச்சேர்ந்தேன்—எ-று.

சூர்வந்துவணங்கு மேன்மைச்சுப்பிர மணியதேவே
நேர்வந்துநின்னைக் கண்டுநேற்றிராத்திரி யேமீண்டென்
ஊர்வந்துசேர்ந்தே னென்றனுளம்வந்து சேரக்காணேன்
ஆர்வந்துசொலினுங் கேளேனதனையிங் கனுப்புவாயே.

இ-ள். சூர் - சூரன், வந்துவணங்கும் - வந்துபணிகின்ற, மேன்மை - மேன்மையையுடைய, சுப்பிரமணியதேவே—, நேர்வந்து - நேரேவந்து, நின்

னைக்கண்டு - உன்னைக்கண்டு, நேற்றுஇராத்திரியேமீண்டு - நேற்றிரவிலேயே திரும்பி, என்ஊர்வந்து சேர்ந்தேன்—, என்றன் உள்ளம் வந்து சேரக் காணேன்—, ஆர்வந்து சொலினும் - யார்வந்து சொன்னாலும், கேளேன் - கேட்கமாட்டேன், அதனை - அந்த உள்ளத்தை, இங்கு அனுப்புவாய் - இங்கே யனுப்புவாயாக—எ-று. (ருஉக)

வானுடுமண்ணுடு மலிபுகழ்ச்சுப்பிரமணிய வள்ளலேநின்
பானுடுமாவீர பத்திரவேளெனக்கினியன் பாலர்க்காசான்
தானுடுதொழிலுறுவான் சூரியமூர்த்திச்செல்வன் றனக்கோர்மாற்றம்
தேனுடுன்றிருவாக்காற் செப்பின்மநோபீட்டமெலாஞ் சித்தியாமே.

இ-ள். வான்நாடும் - விண்ணுலகினும், மண்நாடும் - மண்ணுலகினும், மலிபுகழ் - மிகுந்தபுகழையுடைய, சுப்பிரமணியவள்ளலே—, நின்பால்நாடும் - உன்பக்ஷத்திலே அன்புகொண்ட, மா - பெரிய, வீரபத்திரவேள்—, எனக்கு இனியன் - எனக்கினிதானவன், பாலர்க்குஆசான் - என்பிள்ளைகளுக்கு உபாத்தியாயன், தான் ஆடு தொழில்உறுவான் - தான்நடந்தொழிலிற் சிறந்தவன், சூரியமூர்த்திசெல்வன் - சூரியமூர்த்திக்குப்புதல்வன், தனக்கு - அவனுக்கு, ஓர்மாற்றம் - ஒருசொல்லை, தேன்நாடு உன் திருவாக்கால் - தேனும் விரும்புகின்ற உன் இனியதிருவாக்கினால், செப்பின் - சொன்னால், மநோபீட்டம் எல்லாம் - மநோபீஷ்டங்களெல்லாம், சித்திஆம் - சித்திக்கும்—எ-று.()

மூவுலகுந்தொழுதுறைசை வாழ்குருசுப்பிரமணிய மூர்த்திதன் சீர், பாவுபுகழெனும்வெள்ளந் தோன்றவயன்வெருவுற்றுப் பகர்மா லுந்திப், பூவுளுறப்புகலவனு மரனுடலிற்புகவவனும் புக்கதோர்ந்து, மேவுமுதற்காரணனு மவனுள்ளக்குகைநுழைந்து விளங்குற்றுனே.

இ-ள். மூவுலகும்தொழு - மூன்றுலகத்தாரும் வணங்குகின்ற, துறைசைவாழ்குரு - துறைசையில் வாழ்கின்ற குருநாதராகிய, சுப்பிரமணியமூர்த்தி தன்சீர்பாவு புகழ்எனும் வெள்ளம் தோன்ற - சுப்பிரமணியமூர்த்திகளின்சிறப்புப்பொருந்திய புகழாகிய வெள்ளம்பெருகுதலும், அயன் வெருவுற்று - பிரமன் அஞ்சி, பகர்மால் உந்திபூவுள் உறபுக - சொல்லப்பட்ட திருமாலின்உந்தியாகிய தாமரைமலரில் நுழைய, அவனும் - அத்திருமாலும், அரன்உடலில் புக - சிவனுடலிற் பிரவேசிக்க, அவனும் புக்கது ஓர்ந்து - அந்தச்சிவனும்திருமால் தன்னுடலிற் புகுந்ததை யறிந்து, மேவுமுதற் காரணன்ஆம் - பொருந்திய முதற்காரணனாகிய, அவன் - அந்தப் பரமசிவனது, உள்ளக்குகை நுழைந்து - மனமாகிய குகையிற்புகுந்து, விளங்குற்றான் - விளங்கலுற்றான் எ-று. (ருஉக)

முருகார்பூந்தடஞ்சுலவு மாவடுதண்டுறைத்தலத்து முதல்வதெ ய்வத், திருநாவுக்கரசர்முதன் மூவர்தமிழ்த்தேனுண்டு தெவிட்டுநிற் குத், தருநாவுக்கினிமையிஃ தெனக்கொடிமுந் திரிக்கனியான்றருத லன்பின், ஒருவேடன்றருதசையு மமிழ்தினுஞ்சீர்த்தெனவுண்ட வுறு திகொண்டே.

இ-ள். முருகு ஆர்பூதடம் சுலவு - தேன்பொருந்திய மலர்ப்பொய்கை கள் சூழ்ந்த, தண் - குளிர்ச்சியாகிய, ஆவடுதுறை தலத்து - திருவாவடு துறைத்தலத்தில் வாழ்கின்ற, முதல்வ - முதல்வனே, தெய்வம் - தெய்வத் தன்மைபொருந்திய, திருநாவுக்கரசர்முதல் - திருநாவுக்கரசர் முதலாகிய, மூவர் - மூவர்பாடிய, தமிழ் - தமிழ்ப்பாடலாகிய, தேன்உண்டு - தேனை யுண்டு, தெவிட்டும் - தெவிட்டாநின்ற, நிற்கு - உனக்கு, இஃது - இது, நாவுக்கு இனிமைதரும் என - நாவுக்கினிமையைக் கொடுக்குமென்றுஎண்ணி, யான் கொடிமுந்திரிக்கனிதருதல் - நான்கொடிமுந்திரிப்பழத்தைக் கொடுத் தல் எதைக்கொண்டெனின், அன்பின் - அன்பின்மிகுதியால், ஒருவேடன் தருதசையும் - ஒருவேடன்தந்த தசையையும், அமிழ்திலும்-அமிர்தத்தினும், சீர்த்து - சிறப்புடையது, என - என்று, உண்ட உறுதிகொண்டே - நீயுண்ட வுறுதியைக்கொண்டுதான் —எ-று.

மூவர்தமிழ் - தேவாரம், வேடன் - கண்ணப்பன். (ருகஉ)

நின்சமுகத் தினைப்பார்க்க நின்னமுத மொழிகேட்க நின்பாற் பேச, என்னிருகண் ணிருசெவிவாய்க் கெப்பொழுதுங் கிடைக்கவி ல்லை யிவைகண்மூன்றும், மன்னுபெரும் பாதகங்கள் புரிந்திருக்கலா மெனது மனமெப்போதும், உன்னை யகலாதிருத்திக் கொள்ளவென் னதவம்புரிந்த துரைப்பாய்மன்னே.

இ-ள். நின்சமுகத்தினைப்பார்க்க - உன்சமுகத்தை தரிசிக்கவும், நின் அமுதமொழிகேட்க - உன்அமிர்தவசனங்களைக் கேட்கவும், உன்பால்பேச- உன்னிடத்திற்பேசவும், என்இருகண் இருசெவிவாய்க்கு - என்னிருகண் களுக்கும் இருசெவிகளுக்கும் வாய்க்கும், எப்பொழுதும் கிடைக்கவில்லை-எப் போதும் வாய்க்கவில்லை, இவைகள்மூன்றும் - (ஆகையால்) இவைகள் மூன் றும், மன்னுபெரும்பாதகங்கள் புரிந்திருக்கலாம் - நிலைபெற்ற பெரும்பாவங் களைச்செய்திருக்கலாம், (ஆயினும்) என்மனம் - என்மனமானது, எப்போ தும் - எக்காலத்தும், உன்னை அகலாதிருத்திக்கொள்ள-உன்னைநீங்கா திருத் திக்கொள்ளுதற்கு, என்னதவம்புரிந்தது - என்னதவஞ்செய்தது, உரைப் பாய் - சொல்லுவாயாக—எ-று. (ருகங)

தலைமகன்கூற்று. இடையூறுகிளத்தல்.

கட்டுற்றகொன்றையர் செவ்வந்தியீசர் கமலைவெற்பில்
மட்டுற்றமாலைக் குழலீர்கண்வேலையென் மார்பகத்தே
விட்டுப்பராமுக மாகநின்றீரந்த வேல்கள்வந்து
பட்டுப்பரந்த பசும்புண்ணையாகிலும் பார்த்திடுமே.

இ-ள். கட்டுற்றகொன்றையர் - மாலையாகக்கட்டப்பட்ட கொன்றை மலரையுடையவர், செவ்வந்தியீசர்—, (அவரது) கமலைவெற்பில் - கமலைமலையிலுள்ள, மட்டுஉற்ற - தேன்பொருந்திய, மாலை - பூமாலையணிந்த, குழலீர் - கூந்தலையுடையவரே, கண்வேலை - உங்கள் கண்களாகியவேல்களை, என்மார்பகத்தேவிட்டு - என்மார்பினுள்ளேபாயவிடுத்து, பராமுகமாகநின்றீர் - பராமுகமாய்நிற்கின்றீர்கள், அந்தவேல்கள்வந்து—, பட்டு-என்மார்பில்தைத்து, பரந்த - (அதனுலுண்டாகி) படர்ந்த, பசும்புண்ணையாகிலும் - பச்சைப்புண்ணையாகிலும், பார்த்திடும் - பாருங்கள்—எ-று. (௫௩௪)

கலைபயிற்றுருது காதலர்க்குமாநிதி
நிலையென்வளித்திட னெறியில்பித்தர்க்குக்
கொலைசெய்வாளீவதுங் குழவிதன்னைமா
மலையினேரத்துவைப் பதுவுமானுமே.

இ-ள். (தந்தையர்) கலைபயிற்றுருது - நூல்களைக் கற்பிக்காமல், காதலர்க்கு - புதல்வருக்கு, மாநிதி - பெரும்பொருளை, நிலையென அளித்திடல்- நிலையென்றுகொடுத்தல், (எதைநிகர்க்குமென்றால்), நெறிஇல் பித்தர்க்கு- நன்னெறியில்லாத பித்தருக்கு, கொலைசெய்வாள்ஈவதும் - கொலைசெய்தற்குரிய வாளாயுதத்தைக்கொடுப்பதையும், குழவிதன்னை - குழந்தையை, மாமலையின் ஓரத்துவைப்பதுவும் - பெரியமலையினேரத்தில் வைப்பதையும், மானும் - நிகர்த்திருக்கும்—எ-று. (௫௩௫)

வெள்ளத்தா லழியாது வெந்தழலால் வேவாது வேந்தராலும், கொள்ளத்தான் முடியாது கொடுத்தாலு நிறைவன்றிக் குறைவுருது, கள்ளர்க்கோ பயமில்லை காவலுக்குமிகவெளிது கல்வியென்னும், உள்ளபொரு ளுள்ளிருக்கப் புறத்தேயோர் பொருடேடி யுழல்கின்றுரே.

இ-ள். வெள்ளத்தால் அழியாது - நீர்ப்பெருக்கால்அழியாது, வெம்தழலால்வேவாது - வெம்மையாகிய நெருப்பினுல்வேவாது, வேந்தராலும்கொள்ளத்தான்முடியாது - அரசராலும் கொள்ளமுடியாது, கொடுத்தாலும் நிறைவு அன்றிக்குறைவுருது - ஒருவர்க்குக் கொடுத்தாலும் நிறைதலேயன்றிக் குறைவுபடாது, கள்ளர்க்கோபயம்இல்லை - திருடருக்கோ அஞ்சவேண்டு

இல்லை, காவலுக்குமிகஎளிது - காப்பாற்றுதற்கும் மிகவும் எளிதாம், (ஆகையால்) கல்விஎன்னும் - கல்வியென்கிற, உள்ளபொருள் உள்இருக்க - உண்மைப்பொருள் உள்ளேயிருக்க, புறத்தே - புறத்திலே, ஓர்பொருள்தேடிஉழல்கின்றார் - வேறொருபொருளைத்தேடி அலையாகின்றார் (உலகத்தார்), ஏ-இதென்ன மதியீனம்—எ-று.

புறத்துப்பொருள் - அழியும்பொருள். (ருஉகூ)

## தாய்க்கூற்று.

வேதனித்தையலர்க்கெழுதும் விதிவசமோவேங்கடவா விரகமான, மாதனத்தையெவ்வளவு மருந்தாளம்மாரனம்பான் மறுகிச்சோர்வாள், ஏதனத்தைவரக்காணே னென்னதிட்டமென்னதிட்ட மென்பாண்மேவ், வாதனத்தைப்பிடியணைமுத் தாடிதழ்த்தேனருந்துமனமகிழத்தானே.

இ-ள். வேங்கடவா - வேங்கடேசுரெட்டனே, வேதன் - பிரமன், இ-இந்த, தையலர்க்கு - பெண்களுக்கு, எழுதும் - எழுதின, விதிவசமோ - விதிவசந்தானோ, விரகமானமாது - உன்மீது விரகங்கொண்ட என்பெண், அன்னத்தை எவ்வளவும் அருந்தாள்-அன்னத்தைச் சிறிதும் உண்ணாள், அ மாரன் அம்பால் - அந்தமன்மதபாணத்தால், மறுகிசோர்வாள் - மனமயங்கிச் சோர்கின்றாள், ஏது அன்னத்தைவரக்காணேன் - ஏது (நான்தூதுவிட்ட) அன்னத்தை வரக்காண்கிலேன், என் அதிட்டம் என்னதிட்டம் என்பாள் - என் அத்ருஷ்டம் என்னதிட்டமாயிருக்கின்றது என்றுசொல்லுகின்றாள், (ஆதலால்) மேவவா - இவளைத்தழுவும்பொருட்டு வருவாயாக, தனத்தைபிடி-தனங்களைப்பிடி, அணை-அணைத்துக்கொள், முத்தாடு - முத்தமிட்டுக்கொள், மனம்மகிழ - மனங்களிக்கும்படி, இதழ்தேன் அருந்து - அதராமிர்தத்தைப் பருகு—எ-று. (ருஉஎ)

## பாலனைப்பழித்தல்.

வேம்பைவிரும்பக் கரும்பானதுமந்த வெங்கரும்பு
வேம்பானதுமுன்னைப் பெற்றலவோவெண்ணெய் தான்றிருடித்
தாம்பால்வரியுண்ட மாலரங்கேசர் தடஞ்சிலம்பில்
நாம்பாவியாயிருந் தால்யாரைநோவது நன்றல்லவே.

இ-ள். (பாலகனே) வேம்பைவிரும்ப - வேம்பை விரும்பினவுடனே, கரும்புஆனதும் - (அது) கரும்பானதும், அந்தவெம்கரும்பு வேம்புஆனதும்-அந்த இனியகரும்பானது வேம்பாய்விட்டதும், உன்னைபெற்று அல்லவோ-

உன்னைநான் பெற்றதனுலுண்டானவையல்லவா, வெண்ணெய்திருடி-வெண்ணெயைக்களவுசெய்து, தாம்பால்வரியுண்ட - தாம்புக்கயிற்றால் கட்டுண்ட, மால்அரங்கேசர் - பெருமையுள்ள திருவரங்கேசரது, தடம்சிலம்பில்-பெரிய மலையின்கண், நாம்பாவியாய் இருந்தால் - யாம்பாவிகளாயிருந்தால், யாரை நோவதும் நன்றுஅல்ல - ஒருவரைநோவதும் நன்மையல்ல—எ-று.

பாலகனே, உன்னைப்பெற்றதனுல், உன் தந்தைக்குக் கரும்புபோலினிதாயிருந்த நான்வேம்புபோலக் கசந்துவிட்டேன், வேம்புபோலக் கசப்பாயிருந்த வேசை கரும்புபோலினியளாயினுள், ஆயினும் உன்னைநான் வெறுத்துக்கொள்வது நன்மையல்ல, நான்செய்தபாவத்தால் இப்படிநேர்ந்ததென்பது கருத்து. (ருகூஅ)

## தலைமகன் வறும்புனங்கண்டு வருந்தல்.

அல்லைப்பகல்செய்த மாலரங்கேச ரணிவரைமேல்
கொல்லைக்குறவர் மடந்தையெங்கேசொலுங் கோலமதன்
வில்லைக்குனிப்பவ ரேயநுராகம் விளைப்பவரே
கல்லைப்பெண்ணுக்கு மவரேயென்மானத்தைக் காப்பவரே.

இ-ள். அல்லை - இராத்திரியை, பகல்செய்த - பகற்பொழுதிலுண்டாக்கின, மால்அரங்கேசர் - பெரியதிருவரங்கேசரது, அணிவரைமேல் - அழகிய மலையின்மீது, கொல்லை - தினக்கொல்லைகளையுடைய, குறவர்மடந்தை-குறப்பெண்ணனவள், எங்கே - எங்கேபோயினள், சொல்லும் - சொல்லுங்கள், கோலமதன் வில்லைகுனிப்பவரே - அழகிய மன்மதனது வில்லைவளைப்பவர்களே, அநுராகம்விளைப்பவரே - காமவிருப்பத்தை யுண்டாக்குமவர்களே, கல்லைபெண் ஆக்குமவரே - கல்லைப்பெண்ணுக்கினவர்களே, என்மானத்தை காப்பவரே - என்மானத்தைக்காப்பவர்களே—எ-று.

அல்லைப்பகல்செய்தது பாரதயுத்தத்தில், கோலமதன் வில்லைக்குனிப்பவர் - வண்டு, அநுராகம்விளைப்பவர் - குயில், கல்லைப் பெண்ணுக்குமவர்-அரிதாள், மானத்தைக்காப்பவர் - கலை. (ருகூகூ)

## தாய்க்கூற்று.

மேகப்படல நிகர்தாழ்குழலெங்கண் மெல்லியனீ
நாகப்பிடரின் மிசையூர்பவனியை நண்ணியதி
வேகப்புனைகலை கைவளையாவு மிழந்துநின்றாள்
மாகப்புலவர்தொழுந் தேவநீசெயு மாயைநன்றே.

இ-ள். மேகப்படலம் நிகர்தாழ்குழல் எங்கள்மெல்லியல் - மேகத்திரளை நிகர்த்த நீண்டகூந்தலையுடைய எங்கள்பெண், நீநாகப்பிடரின் மிசைஊர் பவனியைநண்ணி - நீ யானைப்பிடர்மே லூர்ந்துவந்த பவனியைக்கிட்டிச்,

சேவித்து, அறிவுஏக - அறிவழிய, புனைகலை - புனைந்தஆடை, கைவளை - கைவளையல், யாவும் - எல்லாம், இழந்து நின்றாள் - இழந்துநின்றனள், நாகம் புலவர்தொழும்தேவ - விண்ணுலகத்திலுள்ள தேவர்கள்வந்து வணங்கும்படியான சிவபெருமானே, நீசெய்யும்மாயைநன்று - நீசெய்கின்றமாயை நன்றாயிருக்கின்றது—எ-று. (ருசO)

சந்தபந்தந்துன்று செஞ்சொலின்பந்துன்று தார்புனைந்து
வந்தனந்தந்தெண்டனென்றுநின்றுன்கஞ்ச வார்கழற்கே
சந்ததந்தங்கன் பினைந்துநைந்துய்ந்தெஞ்சு தாழ்பிறவி
சிந்தநந்தன்மைந் தவின்றுவந்திங்கஞ்சல் செப்புதியே.

இ-ள். நந்தன்மைந்த - நந்தகோபாலன் புதல்வனே, சந்தபந்தம்துன்று - அழகியசொற்கட்டமைந்த, செஞ்சொல் - செவ்விய சொற்களால், இன்பம் துன்று தார்புனைந்து - இனியசொன்மாலைகளைப்புனைந்து, வந்து - உன் சந்நிதிக்குவந்து, அநந்தம் தெண்டன் என்று - அநேக நமஸ்காரங்களென்று சொல்லி, நின்று - நின்று, உன் - உனது, வார் - நீண்ட, கஞ்சம்கழற்கே - தாமரைமலர்போன்ற திருவடிகளுக்கே, சந்ததம் - சதாகாலமும், தங்கு - நிலைபெற்ற, அன்பின் - அன்பினால், நைந்துநைந்து - மனம் மிகவுருகி, எஞ்சுதாழ் பிறவிசிந்த - வினையெச்சத்தால்தாழ்ந்த பிறவித்துன்பங்கள்கெட; இன்று வந்து - இப்பொழுதுவந்து, இங்குஅஞ்சல்செப்புதி - இவ்விடத்து அஞ்சாதேயென்று சொல்லக்கடவாய்—எ-று. (ருசக)

## திருமால்துதி.

பேரானைநொந்தழைத்த பேரானையடியர்செயும் பிழைகள்யாவும்
பாரானையளந்துண்ட பாரானைப்பண்ணவர்கள் பணிவைகுந்த
ஊரானைவஞ்சர்மன மூரானைப்பகைவரஞ்சு முவணப்புள்ளாம்
தேரானைநான்மறைக டேரானைச்சிந்தைசெய்தெஞ் சென்னந்தீர்வாம்.

இ-ள். பேர்ஆனை - பெரியயானையாகிய கஜேந்திரன், நொந்து - முதலையால்வருந்தி, அழைத்த - கூப்பிட்ட, பேரானை - (ஆதிமூலம்என்னும்) திருநாமத்தையுடையவனை, அடியர்செயும் பிழைகள்யாவும் பாரானை - தன்னடியார்செய்யும் குற்றங்களெல்லாவற்றையும் பாராதவனை, அளந்துஉண்டபாரானை - அளந்துண்ட மண்ணினையுடையவனை, பண்ணவர்கள்பணி - தேவர்கள்வந்து வணங்குகின்ற, வைகுந்த ஊரானை - பரமபதமாகிய ஊரையுடையவனை, வஞ்சர்மனம் ஊரானை - வஞ்சகர்மனத்திற்பொருந்ாதவனை, பகைவர் அஞ்சும் - பகைவரஞ்சுதற்கேதுவாகிய, உவணப்புள்ஆம் - கருடப்பறவையாகிய, தேரானை - தேரையுடையவனை, நான்மறைகள்தேரானை - நான்கு வேதங்களாலுந்தெளியப்படாதவனை, சிந்தைசெய்து - சிந்தித்து, எம்சென னம்தீர்வாம் - எமது பிறவியை நீக்கிக்கொள்வோம்—எ-று. (ருசஉ)

பொன்னுசாமித்தேவர்மேல், சந்திரசேகரகவிராசர் பாடியது

வெண்பா.

திருமகட்குத்தன்னிறமாஞ் செய்யம்புயமும்
பொருமகட்குப்பொன்னம் புயமும்—தருபொன்னு
சாமிவள்ளன்மாலைதந்தான் றண்கமலமானேநற்
சாமிவண்ணமாலைதரா தான்.

இ-ள். தண்கமலமானே - குளிர்ந்த தாமரைமலரில் வாழ்கின்ற திருமகள்போல்பவளே, நல்சாமி - நல்லதலைவன், வண்ணம் - அழகாகிய, மாலை - மாலையை, தராதான் - தாராமையால், திருமகட்கு - திருமகளுக்கு, தன்நிறம் ஆம் - தன்மார்பாகிய, செய்ய அம்புயமும் - செந்தாமரைமலரையும், பொருமகட்கு - போர்மகளுக்கு, பொன் அம்புயமும் - பொன்மலைபோலும் அழகிய புயத்தையும், தரு - தந்த, பொன்னுசாமிவள்ளல் - பொன்னுசாமியென்னும் வள்ளலானவன், மாலைதந்தான் - எனக்கு விருப்பத்தை யுண்டாக்கினன் எ-று.

பொருமகள் - வீரலக்ஷ்மி, பொன் - பொன்மலை. (ருசரு)

தாய்க்கூற்று.

இய்யூர்தகரவெடுத்த திருமான்மருகன்
மய்யூர்குமரன்மலரடிக்கு—மெய்யூர்
மனத்தையளித்த பொன்னுசாமிக்குமானே
அனத்தைமறந்தாளென் றறை.

இ-ள். மானே - பெண்ணே, இஊர்தகர - இகரமூர்ந்த தகர ககரரகரங்களை, எடுத்த - கையிலேந்தின, திருமால்மருகன் - திருமாலுக்கு மருகனும், மய்ஊர்குமரன் - ஆட்டைஊர்ந்த குமாரக்கடவுளும் ஆகிய அவனது, மலர் அடிக்கு - தாமரைமலர்போலுந் திருவடிக்கு, மெய்ஊர் - மெய்யன்பு நிலைபெற்ற, மனத்தை அளித்த - மனத்தைத்தந்த, பொன்னுசாமிக்கு—, அனத்தைமறந்தாள் என்று - அனத்தைமறந்தனள் என்று, அறை - நீபோய்ச் சொல்வாயாக—எ-று.

இ ஊர்தகர - இகரமூர்ந்த தகர ககர ரகரங்கள் (திரிரி) மை - ஆடு, அது மய்யென் றெதுகைநோக்கிவந்தது, மனத்தையளித்தஎன்றது மனத்தால் இடையறாது தியானிக்கிற என்றபடி. (ருசச)

சேவிலி நற்றாய்க்கறத்தோடுநின்று வெறிவிலக்கல்.

ஆடிமாதம்ப வணிபுயத்தாரன்றியே
ஆடிமாதம்பார்கண் ணீர்மாற்றி—நீடுமயல்

போக்குமோவன்னாய் புலவர்மிடியைக்கொடையால்
நீக்குபொன்னுசாமி நிருபன்.

இ-ள். அன்னாய் - தாயே, புலவர்மிடியை - புலவரது வறுமையை, கொடையால்நீக்கு - தனது ஈகையால் நீக்குகின்ற, பொன்னுசாமி நிருபன் - பொன்னுசாமி நரேந்திரன், ஆடி - அசையாநின்று, மாதம்பம் - பெரியதூண்கள்போன்ற, அணிபுயம் - அழகியபுயத்திலணிந்த, தார் அன்றி - மாலையேயல்லாமல், ஆடு - ஆடானது, இமாது-இந்தப்பெண்ணின், அம்பு ஆர்கண்-அம்புபோன்ற கண்களிலொழுகாநின்ற, நீர்மாற்றி - நீரைத்துடைத்து, நீடும் மயல் போக்குமோ - பெரிதாகிய மையலைப்போக்குமோ—எ-று.

தாரன்றி - தார்போக்குகலையன்றி. (௩௪௫)

பின்முடுகு வெண்பா.

பொன்னாரம்பூணும் புகழ்ப்பொன்னுசாமிவள்ளல்
துன்னுநாள்ராமன் றுயர்புரிவான்—மன்னளிதேன்
நக்கரும்புமற்சுரும்பு நற்கரும்புங்கைக்கொளும்வேள்
எற்கரும்புண்ணுய்க்க வெய்வனே.

இ-ள். பொன்ஆரம்பூணும் - பொன்னாரத்தை யணிகின்ற, புகழ் - கீர்த்தியமைந்த, பொன்னுசாமிவள்ளல்—, துன்னுநாள் - சேராதநாளில், ராமன் - சந்திரன், துயர்புரிவான் - துன்பஞ்செய்வான், மன் - நிலைபெற்ற, அளி - வண்டுகளோடுகூடி, தேன்நக்க அரும்பும் - தேனோடுமலர்ந்த பூவரும்புகளையும், நல்சுரும்பும் - அழகிய வண்டுகளையும், நல்கரும்பும் - நல்லகரும்பையும், கைக்கொளும் - கைக்கொண்ட, வேள் - மன்மதனனவன், எற்கு - எனக்கு, அரும்புண்உய்க்க - ஆற்றுதற்கரிய புண்ணுண்டாம்படி, எய்வன் - புஷ்பபாணங்களைப் பிரயோகிப்பான்—எ-று.

ராமன் - ராத்திரிக்கு நாயகனாகிய சந்திரன். (௩௪௬)

பாங்கிகூற்று.

அளகைப்பொறித்தகொடி யண்ணலடிபோற்றும்
அளகைக்கோனும் பொன்னுசாமி—துளிமதுத்தார்
தந்தான்மதனடங்கத் தண்மதியந்தானடங்க
இந்தாவிந்தாமுகத்தா யீது.

இ-ள். அளகைபொறித்தகொடி - சேவலினுருவ மெழுதப்பட்ட கொடியையுடைய, அண்ணல் - முருகக்கடவுளின், அடி - திருவடியை, போற்றும் - வணங்குகின்ற, அளகைக்கோன்ஆம் - குபேரனைநிகர்த்த, பொன்னு

சாமி - பொன்னுசாமியென்னும் சீமான், துளிமது - துளிக்கின்ற தேனை யுடைய, தார் - பூமாலையை, மதன் அடங்க - மன்மதன் தன்செருக்கடங்கவும், தண்மதியம்தான்நடுங்க - குளிர்ந்தசந்திரன் நடுங்கவும், தந்தான் - கொடுத்தான், இந்துஆம் முகத்தாய் - பூர்ணசந்திரன்போலும் முகத்தினை யுடையாளே, ஈது - இந்தமாலை, இந்தா - இதோ ஏற்றுக்கொள்வாய்—எ-று.

அளகு - சேவல். அளகைப்பொறித்தகொடி என்ற விசேடணத்தால் அண்ணல் முருகனையுணர்த்திற்று. அளகை - குபேரன்பட்டணம். (௩௪௭)

புறங்காட்டல். தலைமகன்கூற்று.

கலித்துறை.

செவ்வேறிகழ்கரன் மாமலர்ச்சேவடி சிந்தைசெய்யும்
தெவ்வேறிகற்பொன்னு சாமிநரேந்திரன் சீர்க்கிரிவாய்
வெவ்வேறினமணி மேவமுதக்கட நீமறைத்து
உவ்வேறினமத கவ்வினைக்காட்டலென் னொண்டொடியே.

இ-ள். செவ்வேல்திகழ்கரன் - செவ்வியவேற்படை விளங்குங் கையினை யுடையவனாகிய முருகக்கடவுளின், மாமலர் - பெருமையமைந்த தாமரைமலர் போன்ற, சேவடி - திருவடியை, சிந்தைசெய்யும் - தியானிக்கிற, தெவ்வேறு இகல் - பகைவரைவெல்லும் வலியினையுடைய, பொன்னுசாமி நரேந்திரன் - பொன்னுசாமியென்னும் நரேந்திரனது, சீர்கிரிவாய் - சிறந்தமலையின்கண், வெவ்வேறு இனம்மணிமேவு - வெவ்வேறுசாதிமணிகளணியப்பெற்ற, அமுதக்கடம் - அமிர்தகலசங்களை, நீமறைத்து - நீயொளித்து, உஏறின - உகரமேறின, மதகவ்வினை - மகரதகரககரங்களை, காட்டல்என் - காட்டுதற்குக் காரணம்யாது, ஒள்தொடியே - அழகியவளையலையணிந்தவளே—எ-று.

தெவ் - பகைவர், நரேந்திரன்-நருக்கரசன். வெவ்வேறினமணி-முத்து பவளம் முதலியன. அமுதக்கடம், தனங்கள். உவ்வேறினமதக-முதுகு. ()

தாய்க்கூற்று.

கைக்கார்நிதிதரு தேனுசிந்தாமணி கன்னன்கார்த்தி
கைக்கார்நிகரல வாங்கொடையோன்பொன்னு சாமிகடக்
கைக்கார்வரைமேற் பவனிவந்தான்கண்டு மால்கொள்காரி
கைக்கார்துணைபுரி வாரிறவாது கருணைசெய்தே.

இ-ள். கைக்கார் - ஒழுங்காகிய மேகமும், நிதிதருதேனு - வேண்டிய நிதியைத் தருகிற காமதேனுவும், சிந்தாமணி - சிந்தாமணியும், கன்னன் - கன்னனும், கார்த்திகைக்கார் - கார்த்திகைமாதத்துமேகமும், நிகர் அல்லவும்-

கிகரல்லா தனவா-யொழிதற்குரிய, கொடையோன் - கொடையையுடையோ ஞகிய, பொன்னுசாமி—, நட்டம் - மதத்தையும், கை - துதிக்கையையு முடைய, கார்வரைமேல் - கரியமலைமேல்ஏறி, பவனிவந்தான் - பவனிவந் தான், கண்டு - அப்பவனியைக்கண்டு, மால்கொள் - விருப்பங்கொண்ட, காரிகைக்கு - என்பெண்ணுக்கு, இறவாது கருணைசெய்து - இறவாதிருக்கக் கிருபைசெய்து, ஆர்துணைபுரிவார் - யார் உதவிசெய்வார்கள்—எ-று.

சடக்கையென்ற விசேடணத்தால் கார்வரையென்பது யானையைக் குறித்தது. (௫௪௯)

தாய்க் கூற்று.

கலிப்பா.

வாராரக்கொங்கைமிசை மருவுபொன்னுசாமிவள்ளல்
வாராராவெல்லா மதியழலாந்தென்றலன்றில்
வாரார்கலியொலியும் வருத்தமனநொந்தனள்சொல்
வாரார்நீயல்லாலம் மன்னர்பெருமான்றனக்கே.

இ-ள். வார்ஆர் அக்கொங்கைமிசை - வார்நிறைந்த அத்தனங்களின் மேல், மருவு - பொருந்துகின்ற, பொன்னுசாமிவள்ளல் - பொன்னுசாமி யென்னும் வள்ளலானவன், வாரா - வராத, ராவெல்லாம் - ராத்திரியெல் லாம், மதி அழல்ஆம் - சந்திரன் நெருப்பாகிறான், தென்றல்அன்றில் - தென் றலும் அன்றிலும், வார் ஆர்கலிஒலியும் - நீண்டகடலொலியும், வருத்த-வருத் துதலால், மனம்நொந்தனள் - மனம்நொந்தாள், (இச்செய்தியை) அ மன்னர் பெருமான் தனக்கு - அந்த ராஜாதிராஜனுக்கு, நீ அல்லால் சொல்வார் ஆர்- நீயன்றிச்சொல்லவல்லார் யாவர்—எ-று.

அன்றில் - கிரௌஞ்சப்பறவை. (௫௫0)

இதுவுமது.

போதப்புடனே மதியளிநற்பூங்குயிற்றென்
வாதம்புரிதுயரால் வாடுமிவளைப்புரப்பாய்
போதம்புரமெரித்தோர்க் கோதும்வேள்பொற்கமல
பாதம்புனைபொன்னு சாமியெனும்பார்த்திபனே.

இ-ள். புரம் எரித்தோர்க்கு - முப்புரமெரித்த சிவபெருமானுர்க்கு, போதம் ஓதும் - ஞானத்தை உபதேசித்த, வேள்-முருகக்கடவுளது, பொன் கமலபாதம் - அழகிய கமலபாதங்களை, புனை - முடிசூடுகின்ற, பொன்னுசாமி என்னும் - பொன்னுசாமியென்கிற, பார்த்திபனே - அரசனே, போது அம் புடனே - புஷ்பபாணங்களோடு, மதி - சந்திரனும், அளி - வண்டும், நல்பூ

குயில் - நன்மையாகிய அழகியகுயில், தென்வாதம் - தென்காற்று, (ஆகிய இவைகள்) புரிதுயரால் - செய்கிற துன்பத்தால், வாடும்-வாடுகின்ற, இவளை புரப்பாய் - இந்தப்பெண்ணைக் காக்கவேண்டும்—எ-று.

போதம்பு - மன்மதனது புஷ்பபாணம். தென்வாதம் - தென்றற்காற்று. போதம்புரமெரித் தோர்க்கோதும்வேள் - பிரணவப்பொருளைச் சிவனுக் குபதேசித்தமுருகன். (ருருக)

## இதுவுமது.

அச்சுப்போற்புல வோரைமதித்திடு மண்ணலேபொரு மங்கசன் வாளியாம், நச்சுப்போது துரக்கத்துறந்தன ணாணும்பூணுந் துகிலு மிவடனம், கச்சுப்போனதுங் காணாள்முகவைவாழ் காவலாவளகேச விவள்கண்டும், கைச்சுப்போனக முண்டிலள் கெண்டைநேர் கண்ணி யைப்புரப் பாய்பொன்னுசாமியே.

இ-ள். புலவோரை - வித்துவான்களை, அச்சுப்போல் மதித்திடும் - அச்சுப்போலமதிக்கின்ற, அண்ணலே - பெரியோனே, பொன்னுசாமியே—, முகவைவாழ்காவலா - முகவைக்குக்காவலனே, அளகேச - குபேரனே, பொரும் - போர்செய்கிற, அங்கசன் - மன்மதனானவன், வாளிஆம் - தன் பாணங்களாகிய, நச்சுப்போது - விஷமலர்களை, துரக்க - செலுத்த, இவள்- இந்தப்பெண், நாணும் - நாணத்தையும், பூணும் - ஆபரணத்தையும், துகிலும் - ஆடையும், துறந்தனள் - விட்டாள், இவள்தனம் கச்சுபோனதும் காணாள் - இவள்தனங்கள் கச்சிழந்ததுமறியாள், இவள்—, கண்டும்கைச்சுகற்கண்டையும் வெறுத்து—எ-று. (ருருஉ)

## கிள்ளைவிடுதூது.

அத்திகத்த வடுத்தக்கராவினை யட்டவாழி நெடுமான்மருகனற், சத்திகத்தன் சந்தாசலச்செந்தில்வாழ் தாரகாரி வலாரிமகணைகைப், பத்திமுத்துக் குறத்திமணாளனைப் பணியுநம்பொன்னு சாமிமகீப னைத், தித்திக்கத்தகு மென்மொழிகூறிநீ சேரச்செய்திடுவாய்மடக் கிள்ளையே.

இ-ள். அத்திகத்த - கஜேந்திரன்கூவ, அடுத்து - அதனிடத்தணுகி, அ கராவினை அட்ட - அந்த முதலையைக்கொன்ற, ஆழி - சக்கராயுதத்தை யுடைய, நெடுமால்மருகன் - நெடியமாலுக்குமருகன், நல்சத்திகத்தன் - அழகியசத்திவாளேந்தினகடவுள், சந்தாசலம்செந்தில்வாழ்தாரகாரி-சந்தநாட்வி யென்கிற திருச்செந்தூரில்வாழ்கின்றதாரகாரி, வலாரிமகள் - இந்திரன் மகளாகிய தெய்வயானைக்கும், முத்துபத்திநகைகுறத்தி - முத்துநிரையையநிசர்த்த தந்தபந்தியையுடைய குறப்பெண்ணாகிய வள்ளிநாயகிக்கும், மணாளனை-மண

லானாகிய முருகக்கடவுளை, பணியும் - வணங்குகின்ற, நம்பொன்னுசாமி மகீபனை - நமதுபொன்னுசாமியென்னும்பூபதியை, தித்திக்கத்தகும்-இனிப்பாகிய, மெல்மொழிகூறி - மெல்லியமொழிகளைச்சொல்லி, நீசேரச்செய்வாய்-நீசேரச்செய்வாயாக; மடக்கிள்ளையே—, போனகம்உண்டிலள் - அன்னமுண்டிலள்; (ஆதலால்) கெண்டைநேர் - கெண்டைமீனைநிகர்த்த, கண்ணியை-கண்களையுடைய என்பெண்ணை, புரப்பாய் - காத்தருள்வாயாக—எ-று. ( )

ஆரம்பூணும் வரைக்குயமீதிலே யநங்கவேட னலர்க்கணை தூவவே, ஆரம்பூணுண் டுகிலுந்துயிலுநல் லம்மனைக்கழங் கும்மடக்கிள்ளையும், ஆரம்பூணுந் துறந்துமெய்சோர்ந்தன ளவளைக்காத்தணைத் தாள்வதுன்பாரமே, ஆரம்பூணுடை நற்குந்தவீரனே யண்ணலே பொன்னு சாமிகுபேரனே.

இ-ள். ஆரம்பூணுடை நற்குந்தவீரனே - நிறைந்த அழகினையுடைய நல்லகுந்தாயுதத்தையுடையவீரனே, அண்ணலே - பெரியோனே, பொன்னுசாமிகுபேரனே—, ஆரம்பூணும் - முத்துமாலை முதலியவற்றை யணிந்த, வரைக்குயம்மீதிலே - மலைபோன்றதனத்தின்மேலே, அநங்கவேள் - உருவிலியாகிய மன்மதன், தன் அலர்கணை தூவ - தன்புஷ்பபாணங்களைச்சொரிய, ஆரம் - முத்துமாலைகளையும், பூண் - மற்றைஆபரணங்களையும், நுண்துகிலும்-நுண்ணியஆடையையும், துயிலும் - நித்திரையையும், நல்அம்மனை கழங்கும்-அழகிய அம்மனைக்கழங்குகளையும், மடக்கிள்ளையும் - இளங்கிளியையும், ஆர்-உண்கின்ற, அம்பூணும்துறந்து - நீரையும் அன்னத்தையும் வெறுத்து, மெய்சோர்ந்தனள் - மெய்மறந்தாள், (இனி உயிரையுமிழப்பாளாதலால்) அவளை - அந்தப்பெண்ணை, காத்து அணைத்து ஆள்வது - தழுவிக்காத்தருள்வது, உன்பாரமே - உன்கடமையேயாம்—எ-று. (௫௪)

எங்குந்தம்புக ழோங்கவளித்தமூ வேழுவள்ளல் களுமிவனீகையால், தங்குந்தங்கு மிவற்கேபுகழெனச் சாற்றுஞ்சற்குண னாம்பொன்னுசாமிமா, தங்கமேற்கொடு போந்தனனோர்தினஞ் சாரும்வீதியிற் கண்டார்மயல்கொடு, சங்குந்தங்கலை யுந்தரியாதுளந் தளர்ந்துநாணமுந் தாமிழந்தார்களே.

இ-ள். எங்கும் - எவ்வுலகத்தும், தம்புகழ் ஓங்க - தமதுகீர்த்திபெருக, அளித்த - கொடுத்த, மூவேழுவள்ளல்களும் - இருபத்தொரு வள்ளல்களும், இவன்ஈகையால் - இவன்கொடையால், இவற்கே - இவனுக்கே, புகழ்தங்கும் தங்கும்என - புகழ்நிலைக்கும் நிலைக்குமென்று, சாற்றும் - சொல்லத்தகுந்த, சற்குணன்ஆம் - நற்குணமுடையவனாகிய, பொன்னுசாமி - பொன்னுசாமியென்னும்சீமான், ஓர்தினம் - ஒருநாள், மாதங்கமேற்கொடு போந்தனன்-யானைமேலேறிவந்தான், (அவனை) சாரும்வீதியில் கண்டார் - பொருந்திய

தெருவிற்கண்டமடமாதர்கள், மயல்கொடு - அவன்மீது மையல்கொண்டு, சங்கும் - சங்கவளையலும், தம்கலையும் - தமதுஆடையும், தரியாது - தரித்திராமல், உள்ளம் தளர்ந்து - மனந்தளர்ந்து, நாணமும் இழந்தார்கள் - நாணத்தையும் இழந்தார்கள்—எ-று. (௫௫)

சேவிலிகூற்று.

மட்டுத்தார்க்கணை யான்மதன்மாதினை வருத்தத்தான்மனநொந்துமயங்கிப்பொற், கட்டுத்தார்ப்புர விக்கொருவீரநின் கருத்துத்தாவிரங் கிப்புயமேவுபூ, மொட்டுத்தார்தர வாங்கிவரச்சொன்னாண் முத்தத்தார்நிரை யொத்தமுறுவலாள், தட்டுத்தானுரை யாமலருளரிச்சந்த்ரனேபொன்னு சாமிநரேந்த்ரனே.

இ-ள். அரிச்சந்த்ரனே—, பொன்னுசாமி நரேந்த்ரனே—, பொன்கட்டுதார்புரவிக்கு - பொற்கட்டுகளமைந்த கிண்கிணிமாலையையணிந்த குதிரையேற்றத்தில்வல்ல, ஒருவீர - ஒப்பற்றவீரனே, முத்தத்தார்நிரை ஒத்தமுறுவலாள் - முத்துமாலையின் வரிசையைநிகர்த்த பல்வரிசையை யுடையவளாகிய, மாதினை - என்பெண்ணை, மதன் - மன்மதனானவன், மட்டுதார்கணையால்- தேனையுடைய புஷ்பபாணங்களால், வருத்த - துன்பப்படுத்த, தான்மனம் நொந்துமயங்கி - தான்மனம்வருந்திமயங்கி, நின்கருத்து இரங்கி - உன்மனமிரங்கி, புயம்மேவு - உன்தோளிலணிந்த, பூமொட்டுதார்தர-பூவரும்புகளாற் சமைக்கப்பட்ட மாலையைநீகொடுக்க, வாங்கிவரச்சொன்னாள்—, (ஆதலால்) தட்டுஉரையாமல் அருள் - தடைசொல்லாமல் அருள்செய்வாயாக—எ-று. ()

பாலனத்தை விடுத்துநின்கண்ணிவள் பாலனத்தைவிடுத்தனள் வேணுகோ, பாலனத்தை யுடையோன்மருகன்கோ பாலனத்தையல் பாகனருள்பரன், பாலனத்தை யணிநாசிவள்ளிகோப் பாதபத்மம் பணிபொன்னுசாமிநீ, பாலனத்தைப் புரிசிலைமாரனம் பால்வருத்தப் படாமலிப்பாவையே.

இ-ள். வேணுகோபாலன் - ஸ்ரீக்ருஷ்ணன், நத்தை உடையோன் - சங்கத்தையுடையோன், (அவனது) மருகன் - மருகனும், கோபாலன் - நெற்றிக்கண்ணனும், அ-அந்த, தையல்பாகன் - பெண்பாகனும், அருள் - அருள் செய்கிற, பரன் - மேலோனுமாகிய பரமசிவனுடைய, பாலன் - புதல்வனும், நத்தைஅணிநாசி - நத்துஎன்னும் மூக்கணியைத்தரித்த நாசியையுடைய, வள்ளிகோ - வள்ளிமணாளனுமாகிய முருகக்கடவுளின், பாதபத்மம் - பாத்தாமரையை, பணி - வணங்குகின்ற, பொன்னுசாமி - பொன்னுசாமியென்னும் சீமானே, சிலை - கருப்புவில்லையுடைய, மாரன் அம்பால் - மன்மதபாணத்தால், வருத்தப்படாமல்—, இப்பாவையை - இந்தப்பெண்ணை, நீபாலனத்தைபுரி - நீரக்ஷிப்பாயாக—எ-று. (௫௭)

திருக்கடவூர் சிவபெருமான்துதி.

பொன்னருகுநாரருகும் பூவையாரருகுநிலந்
தன்னருகுமுழன்றுழன்று தவித்திருந்தேன்கடவூரில்
முன்னருகர்தமைவென்றுர் முதன்மூவர்தமிழ்மணக்கும்
உன்னருகுவரப்பெற்றே னுடையாயுன்னருளியல்பே.

இ-ள். பொன் அருகும் - பொன்னினிடத்தும், நார் அருகும் - நாரிடத்தும், பூவையார் அருகும் - பெண்களிடத்தும், நிலம்தன் அருகும் - நிலத்தினிடத்தும், உழன்று உழன்று - திரிந்து திரிந்து, தவித்திருந்தேன்—, கடவூரில் - திருக்கடவூரில், முன்-முற்காலத்தில், அருகர் தமைவென்றுர்முதல்-அருகரைவென்றவராகிய திருஞானசம்பந்தசுவாமிகள் முதலாகிய, மூவர்-மூவரது, தமிழ்மணக்கும் - தமிழ்மணக்கின்ற, உன் அருகுவரப்பெற்றேன்-உன்சந்நிதிக்கு வரப்பெற்றேன், உடையாய் - உடையவனே, உன் அருள் இயல்பே - (இதுவும்) உன் அருளினியல்பேயாம்—எ-று.

மூவர்தமிழ் - தேவாரம். (௫௫௮)

பிதாக்கள் இவரெனல்.

பிறப்பித்தோன்வித்தைதனைப் பேணிக்கொடுத்தோன்
சிறப்பினுபதேசஞ் செய்தோன்—அறப்பெரிய
பஞ்சத்தில்அன்னம் பகிர்ந்தோன்பசிதீர்த்தோன்
எஞ்சாப்பிதாக்களென வெண்.

இ-ள். பிறப்பித்தோன் - பிறப்பித்தவன், வித்தைதனைபேணிகொடுத்தோன் - வித்தையை விருப்பத்தோடு கற்பித்தவன், சிறப்பின் உபதேசம் செய்தோன் - சிறப்புள்ள உபதேசம்செய்தவன், அறப்பெரிய பஞ்சத்தில்-மிகப்பெரியபஞ்சத்தில், அன்னம்பகிர்ந்தோன் - அன்னமிட்டோன், பசிதீர்த்தோன் - பசிதீர்த்தவன், (இவர்களை) எஞ்சா - குறையாத, பிதாக்கள் என - பிதாக்களென்று, எண் - நினைக்கக்கடவாய்—எ-று. (௫௫௯)

பால்விற்கவந்த வோரிடைச்சியைப்பார்த்து
ஒருகாமுகன் சொல்லியது.

கருப்பாலேடணையடித்துப் பனிநீர்தேக்கிக்
கதலிப்பலாக்கனிகளால் வரம்புகட்டும்
திருப்பாலைவாழீசர் பவனியாடுந்
தெருவிற்பால்விலைபகர்சிற் றிடைச்சியாரே

அருட்பாலோபொருட்பாலோ காமப்பாலோ
ஆழிதனைக்கடைந்தெடுத்த வமுதப்பாலோ
இருப்பாலேமனம்படைத்தீர் நல்லீர்செல்லீ
ரெந்தப்பால்விற்கவந்தீ ரியம்புவீரே.

இ-ள். கருப்பாலே பணை அடித்து - கரும்பினால் பணையையடித்து, பனிநீர்தேக்கி - பனிநீர்நிறைத்து, கதலி பலாக்கனிகளால் - கதலிபலாக்கனிகளைக்கொண்டு, வரம்புகட்டும் - வரம்புகட்டுகின்ற, திருப்பாலைவாழ் ஈசர் - திருப்பாலையில் வாழ்கின்ற சிவபெருமான், பவனிஆகும் தெருவில் - பவனிவருந்தெருவில், பால்விலைபகர் - பால்விற்கவந்த, சிற்றிடைச்சியாரே - சிறிய இடைப்பெண்ணே, (நீர்) இருப்பாலேமனம்படைத்தீர் - இரும்புமனத்தைப் பெற்றிருக்கின்றீர், அருள்பாலோ-அறப்பாலோ, பொருட்பாலோ—, காமப்பாலோ—, ஆழிதனை கடைந்துஎடுத்த - திருப்பாற்கடலைக் கடைந்தெடுக்கப் பட்ட, அமுதப்பாலோ—, செல்லீர் நில்லீர் - போகாது நின்று, எந்தப்பால் விற்கவந்தீர்—, இயம்புவீர் - சொல்லுவீராக—எ-று.

பணை - வயல், திருப்பாலை - ஓர்சிவஸ்தலம், பவனி - ஊர்க்கோலம். சிற்றிடைச்சியாரே — என்பதற்கு சிற்றிடையையுடையவரே என்றுரைப்பினுமமையும். (ருசுO)

பூப்பார்த்துப்புகழ்பார்த்துப் பொருள்பார்த்துக் கவிதைசொல்லும் புலவோர்தங்கள், நாப்பார்த்துக்கொடைகொடுக்கு நல்லதம்பி தந்தசொக்க நாதாவென்னால், காப்பாற்றமுடியாது கையிலொருகாசுமில்லை கடனென்றாலும், பாப்பாத்திசோறிடுவா ளிருந்தாலுமுறங்க மதப் பயலொட்டானே.

இ-ள். பூபார்த்து-நிலப்பெருக்குநோக்கி, புகழ்பார்த்து - புகழைநோக்கி, பொருள்பார்த்து - பொருளைநோக்கி, கவிதைசொல்லும் - கவிபாடுகிற, புலவோர் தங்கள்-புலவர்களுடைய, நாபார்த்து-நாவின்வல்லமையைப் பார்த்து, கொடைகொடுக்கும் - கொடுத்தலைச்செய்கின்ற, நல்லதம்பிதந்த - நல்லதம்பியீன்ற, சொக்கநாதா—, என்னால் காப்பாற்ற முடியாது—, கையில் ஒரு காசும் இல்லை—, கடன்என்றாலும்—, பாப்பாத்திசோறு இடுவாள்—, இருந்தாலும்—, மதப்பயல் - மன்மதனாகியபயல், உறங்கவொட்டான்—எ-று. ()

நீருஞ்சுமந்தேன்விறகெடுத்தே னித்தஞ்சுமந்தேன்சாணங்கம்
நிகழவடிபட்டுதைபட்டே னின்றேன்வையையக்காளாக
ஆருழ்விரும்பாத்துகிலுடுத்தே னழகுமேனிகரிக்கோலம்
ஆனேனதனாலன்றேவுன் னடியாளுனக்குச்சரியானேன்.

காரும்விரும்புங்கடுவணிந்த களனேகருணைப்பெருங்கடலே
கமலத்தயன்மால்காணுத காலகாலாவென்றுயரம்
தீரும்படிதண்ணருள்புரிவாய் சிவனேயமரர்க்கொருவிருந்தே
தேவேதெய்வமறைப்பொருளே திகழுங்கடவூர்ச்சேவகனே.

இ-ள். நீரும் சுமந்தேன்—, விறகுஎடுத்தேன்—, நித்தம் சாண் அங்கம் சுமந்தேன்—, ஆரும் விரும்பா துகில் உடுத்தேன் - யாரும் விரும்பாத ஆடையுடுத்தேன், அழகுமேனி கரிக்கோலம்ஆனேன் - அழகிய வுடம்பு கரிக்கோலமாகப் பெற்றேன், அதனுல் அன்றே - அந்த ஏதுவினுலல்லவோ, உன் அடியாள் - உன் அடியவளாகிய நான், உனக்கு சரியானேன்—, காரும் விரும்பும் கடுஅணிந்த களனே - கரியமேகமும் விரும்புகின்ற நீலகண்டத்தையுடையவனே, பெருகருணைக்கடலே—, கமலத்து அயன் - தாமரைமலரையிடமாகவுடைய பிரமனும், மால் - திருமாலும், காணுத-காணவொண்ணுத, காலகாலா - காலகாலனே, என் துயரம் தீரும்படி—, தண் - குளிர்ந்த, அருள்புரிவாய்—, சிவனே—, அமரர்க்கு - தேவர்களுக்கு, ஒருவிருந்தே - ஒப்பற்ற விருந்தே, தேவே - கடவுளே, தெய்வம்மறைப்பொருளே - தெய்வத்தன்மையுள்ள வேதப்பொருளே, திகழும் - விளங்குகின்ற, கடவூர் சேவகனே-திருக்கடவூர்ச்சேவகனே, (நீர் சுமத்தல்முதலியவற்றுல் உனக்குச் சரியானேன் ஆதலால்என்னைக் கருணைசெய்தருள்வாய் என்பதுகருத்து)—எ-று. (ருசுஉ)

கெட்டசாறுதவிடுகஞ்சி கிருமியுண்டமாவறைக்
கீரைவேர்தெளிந்தமோர் முறிந்தபாகுகிண்டிமா
இட்டசோறுகொழியலுப்பி டாதபுற்கையாயினும்
எங்குமன்பதாகநுங்க வின்பமாயிருக்குமே
பட்டபாகுபசுவினெய் பருப்புமுக்கனிக்குழாம்
பாளிதங்கடாளிதங்கள் பண்ணியாரவகையுடன்
அட்டபாற்குழம்புகன்ன லமுதமோடமுதவினும்
அன்பிலுேடளித்திடாத வசநமென்னவசநமே.

இ-ள். கெட்டசாறு—, தவிடு—, கஞ்சி—, கிருமிஉண்டமா - புழுவுண்டமா, அறைக்கீரைவேர்—, தெளிந்தமோர்—, முறிந்தபாகு—, கிண்டிகிளறி, மாஇட்டசோறு - கேழ்வரகு மாவேர்டுசேர்த்தசோறு (களி), உப்புஇடாத-உப்புப்போடாத, கொழியல் புற்கைஆயினும் - கொழியற்சோருனலும், எங்கும் - எவ்விடத்தும், அன்பதாக - அன்போடு இட்டதாக, நுங்க - அதையுண்ண, இன்பமாயிருக்கும்—, பட்டபாகு - பதப்பட்டபாகு, பசுவின் நெய்—, பருப்பு—, முக்கனிகுழாம் - முக்கனியின்கூட்டம், பாளிதங்கள்-

பாற்சோற்றுவகைகள், தாளிதங்கள் - தாளித்த சோற்றுவகைகள், பண்ணியார வகையுடன்—, அட்டபால்குழம்பு—, கன்னல் - சர்க்கரை, அமுதமோடும் உதவினும் - சோற்றுடனே கொடுத்தாலும், அன்பிஞேடு அளித்திடாத - அன்போடு படைக்காத, அசநம் - சோறு, என்ன அசநம் - என்னசோறு, (அதுசோறல்ல)—எ-று. (௫௧௧)

சந்தப்பாவிருத்தப்பா கலிப்பாவெண்பா
தாழிசைப்பாக்கொச்சகப்பாத் தனிப்பாவுக்கும்
விந்தைப்பாவாகிய கிரந்தப்பாவும்
வெல்லப்பாவதுபோல விகடப்பாவும்
எந்தப்பாவுரைத்திடினு மொருபேறில்லா
ஏதப்பாவிக்குநின திணைப்பாதத்தைக்
கந்தப்பாமுருகப்பா போரிவாழ்வே
கையப்பாமெய்யப்பா காட்டப்பாவே.

இ-ள். சந்தப்பா—, விருத்தப்பா—, கலிப்பா—, வெண்பா—, தாழிசைப்பா—, கொச்சகப்பா—, தனிப்பாவுக்கு - தனிப்பாவினும், விந்தைபா ஆகிய - விநோதப்பாவாகிய, கிரந்தப்பாவும்—, வெல்லப்பாவதுபோலவிகடப்பாவும்—, (ஆகிய) எந்தப்பா உரைத்திடினும் - எந்தப்பாடலைப் பாடினுலும், ஒருபேறு இல்லா - ஒருபிரயோசநத்தையும் அடையாத, ஏதம்பாவிக்கு - குற்றஞ்செய்தபாவியாகிய எனக்கு, கந்தப்பா—, முருகப்பா—, போரிவாழ்வே—, நினது இணைப்பாதத்தை - உன்திருவடியிணையை, கைமெய்காட்டு - கைக்கு மெய்யாகக்காட்டுவாயாக—எ-று. (௫௧௪)

வழிதப்பிப்போன ஒருபுலவன் திருச்சேந்தூர்

முருகர்பேரில்பாடியது.

ஆதிசிவன்செத்தானே வுமைசெத்தாளோ
ஐங்கரனுஞ்செத்தானே வரிசெத்தானே
வேதியனுஞ்செத்தானே நீசெத்தாயோ
வெட்டவெளியாநந்தம் வெறும்பாழாச்சோ
நாதியற்றுப்போனயோ வழிகாட்டாயோ
நாயேனுக்கிரங்கிவந்து நலந்தாராயோ
பாதிவழிதனிலவதிப் படுத்துவாயோ
பாதகாதிருச்செந்தூர்ப் பதியுளானே.

இ-ள். ஆதிசிவன்செத்தானே—, உமைசெத்தாளோ—, ஐங்கரனும் செத்தானே—, அரிசெத்தானே—, வேதியனும் செத்தானே—, நீசெத்

தாயோ—, வெட்டவெளிஆநந்தம் வெறும்பொய் ஆச்சோ—, நாதி அற்றுப் போனாயோ-திக்கற்றுப்போனாயோ; வழிகாட்டாயோ—, நாயேனுக்குஇரங்கி வந்து - நாயினேனுக்கு மனமிரங்கிவந்து, நலம்காட்டாயோ - நன்மையைத் தாராயோ, பாதிவழிதனில் அவதிப்படுத்துவாயோ—, பாதகா—, திருச்செந் தூர்ப்பதி உள்ளானே - திருச்செந்தூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளி யிருக்கும் முருகக்கடவுளே—எ-று. (௫௬௫)

ஒருஏழைப்புலவன் விராலிமலைக் கந்தர்பேரில் பாடியது.

காவென்றுஞ்சிந்தாமணியென்றுஞ்சொல்லியென் கையிலள்ளித்
தாவென்றுகேட்கத் தரித்திரம்பின்னின்று தள்ளியெனைப்
போவென்றுரைக்கவு நாணமங்கேயென்ன போவதிங்கு
வாவென்றழைக்கவும் வந்தேன்விராலி மலைக்கந்தனே.

இ-ள். விராலிமலைகந்தனே—, காஎன்றும் - கற்பகச் சோலையென்றும், சிந்தாமணி என்றும்—, சொல்லி—, என்கையில் அள்ளிதாஎன்றும்—, கேட்க—, தரித்திரம்பின்நின்று தள்ளி என்னைபோவென்று உரைக்கவும்—, நாணம் அங்கேஎன்னபோவது இங்கேவாஎன்று அழைக்கவும்—, வந்தேன்—, (ஆதலால் நீகருணைசெய்யாளவேண்டும்)—எ-று. (௫௬௬)

முன்னுகநீரளக்கு முடிமன்னர்க்காத்திருக்கு முனிகளென்னை, மன்னுமலோடுவிக்கு மாதரைச்சொற்கேட்பிக்கு மடக்குமாட்டைப், பன்னகத்தலைநறுக்கும் பாலரைச்சொற்கேட்குவிக்கும் படிப்புண் டாக்கும், எந்நாளுங்கிழவருக்கோ ரிடுப்பாகுநடைகொடுக்கு மென் கைக்கோலே.

இ-ள். முன்னுக நீர்அளக்கும்—, முடிமன்னர்காத்திருக்கும் - முடிமன் னரைக்காத்திருக்கும், முனிகள் என்னைமன்னுமல் ஓடுவிக்கும்—, மாதரை-மனைவியரை, சொல்கேட்பிக்கும் - சொல்கேட்கும்படிசெய்யும், ஆட்டை மடக்கும்—, பல்நாகம் தலைநறுக்கும் - விஷப்பல்லையுடைய பாம்பின்தலையை நறுக்கும், பாலரை - குழந்தைகளை, சொல்கேட்குவிக்கும் - சொல்லைக் கேட்கும்படிசெய்யும், படிப்பு உண்டாக்கும்—, எந்நாளும்—, கிழவருக்கு—, ஓர் இடுப்பு ஆகும்—, நடைகொடுக்கும்—, (இப்படியெல்லாம் செய்வது யாதெனின்) என்கைக்கோலே - என்கைத்தடியேயாம்—எ-று. (௫௬௭)

சங்கையிலாமதன்விடுத்த பகழிதைத்தபுண்வருத்தந் தன்னை நோக்கிக், கொங்கையையொத்திடங்கொடுத்துக் குங்குமச்சாந்தப் பற்றுங் குளிரப்பூசிச், செங்கனிவாயிதழ்மருந்து முள்ளுக்கேகொடுத் தெனக்குச் செய்தநன்றி, மங்கையுரேயிந்திரவி தெற்குவடக்குதித் திடினு மறந்திடேனே.

இ-ள். சங்கை இல்லா - சங்கித்தலில்லாத, மதன்விடுத்த - மன்மதன் பிரயோகித்த, பகழிதைத்த - அம்புதைத்த, புண்வருத்தம் தன்னைநோக்கி- புண்ணின் துன்பத்தைப் பார்த்து, கொங்கையை ஒத்திடங்கொடுத்து-முலையை ஒற்றிடங்கொடுத்து, குங்குமச்சாந்தம் பற்றும் குளிர்பூசி - குங்குமச்சந்தனப்பூச்சும் உடம்பு குளிரும்படிபூசி—, உள்ளுக்கு செங்கனிவாய் இதழ் மருந்தும் கொடுத்து—, எனக்குசெய்தநன்றி—, மங்கையரே—, இந்துஇரவி சந்திரசூரியர்கள், தெற்குவடக்கு—, உதித்திடினும்—, மறந்திடேன்—எ-று.

ஒருகோட்டுக்கலைமுனியு மொளிதிகழும்புலியாடை யுடுத்தகோவும், வருமலர்வாழ்திசைமுகனும் வானவர்கணாயகனு மகிடன்றானும், கரியநிறத்திருமாலும் வாலியும்பராசரனுங் காமனம்பால், பெருமையிழந்தனரென்றால் சிறுமனிதர்க்கெப்படியோ பேசுங்காலே.

இ-ள். ஒருகோடு - ஒற்றைக்கொம்பையுடைய, கலைமுனியும் - கலைக்கோட்டுமுனிவரும், ஒளிதிகழும் புலிஆடைஉடுத்தகோவும் - ஒளி விளங்குகின்ற புலித்தோலையுடைய சிவபெருமானும், மருமலர்வாழ் திசைமுகனும்- மணம்பொருந்திய தாமரைமலரில் வாழ்கின்ற பிரமனும், வானவர்கள் நாயகனும் - தேவராஜனாகிய இந்திரனும், மகிடன்தானும் - மகிடாசுரனும், கரியநிறத்திருமாலும் - கருநிறத்தையுடைய திருமாலும், வாலியும்—, பராசரனும்—, காமன் அம்பால் - மன்மத பாணத்தால், பெருமை இழந்தனர் என்றால் - தமது பெருமையை யிழந்தார்களானால், பேசுங்கால் - சொல்லுமிடத்து, சிறுமனிதர்க்கு - அற்பமனிதருக்கு, எப்படியோ - எப்படியிருக்குமோ, (யோசித்துப்பாருங்கள்)—எ-று. (ருசுக)

வாசவனும்பிறர்நகைக்க வுடலெடுத்தானொருவனரா வடிவமானான், தேசுபுகழ்க்கலைமதியு முடலிழந்தான்மலர்வேதன் சிரமொன்றற்றான், ஈசனுதல்விழிதிறந்தா னிராவணசுந்தோபசுந்த ரிறந்தார் மண்மேல், காசினிப்புன்மானிடரோ மோகசாகரமதனைக் கடக்கவல்லார்.

இ-ள். வாசவனும்பிறர்நகைக்க உடலெடுத்தான்—, ஒருவன் அராவடிவம்ஆனான் - ஒருவன் பாம்புருவமானான், தேசுபுகழ்கலைமதியும் உடல் இழந்தான் - ஒளியும் புகழும்உள்ள கலைகளையுடையசந்திரன் உடலழிந்தான், மலர் வேதன் சிரம்ஒன்று அற்றான் - பிரமன் ஒருதலை அறப்பெற்றான், ஈசன் நுதல்விழிதிறந்தான் - சிவன் நெற்றிக்கண்ணைத்திறந்தான், இராவணசுந்தோபசுந்தர்கள் இறந்தார்; (இப்படியிருக்க) மண்மேல்காசினி-மண்மேலுள்ளஇந்த

வுலகத்தில், புன்மானிடரோ - அற்பமனிதரோ, மோகசாகரமதனை கடக்க வல்லார் - மோகக்கடலைக் கடக்கவல்லவர்—எ-று.

வாசவன் - இந்திரன், அராவடிவமானவன் - நகுடன், சுந்தோபசுந்தர்- சுந்தன் உபசுந்தன் என்னுமிருவர். (௩எ0)

உணங்கியொருகான்முடமாகி யொருகண்ணின்றிச்செவியிழந்து
வணங்குநெடுவாலறுப்புண்டு மன்னுமுதுகில்வயிறொட்டி
அணங்குநலியமெலிவெய்தி யகல்வாயோடுகழுத்தேந்திச்
சுணங்கன்முடுவல்பின்சென்றால் யாரைக்காமன்றுயர்செய்யான்.

இ-ள். சுணங்கன் - நாயானது, உணங்கி - வற்றி, ஒருகால்முடமாகி—, ஒருகண் இன்றி—, செவியிழந்து—, வணங்கும் - வளைவாகிய, நெடுவால் அறுப்புண்டு—, மன்னுமுதுகில்வயிறுஒட்டி - பொருந்திய முதுகிலே வயிறுஒட்டி, அணங்குநலிய - நோய்வருத்த, நலிவுஎய்தி - துன்பமடைந்து, அகல்வாயோடு - பிளந்தவாயுடன், கழுத்து எந்தி - முடுவல் பின்சென்றால் - பெண்ணயின் பின்னேபோனால், யாரைகாமன் துயர்செய்யான்-யாரைத்தான் மன்மதன் துன்பப்படுத்தமாட்டான்—எ-று. (௩எக)

## வெறிவிலக்கல்.

கட்டிறலைதிருப்பிவைத்தாற் றலைவலிபோமோவந்தக் கதைபோலாட்டுக், குட்டியிதென்னடிசகியே கெட்டிவைத்தியன்பள்ளிகொண்டான்பாம்பின், பெட்டியினுங்கையிடுவ னுண்டையும்பாய்ச் சிடுவனன்றாய்ப் பெலமாய்க்காயம், கட்டிடுவனிஃதல்லாலாறுதே மதன்விடும்ப கழிப்புண்டானே.

இ-ள். கட்டில் தலைதிருப்பிவைத்தால் - கட்டிலைத் தலைமாற்றிவைத்தால், தலைவலிபோமோ—, அந்தக்கதைபோல்—, ஆட்டுக்குட்டி இதுஎன்னடிசகியே—, கெட்டிவைத்தியன் பள்ளிகொண்டான்—, பாம்பின் பெட்டியினும்கையிடுவன்—, உண்டையும் பாய்ச்சிடுவன்—, நன்றாய்பெலமாய் காயம்கட்டிடுவன்—, இஃது அல்லால் - இப்படிசெய்தாலன்றி, மதன்விடும் - மன்மதன்விடுகின்ற, பகழிப்புண் - அம்புதைத்தபுண்—, ஆறுது—எ-று. ()

மரமதுமரத்திலேறி மரமதைத்தோளில்வைத்து
மரமதுமரத்தைக்கண்டு மரத்தினன்மரத்தைக்குத்தி
மரமதுவழியேசென்று வளமனைக்கேகும்போது
மரமதுகண்டமாதர் மரமுடன்மரமெடுத்தார்.

இ-ள். மரம் - அரசு, (அரசன்). மரம் - மா, (குதிரை), மரம் - வேல், மரம் - வேங்கை, (புலி). மரம் - ஆல், மரம் - அத்தி, அரசன் தன்குதிரை

மீதேறிப்போய்க் கைவேலினால் புலியைக்குத்தி, வீட்டிற்குத் திரும்பி வருதலும், அவன் வரவுகண்ட மாதர்கள் அவனுக்கு ஆலத்தி யெடுத்தார்கள் என்பதாம். (௫௭௩)

மணலி சோலையப்பமுதலியார்பேரில் மோகங்கொண்ட

வொருதாசி பாடியது.

மாலைதனைப்புனைந்தாலு மலரணையிற்படுத்தாலு மருவார்பன்னீர், ஏலவுறத்தெளித்தாலு மெவ்வளவேனுங்குளிர விலையென்செய்கேன், கோலமுறுமணலியிலே கிளைகளொடுசுகம்படைத்துக் குலாவுமெங்கள், சோலைதனைச்சேராமற் காமவிடாய்தணியாதே தோகைமாரே.

இ-ள். மாலைதனை புனைந்தாலும் - மலர்மாலையைச் சூட்டினாலும், மலர் அணையில் படுத்தாலும் - புஷ்பசயனத்திற் படுத்தாலும், மருஆர்பன்னீர்-மணம்பொருந்திய பன்னீரை, ஏல - பொருந்த, உறதெளித்தாலும் - மிகவும் தெளித்தாலும், எவ்வளவேனும் குளிரவில்லை - சிறிதும் குளிரவில்லை, என்செய்கேன் - என்னசெய்வேன், கோலம்உறு மணலியிலே - அழகுமிகுந்த மணலியிலே, கிளைகளொடு சுகம்படைத்துகுலாவும் - சுற்றத்தாரோடுசுகவாழ்வைப் பெற்றுவாழ்கின்ற, எங்கள் சோலைதனைச் சேராமல் - எங்கள் சோலையப்பமுதலியாரைக் கூடாமல், காமவிடாய் தணியாது—, தோகைமாரே - மாதர்களே—எ-று.

சோலை என்றதற்கேற்பக் கிளைகள் மாக்கிளைகளென்றும், சுகம் கிளிகளென்றும் பொருள்கொள்க. (௫௭௪)

இதுவுமது.

பாலைநிகர்மொழிமாதே யென்னிடத்திற்பூரணமாய்ப் பட்சம்வைத்துக், காலமுகிலனையகரன் மணலியில்வாழ்சோலையெனுங்கன்னன்பாற்போய், மாலைகேண்மறுத்தாலென் மனத்தைக்கேண் மறுக்கின்மதன் வாராவண்ணம், ஓலைகேள்மறுத்தக்காற் கிள்ளாக்குக்கேள் வேறொன் றேதிடாதே.

இ-ள். பாலைநிகர்மொழி - பாலைநிகர்த்த மொழியையுடைய, மாதே-பெண்ணே, என்னிடத்தில் - என்மீது, பூரணமாய் பட்சம்வைத்து—, காலமுகில் அனையகரன்-கார்காலமேகம்போலும் கொடைக்குணத்தையுடையவனாய், மணலியில்வாழ் - மணலியில்வாழ்கின்ற, சோலை என்னும் - சோலையென்று யாவருஞ்சொல்லுகின்ற, கன்னன்பால்போய் - கர்ணனிடத்தேசென்று, மாலைகேள்—, மறுத்தால் என்மனத்தைகேள்—, மறுக்கின்-அதையுமறுத்தால்,

மதன்வராவண்ணம் - மன்மதன் என்னிடத்திற்கு வாராதிருக்கும்படி, ஓலே கேள் - திருமுகங்கேள், மறுத்தக்கால் - அதையும் மறுத்தால், இள்ளாக்குக் கேள்—, வேறு ஒன்று ஓதிடாதே - வேறொன்றுஞ்சொல்லாதே—எ-று. ()

## திருத்தணிகை முருகர்மீது மையல்கொண்ட ஒருதலைவி தன்தோழியோடு கூறியது.

அரக்கனலையிலங்கையைவென் றோன்மருகன்றணிகேச னன்பர் பாலெனஞ், சிரக்கனலையாமலுனைக் காப்பானென்றனையடிதே மொழி யேமாலை, வரக்கனலைமதிவீசப் படுமோவவ்வேளைதனில் வாதுக்கேம, துரக்கனலைமதப்பயலென் முனங்குனிக்கத்தகுமோ சொற்றோகை நீயே.

இ-ள். அரக்கன் - அரக்கனாகிய ராவணனுடைய, அலை இலங்கையை—, வென்றோன் - வென்றவனாகிய திருமாலின், மருகன் - மருகனாகிய, தணிகேசன் - தணிகைநாயகன், அன்பர்பால்-தன்மீது அன்புவைத்தவரிடத்தில், நெஞ்சுஇரக்கன் - மனவிரக்கமுள்ளவன் (ஆதலால்), அலையாமல் - வருந்தாமல், உன்னை காப்பான் என்றனையடி - உன்னைக்காப்பானென்று சொல்லினையடி, தேமொழியே - தேன்போலும் இன்சொல்லையுடையதோழீ, மாலைவர - மாலைக்காலம்வருதலும், மதிகனலைவீசப்படுமோ - சந்திரன் நெருப்பை வீசப்படுமோ, அவ்வேளைதனில் - அந்தச்சமயத்தில், வாதுக்கே - வம்புக்கே, மதப்பயல் - மன்மதப்பையன், என்முன்னம் - என்முன்னேநின்று, மதுரக்கன்னலை - இனியகரும்புவில்லை, குனிக்கத்தகுமோ-வளைக்கத்தகுமோ, தோகை-பெண்ணே, நீயேசொல்—எ-று. (௩எ௬)

## நாரைவிடுதூது.

### வரதுங்கராமபாண்டியன்மேல் ஒருதலைவிபாடியது.

என்னையவரறமறந்தும் யானவரைமிகநினைந்திங் கிருந்துவாடல்
முன்னைவிதிப்படிதானோ முற்பிறப்பிற்செய்தவினை முடிந்தவாறோ
கன்னனெங்களபிராமன் வரதுங்கராமனெழிற் காசிநாட்டில்
அன்னவயற்குருகினங்கா டனித்திருக்கமுடியாதென்றறைகுவீரே.

இ-ள். என்னை—, அவர்—, அறமறந்தும் - முழுதும் மறந்திருந்தும், யான்—, அவரைமிகநினைந்து இங்கு இருந்துவாடல்—, முன்னை விதிப்படி தானோ—, முற்பிறப்பில் செய்தவினை—, முடிந்தவாறோ - இப்படி முடிந்ததோ—, கன்னன் - கர்ணன், எங்கள் அபிராமன் - எங்கள் அழகன், வரதுங்கராமன்—, (அவனது) எழில்காசிநாட்டில் - அழகிய காசிநாட்டிலே, அன்னவயல் - அன்னப்பறவைகளுக்கிடமாகிய வயலிலுள்ள, குருகு இனங்

காள் - நாரையினங்களே, தனித்திருக்க முடியாதென்று—, அறைகுவீர்-(அந்தவரதுங்கராமனிடத்திற்போய்) சொல்லுவீராக—எ-று. (ருஎஎ)

முன்னொருவூரின்பேரா முதலெழுத்தில்லாவிட்டால்
நன்னகர்மன்னன்பேரா நடுவெழுத்தில்லாவிட்டால்
கன்னமாமிருகத்தின்பேர் கடையெழுத்தில்லாவிட்டால்
உன்னியதேனின்பேரா மூரின்பெருரைத்திடீரே.

இ-ள். (புலவர்களே.) முன் ஒரு ஊரின்பேர்ஆம் - மதுரை, முதல் எழுத்து இல்லாவிட்டால் நன்னகர் மன்னன்பேர்ஆம் - துரை, நடுவெழுத்துஇல்லாவிட்டால் கன்னமாமிருகத்தின்பேர் - மரை, கடையெழுத்து இல்லாவிட்டால் உன்னியதேனின்பேராம் - மது, ஊரின்பேர் உரைத்திடீர் - (இப்படிப்பட்ட) ஊரின்பேரைச் சொல்லுவீராக—எ-று. (ருஎஅ)

புதுக்கோட்டை முத்துக்குமரதோண்டமானை
ஒருபுலவன் புகழ்ந்துபாடியது.

புதுவைமுத்துக் குமரதொண்டன் றமிழ்போலக் கவிமதுரம் பொழியப்பாடுஞ், சதுரருண்டோ வெனவிரிஞ்சன்வினவினன்சேடனன் றானென்றானோர், பதமெனினுந் தோன்றாமன் மால்கொண்டு கடல்வீழ்ந்தான் பதுமன்சீறி, மதமுறுநாவைப்பிளந்து காதறுத்து மண்சுமக்க வைத்திட்டானே.

இ-ள். புதுவை முத்துக்குமரதொண்டன்—, (பாடுகிற)தமிழ்போல-தமிழ்க்கவிபோல, கவி - கவிகளை, மதுரம்பொழியப்பாடும் சதுரர் உண்டோ என - மதுரஞ்சொரியப்பாடுகிறசமர்த்தர் உளரோவென்று, விரிஞ்சன்வினவினன்-பிரமன்கேட்டான், (அதற்கு) சேடன்-ஆதிசேடன், நான்தான் என்றான்-நான்தான்பாடத்தக்க சமர்த்தன் என்றுசொல்லி, ஓர்பதம் எனினும் தோன்றாமல் - ஒருசொல்லாகிலும் தோன்றாமல், மால்கொண்டு - மயக்கங்கொண்டு, கடல்வீழ்ந்தான் - கடலில்விழுந்தான், (இதைக்கண்ட) பதுமன் சீறி - பிரமன்கோவித்து, (அவனது) மதம்உறுநாவைபிளந்து - மதமிகுந்த நாவை இருபிளவாகப்பிளந்து, காது அறுத்து—, மண்சுமக்க வைத்திட்டானே—எ-று.

பதம் - கால், மால்கொண்டு - திருமாலைத்தாங்கி, கடல் - பாற்கடல், நாவைப்பிளந்து - நாவையிருகூறாய்ப்பிளந்து, காதறுத்து - செவிப்புலனில்லாமற்செய்து, மண்சுமக்க - பூமியைத்தாங்க. (ருஎகூ)

கிள்ளைவிடுதூது.

மதுகரத்தையிகழ்ந்துகுயில் வடிவேலர்தமையழைத்து வாரீரெனன்றே, இதமுரைத்துச் சென்றதென்ன வின்னமுங்காணேனத

னுக் கிரக்கமேது, சதமிதெனவளர்த்தெடுத்த தாய்க்குதவாதார்க்குத வுந் தத்தையேநீ முதுமறைசொல் குமரர்தமை யழைத்துவா மதப் பயலை முடுக்கத்தானே.

இ-ள். குயில் - குயிலானது, மதுகரத்தை இகழ்ந்து - வண்டுகளையிகழ்ந்து, வடிவேலர்தமை அழைத்துவாரேன் என்று—, இதம் உரைத்து-எனக்கு இதமொழிசொல்லி, சென்றது - போனது, என்னஇன்னமும் காணேன்—, அதனுக்கு - அதற்கு, இரக்கம் எது—, இதுசதம்என - இதுசதமென்று, வளர்த்தெடுத்ததாய்க்கு உதவாது—, ஆர்க்கு உதவும்—, தத்தையே - கிளியே, நீ - நீபோய், மதப்பயலை முடுக்க—, முதுமறைசொல் - பழையவேதங்களால் புகழப்பட்ட, குமரர்தமை - முருகக்கடவுளை, அழைத்துவா—எ-று.

முதுமறைசொல் என்பதற்கு - (சிவபிரானுக்கு) முதிய பிரணவப்பொருளைச்சொன்ன என்றுரைப்பினும் பொருந்தும். (௫அ0)

## தியாகரைப் புகழ்ந்துபாடியது.

குருமூர்த்தமாய்வந்து வினையொழித்துமுத்திதனைக் கொடுக்கத் தியாகர், ஒருமூர்த்தியல்லாமன் மற்றுமொருமூர்த்தியுமிங் குண்டோ நெஞ்சே, திரிமூர்த்தியென்பார்க ளவரவர்வாகனமேறிச் சேணிற்சும்மா, திரிமூர்த்தியல்லாம லொருமூர்த்தியுங்கதியிற் சேர்த்திடாரே.

இ-ள். குருமூர்த்தமாய்வந்து - குருரூபமாயெழுந்தருளி, வினை ஒழித்து-நமது தீவினையையொழித்து, முத்திதனைக்கொடுக்க—, தியாகர்ஒருமூர்த்தி அல்லாமல்—, மற்றும் ஒருமூர்த்தியும் - வேறொருமூர்த்தியும், இங்கு உண்டோ - இவ்வுலகத்தில் உண்டோ, நெஞ்சே - மனமே, திரிமூர்த்திஎன்பார்கள்—, அவர் - அவர்கள், அவர்வாகனம்ஏறி - அவர்களுடைய வாகனங்களில் ஏறிக்கொண்டு, சேணில் - ஆகாயவீதியில், சும்மா—, திரிமூர்த்தி அல்லாமல் - திரிகின்ற மூர்த்திகளேயல்லாமல், ஒருமூர்த்தியும்—, கதியில் - மோக்ஷத்தில், சேர்த்திடார் - சேர்க்கமாட்டார்கள்—எ-று. (௫அ௧)

## நற்றாயிரங்கல்.

இருக்கோலமிடுங்கலைசைத் தெய்வசிகாமணிமுகில்வந் திணங்கா நாளில், உருக்கோலவடிவாளுன் மைந்தனுமைத்துனனு நிதமோய்வி லாமல், மருக்கோலஞ்செய்வதினும் வடவனலைச்சொரிவதினு மயக்க முற்றுத், திருக்கோலங்கொண்டமக டியங்குகின்றுண் மயங்குகின்று டினமுந்தானே.

இ-ள். இருக்கு ஓலமிடும் - வேதங்கள் முழங்குகின்ற, கலைசை-கலைசையில்வாழ்கின்ற, தெய்வசிகாமணி - தெய்வசிகாமணியென்கிற, முகில் - மேகம்போலுங் கொடையாளன், வந்து இணங்கா நாளில் - வந்து சேராத நாளில் உருகோலவடிவானான் மைந்தனும் - வராகரூபமான திருமாலுக்கு மகனாகிய மன்மதனும், மைத்துனனும் - மைத்துனனாகிய சந்திரனும், நிதம் - நாள்தோறும், ஓய்வுஇல்லாமல் —, மருகோல் அஞ்சு எய்வதினும் - புஷ்பபாணங்கள் ஐந்தெய்வதனாலும், வடவனலை சொரிவதினும் - வடவைத்தீயைப்பொழிவதனாலும், மயக்கம்உற்று - மயக்கமடைந்து, திருக்கோலம்கொண்டமகள் - திருமகளது அழகைக்கொண்டிருக்கிற என்பெண்ணானவள், தினமும் - தினந்தோறும், தியங்குகின்றாள் மயங்குகின்றாள் - திகைத்து மயங்காநின்றாள் (என்செய்வேன்) —எ-று.

கோலம் - பன்றி, மருக்கோல் - மணமுள்ள அம்பு (மலர்க்கணை.) ()

## தலைவிகூற்று.

முந்தனத்தைத்தூதுவிட்டேன் வரவுமில்லைமதராஜன் முனிந்தேவில்லால், எந்தனத்துக்கிலக்காகவெய்கின்றான்மலர்வாளி யினியென்செய்வேம், கந்தனத்தையகலாத பூம்பாவைவேலப்பன் கையாற்பூசும், சந்தனத்தைச்சவ்வாதை நினைந்துமனமுருகுதடி-தையலாளே.

இ-ள். முந்து - முன்னே, அன்னத்தை தூதுவிட்டேன் —, வரவுமில்லை —, மதராஜன் - மன்மதன், முனிந்து - கோவித்து, வில்லால் - தன் கரும்புவில்லைக்கொண்டு, எம்தனத்துக்கு இலக்காக - எமது தனங்களின் மேல் குறிவைத்து, மலர்வாளி - புஷ்பபாணங்களை, எய்கின்றான் —, இனி என்செய்வேம் —, கம்தனத்தை அகலாத - அறிவாகிய செல்வத்தை நீங்காத, பூம்பாவை வேலப்பன் —, கையால்பூசும் சந்தனத்தை —, சவ்வாதை —, நினைந்து —, மனம் உருகுதடி —, தையலாளே —எ-று.

பூம்பாவை வேலப்பன் - ஒருசீமான். (ருஅஙு)

தன்மனையிரதமாக்கித் தன்மகன்வலவனாக்கித்
தன்மகன்பேரனோடு தனக்குமைத்துனன்காலாக்கித்
தன்னனைநாரியாக்கித் தானுமோரம்பதானான்
தன்மனமிடங்கொண்டுய்த்த சங்கரன்றனக்குமாயன்.

இ-ள். தன்மனம் இடம்கொண்டு உய்த்த சங்கரன் தனக்கு - தன்மனத்திலும் இடப்பாகத்திலும் கொண்டு செலுத்துகின்ற சிவபெருமானுக்கு, மாயன் - திருமால், தன்மனை இரதம்ஆக்கி - தன்மனையாகிய பூமியைத் தேராக்கி, தன்மகன் வலவனாக்கி-தன்மகனாகிய பிரமனைச் சாரதியாக்கி, தன்மகன்

பேரனோடு - தன்மகனுக்குப் பேரனாகிய சூரியனோடு, தனக்கு மைத்துனன் காலாக்கி - தனக்கு மைத்துனனாகிய சந்திரனைத் தேர்ச்சக்கரமாக்கி, தன் அணைநாரிஆக்கி - தன்சயனமாகிய ஆதிசேடனை நாணாக்கி, தானும் ஓர் அம்பு ஆனான் — எ-று.

இது திரிபுரசங்காரகாலத்தில் நடந்தசெய்தி. (ருஅச)

வெறிவிலக்கல்.

குருத்துக்கதலிப் பசுந்தேனையள்ளிக் குரங்குருட்டிக்
கருத்திக்களிக்குங் குறுங்குடிவாழ்தரு மண்ணல்வெற்பில்
பருத்திப்பொதிக்கிட்ட தீப்போலக்காமம் படைத்தவிந்த
ஒருத்திக்கொருவன் பகையோநடுச்சொல்லு மூரவரே.

இ-ள். குரங்கு—, குருத்துகதலி - வாழைக்குருத்தின், பசுந்தேனை அள்ளி—, உருட்டிக்கு அருத்தி - தன்குட்டிக்கு ஊட்டி, களிக்கும்-மகிழுமிடமாகிய, குறுங்குடி - திருக்குறுங்குடியில் வாழ்கின்ற, அண்ணல்வெற்பில் - இறைவனது மலையில், "பருத்தி பொதிக்குஇட்ட தீபோல—, காமம்படைத்த - பெருங்காமத்தையடைந்த, இந்த ஒருத்திக்கு—, ஒருவு - ஆடானது, வன்பகையோ - வலியபகையோ, நடுச்சொல்லும்-நடுவுநிலைமையாகச் சொல்லுங்கள், ஊரவரே - ஊரிலுள்ளாரே—எ-று.

ஒருவு - ஆடு, அதுஇங்கு எதுகைநோக்கி ஒரு எனத்தொகுத்த லாயிற்று. (ருஅரு)

திருவொற்றியூர்த் தியாகராயர்மீது தொட்டிக்கலைச்
சுப்பிரமணியத்தம்பிரான் பாடியது.

வெண்பா.

வல்லவகுளத்திருக்கு மன்னவாவாசமலி
நல்லவகுளத்திருக்கு நாதனே—மெல்ல
வடிவாளைக்கொண்ட மணவாளாகணிச்சி
வடிவாளைக்கொண்டெனிடர் மாற்று.

இ-ள். வல்லவ - எல்லாம் வல்லவனே, குளத்திருக்கு மன்னவா - நெற்றிக்கண்ணையுடைய இறைவனே, வாசம்மலி - மணமிகுந்த, நல்ல - அழகாகிய, வகுளத்துஇருக்கும் நாதனே - மகிழடியில் வீற்றிருக்கின்ற நாதனே, மெல்ல வடிவாளைக்கொண்ட - மெல்லியலையுடைய வடிவுடையாளைக்கொண்ட, மணவாள - மணாளனே, கணிச்சி வடிவாளைக்கொண்டு - கணிச்சியாகிய வடிவாளைக்கொண்டு, என் இடர்மாற்று - என்துன்பத்தை நீக்கியருள்வாயாக—எ-று.

குளம் - நெற்றி, திருக்கு - கண், வகுளம் - மகிழமரம், கணிச்சி - மழு; வடிவாள்-வடித்தவாள். (ருஅசு)

## தாய்க்கூற்று.

திருமயிலை, சித்திரசத்திரம் - விநாயகமுதலியார்மீது-காஞ்சிபுரம் வித்வான் - கச்சபாலையரவர்கள் பாடினது.

கட்டளைக் கலிப்பா.

கந்தித்தாளை யடுத்தணிசங்கினங் கான்றநித்திலக் கச்சிட்டுக் கைகளால், பந்தித்தாளை மருட்டுமுலைச்சியைப் பாரையாவுன்றன் பாதத்திலேவந்து, வந்தித்தாளையி னிக்கைவிடாமலே மஞ்சமீதிலிருத்தி மகிழ்ச்சியாய்ச், சந்தித்தாளைய மேனினஞ்சித்திர சத்ரமேவும்விநாயகதூயனே.

இ-ள். கந்தி தாளை அடுத்து - கமுகி னடியைச் சேர்ந்து, அணி சங்கு இனம் - வரிசையாகிய சங்கினங்கள், கான்ற - உமிழ்ந்த, நித்திலம் - மூத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட, கச்சு இட்டு - வாரணிந்து, கைகளால் பந்தித்து - கைகளாற் கட்டி, ஆளைமருட்டும் - ஆளைமருட்டுகின்ற, முலைச்சியை - முலையையுடைய இவளை, பார் - பார்ப்பாயாக, ஐயா—, உன்பாதத்திலேவந்து வந்தித்தாளை - உன் காற்கீழே வந்துநின்று துதிப்பவளாகிய இவளை, இனிகைவிடாமல்—, மஞ்சமீதில் இருத்தி—, மகிழ்ச்சியாய்—, சந்தித்து ஆள் - கூடியாள்வாயாக, இன்னம் ஐயம் என்—, சித்திர சத்ரம்மேவும் விநாயகதூயனே-எ-று.

ஆள் - மமந்தர், மஞ்சம் - கட்டில். (கூஅஎ)

## தாய்க்கூற்று.

விருத்தம்.

அஞ்சனத்தை யணிவிழிமான் மயிலைவிநாயக துரைமேலாசையாலே, நஞ்சனத்தை யும்விடுத்தா ணான்சமைத்துத் தருமினியநலத்ததீம்பால், மிஞ்சன்னத்தை யும்வெறுத்தா ளவன்குவளைத் தாரிணையே வேண்டுகின்றாள், கஞ்சனத்தை யலையிவ்வாறலையவமைத் தானெனின் யாங் கருதலென்னே.

இ-ள். அஞ்சனத்தை அணி - அஞ்சனமணிந்த, விழி-கண்களையுடைய, மான் - என் பெண்ணானவள், மயிலை விநாயகதுரைமேல் ஆசையாலே—, நம் சனத்தையும் விடுத்தாள் - நமது சனங்களையும் விட்டாள், நான் சமைத்து தரும்—, இனியநலத்த தீம்பால்மிஞ்சு அன்னத்தையும் வெறுத்தாள் - இனிதாகிய நல்லமதுரமான பால் அதிகமாய்ப் பெய்த அன்னத்தையும் வெறுத்தாள், அவன் குவளைத்தாரிணையே வேண்டுகின்றாள் - அவனது குவளைமலர் மாலையையே விரும்புகின்றாள், அதையலை - அந்தப் பெண்ணை, இவ்வாறு

அலைய - இவ்விதமா யலையும்படி, கஞ்சன் அமைத்தா னெனின் - பிரமன் வகுத்தானனால், யாம் கருதல் என்னே - யாம் ஆலோசிப்பது யாது—ஏ-று.

அஞ்சனம் - மை. (௫அஅ)

தாய்க் கூற்று.

ஏத்தவளைக் காவெனுங்கண் ணன்மயிலை விநாயகவே ளினிதி னெல்லாம், பூத்தவளைக் காத்தவளைப் பொடித்தவளைப் புனைந்தவளைப் போற்றுமன்பன், நீத்தவளைச் செவிமடவார் பலகோடி சிலகோடி நேர்ந்தமாதர், கோத்தவளைக் கரமடவா ளிதுதெரியா தாசைகொண்ட கொள்கையாதே.

இ-ள். ஏத்து - எல்லாரும் துதிக்கின்ற, அ அளைக்கு ஆ என்னும் கண்ணன் - அந்த வெண்ணெய்க்கு ஆவென்றங் காந்தவனாகிய திருமால், மயிலை விநாயகவேள்—, இனிதின் - இனிதாக, எல்லாம் - எல்லா வுலகங்களையும், பூத்தவளை காத்தவளை பொடித்தவளை புனைந்தவளை - படைத்தவளும் காத்தவளும் சங்கரித்தவளும் சங்கரித்த வெண் பொடியை மேலே பூசிக்கொண்டவளும் ஆகிய சிவசத்தியை, போற்றும் அன்பன்—, நீத்த - விட்ட, வள்ளை செவி மடவார் - வள்ளைத் தண்டை நிகர்த்த காதுகளையுடைய மாதர், பல கோடி—, நேர்ந்த மாதர் - எதிர்ப்பட்ட மாதர், சிலகோடி—, கோத்தவளை - வளையலையணிந்த, கரம் - கையினையுடைய, மடவாள் - என் பெண்ணானவள், இது தெரியாது - இந்தச் செய்தியை யறியாமல், ஆசைகொண்டகொள்கை - விரும்பின கோட்பாடு, யாதே - என்னோ—எ-று. (௫அகூ)

தாய்க்கூற்று.

தித்திக்கத் திரிபுகவி புனைபுலவோ ருளங்களிக்கத் தியாகமெங்கும், சத்திக்கத் திரிதலிலா தளிக்கும்விநா யகமுகிலே தகைசேர்காது, குத்திக்கத் திரிபாவல் செவிபுனையாக் குழன்முடியாக் கோதையின்பம், சித்திக்கத் திரிதலினற் பயனிலைசற் றேமனந்தாள் சேர்மையோனே.

இ-ள். தித்திக்க - காதுக் கினிக்கும்படி, திரிபு கவி புனை - திரிபு கவிகளைப்பாடுகின்ற, புலவோர் - புலவர்கள், உள்ளம் களிக்க - மனங் களிக்கும்படிகொடுக்கிற, தியாகம் எங்கும் சத்திக்க - கொடைச் சிறப்பு எவ்விடத்தும் முழங்க, திரிதல் இலாது அளிக்கும் - மாறாது கொடுக்கின்ற, விநாயக முகிலே - விநாயகனாகிய மேகமே, தகைசேர் காது - அழகு பொருந்திய காதில், குத்தி காத்திரி பாவல்—, செவ்வி புனையா - அழகாக அணியாதவளும், குழல் முடியா - கூந்தலைச் சேர்த்து முடியத் தெரியாதவளும் ஆகிய, கோதை-என் பெண்ணின், இன்பம் சித்திக்க - சுகத்தைப் பெற விரும்பி, திரிதலினால்-

திரிவதனால், பயன் இல்லை—, சீர்மையோனே - சிறப்பின் மிக்கோனே, சற்றே மனம் தாள் - சிறிது காலம் மனம் பொறுத் திருப்பாயாக—எ-று.

இளம்பருவமுள்ள இவளின்பம்விரும்பியலைவதினாற் பயனில்லை, இவள் முதிர்க் குறையுமளவும் பொறுத்திரு என்பது கருத்து. (ருக0)

விற்கம்பத்தடியாலுமடியுண்டான்விண்ணவரைவேலைகொள்ளும்
நற்கம்பத்தடியாலுந்தூக்கவசையாளுரூர்நாதன்கோயில்
பொற்கம்பத்தடியினின்றுவன்மீகத்தானையுன்னிப்போற்றினோர்க்குச்
சொற்கம்பத்தடியப்பான்மோட்சம்பத்தடியாகத்தோற்றுந்தானே.

இ-ள். விற் கம்பத் தடியாலும் அடியுண்டான் - (அருச்சுனனது) விற்றண்டாலும் அடியுண்டவன், விண்ணவரை வேலை கொள்ளும் - தேவர்களை யேவல் கொள்ளுகின்ற, நல் கம்பத்து - நல்ல தலைகள் பத்தினையுடைய, அடியான் - அன்பனாகிய ராவணன், தூக்க - தூக்கவேண்டுமென்றுமுயல, அசையான் - அசையாதிருந்தவன், ஆரூர் நாதன்—, (அவனது) கோயில் - கோயிலினுள்ள, பொன் கம்பத்து அடியில் நின்று—, வன்மீகத்தானை - வன்மீக நாதனை, உன்னி போற்றினோர்க்கு - நினைந்து வணங்கினோர்க்கு, சொற்கம் பத்து அடி - சொர்க்க லோகம் பத்தடி தூரமாகவும், அப்பால் மோட்சம் பத்து அடியாக - அதற்குமேல் மோட்சம் பத்தடி தூரமாகவும், தோற்றும் - தோன்று நிற்கும்—எ-று.

கம் - தலை. (ருகக)

பாங்கிவெறிவிலக்கல்.

வண்டுறைசோலை மலைப்பரிகாரி வந்தாலிவளுக்
கண்டுபடாதவிக் காமச்சுரம்விடு மாதலினால்
பண்டுபழகினர் போலிந்தவேளையிற் பாயசத்தைக்
கொண்டுவந்தீரிதிற் றோஷம்பிறந்திடுங் கோதையரே.

இ-ள். வண்டு உறை - வண்டுகள் வாழ்கின்ற, சோலை மலை - திருமாலிருஞ் சோலை மலையிலுள்ள, பரிகாரி வந்தால் - வைத்தியன் வந்தால், இவளுக்கு—, அண்டு படாத - அணுகவொண்ணாத, காமச்சுரம் விடும்—, ஆதலினால்—, பண்டு பழகினர்போல் - முன்னே பழகினவர்கள் போல, இந்த வேளையில்—, பாயசத்தை கொண்டுவந்தீர்—, இதின் - இதனால், தோஷம்பிறந்திடும்—, கோதையரே - மாதரே—எ-று.

சோலைமலைப் பரிகாரியென்றது அழகரை, சுரத்துக்குப் பாயசம் தோஷமுண்டாக்குமென்றும், காமச்சுரத்துக்குப் பாய் அசம் தோஷமுண்டாக்குமென்றும் பொருள்கூறுக. பாய் அசம் - பாய்கின்ற ஆடு. இவளுக்குண்டா

யிருக்கிற காமச்சுரம் அழகரால்தீரும், இந்த ஆட்டைக் கொல்வதனால் பாவ முண்டாகுமென்பது கருத்து. (ருகஉ)

## நிந்தாஸ்துதி.

சொல்லுக்கினிய கழுக்குன்றரேயுமைச் சொல்லவென்றால்
அல்லற்பிழைப்புப் பிழைத்துவிட்டீர்முப்பு ராதியர்மேல்
வில்லைக்குனித்தெய்ய மாட்டாமனீரந்த வேளைதனில்
பல்லைத்திறந்துவிட் டீரிதுவோநும் படைத்தொழிலே.

இ-ள். சொல்லுக்கு இனிய கழுக்குன்றரே - அன்பர்புகழ்வதற் கினிதா யிருக்கிற கழுக்குன்றநாதரே, உம்மை சொல்ல என்றால் - உம்மைப் புகழ வேண்டுமென்றால், அல்லல் பிழைப்பு பிழைத்துவிட்டீர் - துன்பப் பிழைப்பு பிழைத்துவிட்டீர், முப்புராதியர்மேல்—, வில்லைகுனித்து - வில்லைவளைத்து, எய்யமாட்டாமல் - அம்பு எய்யமாட்டாமல், நீர் அந்தவேளைதன்னில்—, பல்லைத்திறந்துவிட்டீர்—, நும்படைத்தொழில் இதுவோ - உமதுபோர்த் தொழில் இதுதானோ—எ-று.

பல்லைத்திறத்தல் - சிரித்தல், படைத்தொழில் - ஆயுதப்பயிற்சி யெனினுமாம். (ருகங)

போதாசிவகுரு நாதாகலவைப் புழுகொடுசவ்
வாதார்ந்தகொங்கைக் குறமாதுவள்ளிக்கு வாய்த்திடுமின்
பாதாருகற்செற்ற வேல்விடுத்தாலென் பகையையறுக்
காதாமனமிரங் காதாசிவகிரிக் காங்கெயனே.

இ-ள். போதா - ஞானரூபனே, சிவகுருநாதா - சிவபெருமானுக்கு ஆசாரியனே, புழுகொடுசவ்வாது கலவை ஆர்ந்த - புனுகொடுசவ்வாதுகலந்த கலவைச்சந்தனமணிந்த, கொங்கை - தனங்களையுடைய, குறமாதுவள்ளிக்கு - குறப்பெண்ணாகிய வள்ளிநாயகிக்கு, வாய்த்திடும் - கிடைத்த, இன்பா - இன்பனே, தாருகன்செற்ற - நீ தாருகனைக் கொன்ற, வேல்விடுத்தால் - வேலாயுதத்தைப் பிரயோகித்தால், என்பகையை அறுக்காதோ - என்பிறவிப்பகையை அறுக்காதா, மனம் இரங்காதா—, சிவகிரி - சிவகிரியிலெழுந்தருளிய, காங்கெயனே - முருகக்கடவுளே—எ-று.

இன்பன் - இன்பத்தைத் தருகிறநாயகன். சிவகிரி - பழனி. (ருகச)

## சேவிலி பாங்கியை வினாதல்.

சோதிச்சவரி விழிக்கோகரவில்லை தூயகுழல்
கோதிச்சவரி முடிக்கறியாள்கொண்ட கோலமென்னே
நீதிச்சலரிப் பெருமாளென்றோதி நினைந்துருகப்
போதிச்சவரிவட் காரோவறிகிலன் பூங்கொடியே.

இ-ள். சோதிச்சவரி விழிக்கோகரவு இல்லை - ஆராய்ந்தெடுத்த செவ்வரிபடர்ந்த கண்களுக்கோ கள்ளப்பார்வையில்லை, தூயகுழல் - தூயகூந்தலை, கோதி - வாரி, சவுரிமுடிக்க அறியாள் - சவரிமயிரைமுடித்துக்கொள்ளவும் அறிந்திலள், கொண்டகோலம் என்னோ - இவள்கொண்ட கோலம் யாதோ, நீதி - நீதியையுடைய, சவரிப்பெருமாள் என்று ஓதி - சவரிப் பெருமாளே யென்றுசொல்லி, நினைந்து உருக—(அவனையே) நினைந்துருகும்படி, இவட்கு போதிச்சவர் ஆரோ - இவளுக்கு போதித்தவர்யாரோ, அறிகிலேன் - அறிகிலேன், பூங்கொடியே—எ-று.

இவள் கண்ணில் கள்ளப் பார்வையில்லை, கூந்தலைவாரி முடிக்க அறியாள், இந்த இளமைப் பருவத்தில் சவரிப் பெருமாளைப் புகழ்ந்து நினைந்து உருகும்படி இவளுக்கு போதித்தவர்யாரோ, அறிகிலேன், பாங்கீ, நீயறிந்திருந்தால் சொல்லென்பது கருத்து. (நிகரு)

பேரானவீரெழுத்தை முடியிலேற்றான்
 பின்னைவந்தவீரெழுத்தை யிடக்கையேற்றான்
சீரானவீரெழுத்தை வலக்கையேற்றான்
 சிறப்பானவீரெழுத்தி லேறிக்கொண்டான்
காரானவீரெழுத்தை மிடற்றிற்கொண்டான்
 கருணைசெயுமீரெழுத்தைப் பாகங்கொண்டான்
ஆரானுமிதன்பொருளை யறிந்துசொல்லின்
 அவர்க்கடிமைப்புலவரென வறையலாமே.

இ-ள். பேரான வீரெழுத்து - மதி, பின்னைவந்த வீரெழுத்து - மான், சீரான வீரெழுத்து - மழு, சிறப்பான வீரெழுத்து - விடை, காரான வீரெழுத்து - கடு, கருணைசெயுமீரெழுத்து - உமை—எ-று. (நிகசு)

சீரானபசுவின்பேர் சென்னிப்பேரும்
 செகம்புகழுமாதுலன்பேர் கன்னிப்பேரும்
பேரானமரத்தின்பேர் நிசத்தின்பேரும்
 பேசரியவிவ்வாறு மொன்றாய்ச்சேர்த்து
ஏராகவிவற்றினடு வொன்றாய்க்கூட்ட
 இயல்பிரமன்சிவமெனவே யிய்ம்பலாகும்
வாரானவீராறின் முன்பின்னான
 ஆறுமொழியவர்க்காக வமைந்ததன்றே.

இ-ள். கபிலை - சிரசு; மாமன் - கன்னி; ஆசினி - சரசுவதம்; கலை-இசு; மான் - கனி; ஆனி - சாசுதம், ஆனி - இல்லை, (பிறப்பிறப்பில்லை)—எ-று. ()

மாகமுறையுடுக்களிரு பானேழ்தம்மின்
மன்னுமோருடுவதன்முன் னெழுத்தைநீக்கின்
சாகரமாமலையாகு மிடையைத்தள்ளின்
சலதரத்தையடுமதிலாங் கடையைத்தள்ளின்
பாகமதிலொருமானுஞ் சிரத்தோர்மானும்
பரணியிலோர்மானுநா வதிலோர்மானும்
ஆகத்திலோர்மானுங் கொண்டோர்பேராம்
அதன்பெயரையுரைப்பவரே புலவராமே.

இ-ள். ஆதிரை - திரை, அலை; ஆரை - மதில்; பாக மான் - பார்வதி; சிரமான் - கங்கை; பாணிமான் - மான்; இவற்றைக் கொண்ட ஆதி - பரமசிவன்; நாவில மானைக்கொண்ட ஆதி - பிரமன்; மார்பில் மானைக் கொண்ட ஆதி - திருமால்—எ-று. (ருகஅ)

வீடுகோகிலநீலி தம்மின்மூன்றின்
விளங்குபெயர்நடுவெழுத்தா லுனைநாடோறும்
பீடுறுபாமாலைநூத நஞ்செய்தேத்தப்
பித்தனேநிற்குமூ விரண்டெழுத்தின்
நீடுசடைதனில்வைத்து மகங்கடோறும்
நின்றேற்றுந்தொடையாக வேயணிந்தும்
ஆடுடையாய்மாடுடையாய் நாடுமீச
அந்தருளைவந்தெனக்குத் தந்திடாயே.

இ-ள். அகம் பல்லி - அவிரி, இவற்றின் நடு (கல்வி); அம் - கங்கை; பலி - பிச்சை; அரி - விஷ்ணு; பலி - பிரம கபாலம்; தொடையாக - மாலையாக—எ-று. (ருகக)

அந்தமுள்ளபுவியிலொரு மரத்தின்பேரும்
அலைகடலில்வாழுமொரு சீவன்பேரும்
விந்தைபெறுபட்டணப்பேர் வெகுகாலப்பேர்
விளங்குமொருபிள்ளைப்பேர் மெல்லியாள்பேர்
சந்ததமுமிந்தவகை யாறுங்கூட்டித்
தமிழெழுத்தினடுவெழுத்தைச் சார்ந்துபார்க்கின்
சுந்தரஞ்சேர்வைகுந்தந் தன்னில்வாழும்
துய்யரங்கநாதனென்றே சொல்லலாமே.

இ-ள். ஒருமரம் - அரசு; கடலில் வாழுமொருசீவன் - சங்கு; பட்டணப்பேர் - நகர்; வெகுகாலப்பேர் - அநாதி; பிள்ளைப்பேர் - சுதன்; மெல்லியாள் பேர் - கன்னி; இவற்றின் நடுவெழுத்து (ரங்கநாதன்). (சு00)

பாங்கி தலைவனைநோக்கிக் கூறியது.

வெண்பா.

சிலைவிலங்குநீள்புருவஞ் சென்றொசியநோக்கி
முலைவிலங்கிற்றென்று முனிவாள்—மலைவிலங்கு
தார்மாலைமார்ப தனிமைபொறுக்குமோ
கார்மாலைகண்கூடும் போது.

இ-ள். மலைவுஇலங்கு - மாறுபாடு விளங்குகின்ற, தார்மாலை மார்ப - தாரினையும் மாலையினையுமணிந்த மார்பினையுடையவனே, (புணர்ச்சிக்கண் உன்மார்பகஞ்செறிய முயங்குங்கால் தன்முலை சிறிதுவிலகாநிற்ப அதனை நோக்கிப்பொறாதவளாய்) முலைவிலங்கிற்று என்று - முலைவிலங்கிற்றேயென்று, சிலைவிலங்கு நீள்புருவம் சென்று ஒசியநோக்கி முனிவாள் - விற்போல வளைந்து நீண்ட புருவமானது நெற்றிமேலேறி வளையநோக்கி முனியுந் தன்மையையுடைய எமதுதலைவி, கார்மாலை கண்கூடும்போது - இருளோடுகூடிய மாலைவந்து சேருமிடத்து, தனிமைபொறுக்குமோ - தனித் திருத்தலை யாற்றுவ்ளோ—எ-று.

மலைவிலங்கு என்பதற்கு மலைபோல விசாலமாகிய எனப்பொருளுரைப்பினுமாம். தார் - பூமாலை, மாலை - மணிமாலை. (சு0க)

பாங்கிகூற்று.

விரவலராய்வாழ்வாரை வெல்வாயொழிவாய்
அரவுலவாவேலை யொலியே—வரவொழிவாய்
ஆயர்வாயேயரிவை யாருயிரையீராவோ
ஆயர்வாய்வேயோ வழல்.

இ-ள். இரவுலவா - இரவிலும் ஓயாத, வேலைஒலியே - கடலொலியே, விரவலராய் வாழ்வாரை - தமியராய் உயிர்வாழ்வாரை, வெல்வாய் ஒழிவாய் - வருத்துவாய் வருத்தாதொழிவாய், அரிவை - இந்தப்பெண்ணின், ஆர்உயிரை - அரியவுயிரை, ஆயர்வாயே ஈராவோ - தாய்மார் வாய்களே அறுக்காவோ, (அதன்மேலும்) ஆயர்வாய்வேயோ - இடையர் வாய்வேய்ங் குழ

லோசையோ, அழல் - நெருப்பாய் வருத்தாநின்றது, (ஆதலால்) வரவு ஒழி வாய் - நீ யிப்பொழுதுஇவளைநோக்கிவரும் வரவையொழியக்கடவாய்—எ-று.

விரவலர் - பகைவரெனினுமாம். வேலை - கடல். வேய் - மூங்கில். ()

## பாங்கி தலைவியைத்தேற்றல்.

### கலித்துறை.

சோகமெவன்கொலி தழிபொன் றாக்கின சோர்குழலாய்
மேகமுழங்க விரைசூழ்தளவங் கொடியெடுப்ப
மாகநெருங்கவண் டானங்களிவண்டு பாடவெங்கும்
தோகைநடஞ்செயு மன்பர்திண்டேரினித் தோன்றியதே.

இ-ள். சோர்குழலாய் - சோர்ந்தகூந்தலையுடையாளே, இதழிபொன் தூக்கின - கொன்றைகள் பொன்மாலைகளைத்தொங்கவிட்டன, மேகம்மாகம் நெருங்கமுழங்க - மேகங்கள் ஆகாயநெருங்க முழவுபோல முழங்காநிற்க, விரைசூழ்தளவம் கொடிஎடுப்ப - மணம்பொருந்திய முல்லைகள் கொடியெடா நின்றன, வண்தானம் - வளவிய சோலையினிடங்களில், களிவண்டுபாட - களிப்பையுடைய வண்டுகள்பாடாநிற்க, எங்கும் - எவ்விடத்தும், தோகை நடம்செய்யும் - மயில்கள்நடநஞ்செய்யாநின்றன, (ஆகையால்) இனி—, அன் பர் - அன்பாது, திண்தேர் - திண்ணியதோரானது, தோன்றியது - வந்து விட்டது, சோகம்எவன்கொல் - உனக்குவருத்தம் யாதுக்கு—எ-று.

தோன்றியது விரைவுபற்றி யிறந்தகாலமாயிற்று. (சுOரு)

## இதுவுமது.

இடர்த்திறத்தைத்துற பொற்றொடிநீயிடித் துத்தடித்துச்
சுடர்க்கொடிதிக்கனைத் திற்றடுமோறத் துளிக்குமைக்கார்
மடக்குயிற்கொத்தொளிக கக்களிக்கப்புக்க தோகைவெற்றிக்
கடற்படைக்கொற்றவன் பொற்கொடித்தேரினிக் கண்ணுற்றதே.

இ-ள். பொற்றொடி - பொன்வளையணிந்தவளே, மைகார் - கரியமேக மானது, இடித்துத்தடித்து சுடர்க்கொடி - முழங்கிமின்னாகிய சுடர்க்கொடி கள், திக்குஅனைத்தில்தடுமோற - எல்லாத்திசைகளிலுந் தடுமாறாநிற்க, துளிக் கும் - மழையைப்பெய்யாநின்றது, தோகைகளிக்கப்புக்க - மடக்குயில்கொத் துஒளிக்க, இளமையாகிய குயிற்கூட்டங்கள் ஒளிக்க - மயிற்கூட்டங்கள் களிக்கத்தொடங்கின, (ஆதலால்) கடல்படை - கடல்போன்ற பெரியசேனை யையுடைய, கொற்றவன் - நம்தலைவனது, பொற்கொடிதேர் - பொற்கொடி கள் கட்டின்தோரானது, இனி கண்ணுற்றது - இனிவந்துவிட்டது, இடர்த் திறத்தைதுற - நீவருத்தத்தையொழிவாயாக—எ-று. (சுOச)

## இளவேனிற் பருவங்கண்டு தலைவி வருந்தித் தோழியோடு சொல்லல்.

### விருத்தம்.

துனிவருநீர் துடைப்பவராய்த் துவள்கின்றேன் றுணைவிழிசேர் துயிலைநீக்கி, இனவளைபோ லின்னலஞ்சோர்ந் திடருழப்ப விறந்தவர் நாட் டில்லைபோலும், தனியவர்க டளர்வெய்தத் தடங்கமலந் தளையவிழ்க்குந் தருணவேனில், பனிமதுவின் பசுந்தாது பைம்பொழிலிற் பரப்பிவரும் பருவத்தென்றல்.

இ-ள். துனிவருநீர் துடைப்பவராய் - துயர மிகுதியாலே என் கண்ணினின்றும் விரைந்திழிகின்ற நீரைத் துடைப்பவராய், துவள்கின்றேன் துணைவிழி - துவளாநின்ற என திருகண்களானவை, சேர் துயிலை நீக்கி - இமை பொருந்தும் படியான நித்திரையைநீக்கி, இனம் வளைபோல் - கையில் கூட்டமா யணியப்பட்ட வளையல்போல், இன் நலம் சோர்ந்து - இனிய அழகிழந்து, இடருழப்ப - துன்பமெய்த, இறந்தவர் நாட்டு - பிரிந்து போனவருடைய நாட்டின்கண், தனியவர்கள் - பிரிந்திருந்தோர், தளர்வு எய்த - தளர, தடம் கமலம் - பெரிய தாமரைகள், தளை அவிழ்க்கும் - தளை யவிழ்க்கின்ற, தருண வேனில் - வேனிற் பருவமும், பனி மதுவின் பசுந்தாது - குளிர்ந்த தேனோடு பசியமகரந்தத்தையும், பைம் பொழில் - பசிய மலர்ச்சோலைகளில், பரப்பி வரும் - பரப்பி வருகின்ற, பருவத் தென்றல் - இளந் தென்றலும், இல்லைபோலும் - இல்லையோ—எ-று. (௬௦௫)

### வெண்பா.

இமையவர்கண்மௌலி யிணைமலர்த்தாள்சூடச்
சமையந்தொறுநின்ற தையல்—சிமைய
மலைமடந்தைவாச மலர்மடந்தையெண்ணெண்
கலைமடந்தைநாவலோர் கண்.

இ-ள். இணை மலர் - இரண்டு தாமரை மலர்கள் போன்ற, தாள் - தன் சீர் பாதங்களை, இமையவர்கள் - தேவர்கள், சூட - தம் சிரசிற் சூடும்படி, சமையம் தொறும் - எல்லாச் சமயங்களிலும், நின்ற - நிலைபெற்றிருந்த, தையல் - மடவாள், சிமையம் - சிகரங்களையுடைய, மலை மடந்தை - மலையரையன் மகளுமாய், வாசம் மலர் மடந்தை - மணம் பொருந்திய தாமரை மலர் மேலிருந்த சிதேவியுமாய், எண்ணெண் கலை மடந்தை - அறுபத்து நான்கு கலைகளுக்குத் தலைவியுமாய் நின்ற சரசுவதி, (அன்றியும் அவள்) நாவலோர் கண் - நாவலர்க்குக் கண்ணாயிருப்பவள்—எ-று.

சமையம் - அறுசமயம். (௬௦௬)

தலைவனைநோக்கிப் பாங்கி சொல்லியது.

ஆக்கம்புகழ்பெற்ற தாவியிவள்பெற்றாள்
பூக்கட்குழற்கார் பொறைபெற்ற—மாக்கடல்சூழ்
மண்பெற்றவொற்றைக் குடையாய்வரப்பெற்றெங்
கண்பெற்றவின்று களி.

இ-ள். மா கடல் சூழ் - பெரிய கடல் சூழ்ந்த, மண் பெற்ற - நிலவுலக முழுதையுங்கொண்ட, ஒற்றைக் குடையாய் - ஒப்பற்ற குடையையுடையவனே, வரப்பெற்று - நீயெங்களை நினைத்து வந்ததனால், புகழ் - உன் புகழானது, ஆக்கம் பெற்றது - பெருக்கத்தையடைந்தது, இவள் ஆவி பெற்றாள்- இவள் உயிர் பெற்றாள், கார் குழல் - இவளது கருங் கூந்தலானது, கள் பூ பொறை பெற்ற - தேனையுடைய மலர்களின் பாரத்தைப் பெற்றது, இன்று- இப்பொழுது, எம் கண் - எமது கண்கள், களிபெற்ற - களிப்பை யடைக்தன—எ-று.

ஒற்றைக்குடை - தனிக்குடையெனினுமாம். (கூ0எ)

செருமான்வேற்சென்னி தென்னுறந்தையார்தம்
பெருமான்முகம்பார்த்த பின்னர்—ஒருநாளும்
பூதலத்தோர்தம்மைப் பொருணசையாற்பாராவாம்
காதலித்துத்தாழ்ந்திரப்போர் கண்.

இ-ள். காதலித்து - பொருளை விரும்பி, தாழ்ந்து - பொருளுடையோரைத்தாழ்ந்து, இரப்போர் - இரப்பவரது, கண்-கண்கள், செருமானம் வேல்- போர்த்தொழிலில் வலிய பெருமை யமைந்த வேலையும், சென்னி - சென்னி யென்னும் பெயரையுமுடையனாய், தென் உறந்தையார் தம் பெருமான்- தெற்கின் கண்ணுண்டாகிய உறந்தைப் பதியார்க்குத் தலைவனாகிய சோழனுடைய, முகம் - முகத்தை, பார்த்த பின்னர் - பார்த்தபிறகு, ஒருநாளும்- ஒருகாலத்தும், பொருள் நசையால் - பொருள் விருப்பத்தால், பூதலத்தோர் தம்மை - உலகத்தோரை, பாராவாம் - பாராவாயின—எ-று.

இவ்வாறு கூறவே அவன் இரவலரது பொருளாசை தீரும்படி கொடுப்பவனென்பது விளங்கும். (கூ0அ)

தலைவன்கூற்று.

ஒருபெருணர்வுடனே யொண்ணிறையுந்தேய
வருமேதுறவென்பால் வைத்த—வொருபேதை
போதளவுவாசப் புரிகுழல்சூழ்வாண்முகத்துக்
காதளவுநீண்டவேலவுங் கண்.

இ-ள். என்பால் துறவுவைத்த - என்னிடத்துப் பிரிவைவைத்த, ஒரு பேதை - ஒருபெண்ணின், போது அளவு வாசம் - மலர் மணந் தங்கிய, புரி

குழல்சூழ் - கட்டப்பட்ட கூந்தலாற் சூழப்பட்ட, வாள் முகத்து - ஒளி பொருந்திய முகத்தின்கண்ணே, உலவும் கண் - உலாவாநின்ற கண்கள், ஒருபேருணர்வுடனே - ஒப்பற்ற பேரறிவோடு, ஒள் நிறையும் தேய - நல்லொழுக்கமும் குன்றும்படி, வரும் - என்னெதிரே தோன்றாநின்றன—எ-று. (௬0௯)

தலைமகன்கூற்று.

ஐயோவகலல்குல் சூழ்வருதற்காழித்தேர்
வெய்யோற்கனேகநாள் வேண்டுமால்—கைபரந்து
வண்டிசைக்குங்கூந்தன் மதர்விழிகண்சென்றுலவ
எண்டிசைக்கும்போதா திடம்.

இ-ள். கை பரந்து - ஒழுங்காகப் பரவி, வண்டு இசைக்கும் - வண்டுகள் பண் பாடுதற் கிடமாகிய, கூந்தல் - கூந்தலையுடையாளது, அகல் அல்குல் சூழ்வருதற்கு-அகன்ற அல்குலைச் சுற்றிவருதற்கு, ஆழித்தேர் வெய்யோற்கு- ஒற்றைச் சக்கரம்பூண்ட தேரினையுடைய சூரியனுக்கு, அனேக நாள் வேண்டும் - நெடுநாள் வேண்டும், (அதுவேயுமன்றி) மதர் விழிகள் சென்று உலவ- இவளது மதர்த்தகண்கள் சென்றுலாவுதற்கு, எண் திசைக்கும் இடம்போதாது - எட்டுத் திக்குகளி னிடமும் போதாது—எ-று.

ஐயோ என்றது சூரியனுக் கிரங்கற்குறிப்பு. (௬௧0)

தலைமகன்கூற்று.

அங்கண்மாஞாலத் தகல்விசும்பைமுன்படைத்த
பங்கயத்தோனந்நாளிப் பைந்தொடிதன்—கொங்கைத்
தடம்பெருகியோங்குமெனத் தானினையாவாறே
இடம்பெருகச்செய்யா வியல்பு.

இ-ள். அம் கண் மா ஞாலத்து - அழகிய விடத்தையுடைத்தாய்ப் பெரிதாகிய நிலவுலகத்தில், அகல் விசும்பை-பெரிய ஆகாயத்தை, முன்படைத்த- முன்னே சிருஷ்டிசெய்த, பங்கயத்தோன் - பிரமன், அந்நாள் - அந்நாளிலே, இடம் பெருகச்செய்யா இயல்பு - (இவ்வாகாயத்தை) இடப்பரப் புண்டாகச் செய்யா தொழிற்றமைக்குக் காரணம், இ பைந்தொடி தன் - இந்தப் பெண்ணினது, கொங்கைத் தடம் - தனப்பிரதேசம், பெருகி ஓங்கும் என - மிகப் பருத்தோங்குமென்று, தான் நினையா ஆறே - தான் ஆலோசியாமையோ, (அறியோம்)—எ-று. (௬௧௧)

சோழன் குதிரைச் சிறப்பு.

தானிமிர்த்தாற்கண்பரிவ வல்லியோபுல்லாதார்
மானனையார்மங்கலநா ணல்லவோ—தான

மழைத்தடக்கைவார்கழற்கான், மானவேற்கிள்ளிப்
புழைத்தடக்கைநால்வாய்ப் பொருப்பு.

இ-ள். தானம்மழை - தானமாகிய மழையைப் பொழிகின்ற, தடக்கை- பெரிய மேகம் போன்ற கையினையும், வார் கழல் கால் - நீண்ட வீரக் கழலை யணிந்த காலினையும், மானம் வேல் - பெரிய வேலா யுதத்தினையு முடைய, கிள்ளி - சோழனது, புழை தடக்கை - தொளையையுடைய பெரியதுதிக்கை யையும், நால்வாய் - தொங்குகின்ற வாயையும் உடைய, பொருப்பு - மலை போன்ற யானையானது, கால் நிமிர்த்தால் - காலை வலித்தால், கண் பரிவ- கண்ணுறுவன, வல்லியோ - கால் விலங்குதானோ, புல்லாதார் - அவன்பகை வரது, மான் அனையார் - மான்போல் வாராகிய மனைவியரது, மங்கல நாண் அல்லவோ - மங்கல சூத்திரமல்லவோ—எ-று.

மங்கலநாண் - மங்கலியம். (தாலி.) (கூகஉ)

தலைமகன்கூற்று.

செங்கலசக்கொங்கைச் செறிகுறங்கிற்சீறடிப்பேர்
பொங்கரவவல்குற் பொருகயற்கட்—செங்கனிவாய்க்
காருருவக்கூந்தற் கதிர்வளைக்கைக்காரிகைத்தா
மோருருவென் னுள்ளத்தே யுண்டு.

இ-ள். செங்கலசம் கொங்கை - செவ்விய கலசம்போன்றதனத்தையும், செறி குறங்கின் - சிறிய தொடையையும், சீறடி - சிற்றடியையும், பேர் பொங்கு அரவு அல்குல் - பெரிதாய்ச் சீறுகின்ற பாம்பின்படம்போன்றஅல் குலையும், பொருகயல் கண் - ஒன்றோ டொன்று சண்டை செய்கின்ற சேல் மீன்போன்ற கண்ணையும், செங் கனிவாய்-செவந்த கோவைக் கனிபோன்ற அதரத்தையும், கார் உருவம் கூந்தல் - கரு நிறமுள்ள கூந்தலையும், கதிர் வளைக்கை - ஒளியுள்ள வளையலையணிந்த கையினையும், காரிகைத்து ஆம்-அழ கினையு முடைத்தாகிய, ஓர் உரு - ஒருவடிவம், என் உளத்தே உண்டு - என் மனத்தின்கண்ணேயுண்டு—எ-று. (கூகங)

நீலமணிமிடற்ற னீண்டசடைமுடியன்
நூலணிந்தமார்ப னுதல்விழியன்—தோலுடையன்
கைம்மான்மறியன் கனன்மழுவன்கச்சாலை
எம்மானிமையோர்க் கிறை.

இ-ள். நீலமணிமிடற்றன் - நீலநிறமுள்ள மணிகண்டன், நீண்டசடை முடியன்—, நூல் அணிந்த மார்பன் - முப்புரி நூலை யணிந்த மார்பினை யுடையவன், நுதல்விழியன் - நெற்றிக்கண்ணன், தோல் உடையன்-தோலா டையையுடையவன், கைமான் மறியன் - கையில் மான் கன்றையுடையவன்,

கனல் மழுவன் - நெருப்புருவாகிய மழுவையுடையவன், கச்சாலை எம்மான்- திருக்கச்சாலை யெம்பெருமான், (அவன்) இமையோர்க்கு இறை - தேவர்களுக்குத் தலைவனுவான்—எ-று. (சூகச)

## சேவிலிகூற்று.

உள்ளங்குளிர வுரோமஞ்சிலிர்த்துரையும்
தள்ளவிழிநீரரும்பத் தன்மறந்தாள்—புள்ளலைக்கும்
தேந்தாமரைவயல்சூழ் தில்லைத்திருநடஞ்செய்
பூந்தாமரைதொழுத பொன்.

இ-ள். புள் அலைக்கும் - அன்னமுதலிய புட்கள் அலைக்காநின்ற, தேம்- தேனையுடைய, தாமரை - தாமரை மலர்க ளலர்ந்த, வயல்சூழ் - வயல்சூழ்ந்த, தில்லை - தில்லையில், திருநடம்செய் - திருநடநஞ் செய்கின்ற, பூந்தாமரை- (இறைவனது) பொலிவாகிய பாததாமரைமலரை, தொழுதபொன்-தொழுத பொன்போல் வாளாகிய என்பெண், உள்ளம்குளிர - மனங்குளிர, உரோமம் சிலிர்த்து - மயிர் சிலிர்த்து, உரையும்தள்ள - வார்த்தையும் தடுமாற, விழிநீர் அரும்ப - கண்களில் நீர்சுரக்க, தன்மறந்தாள் - தன்னையும் மறந்துவிட்டாள் எ-று. (சூகரு)

பத்தித்தகட்ட கறைமிடற்றபைவிரியும்
துத்திக்கவைநாத் துளையெயிற்ற—மெய்த்தவத்தோர்
ஆகத்தானம்பலத்தா னாராவமுதணங்கின்
பாகத்தான்சாத்தும் பணி.

இ-ள். மெய்த்தவத்தோர் ஆகத்தான் - மெய்த்தவத்தாரது மனத்தில் உறைபவன், அம்பலத்தான் - பொன்னம்பலத்தையுடையவன், ஆராவமுது- ஆராவமுதுபோன்ற, அணங்கின் - உமாதேவியின், பாகத்தான் - பாகத்தை யுடையவன், (அவன்) சாத்தும்பணி - ஆபரணமாக அணிந்துகொள்ளும் பாம்புகள், பத்தித்த அகட்ட - வரிசையாகிய வரிகளமைந்த வயிற்றையுடையன, கறைமிடற்ற - விஷகண்டத்தையுடையன, பைவிரியும்-படத்தின்மேல் விரிகின்ற, துத்தி - பொறிகளையும், கவைநா - பிளவுபட்ட நாவையும், துளை எயிற்ற - தொளையோடுகூடிய பற்களையுமுடையன—எ-று.

அகடு - வயிறு, கறை - விஷம், மிடறு - கண்டம், எயிறு - பல், ஆரா வமுது - தெவிட்டாத அமிர்தம், பணி - பாம்பு. (சூகசு)

சூழ்ந்துமுரன்றணவி வாசந்துதைந்தாடித்
தாழ்ந்துமதுநுகர்ந்து தாதருந்தும்—வீழ்ந்தபெரும்
பாசத்தார்நீங்காப் பரஞ்சுடரின்பைங்கொன்றை
வாசத்தார்நீங்காத வண்டு.

இ-ள். வீழ்ந்தபெரும்பாசத்தார் நீங்கா - பெரியபாசத்தைவிட்டு நீங்கி ஞரைவிட்டு நீங்காத, பாஞ்சுடரின் - பாஞ்சோதியின், பைகொன்றை-பசிய கொன்றைமலரால் தொடுக்கப்பட்ட, வாசத்தார் நீங்காத - மணமாலையை விட்டு நீங்காத, வண்டு - வண்டுகள், சூழ்ந்து - வளைந்து, மூரன்று-சத்தித்து, அணவி - கிட்டி, வாசம்துதைந்து ஆடி - மணம்பொதிந்து மேலேபறந்து, தாழ்ந்துமதுநுகர்ந்து - விரும்பி மதுவையுண்டு, தாது அருந்தும் - மகரந்தத்தை யுண்ணும்—எ-று. (சுகஎ)

தலைமகன்கூற்று.

பால்போலுமின்சொற் பவளம்போற்செந்துவர்வாய்
சேல்போற்பிறழுந் திருநெடுங்கண்—மேலாம்
புயல்போற்கொடைக்கைப் புனனாடன்கொல்லி
அயல்போலும்வாழ்வ தவர்.

இ-ள். பால்போலும் இன்சொல் - பால்போலும் இனியசொல்லினையும், பவளம்போல் செந்துவர்வாய் - பவளம்போலச் சிந்துவிளங்கும் வாயினையும், சேல்போல்பிறழும் - சேன்மீன்போன்று பிறழாநின்ற, திருநெடுங்கண் - அழகிய நெடியகண்ணையும் உடைய, அவர்வாழ்வது - அவர்வாழுமிடம், மேல் ஆம் - மேன்மையாகிய, புயல்போல் - மேகம்போன்ற, கொடைகை - கொடைக்கையினையுடைய, புனல்நாடன் - சோழனது, கொல்லிஅயல்போலும்- கொல்லிமலையின் அயல்போலும்—எ-று. (சுகஅ)

தாமரைவாண்முகத்துத் தண்டரளம்போன்முறுவல்
காமருவேய்புரைதோட் காரிகையீர்—தேமருவும்
பூங்குழலின்வாசப் பொறைசுமந்துநேர்ந்ததோ
பாங்குழலுந்தென்றற் பரிசு.

இ-ள். தாமரைவாள்முகத்து - தாமரைமலர்போன்ற ஒளியுள்ள முகத்தினையும், தண் தாளம்போல் முறுவல் - தண்ணிய முத்துப்போன்ற பற்களையும், காமர்வேய்புரைதோள் - அழகிய மூங்கில்போலுந் தோள்களையுமுடைய, காரிகையீர் - மாதரே, பாங்கு - உமதுபக்கத்திலே, உழலும் - உலாவுகின்ற, தென்றல்பரிசு - தென்றலின்தன்மை, தேம்மருவும் - தேன்பொருந்திய, பூங்குழலின் - பூங்குழலின் கண்ணுண்டாகிய, வாசப்பொறை சுமந்து - நறுநாற்றத்தின் பாரத்தைத் தாங்கினதனால், நேர்ந்ததோ - மெலிந்துபோயிற்றோ.()

களிக்குங்கயல்போலு நுங்கணுங்கண்போல்
களிக்குங்கயலுங் கனிவாய்த்—தளிர்க்கொடியீர்
தாமரைபோன்மலரு நும்முகநும்முகம்போற்
றாமரையுஞ்செவ்வி தரும்.

இ-ள். கனிவாய் - கொவ்வைக்கனிபோலும் வாயினையுடைய, தளிர் கொடியீர் - தளிரோடுகூடிய கொடிபோல்வீர், நும்கண்-நும்கண்கள், களிக்கும் கயல்போலும் - செருக்குகின்ற. கயல்போன்றன, கயலும் - அக்கயல்களும், நும்கண்போல் களிக்கும்-நும்கண்கள்போலக் களியாநின்றன, (இதுவன்றி) நும்முகம் தாமரைபோல்மலரும் - நும்முகம் தாமரைபோல மலராநின்றது, தாமரையும் - அத்தாமரையும், நும்முகம்போல் - நும்முகம்போல, செவ்விதரும் - அழகைத்தாராநின்றது—எ-று.

களித்தல் - மதர்த்தல். வாய்என்ற குறிப்பால் கனி கொவ்வைக்கனியையுணர்த்திற்று. (கூ௨0)

தளிபெற்றுவைகிய தண்சுனைநீலம்
அளிபெற்றார்கண்போ லலரும்—அளிபெற்ற
நல்லார்திருமுகத் தாற்றநளிபெற்ற
கல்லாரம்போன்மலருங் கண்.

இ-ள். தளிபெற்றுவைகிய - மழையையேற்று இருத்தலால், தண்-குளிர்ந்த, சுனை - சுனைநீரிலுள்ள, நீலம்-நீலப்பூவானது, அளிபெற்றார்கண்போல்-தலைவரால் தலையளி செய்யப்பெற்ற மாதராதுகண்போல், அலரும் - மலராநின்றது, அளிபெற்ற - (அவ்வாறு) தலையளி செய்யப்பெற்ற, நல்லார் - மாதரது, திருமுகத்து - திருமுகத்தில், ஆற்ற - மிகுதியாக, நளிபெற்ற - குளிர்ச்சியைக் கொண்டிருக்கிற, கண் - கண்களும், கல்லாரம்போல் மலரும் - நீலப்பூப்போல மலராநின்றன—எ-று.

தளி - மழை, அளி - தலைவர்செய்யும் அன்பு, கல்லாரம் - கருங்குவளைமலர். (கூ௨க)

தாமரையன்று முகமேயீதீங்கிவையும்
காமருவண்டல்ல கருநெடுங்கண்—தேமருவு
வல்லியினல்ல ளிவளென்மனங்கவரும்
அல்லிமலர்க்கோதை யாள்.

இ-ள். ஈது தாமரைஅன்று முகமே - இது தாமரையல்லல் முகமே, இவையும் - இவைகளும், காமர்வண்டுஅல்ல - அழகாகிய வண்டுகளல்ல, கருநெடுங்கண் - கரிய நெடியகண்களே, இவள் - இவள், தேமருவு - தேன்பொருந்திய, வல்லிஅல்லள் - கொடியல்லள், என்மனம்கவரும் - என்மனத்தைக் கவர்கின்ற, அல்லிமலர் கோதையாள் - அகவிதழ்களையுடைய பூமாலையையணிந்தமாதே—எ-று.

காமருஎன்பதில் உகரமும் வல்லியின்என்பதில் இன்னும் சாரியைகள்.()

அன்னைபோலெவ்வுயிருந் தாங்குமநபாயா
நின்னையாரொப்பார் நிலவேந்தர்—அன்னதே
வாரிபுடைசூழ்ந்த வையகத்திற்கில்லையாற்
சூரியனேபோலுஞ் சுடர்.

இ-ள். எவ்வுயிரும் - எல்லாவுயிர்களையும், அன்னைபோல் - தாயைப்போல, தாங்கும் - ஆதரிக்கின்ற, அநபாயா - அநபாயச்சோழனே, நிலவேந்தர் - நிலவுலகத்தரசருள், நின்னை ஒப்பார்யார் - உன்னை நிகர்ப்பவர்யாவர், அன்னதே - அதுபோலவே, வாரிபுடைசூழ்ந்த - கடல்புடைசூழ்ந்த, வையகத்திற்கு - உலகத்திற்கு, சூரியனைப்போலும் சுடர்இல்லை - சூரியனைப்போலுஞ் சுடரில்லை—எ-று.

வாரி - கடல், புடை - பக்கம். (சுஉங)

தாதொன்றுதாமரையே நின்முகமொப்பதுமற்
றியாதொன்றுமொவ்வா திளங்கொடியே—மீதுயர்த்த
சேலேபணியப் புலியுயர்த்தசெம்பியர்கோன்
வேலேவிழிக்கு நிகர்.

இ-ள். இளங்கொடியே - இளங்கொடிபோல்வாளே, மீதுஉயர்த்த-எல்லார்கொடிக்கு மேலாகவுயர்த்தப்பட்ட, சேல் - (பாண்டியனது) மீனக்கொடியானது, தாழ-தாழும்படி, புலிஉயர்த்த - புலிக்கொடியை உயர்த்த, செம்பியர்கோன் - சோழனது, வேலே - வேலாயுதமே, விழிக்குநிகர் - உன் விழிக்கு நிகராவது, தாதுஒன்று தாமரையே - மகரந்தம்பொருந்திய தாமரைமலரே, நின்முகம் ஒப்பது - உன்முகத்தினை நிகர்ப்பது, மற்றுயாது ஒன்றும் ஒப்பாது - (இவையேயன்றி உன்கண்ணையு முகத்தையும்) வேறொன்றும் நிகர்த்திராது—எ-று. (சுஉச)

தலைமகன்கூற்று.

தாதளாவிவண்டு தடுமாறுந்தாமரைகொல்
மாதர்விழியுலவு வாண்முகங்கொல்—யாதென்
றிருபாற்கவருற் றிடையூசலாடி
யொருபாற்படாதென் னுளம்.

இ-ள். தாதுஅளாவி - தாதைக்கலந்து, வண்டு - வண்டுகள், தடுமாறும்-தடுமாறுகின்ற, தாமரைகொல் - தாமரைமலரோ, மாதர் - அழகாகிய, விழிஉலவு - கண்களுலாவாநின்ற, வாள்முகம்கொல் - ஒளிபொருந்திய முகமோ, யாதுஎன்று - (இவ்விரண்டனுள்) யாதோவென்று, இருபால்கவருற்று - இருபக்கத்தில் இழுக்கப்பட்டு, இடைஊசலாடி - இடையே ஊசலாடி, என் உள்ளம் - என்மனமானது, ஒருபால்படாது - ஒருபக்கத்தில் துணிகின்றதில்லை எ-று. (சுஉரு)

திருமுகம்போன்மலருஞ் செய்யகமலம்
கருநெடுங்கண்போலுங் கயல்கள்—அரிவை
இயல்போலுமஞ்ஞை யிடைபோலுங்கொம்பர்
மயல்போலும்யாம்போம் வழி.

இ-ள். செய்ய கமலம் - செந்தாமரை மலர், அரிவை திருமுகம்போல் மலரும் - இம்மாதின் திருமுகம்போல மலரா நிற்கும், கயல்கள் - கயல் மீன்கள், கருநெடுங் கண்போலும் - கரிய நெடிய கண்கள்போன் றிரா நின்றன, மஞ்ஞை இயல்போலும் - மயில்கள் சாயல்போலிரா நின்றன, கொம்பர் - பூங்கொடி, இடைபோலும் - இடையை நிகரா நின்றது, யாம்போம் விழி மயல்போலும் - (ஆதலால்) இவ்வழியில் யாம் போகும் பேர்க்கு ஓர் மயல்போலும் எ-று.

மயல் - ஆசை. அரிவையென்பதனைக் கண் முதலியவற்றின் முதலிற் கூட்டுக. (கூஉக)

வேலுங்கருவிளையு மென்மானுங்காவியும்
சேலும்வடுவகிருஞ் செஞ்சரமும்—போலுமால்
தேமருவியுண்டு சிறைவண்டறைகூந்தற்
காமருவுபூங்கோதை கண்.

இ-ள். சிறை வண்டு - சிறையையுடைய வண்டுகள், தேம்மருவி உண்டு - மதுவை விரும்பியுண்டு, அறை - சத்திக்கின்ற, கூந்தல் - கூந்தலையும், காமருவு பூங்கோதை - அழகுபொருந்திய பூமாலையையு முடையவளாகிய இம்மாதினது, கண் - கண்கள், வேல் - வேலினையும், கருவிளையும் - கருவிளை மலரையும், மெல் மானும் - மெல்லிய மானையும், காவியும் - நீல மலரையும், சேலும் - சேல் மீனையும், வடு வகிரும் - மாவடுவின் பிளவையும், செஞ் சரமும் - செவ்விய பாணத்தையும், போலும் - நிகர்த்திரா நின்றன—எ-று.

கருவிளை - காக்கணம்பூ. மெல் மான் - மான் கன்று. (கூஉஎ)

சீதமதியி னொளியுஞ் செழுங்கமலப்
போதின்புதுமலர்ச்சி யுங்கொண்டு—வேதாதன்
கைம்மலரானன்றிக் கருத்தால்வகுத்தமைத்தான்
மொய்ம்மலர்ப்பூங்கோதை முகம்.

இ-ள். மொய் - நெருங்கிய, மலர் பூங் கோதை - பொலிவாகிய மலர் மாலையை யணிந்தவளது, முகம் - முகத்தை, வேதா - பிரமனானவன், சீதம் மதியின் ஒளியும் - குளிர்ந்த சந்திரனது ஒளியையும், செழுங் கமலப் போதின் - செழுமையாகிய தாமரை மலரின், புது மலர்ச்சியும் - புதிய மலர்ச்சியையும், கொண்டு - எடுத்துக்கொண்டு, தன் கை மலரான் அன்றி - தன் கா

மரை மலர்போன்ற கைகளானன்றி, கருத்தால் வகுத் தமைத்தான் - மனத்தால் வகுத்தமைத்தான்—எ-று.

கருத்தால் வகுத்தமைத்தல் - மாநதச் சிருட்டி. (கூஉஅ)

சந்தநத்திற்செந்தழலுந் தண்மதியில்வெவ்விடமும்
வந்தனவேபோலுமா னும்மாற்றம்—பைந்தொடியீர்
வாவிக்கமல மதிமுகங்கண்டேக்கறுவார்
ஆவிக்கிவையோ வரண்.

இ-ள். சந்தநத்தில் செந்தழலும் - சந்தநத்தில் சிவந்த நெருப்பும், தண்மதியில் வெவ்விடமும் - குளிர்ந்த சந்திரனிடத்தில் வெவ்விய விஷமும், வந்தனவே போலும் - உண்டானவற்றையேநிகர்க்கும், (எவையெனின்) நும் மாற்றம் - நுமது சொற்கள், பைந்தொடியீர் - பசும் பொன் வளையலை யணிந்தவரே, வாவி கமலம் - தடாகத்தின் கமல மலரையும், மதி - பூர்ண சந்திரனையும் போன்ற, முகம் கண்டு - நுமது முகத்தைக்கண்டு, எக்கறுவார் - எக்கறுவோராகிய ஆடவரது, ஆவிக்கு - உயிருக்கு, அரண் - காவலாவன, இவையோ - இவைதாமோ—எ-று. (கூஉகூ)

குழையருகுதாழக் குனிபுருவந்தாங்கி
உழையருயிர்பருகி நீண்ட—விழியுடைத்தாய்
வண்டேறிருளளகஞ் சூழவருமதியொன்
றுண்டேலிவண்முகத்திற் கொப்பு.

இ-ள். குழை அருகுதாழ - குண்டலம் அருகே தொங்கவும், குனிபுருவம் தாங்கி - வளைந்த புருவத்தைத்தாங்கி, உழையர் உயிர் பருகி - அருகேயிருப்போருடைய உயிரைப்பருகி, நீண்ட விழி உடைத்தாய் - நீண்ட கண்களையுடையதாய், வண்டு ஏறு - வண்டுகளேறும்படியான, இருள் அளகம் சூழ - இருண்ட கூந்தல் சூழவும், வரும் - வருகின்ற, மதி ஒன்று உண்டேல் - ஒரு பூரணசந்திரன் உளதாயிருப்பின், (அது) இவள் முகத்திற்கு ஒப்பு - இவளுடைய முகத்துக்கு நிகராகும்—எ-று. (கூ௩.௦)

செந்திருவுந்திங்களும் பூவுந்தலைசிறப்பச்
சந்தத்தொடையோ டணிதழுவிச்—செந்தமிழ்நூல்
கற்றூர்புனையுங் கவிபோன்மனங்கவரும்
முற்றாமுலையாண் முகம்.

இ-ள். முற்றா முலையாள் முகம் - இளமையாகிய தனங்களையுடையவளாகிய இம்மாதின் முகமானது, செந்திருவும் திங்களும் பூவும் தலைசிறப்ப - செந்திருவையும் திங்களையும் பூவையும் முதற் கண்ணேயுடைத்தாகி, சந்தத்

தொடையோடு - அழகியதொடைகளோடு, அணிதழுவி - அணியைத்தழுவி, செந்தமிழ் நூல் கற்றார் - செந்தமிழ் நூலைக் கற்றுவல்ல அறிஞர், புனையும் - செய்கிற, கவிபோல் - கவியைப்போல, மனம் கவரும் - எமது மனத்தைக் கவராநின்றது—எ-று.

திரு, திங்கள், பூ - மங்கல மொழிகள், தொடை - சொற்றொடை, அணி - அலங்காரம், இதுகவிக்கும்: அழகு, பூரண சந்திரன், தாமரை மலர், பூமாலை, ஆபரணம், இது தனத்துக்கும் கொள்க. (சுஙக)

வாளரவின்செம்மணியும் வன்னியிளம்பாசிலையும்
நாளிளையதிங்க ணகைநிலவும்—நீளொளியால்
தேனுலவுபூங்கொன்றைத் தேவர்கோன்செஞ்சடைமேல்
வானுலவுவிற்போல் வரும்.

இ-ள். வாள் அரவின் செம்மணியும் - ஒளியுள்ள பாம்பின்செம்மணியும், வன்னி இளம்பாசிலையும் - வன்னியின் இளமையாகிய பச்சிலையையும், நாள் இளைய திங்கள் நகைநிலவும் - இளந்திங்களின் சந்திரிகையும், நீள் ஒளியால் - தத்தம் பெரியவொளிகளைப் பரப்புதலால், தேன் உலவு - தேன்பொருந்திய, பூகொன்றை - கொன்றை மலர்மாலையை யணிந்த, தேவர்கோன் - தேவாதி பனாகிய சிவபெருமானது, செஞ் சடை - செஞ் சடையானது, மேல் வான் உலவு வில்போல்வரும் - மேலே ஆகாயத்திலுலாவுகின்ற இந்திர வில்லைப் போலத் தோன்றுநின்றது—எ-று.

இறைவனது செஞ்சடையானது செம்மணி முதலியவற்றி னொளிபட்டு இந்திரதநுசை நிகர்த்துத் தோன்றுநின்றதென்பது கருத்து. (சுஙஉ)

## தலைமகன் பாங்கனோடு சொல்லியது.

அங்கைமலரு மடித்தளிருங்கண்வண்டும்
கொங்கைமுகிழுங் குழற்காரும்—தங்கியதோர்
மாதர்கொடியுளதா னண்பாவதற்கெழுந்த
காதற்குளதோ கரை.

இ-ள். அங்கை மலரும் - அங்கையாகிய தாமரைமலரும், அடி தளிரும் - அடியாகிய தளிரும், கண்வண்டும் - கண்ணாகிய வண்டுகளும், கொங்கைமுகிழும் - கொங்கையாகிய அரும்பும், குழற்காரும் - கூந்தலாகிய மேகமும், தங்கியது - தங்கப்பெற்றதாகிய, ஓர் - ஒரு, மாதர் - விருப்பத்தை யுண்டாக்குகின்ற, கொடி உளது - கொடியுண்டு, நண்பா - நண்பனே, அதற்கு எழுந்த காதற்கு - அதன்பொருட் டெனக்குண்டாகிய ஆசைக்கு, கரை உளதோ - கரையுண்டோ—எ-று. (சுஙங)

செவ்வாய்த்தளிரு நகைமுகிழுங்கண்மலரும்
மைவாரளக மதுகரமும்—செவ்வி

உடைத்தாந்திருமுகமென் னுள்ளத்துவைத்தார்
துடைத்தாரேயன்றோ துயர்.

இ-ள். செவ்வாய் தளிரும் - செவ்வாயாகியதளிரினையும், நகைமுகிழும்- நகையாகிய அரும்பினையும், கண்மலரும் - கண்ணாகிய மலரினையும், மைவார் அளகம் மதுகரமும் - கரிய நீண்ட அளகமாகிய வண்டினையும், செவ்வி உடைத்து ஆம் - அழகாக வுடைத்தாயிருக்கிற, திருமுகம் - திரு முகத்தை, என் உள்ளத்து வைத்தார் - என் மனத்தின் கண்ணே வைத்தவர், துயர் துடைத்தாரேயன்றோ - என் துயரத்தை நீக்கினரேயல்லவா—எ-று.

முகிழ் - முல்லையரும்பு, மலர் - தாமரைமலர். (சுஙச)

தலைவியைக்கண்டமை பாங்கன் கூறல்.

செவ்வாய்நகையரும்பச் செங்கைத்தளிர்விளங்க
மைவாணெடுங்கண் மதர்த்துலவச்—செவ்வி
நறவலருஞ்சோலை வாய்நின்றதேநண்பா
குறவர்மடமகளாங் கொம்பு.

இ-ள். செவ்வாய் நகை அரும்ப - செவந்தவாய் எயிற்றை யரும்பவும், செங்கை தளிர் விளங்க - செவந்த கைகளாகிய தளிர் விளங்கவும், மைவாள் நெடுங்கண் மதர்த்து உலவ - கருமையாய் வாள்போன்ற நெடிய கண்கள் மதர்த்துலாவவும், செவ்வி - புதிதாகிய, நறவு அலரும் சோலைவாய் - தேனோடுகூடி விளங்குஞ் சோலையின்கண், நின்றது - நில்லா நின்றது, நண்பா- தோழனே, குறவர் மடமகள் ஆம் கொம்பு - குறவர் மடமகளாகிய பூங் கொம்பு—எ-று.

மை - மையெழுதின எனினுமாம். வாள் - ஒளியுமாம். நறவு - தேன். ()

தலை மகன் சொல்லியது.

தண்மதிக்குத்தோலாது தாழ்கயத்துவைகாது
முண்மருவுந்தாண்மேல் முகிழாது—நண்ணி
இருபொழுதுஞ்செவ்வி யியல்பாய்மலரும்
அரிவைவதநாம் புயம்.

இ-ள். அரிவை - என் காதலியின், வதநாம் புயம் - முகமாகிய தாமரை மலர், தண் மதிக்கு தோலாது - தட்டமாகிய சந்திரனுக்குத் தோற்காது, தாழ்கயத்து வைகாது - ஆழ்ந்த சயத்தில் தங்காது, முள்மருவு தாள்மேல் முகிழாது - முள்ளோடுகூடிய நாளத்தின்மேல் அரும்பாது, இருபொழுதும்- இரண்டுகாலத்திலும், செவ்விநண்ணி - அழகுபொருந்தி, இயல்பாய் மலரும்- இயற்கையாய் மலராநிற்கும்—எ-று.

சயம் - ஓடை, தாள் - தண்டு, முகிழ்த்தல் - மொட்டித்தல், வதநம்-முகம், அம்புயம் - தாமரை. (௬௩௬)

தலைமகன் சொல்லியது.

கைகாந்தள்வாய்குமுதங் கண்ணெய்தல்காரிகையீர்
மெய்வார்தளிர்கொங்கை மென்கோங்கம்—இவ்வனைத்தும்
வன்மைசேர்ந்தாவி வருத்துவதுமாதவமொன்
றின்மையேயன்றோ வெமக்கு.

இ-ள். காரிகையீர் - அழகினையுடையீர், (நுமது) காந்தள்கை - காந்தள் மலர்போலுங் கையும், குமுதம்வாய் - குமுத மலர்போலும் வாயும், நெய்தல்கண் - நெய்தல்மலர்போலுங் கண்ணும், வார்தளிர்மெய் - நீண்ட தளிர்போலும்மேனியும், மென்கோங்கம்கொங்கை - மெல்லிய கோங்கரும்புபோலும் கொங்கையும் ஆகிய, இவ்வனைத்தும் - இவையாவும், வன்மைசேர்ந்து-வன்மைபொருந்தி, ஆவி - எம்முயிரை, வருத்துவது - வருத்துதற்குக் காரணம், எமக்கு - எமக்கு, மாதவம்ஒன்று இன்மையே அன்றோ - முற்காலத்துச்செய்த பெரிய தவப்பயனொன்றில்லாமையே யல்லவா.—எ-று.

குமுதம் - செவ்வல்லிமலர், நெய்தல் - நீலமலர். (௬௩௭)

தலைமகன் சொல்லியது.

விழியேகளிவண்டு மென்னகையேதாது
மொழியேமுருகுலாந் தேறல்—பொழிகின்ற
தேமருவுகோதைத் தெரிவைதிருமுகமே
தாமரையென்னுள்ளத் தடத்து.

இ-ள். என்உள்ளம் தடத்து - என்மனதாகிய தடத்தில், விழியே களிவண்டு - கண்ணே களிவண்டாகவும், மெல்நகையே தாது - மெல்லியநகையேதாதாகவும், மொழியே - சொல்லே, முருகு உலாம்தேறல்-வாசனையுள்ள தேனாகவும் கொண்டு, பொழிகின்ற தேம்மருவுகோதை-சொரிகின்ற மலர்த்தேனையுடைய கூந்தலையுடையாளாகிய, தெரிவை திருமுகம் தாமரை - என் காதலியின் திருமுகமாகிய தாமரைமலர் மலர்ந்திராநின்றது—எ-று.

களி - செருக்கு, தாது - மகரந்தம். (௬௩௮)

தலைமகன்கூற்று.

மாற்றத்தாற்கிள்ளை நடையான்மடவன்னம்
தோற்றத்தாற்றண்ணென் சுடர்விளக்கம்—போற்றும்
இயலான்மயிலெம்மை யிந்நீர்மையாக்கும்
மயலார்மதர்நெடுங்கண் மான்.

இ-ள். (நண்பனே) எம்மை இந்நீர்மை ஆக்கும் - எம்மை யித்தன்மையே மாகச்செய்த, மயல்ஆர் மதர்நெடு சுண்மான் - காமமயக்கத்தைச் செய்கின்ற மதர்த்த நெடியகண்களை யுடைய மான்போல் வாளாகிய என்காதலி, மாற்றத்தால் கிள்ளை - மொழியாற் கிளிபோல் வாள், நடையாமல் மட அன்னம் - நடையால் இளமையாகிய அன்னப்பெடைபோல்வாள், தோற்றத்தால்-உருவத்தால், தண்ஏன் சுடர்விளக்கம் - தட்பமாகிய ஒளியையுடைய விளக்குப் போல் வாள், போற்றும் இயலால்மயில் - யாவராலும் புகழப்படுகின்ற சாயலால் மயில்போல்வாள்— ஏ-று.

மாற்றம் - சொல், நீர்மை - தன்மை. (கூ௩கூ)

தலைமகன்கூற்று.

பொங்களகமல்ல புயலேயிவையிவையும்
கொங்கையிணையல்ல கோங்கரும்பே—மங்கைநின்
மையரிக்கண்ணல்ல மதர்வண்டிவையிவையும்
கையல்லகாந்தண் மலர்.

இ-ள். மங்கை - மங்கைப்பருவமுடையவளே, இவை-இவை, பொங்கு அளகம் அல்ல - விளங்குகின்ற கூந்தலல்ல, புயலே - மேகப் பரப்பேயாம், இவையும் - இவையும், கொங்கை இணை அல்ல - இரண்டு தனங்களல்ல, கோங்கு அரும்பே - கோங் கரும்புகளேயாம், நின்மை அரிக்கண் அல்ல - (இவ்வை) உன்கரிய செவ்வரிபரந்த கண்களல்ல, மதர்வண்டு - மதர்த்தவண்டுகளேயாம், இவையும் - இவையும், கை அல்ல - கைகளல்ல, காந்தள் மலர் - காந்தள் மலர்களேயாம்—ஏ-று.

பொங்குதல் - விளங்குதல், அளகம் - கூந்தல், புயல்-மேகம். (கூ௪0)

தலைமகன்கூற்று.

மலையிற்பயிலா மடமஞ்ஞைவாரி
அலையிற்பிறவா வமுதம்—விலையிட்
டளவாதநித்தில மாராததேறல்
வள்வாண்மதர்நெடுங்கண் மான்.

இ-ள். வளம் - செழுமையாகிய, வாள் - ஒளிபொருந்திய, மதர்-மதர்த்த, நெடுகண் - நெடிய கண்களையுடைய, மான் - மான்போல் வாளாகிய என்காதலி, மலையில் பயிலாமடமஞ்ஞை - மலைநிலத்திற் பழகாத மடமயில் போல்வாள், வாரி அலையில்பிறவா அமுதம் - பெருக்கையுடைய சமுத்திரத்திற் பிறவாத அமிர்தம்போல்வாள், விலையிட்டு அளவாத நித்திலம் - விலைதந்து அளந்துகொள்ளாத முத்தம்போல்வாள், ஆராததேறல் - தெவிட்டாத தேன் போல்வாள்—ஏ-று.

என்காதலிமயில் முதலியவைபோன் றிருக்கின்றனள் எனத் தலைமகன் தலைவியை வியந்துகூறியவாறு. (சுசக)

தலைமகன்கூற்று.

மழலைவாய்நவ்வி மதர்நெடுங்கண்மஞ்ஞை
குழலின்பொறைமெலிந்த கொம்பர்—சுழல்கலவம்
தாங்கியவன்னந் தடங்கொங்கையாரமுதந்
தேங்கொள்கமலத் திரு.

இ-ள். தேம் கொள் கமலத்திரு - மணம் பொருந்திய தாமரைமலரில் வாழ்கின்ற சீதேவிபோல் வாளாகிய என்காதலி, மழலைவாய்நவ்வி - மழலைச் சொல்லையுடைய மான்போல் கின்றாள், மதர்நெடுங்கண் மஞ்ஞை - மதர்த்த நெடியகண்களையுடைய மயில்போல் கின்றாள், குழலின் பொறைமெலிந்த கொம்பர் - கூந்தலின்பாரத்தாலே யிளைத்ததோர் பூங்கொம்பு போலகின்றாள், சுழல்கலவம்தாங்கிய அன்னம் - சுழல்கின்ற கலாபத்தைத்தாங்கிய அன்னத்தை நிகர்க்கின்றாள், தடம்கொங்கை ஆர் அமுதம் - பெரியகொங்கைகளையுடைய அரிய அமிர்தத்தையும் நிகர்க்கின்றாள்—எ-று.

கலவம் - தோகை, தடம் - மலைபோன்ற எனினுமாம். (சசஉ)

சிவபெருமானுக்குப் பாம்பேதோடிமுதலியவா யிருக்கும்என்றுகூறியது.

கரமருவுபொற்றொடியாங் காலிற்கழலாம்
பொருவில்புயவலய மாகும்—அரவரைமேல்
நாணுமரற்கு நகைமணிசேர்தாழ்குழையாம்
பூணும்புனமாலை யாம்.

இ-ள். அரவு - பாம்பானது, அரற்கு - சிவபெருமானுக்கு, கரம் மருவு பொன்தொடி ஆம் - கையிலணிதற்குரிய பொற்கங்கணமாகும், காலில்கழல் ஆம் - திருவடியிற்கழலாகும், பொருவுஇல் புயவலயம்ஆகும் - ஒப்பற்றதோள் வலயமாகும், அரைமேல் நாண்ஆம் - அரையில் அரைநாணுகும், நகைமணி சேர் தாழ்குழைஆம் - ஒளியுள்ள மணிகளிழைத்த நீண்டகாதணியாகும், பூண் ஆம் - பூணுதற்குரிய ஆபரணமாகும், புனைமாலை ஆம் - தரிக்கத்தக்க மாலையுமாகும்—எ-று.

தொடி - கங்கணம். கழல் - காலணி. குழை - குண்டலம். (சுசங)

மனைக்குவிளக்க மடவார்மடவார்
தமக்குத்தகைசால் புதல்வர்—மனக்கினிய
காதற்புதல்வர்க்குக் கல்வியேகல்விக்கு
ஓதிற்புகழ்சா லுணர்வு.

இ-ள். மனைக்கு விளக்கம் மடவார் - இல்லறத்துக்கு விளக்காவது மாதரே, மடவார்தமக்கு (விளக்காம்) தலைசால்புதல்வர் - அம்மாதருக்கு விளக்காவது பெருமையமைந்த புதல்வரே, மனக்கு இனிய - மனத்துக்கினிய, காதல் புதல்வர்க்கு (விளக்கம்) - அப்புள்ளபுதல்வர்க்கு விளக்கமாவது கல்வியே - கல்வியே, கல்விக்கு (விளக்கம்) ஓதில் - அக்கல்விக்கு விளக்கத்தைச் சொல்லுமிடத்தில், புகழ்சால் உணர்வு - புகழ்மிகுந்த அறிவே—எ-று. ()

முன்னங்குடைபோன் முடிநாயகமணிபோன்
மன்னுந்திலகம்போல் வாளிரவி—பொன்னகலம்
தங்குகவுத்துவம்போ லுந்தித்தடமலர்போல்
அங்கணுலகளந்தார்க் காம்.

இ-ள். வாள் இரவி - ஒளியையுடைய சூரியன், அம்கண் உலகு அளந்தார்க்கு - அழகிய இடத்தையுடைய வுலகத்தை யளந்தருளின திருமாலுக்கு, முன்னம் குடைபோல் - முதலில் குடைபோலவும், (பிறகு) முடிநாயக மணிபோல் - முடியிலணிகின்ற சூடாமணிபோலவும், (பிறகு) மன்னும் திலகம்போல் - நிலைபெற்ற திலகம் போலவும், (பிறகு) பொன் அகலம் தங்கு கவுத்துவம்போல் - அழகிய மார்பில்தங்கிய கவுத்துமணிபோலவும், (பிறகு) உந்தித்தடமலர்போல் - திருவுந்தித்தடத்துத் தாமரைமலர்போலவும், ஆம்- ஆய்விட்டது—எ-று.

திலகம் - நெற்றிப்பொட்டு. கவுத்துவம்-கௌஸ்துவாபரணம். உலகளந்தார் - திரிவிக்கிரமாஞர். (சுசரு)

திருமால்துதி.

பாலன்றனதுருவா யேழுலகுண்டாலிலையின்
மேலன்றுகண்டுயிருய் மெய்யன்பர் - ஆலன்று
வேலைநீருள்ளதோ விண்ணதோமண்ணதோ
சோலைசூழ்குன்றெடுத்தாய் சொல்.

இ-ள். சோலைசூழ் குன்று - சோலைகள் சூழ்ந்த கோவர்த்தன கிரியை, எடுத்தாய்-(கோபாலர்களை ரக்ஷிக்கும்பொருட்டு) எடுத்தவனே, (நீ) ஏழ்உலகு உண்டு - எழுலகங்களையுமுண்டு, பாலன் தனது உருவாய்-ஒருபாலகன்வடிவங்கொண்டு, ஆலிலையின்மேல்—, அன்று - அந்நாளிலே, கண் துயின்ருய் - கண்ணுறங்கிஞய், மெய் என்பர் - இது உண்மையென்று சொல்லுவர் உலகத்தார், அன்று - அந்நாளிலே, ஆல் - அந்தஆலானது, வேலைநீர் உள்ளதோ - கடல் நீரிலிருந்ததோ, விண்ணதோ - ஆகாயத்திலிருந்ததோ, மண்ணதோ - பூமியிலிருந்ததோ, சொல் - சொல்லுவாயாக—எ-று. (சுசசு)

பொருட்குப்பிரியுந் தலைமகனுக்குப் பாங்கி சொல்லியது.

முல்லைக்கொடிநடுங்க மொய்காந்தள் கைகுலைப்ப
எல்லையினவண் டெழுந்திரங்க—மெல்லியன்மேல்
தீவாய்நெடுவாடை வந்தாற் செயலறியேன்
போவா யொழிவாய் பொருட்கு.

இ-ள். (தலைவனே) முல்லைக் கொடி நடுங்க - முல்லைக் கொடிகள் அசையா நிற்கவும், மொய் காந்தள் கை குலைப்ப - நெருங்கிய காந்தள் மாதர் கைபோற் குலையாய் மலரவும், எல்லை இனவண்டு எழுந்து இரங்க - ஒளியை யுடைய கூட்டமாகிய வண்டுகள் எழுந் தொலிக்கவும், தீ வாய் நெடு வாடை - தீயையுடைய வாடைக் காற்றானது, மெல்லியல் மேல் வந்தால் - மெல்லிய லாகிய இவள்மேல் வருமாயின், செயல் அறியேன் - பிறகு விளையுஞ் செய் தியை அறியேன், (ஆதலால்) பொருட்கு போவாய் ஒழிவாய் - பொருள் சம் பாதித்தற்குப் போவாயாக அன்றிப் போகா தொழிவாயாக—எ-று.

குலைப்ப - குலையாய் மலர, எல் - ஒளி. (௬௬௭)

தலைமகன்கூற்று.

மாதர்துவரிதழ்வாய் வந்தென்னுயிர்கவரும்
சீதமுறுவலறி வழிக்கும்—மீதுலவி
நீண்டமதர்விழியென் னெஞ்சங்கிழித்துலவும்
யாண்டையதோமென்மை யிவர்க்கு.

இ-ள். (இவருடைய) மாதர் துவர் இதழ்வாய் - அழகிய வளம்போன்ற வாயானது, வந்து என் உயிர் கவரும் - வந்து என்னுயிரைக் கவரா நின்றது, சீதம் முறுவல் அறிவு அழிக்கும் - குளிர்ந்த நகையானது அறிவை யழிக்கா நின்றது, மீது உலவி நீண்ட மதர் விழி - மேலே யுலாவி நீண்ட மதர் விழி யானது, என் நெஞ்சம் கிழித்து உலவும் - என் நெஞ்சைப் பிளந்துகொண் டுலாவா நின்றது, (இப்படியிருக்க) இவர்க்கு மென்மையாண் டையதோ - இவர்க்கு மென்மை யெங்குளதோ—எ-று.

துவர் - பவளம், மென்மை - இரக்கம். (௬௬௮)

பாங்கி சொல்லியது.

மெய்யேபொருண்மேற் பிரிதியேல்வேறொரு
தையலைநாடத் தகுநினக்கு—நெய்யிலைவேல்
வள்ளல்பிரிவற்றம் பார்த்தெங்கள் வாழ்நாளைக்
கொள்ள வுழலுமாங் கூற்று.

இ-ள். மெய்யே - ஒருதலையாகவே, பொருள்மேல் பிரிதியேல் - பொருளாசையாய்ப் பிரிவையாயின், நினக்கு - உனக்கு, வேறொரு தையலை நாடித் தகும் - வேறொரு மனையாளைத் தேடத் தகும், (ஏனெனின்) நெய் இலை வேல் வள்ளல் - நெய் பூசி இலைவடிவாயிருக்கிற வேற் படையையுடைய வள்ளலே, கூற்று - யமனானவன், பிரிவு அற்றம் பார்த்து - நீ பிரிந்த சமயம் பார்த்து, எங்கள் வாழ்நாளை கொள்ள உழலும் - எங்கள் ஆயுளைக் கவர்ந்து கொள்ளச் சுருதியுழலா நின்றான் ஆதலால்—எ-று. (கூசகூ)

தோழி கூற்று.

செல்லுநெறியனைத்துஞ் சேமநெறியாக
மல்கநிதியம் வளஞ்சிறக்க—வெல்லும்
அடற்றேர்விடலை யகன்றுறைவதாங்கோர்
இடத்தேபிறக்க வியாம்.

இ-ள். வெல்லும் அடல் தேர் விடலை - வெற்றியினையும் வலியினையுமுடைய தேரேறிச் செல்லும் வீரனே, செல்லும் நெறி அனைத்தும் - எம்மைப்பிரிந்து நீபோகும் வழிமுழுதும், சேமம் நெறியாக - உனக்குக் காவலாகிய வழியாகக் கடவது, நிதியம் மல்க - பொருள் வருவாயும் அதிகரிக்கக்கடவது, வளம் சிறக்க - செல்வமும் விருத்தியாகக் கடவது, (ஆயினும்) அகன்று உறைவது - நீ யெம்மைப் பிரிந்து வாழ்வதாகிய, ஓர் இடத்தே - ஓரிடத்திற்றானே, யாம் பிறக்க - யாமும்வந்து பிறப்போமாக—எ-று.

நீர் யெம்மைப் பிரிந்து சென்றாலும் நீ சென்று வாழ்வதாகிய அவ்விடத்திற்றானே யாமும்வந்து பிறப்போ மென்பது கருத்து. (கூ௱0)

பல் விளக்கத்தக்க கோம்புகள்.

வேலுக்குப்பல்லிறுகும் வேம்புக்குப்பற்றுலங்கும்
பூலுக்குப்போகம்பொழியுமே—ஆலுக்குத்
தண்டாமரையாளுஞ் சார்வளேநாயுருவி
கண்டால்வசீகரமாங் காண்.

இ-ள். வேலுக்கு பல் இறுகும் - வேலங் கொம்பினால் பல்லைத் துலக்கினால் பல் இறுகும், வேம்புக்கு பல் துலங்கும் - வேப்பங் கொம்பினால்துலக்கினால் பல் ஒளிவிடும், பூலுக்கு போகம் பொழியும் - பூலாக் கொம்பினால் துலக்கினால் வீரிய விருத்தியாகும், ஆலுக்கு - ஆலம் விழுதினால்துலக்கினால், தண் தாமரையாளும் சார்வள் - குளிர்ச்சியுள்ள தாமரை மலரையுடையவளாகிய திருமகளும் சேர்வாள், நாயுருவி கண்டால் வசீகரம் ஆம் - நாயுருவி வேரினால் துலக்கினால் அவனைக் கண்டவரெல்லாரும் அவன் வசமாகும்படி செய்யும்—எ-று. (கூ௱௪)

பல் விளக்கத் தகாத வஸ்துக்கள்

கல்லுமணலுங் கரியுடனே பாளைகளும்
வல்லதொரு வைக்கோலும் வைத்துநிதம்—பல்லதனைத்
தேய்த்திடுவா ராயினங்கே சேராளே சீதேவி
வாய்த்திடுவள் மூதேவி வந்து.

இ-ள். கல்லும் - கல்லையும், மணலும் - மணலையும், கரியுடனே பாளைகளும் - கரியுடனே பாளைகளையும், வல்லது ஒருவைக்கோலும் - உறுதியாகிய வைக்கோலையும், வைத்து—, நிதம் - நாள்தோறும், பல்லதனை - பல்லை, தேய்த்திடுவார் ஆயின் - யாராயினும் தேய்ப்பாராயின், அங்கே - அவரிடத்தில், சீதேவி சேராள் - சீதேவி சேரமாட்டாள், மூதேவிவந்து வாய்த்திடுவள் - மூதேவி வந்து சேர்வாள்—எ-று.

பாளை - தென்னம்பாளை முதலானவை. (சுருஉ)

நல்லோர் எங்கேபிறந்தாலும் மேன்மை யடைவ ரெனல்.

தாமரைபொன்முத்துச் சவரங்கோரோசனைபால்
பூமருதேன்பட்டுப் புனுகுசவ்வா—தாமழன்மற்
றெங்கேபிறந்தாலு மெள்ளாரே நல்லோர்கள்
எங்கேபிறந்தாலு மென்.

இ-ள். தாமரை - தாமரை மலர், பொன் - சுவர்ணம், முத்து - முத்து, சவரம் - கவரிமயிர், கோரோசனை - கோரோசநம், பால் - பால், பூமருதேன் - புஷ்பங்களில் உண்டாகின்ற தேன், பட்டு - பட்டு, புனுகு - புனுகு, சவ்வாது - சவ்வாது, ஆம் அழல் - எல்லாக் காரியங்களுக்கும் உபயோகப்படுகிற நெருப்பு, (ஆகிய இவைகள்) எங்கே பிறந்தாலும் - எவ்விடத்துப் பிறந்தனவாயினும், எள்ளார் - (உலகத்தார்) இழிந்தனவென்று இகழாமல் சிறந்தனவாகவே யேற்றுக் கொள்வார்கள், (ஆதலால்) நல்லோர்கள் - நல்லவர்கள், எங்கே பிறந்தாலும் என் - எவ்விடத்திற் பிறந்தாலும் அவர்க்கோரிழிவில்லை, யாவராலும் சிறப்பாகவே யேற்றுக்கொள்ளப்படுவார்கள்—எ-று. (சுருங)

பெரியோரையே அடுக்க வேண்டு மெனல்.

அரிமந்திரம்புகுந்தா லானைமருப்பும்
பெருகொளிசேர்முத்தும் பெறலாம்—நரிநுழையில்
வாலுஞ்சிறிய மயிரெலும்புங் கத்தபத்தின்
தோலுமல்லால் வேறுமுண்டோ சொல்.

இ-ள். அரிமந்திரம் புகுந்தால் - சிங்கத்தின் குகையில் நுழைந்தால், ஆனைமருப்பும் - யானைக்கொம்பையும், பெருகு ஒளிசேர் முத்தும் - மிகுந்த

ஒளியுள்ள முத்தையும், பெறலாம் - அடையலாம், (அதைவிட்டு) நரி நுழை யில் - நரியிருக்கு மிடத்துக்குப் போனால், (இழிவாகிய) கத்தபத்தின் - கழு தையின், வாலும் - வாலையும், சிறிய மயிர் எலும்பும் - சிறியமயிரையும் எலும் பையும், தோலும் அல்லால் - தோலையும் அடைவதல்லாமல், வேறும் உண் டோ சொல் - வேறு உயர்ந்த பொருள்களையும் அடைவதுண்டோ சொல்லு வாயாக—எ-று.

பெரியோரையடுத்தால் உயர்ந்த பொருளை யடையலாம், சிறியோரை யடுத்தால் இழிந்தபொருளையடையலாம் என்பது கருத்து. (சுருச)

## யாவர்க்கும் இன்சொல்லே நன்மையெனல்.

மென்மதுரவாக்கால் விரும்புஞ்சகங்கடின
வன்மொழியினாலிகழு மண்ணுலகம்—நன்மொழியே
ஓதுகுயிலேதங் குதவியதுகத்தபந்தான்
ஏதபராதஞ்செய்த தின்று.

இ-ள். (ஒருவன்பேசுகிற) மெல் - மெல்லிய, மதுர வாக்கால் - இன் சொல்லால், சகம் - உலகமுழுதும், விரும்பும் - அவனை இச்சிக்கும், (ஒருவன் பேசுகிற) கடினம் வலமொழியினால் - கடினமானவன் சொல்லால், மண் உல கம் - இந்த நிலவுலகம், இகழும் - அவனையிகழும், (இவ்வுலகத்தார்க்கு) நன் மொழியே ஓது குயில் - இனிய குரலையே காட்டுகின்ற குயிலானது, ஏது உதவியது - எதனைக்கொடுத்தது, கத்தபம்-கழுதையானது, ஏது அபராதம் செய்தது - என்ன அபராதம் செய்தது—எ-று.

குயில்தன் இனிய குரலால் யாவராலும் விரும்பப்படுகின்றது, கழுதை தன் வன்குரலால் யாவராலும் வெறுக்கப்படுகின்றது, இதுபோலவே இன் சொல்லுடையார் யாவராலும் விரும்பப்படுவார்கள், வன் சொல்லுடையார் யாவராலும் வெறுக்கப்படுவார்கள் என்பதுகருத்து. (சுருரு)

## இவைவீணாமெனல்.

காந்தனில்லாத கனங்குழையாள் பொற்பவமாம்
சாந்தகுணமில்லார் தவமவமாம்—ஏந்திழையாய்
அன்னையில்லாப்பிள்ளை யிருப்பதவமனமே
துன்னெயிறில்லாருண் சுவை.

இ-ள். காந்தன் இல்லாத - கணவனில்லாத, கனங்குழையாள் பொற்பு- மாதின் அழகு, அவம் ஆம் - வீணாகும், சாந்தகுணம் இல்லார் தவம் - சாந்த குணமில்லாதவருடைய தவம், அவம் ஆம் - வீணாகும், ஏந்திழையாய் - மாதே, அன்னையில்லாபிள்ளை இருப்பது - தாயில்லாப் பிள்ளையிருப்பது, அவமே- வீணேயாம், துன் எயிறு இல்லார் - நெருங்கின பற்களில்லாதார், ஊண் சுவை - உண்ணுகின்ற உணவின் சுவை, அவமே - வீணேயாம்—எ-று. (சுருசு)

### போஜநக்கிரமம்.

ஒருபோதுயோகியே யொண்டளிர்க்கைமாதே
இருபோதுபோகியே யென்பர்—திரிபோது
ரோகியேநான்குபோ துண்பானுடல்விட்டுப்
போகியேயென்று புகல்.

இ-ள். ஒள் தளிர்கைமாதே - ஒட்பமாகிய தளிர்போன்ற கையினையுடைய பெண்ணே, ஒருபோது உண்பான்யோகி - ஒருபொழுது உண்பவன் யோகி, இருபோதுபோகி - இரண்டுபொழுது உண்பவன்போகி, என்பவர்- என்று பெரியோர்சொல்வார்கள், திரிபோது ரோகியே - மூன்றுபொழுது உண்பவன் ரோகியே, நான்குபோது உண்பான் - நான்குபொழுது உண்பவன், உடல்விட்டுப்போகியே - உடம்பைவிட்டு நீங்கினவனே, என்றுபுகல்- என்றுசொல்வாயாக—எ-று.

யோகி - யோகநிஷ்டை செய்வோன், போகி - இல்லறத்தோன், ரோகி- பிணியாளன், உடல்விட்டுப்போகி - பிணம். (சுஎ)

### இன்னார்க்கு இத்தனைக்கண்ணெனல்.

கண்ணிரண்டேயாவர்க்குங் கற்றோர்க்குமூன்றுவிழி
எண்ணும்விழியேழாகு மீவோர்க்கு—நண்ணும்
அநந்தந்தவத்தா லருண்ஞானம்பெற்றோர்க்
கநந்தம்விழியென் றறி.

இ-ள். யாவர்க்கும் - எல்லார்க்கும், கண் இரண்டே - கண்களிரண்டே, கற்றோர்க்கு மூன்றுவிழி - கல்விகற்றோர்க்கு மூன்றுகண்கள், ஈவோர்க்கு- கொடையாளிகளுக்கு, எண்ணும்விழி எழாகும் - எண்ணப்பட்ட கண்கள் எழாகும், நண்ணும் - பொருந்திய, அநந்தம்தவத்தால்-முடிவற்ற தவத்தால், அருள்ஞானம் பெற்றோர்க்கு - கடவுள் அருளையும் ஞானத்தையும் பெற்றவர்களுக்கு, அநந்தம்விழி - அநேகம்கண்களாம், என்றுஅறி - என்றறிந்துகொள்வாயாக—எ-று. (சுஅ)

### இவரை யிவர் அறிவரெனல்.

கற்றோர்கனமறிவர் கற்றோரேகற்றறியா
மற்றோரறியார் வருத்தமுறப்—பெற்றறியா
வந்திபரிவாய் மகவைப்பெறுந்துயரம்
நொந்தறிகுவாளோ நுவல்.

இ-ள். கற்றோர்கனம் கற்றோரேஅறிவர் - கல்விகற்றோரது பெருமையைக் கல்விகற்றோரே அறிவர், கற்று அறியாமற்றோர் அறியார் - கல்விகற்றறி

யர்த மற்றோர் அறியமாட்டார், வருத்தம்மிக - வருத்தமிகும்படி, பெற்று அறியா - பிள்ளையைப்பெற்றறியாத, வந்தி - மலடியானவள், பரிவாய் - நீண்போது, மகவைப்பெறும்துயரம் - பிள்ளைபெறுந் துன்பத்தை, நொந்து அறிகுவாளோ - நொந்தறிவாளோ, நுவல் - நீசொல்வாயாக—எ-று. (சுருக)

இவர்க்கு இங்கேவிஷமெனல்.

ஈக்குவிடந்தலையி லெய்துமிருந்தேளுக்கு
வாய்த்தவிடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணரவுக்குவிடம் பல்லளவேதுர்ச்சநருக்
கங்கமுழுதும்விடமே யாம்.

இ-ள். ஈக்கு - ஈயினுக்கு, தலையில்விடம் எய்தும் - தலையில் விஷமிருக்கும், இருதேளுக்கு - பெரிய தேளுக்கு, கொடுக்கில் வாய்த்த விடம் வாழும் - பொருந்திய விஷம் தங்கியிருக்கும், நோக்கு அரிய - பார்த்தற்கரிய, பைங்கண் அரவுக்கு - பசியகண்களையுடைய பாம்புக்கு, பல் அளவேவிடம் - பல்லினளவிலே விஷமிருக்கும், துர்ச்சநருக்கு—, அங்கமுழுதும் விடமேஆம்-சரீரமுழுதும் விஷமேயாம்—எ-று. (சுசுO)

பாம்பினும் துர்ஜனர்கொடியரெனல்.

துர்ச்சநரும்பாம்புந் தொழிலொக்கினும்பாம்பு
துர்ச்சநரையொக்குமோ தோகையே—துர்ச்சநர்தாம்
எந்தவிதத்தாலு மிணங்காரேபாம்புமணி
மந்திரத்தாலாமே வசம்.

இ-ள். துர்ச்சநரும் பாம்பும் - துஷ்டஜநங்களும் பாம்பும், தொழில் ஒக்கினும் - செய்கையில் ஒத்திருந்தாலும், பாம்பு - பாம்பானது, துர்ச்சநரை ஒக்குமோ - துஷ்டஜனங்களை ஒத்திருக்குமோ, (ஒத்திராது) (எனெனின்) தோகையே - பெண்ணே, துர்ச்சநர் - துஷ்டஜனங்கள், எந்தவிதத்தாலும் இணங்கார் - எந்தவகைக்கும் இசைந்துவரமாட்டார்கள், பாம்பு-பாம்பானது, மணிமந்திரத்தால் வசம் ஆம் - மணி மந்திரங்களுக்கு வசமாகும்—எ-று. ()

இவரிவரைக்கண்டால் இவ்வளவுதூரம்
விலகவேண்டுமெனல்.

கொம்புளதற்கைந்து குதிரைக்குப்பத்துமுழம்
வெம்புகரிக்காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தங்கண்ணிற் றெரியாததூரத்து
நீங்குவதேநல்ல நெறி.

இ-ள். கொம்பு உள்ளதற்கு - கொம்புள்ள மிருகத்துக்கு, ஐந்து-ஐந்து முழத்தூரமும், குதிரைக்கு பத்துமுழம் - குதிரைக்குப் பத்துமுழத்தூரமும், வெம்புகரிக்கு - கோவிக்கின்ற யானைக்கு, ஆயிரம் - ஆயிரமுழத் தூரமும், வேண்டும் - விலகவேண்டும், வம்புசெறி - தீமைமிகுந்த, தீங்கினர் தம் கண்ணில் - துஷ்டர்கண்ணுக்கு, தெரியாத தூரத்து - தெரியாத தூரத்துக்கு, நீங்குவதே - விலகிப் போவதே, நல்ல நெறி - நன்னெறியாம்—எ-று. (௬௬௨)

செங்கமலப்போதலர்ந்த செவ்விபோலும்வதநம்
தங்குமொழிசந்தனம் போலும்—பங்கியெறி
கத்தரிகைபோலுமிளங் காரிகையேவஞ்சர்மனம்
குத்திரர்பான்மூன்று குணம்.

இ-ள். இளங்காரிகையே - மாதே, வஞ்சர் - வஞ்சகருடைய, வதநம்-முகம், செங்கமலப்போது அலர்ந்த செவ்விபோலும்-செந்தாமரைமலர் மலர்ந்தாற்போல் அழகாயிருக்கும், தங்கும் மொழி சந்தனம்போலும் - அவரிடத்துள்ளசொல் சந்தனம்போலக் குளிர்ச்சியாயிருக்கும், மனம் - அவர் மனமானது, பங்கிஎறி கத்தரிகைபோலும் - மயிரைவெட்டுகிற கத்தரிகைபோலக் கடினமாயிருக்கும், (ஆகையால்) குத்திரர்பால் மூன்றுகுணம் - துஷ்டரிடத்தில் இந்தமூன்று குணங்களுண்டு—எ-று.

போது - மலர், செவ்வி - அழகு, பங்கி - மயிர், குத்திரர் - துஷ்டர். ()

ஆனைமருப்பு மருங்கவரிமான்மயிரும்
கானவரியுகிருங் கற்றோரும்—மானே
பிறந்தவிடத்தன்றிப் பிறதொருதேசத்தே
சிறந்தவிடத்தன்றோ சிறப்பு.

இ-ள். ஆனைமருப்பும் - யானைத்தந்தமும், அருகவரி மான்மயிரும்-அருமையாகிய கவரிமான்மயிரும், கானவரி உகிரும் - காட்டில்வாழும் புலிநகமும், கற்றோரும் - கல்விகற்றோரும், மானே - மான்போல்வாளே, பிறந்த இடத்து அன்றி - பிறந்தவிடத்தில் மாத்திரமேயன்றி, பிறிது ஒருதேசத்தே-வேறொருதேசத்திலே, சிறந்த இடத்து அன்றோ - சென்றபோதுமல்லவா, சிறப்பு-சிறப்படையப் பெறுகிறார்கள்—எ-று.

மருப்பு - தந்தம், வரி - புலி, கானம் - காடு. (௬௬௪)

தலைமயிருங்கூருகிரும் வெண்பல்லுந்தத்தம்
நிலையுடையமான வருநிற்கும்—நிலைதவறுத்
தானத்திற்பூச்சியமே சாருநிலைதவறுந்
தானத்திற்பூச்சியமே தான்.

இ-ள். தலைமயிரும்—, கூர்உகிரும் - கூர்மையாகிய நகங்களும், வெண்பல்லும் - வெண்மையாகிய பற்களும், தத்தம் நிலையுடைய மானவரும் - தங்கள் தங்கள் நிலையையுடைய மேலோரும், நிற்கும் நிலைதவறுதானத்தில் - நிற்கும் நிலைதவறுத இடத்தில், பூச்சியமே - சிறப்பையே யடைவார்கள், நிலைதவறும் தானத்தில் - நிலைதவறின இடத்தில், பூச்சியமே - இழிவையே யடைவார்கள்—எ-று.

உகிர் - நகம், மானவர் - மானமுடையவர், தானம் - இடம், பூச்சியம் - தாழ்வு. (சுசுரு)

அன்னைதயையு மடியாள்பணியுமலர்ப்
பொன்னினழகும் புவிப்பொறையும்—வன்னமுலை
வேசிதுயிலும் விறன்மந்திரிமதியும்
பேசிலிவையுடையாள் பெண்.

இ-ள். பேசில் - சொல்லுமிடத்தில், அன்னைதயையும் - தாயைப்போல அன்பும், அடியாள் பணியும் - அடியவள் போலப் பணிவிடை செய்தாலும், மலர்பொன்னின் அழகும் - தாமரைமலரை யுடையவளாகிய மஹாலக்ஷ்மியின் அழகும், புவிபொறையும் - பூமியைப்போலப் பொறுமையும், வன்னம்முலை வேசிதுயிலும் - அழகிய ஸ்தநங்களையுடைய வேசியைப்போல் போகமும், விறல் மந்திரிமதியும் - வெற்றியையுடைய மந்திரிபோல அறிவும் ஆகிய, இவை உடையாள் - இக்குணங்களை யுடையவளே, பெண் - மனைவியெனப்படுவாள்—எ-று. (சுசுசு)

பெண்ணொருத்திபேசிற் பெரும்பூமிதானதிரும்
பெண்ணிருவர்பேசில்விழும் வான்மீன்கள்—பெண்மூவர்
பேசிலலைசுவறும் பேதையேபெண்கள்பலர்
பேசினுலகென்னுமோ பின்.

இ-ள். பெண் ஒருத்திபேசில் - ஒரு பெண்பேசினால், பெரும்பூமி தான் அதிரும் - பெரியபூமியானது அதிரும், பெண் இருவர்பேசில் - இரண்டு பெண்கள் பேசினால், வான்மீன்கள் விழும் - நக்ஷத்திரங்கள் உதிரும், பெண் மூவர்பேசில் - மூன்றுபெண்கள் பேசினால், அலைசுவறும் - கடல்வற்றிப்போம், பெண்கள் பலர்பேசில் - பலபெண்கள் பேசினால், பின் - பிறகு, உலகு என் ஆமோ - உலகம் என்ன பாடுபடுமோ, அறியோம்—எ-று.

பேதையே - பெண்ணே. (சுசுஎ)

நான்குயுகங்களினும் யமன் இன்னரெனல்.

என்னைகிரேதத்தி ரேணுகையேகூற்றவனும்
தன்னேர்திரேதத்திற் சானகியே—பின்யுகத்தில்

கூடுந்துரோபதையே கூற்றுங்கலியுகத்தில்
வீடுதொறுங்கூற்றுவ னுமே.

இ-ள். என்னே - என்னே, கிரேதத்து - கிரேதாயுகத்தில், இரேணு கையே கூற்றுவன் ஆம் - இரேணுகா தேவியே யமனுயிருந்தாள், தன் னேர் திரேதத்தில் - தனக்குத்தானே நிகராகிய திரேதாயுகத்தில், சானகியே- சீதையே யமனுயிருந்தாள், பின்யுகத்தில் - பின் யுகமாகிய துவாபரயுகத்தில், கூடும் துரோபதையே கூற்று ஆம் - அவதரித்த துரோபதையே யமனுயிருந் தாள், கலியுகத்தில் - கலியுகத்திலே, வீடுதொறும் - வீடுகள்தோறும், கூற்று வன் ஆம் - யமன்களாகவே யிருக்கிறார்கள்—எ-று. (சுசுஅ)

சற்பூரம்போலக் கடலுப்பிருந்தாலும்
கற்பூரமாமோ கடலுப்பு—பொற்பூரும்
புண்ணியரைப்போல விருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியராவாரோ புகல்.

இ-ள். கடல் உப்பு கற்பூரம்போல இருந்தாலும் - கடலுப்பானது கற் பூரம்போல வெண்மையா யிருந்தாலும், கடல் உப்பு கற்பூரம் ஆமோ - கட லுப்பானது கற்பூரமாகுமோ, (ஆகாது) புல்லியர் - கீழ்மக்கள், பொற்பு ஊரும் - அழகுள்ள, புண்ணியரைப்போல இருந்தாலும் - புண்ணியவான்கள் போலக் காணப் பட்டாலும், புண்ணியர் ஆவாரோ - புண்ணியவான்கள் ஆவார்களோ (ஆகமாட்டார்கள்) புகல் - சொல்லுவாயாக—எ-று. (சுசுகூ)

சிற்றுணர்வோரென்றுஞ் சிலுசிலுப்பரான்றமைந்த
முற்றுணர்வோரென்றி மொழியாரே—வெற்றிபெறும்
வெண்கலத்திலோசை மிகுமேவிரிபசும்பொன்
ஒண்கலத்திலுண்டோ வுரை.

இ-ள். சிற்றுணர்வோர் - சிற்றறிவையுடையவர்கள், என்றும் - எப்பொ ழுதும், சிலு சிலுப்பார் - படபடத்துப் பேசுவார்கள், ஆன்று அமைந்த முற் றுணர்ந்தோர் - எல்லா நூல்களையும் ஆராய்ந்தமைந்த முற்றறிவையுடையவர் கள், என்றும் - எப் பொழுதும், மொழியார் - அப்படி பேச மாட்டார்கள், வெற்றிபெறும் வெண்கலப் பாத்திரத்தில் ஓசைமிகும் - வெற்றியுள்ளவெண் கலத்தில் ஓசை மிகுந்திருக்கும், விரி - சுடர் விரிந்த, பசும் பொன் - பசும் பொன்னாற் செய்யப்பட்ட, ஒண் கலத்தில் - அழகிய பாத்திரத்தில், உண் டோ - அப்படி மிகுந்த ஓசையுண்டோ, உரை - சொல்லுவாயாக—எ-று. ()

மந்திரமுந்தேவு மருந்துங்குருவருளும்
தந்திரமுஞானந் தருமுறையும்—யந்திரமும்

மெய்யென்னின்மெய்யாய் விளங்குமேமேதினியில்
பொய்யென்னிற்பொய்யாகிப் போம்.

இ-ள். மந்திரமும் - மந்திரமும், தேவும் - தெய்வமும், மருந்தும் - ஔஷதமும், குரு அருளும் - குரு உபதேசமும், தந்திரமும் - சாஸ்திரங்களும், ஞானம் தரு முறையும் - அவை ஞானத்தைக் கொடுப்பதும், யந்திரமும் - சிதம்பரசக்கரம் முதலான யந்திரங்களும், மேதினியில் - இவ் வுலகத்தில், மெய் என்னில் - மெய்யென்று நம்பினால், மெய்யாய் விளங்கும் - மெய்யாய் விளங்கும், பொய் என்னில் - பொய் யென்றால், பொய்யாகிப்போம்-பொய்யாய்ப்போய்விடும்—எ-று. (கூஎக)

தன்னையளித்தா டமையன்மனைகுருவின்
பன்னியரசன் பயிறேவி—தன்மனையைப்
பெற்றாளிவரைவர் பேசிலுலகத்தெவர்க்கும்
நற்றாயரென்றே நவில்.

இ-ள். தன்னை அளித்தாள் - தன்னைப் பெற்றவள், தமையன் மனை-தமையன் மனைவி, குருவின் பன்னி - குரு பத்தினி, அரசன் பயில் தேவி-ராஜபத்தினி, தன் மனையைப்பெற்றாள் - தன் மனைவியைப்பெற்றவள் ஆகிய, இவர் ஐவர் - இவர் ஐவரும், பேசில் - சொல்லு மிடத்தில், உலகத்து - உலகத்திலுள்ள, எவர்க்கும் - எல்லார்க்கும், நல் தாயர் என்று நவில் - நல்லதாய்மாரவரென்று சொல்வாயாக—எ-று. (கூஎஉ)

வாவியுறைநீரும் வடநிழலும்பாவகமும்
ஏவனையகண்ணா ரிளமுலையும்—ஓவியமே
மென்சீதகாலத்து வெம்மைதரும் வெம்மைதனில்
என்பாருஞ்சீதள மாமே.

இ-ள். வாவி உறை நீரும் - தடாகத்தில் தங்கியிருக்கிற தண்ணீரும், வட நிழலும் - ஆலமரத்து நிழலும், பாவு அகமும் - பாவுகல் பரப்பின வீடும், ஏ அனைய கண்ணார் இளமுலையும் - அம்பையொத்த கண்ணையுடையமாதரது மெல்லியஸ்தனங்களும், மெல் சீதக்காலத்து வெம்மைதரும்-மெல்லிய சீதளகாலத்தில் வெப்பத்தைக் கொடுக்கும், வெம்மைதனில் - உஷ்ண காலத்தில், என்பு ஆரும் சீதளம் ஆம் - எலும்பு குளிரும்படியான குளிர்ச்சியாயிருக்கும், ஓவியமே - சித்திரப் பாவைபோன்ற மாதே—எ-று. (கூஎங)

பொற்பறிவில்லாதபல புத்திரரைப்பெற்றதிலோர்
நற்புதல்வனைப்பெறுத னன்றாமே—பொற்கொடியே
பன்றிபலகுட்டி பயந்ததினு லேதுபயன்
ஒன்றமையாதோகரிக்கன் றோது.

இ-ள். பொற்பு அறிவு இல்லாத - நல்ல அறிவில்லாத, பல புத்திரரை பெற்றதில் - பல புதல்வரைப் பெறுதலைப் பார்க்கிலும், ஓர் நல் புதல்வனை பெறுதல் நன்று ஆம் - ஒரு சற்புத்திரனைப்பெறுதல் நன்மையாகும், பொன் கொடியே - பொற்கொடிபோல்வாளே, பன்றி பல குட்டி பயந்ததினால் எது பயன் - பன்றி பல குட்டிகளைப் பெற்றால் என்ன பிரயோசநம், கரிக்கன்று ஒன்று அமையாதோ - யானைக்கன்று ஒன்றேபோதாதோ—எ-று. (சுஎச)

அத்திமலரு மருங்காக்கை வெண்ணிறமும்
கத்துபுனன் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
கானார்தெரியற் கடவுளருங் காண்பரோ
மானார் விழியார் மனம்.

இ-ள். பித்தரே - பைத்தியக்காரரே, அத்தி மலரும் - அத்திப் பூவும், அரு - அருமையாகிய, காக்கை - காகத்தின், வெள் நிறமும் - வெள்ளை நிறமும், கத்துபுனல் - ஒலிக்கின்ற கடலிலுள்ள, மீன் பதமும் - மீன் காலும், கண்டாலும் - பார்த்தாலும், கான் ஆர் தெரியல் - வாசனையுள்ள பூமாலையை யணிந்த, கடவுளரும் - தேவர்களும், மானார் விழியார் மனம் - மான்விழியை யுடைய மாதருடைய மனத்தை, காண்பரோ - காண்பார்களோ, (காணமாட்டார்கள்)—எ-று. (சுஎரு)

தாமுங்கொடார் கொடுப்போர்தம்மையு மீயாதவகை
சேமஞ்செய்வாருஞ் சிலருண்டே—யேமநிழல்
இட்டுமலர் காய்கனிக ளீந்துதவு மாமரத்தைக்
கட்டுபுடை முள்ளெனவே காண்.

இ-ள். ஏமநிழல் இட்டு - குளிர்ச்சியாகிய நிழலைத்தந்து, மலர் காய் கனிகள் ஈந்து உதவும் - மலர் காய் கனிகளைக் கொடுத்துதவுகின்ற, மாமரத்தை - மாமரத்தை, கட்டு புடை முள் என - சுற்றிலும் வளைந்துகொண்டு பிறர்க்குதவவொட்டாமல் செய்கிற முள்ளைப்போல, தாமும் கொடார் - தாமும் கொடுக்கமாட்டார்கள், கொடுப்போர் தம்மையும் - கொடுப்பவரையும், ஈயாத வகை - கொடாதவகையாக, சேமம் செய்வாரும் - தடைசெய்வோரும், சிலர் உண்டு - சிலலோபிகள் இவ்வுலகத்துண்டு—எ-று. (சுஎசு)

மாதாமரிக்கின் மகனாவி னற்சுவைபோம்
தாதாவெனிற்கல்வி தானகலு—மோதினுடன்
வந்தோன் மரித்துவிடில் வாகுவலிபோமனையே
லந்தோவிவையாவும் போம்.

இ-ள். மாதா மரிக்கின் - தாய் இறந்தால், மகன் - மகனுடைய, நாவின் நல் சுவைபோம் - நாவின் நல்ல சுவைபோய்விடும், தாதா எனில் கல்வி தான்

அகலும் - தாதா இறந்துபோனால் கல்விபோய்விடும், ஒதின் - சொல்லுமிடத்தில், உடன்வந்தோன் மரித்துவிடில் - உடன்பிறந்த சகோதரன் இறந்தால், வாகு வலிபோம் - புஜபலம் போய் விடும், மனை யேல் - மனைவி யிறந்தால், அந்தோ இவையாவும்போம் - ஐயோ இவையெல்லாம்போய்விடும்—எ-று. ()

பாவிதனந்தண்டிப்போர் பாலாகுமல்லதருள்
மேவுசிவனன்பர்பான் மேவாதே—யோவியமே
நாயின்பாலத்தனையு நாய்தனக்காமன்றியே
தூயவருக்காகுமோ சொல்.

இ-ள். பாவிதனம் - பாவியின்பொருள், தண்டிப்போர்பால் ஆகும் அல்லது - தண்டிப்பவரிடத்திற் சேருமேயல்லது, அருள் மேவு - அருள்பெற்ற, சிவன் அன்பர்பால் மேவாது - சிவனடியாரிடத்திற் சேராது, ஓவியமே - பாவையே, நாயின்பால் அத்தனையும் - நாயின்பால் முழுதும், நாய் தனக்காம் அன்றி - நாய்க்குட்டிக்கே யாகுமல்லது, தூயவருக்கு ஆகுமோ - பரிசுத்தருக்கு உதவுமோ, சொல் - சொல்வாயாக—எ-று. (சுளஅ)

பொன்னுங்கரும்பும் புகழ்பாலுஞ்சந்தனமும்
சின்னம்படவருத்தஞ் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமேதோன்று நலிந்தாலுமுத்தமர்பால்
நற்குணமே தோன்று நயந்து.

இ-ள். பொன்னும் - சுவர்ணமும், கரும்பும் - கரும்பும், புகழ் பாலும் - யாவராலும் புகழப்படுகிறபாலும், சந்தனமும் - சந்தனமும், சின்னம்பட வருத்தம் செய்தாலும் - சின்னம்பட வருத்தினாலும், முன் இருந்த நற்குணமே தோன்றும் - முன்னேயிருந்த நற்குணமே காணப்படும், (அதுபோல) நலிந்தாலும் - வருத்தினாலும், உத்தமர்பால் - உத்தமரிடத்தில், நற்குணமே நயந்து தோன்றும் - நற்குணமேமிகுந்து தோன்றும்—எ-று. (சுளக)

வேசியருநாயும் விதிநூல்வைத்தியரும்
பூசுரருங்கோழிகளும் பொன்னனையீர்—பேசிலொரு
காரணந்தானன்றியே கண்டவுடனேபகையாம்
காரணந்தானப்பிறப்பே காண்.

மு-ள். வேசியரும் - தாசிகளும், நாயும் - நாய்களும், விதிநூல் வைத்தியரும் - சோதிடநூலாரும் வைத்தியநூலாரும், பூசுரரும் - பிராமணரும், கோழிகளும்—, பொன் அனையீர் - பொன்போல்வோரே, பேசில் - சொல்லுமிடத்தில், ஒருகாரணம் இன்றியே - ஒருகாரணமில்லாமலே, கண்டவுடனே பகைஆம்—, (காரணமில்லாமல் எப்படி பகையுண்டாகுமென்றால்) அப்பிறப்

பே காரணம் - (அப்படி பகையுண்டாவதற்குக்) காரணம் அந்தப்பிறப்புக்களேயாம்—எ-று.

பொன் - திருமகள் - விதிநூல் - சோதிடநூல். (௬௮0)

அன்னமனையீர்க்குயிலுக் கானவழகின்னிசையே
கன்னன்மொழியார்க்கழகு கற்பாமே—மன்னுகலை
கற்றோர்க்கழகு கருணையேயாசைமயக்
கற்றோர்க்கழகுபொறை யாம்.

இ-ள். அன்னம் அனையீர் - அன்னத்தை நிகர்த்தவரே, குயிலுக்கு ஆன அழகு இன்இசையே - குயிலுக்குத்தகுந்த அழகாவது இனியகுரலோசையே, கன்னல்மொழியார்க்கு அழகு கற்புஆம் - சர்க்கரைபோன்ற சொல்லையுடைய மாதர்க் கழகாவது கற்பேயாம், மன்னு கலைகற்றோர்க் கழகுகருணையே - நிலைபெற்ற கல்வி கற்ற வர்க்கழகு கருணையே யாகும், ஆசைமயக்கு அற்றோர்க்கு அழகு பொறைஆம் - உலகத்தில் ஆசைமயக்கங்கள் அற்றவர்க்கு அழகாவது பொறுமையாம்—எ-று. (௬௮௧)

தீயவர்பாற்கல்வி சிறந்தாலுமற்றவரைத்
தூயவரென்றெண்ணியே துன்னற்க—சேயிழையே
தண்ணொளியமாணிக்கஞ் சர்ப்பந்தரித்தாலும்
நண்ணுவரோமற்றதனை நாடு.

இ-ள். தீயவர்பாற் கல்விசிறந்தாலும் - தீயோரிடத்தில் கல்வி அதிகமாயிருந்தாலும், அவரை - அவர்களை, தூயவர்என்றுஎண்ணிதுன்னற்க-நல்லோரென்றுநினைத்து அணுகாதிருக்கவேண்டும், சேயிழையே - மாதே, தண்ஒளியமாணிக்கம் - குளிர்ந்த ஒளியையுடைய மாணிக்கத்தை, சர்ப்பம் தரித்தாலும் - பாம்புசிரசில் தாங்கியிருந்தாலும், அதனை நண்ணுவரோ - அதைநெருங்குவார்களோ, நாடு - பார்—எ-று. (௬௮௨)

இவர்க்கிது இல்லையேனல்.

போற்றுகுருகிளைகள் பொன்னாசையோர்க்கில்லை
தோற்றுபசிக்கில்லை சுவைபாகம்—தேற்றுகவி
நேசற்கிலைசுகமு நித்திரையுங்காமுகர்தம்
ஆசைக்கிலைபய மானம்.

இ-ள். போற்றுகுருகிளைகள் - பூசிக்கத் தகுந்த குருவும் பந்துக்களும், பொன்ஆசையோர்க்கு இல்லை - பொன்னாசை யுடையோர்க்கு இல்லையாம், சுவைபாகம் - ருசியும்பாகமும், தோற்றுப்பசிக்கில்லை - சிறந்தபசிக்கில்லையாம், சுகமும் நித்திரையும் - சுகமும் தூக்கமும், தேற்றுகவிநேசற்கு இல்லை-

தெளிந்தகவியாணருக்கு இல்லை, பயம்மானம் - பயமும் மானமும், காமுகர் தம் ஆசைக்கு இல்லை - காமிகளுடைய ஆசைக்கு இல்லை—எ-று.' ... (சுஅங)

கண்ணுக்கினிய சபைக்குமணிகற்றோரே
விண்ணுக்கினியமணி வெய்யோனே—வண்ணநறுஞ்
சந்தமுலையார் சயநத்தினியமணி
மைந்தன்மனைக்கு மணி.

இ-ள். கண்ணுக்கு இனியசபைக்குமணி - கண்ணுக்கினிய சபைக்குமணிபோல்பவர் யாரென்றால், கற்றோரே - கல்விகற்றவரே, விண்ணுக்குஇனியமணிவெய்யோனே - ஆகாயத்துக் கினியமணிபோல்வார்யாரென்றால் சூரியனே, சயநத்து இனியமணி - படுக்கைக்கு இனியமணிபோல்வார் யாரென்றால், வண்ணநறு சந்தம்முலையார் - அழகாகிய பரிமள திரவியங்களணிந்த ஸ்தநங்களையுடைய மாதரே, மனைக்குமணி - வீட்டுக்கு மணிபோல்வார் யாரென்றால்,மைந்தன் - புதல்வனே—எ-று. (சுஅச)

அந்தோபுரமெரித்த வண்ணலடியார்பொருள்கள்
செந்தீயினுங்கொடிய தீக்கண்டாய்—செந்தீயை
நீங்கிற்சுடாதே நெடுந்தூரஞ்சென்றாலும்
ஏங்கச்சுடுமே யிது.

இ-ள். அந்தோ - ஐயோ, புரம்எரித்த - முப்புரங்களை நீறாக்கின, அண்ணல் - சிவபெருமானது, அடியார் - அடியாருடைய, பொருள்கள் - திரவியங்கள், செந்தீயினும்கொடியதீ - செவந்த நெருப்பைப்பார்க்கிலும் கொடியநெருப்பாகும், (ஏனென்றால்) செந்தீயைநீங்கில் சுடாது - செந்தீயை நீங்கினால், அதுசுடாது, இது - இந்தப்பொருள், நெடுந்தூரம்சென்றாலும் - நெடுந்தூரம் போனாலும், ஏங்கசுடும் - இரங்கும்படி சுடும்—எ-று. (சுஅரு)

நிந்தையிலாத்தூயவரும் நிந்தையரைச்சேரிலவர்
நிந்தையதுதம்மிடத்தே நிற்குமே—நிந்தைமிகு
தாலநிழற்கீழிருந்து தண்பாலருந்திடினும்
பாலதெனச்சொல்லுவரோ பார்.

இ-ள். நிந்தை இல்லா தூயவரும் - நிந்தனையில்லாத பரிசுத்தரும், நிந்தையரைச்சேரில் - நிந்தனையுடையோரைச் சேர்ந்தால், அவர்நிந்தை - அத்தீயோரதுநிந்தனை, தம்இடத்தே நிற்கும் - தம்மிடத்தில் தங்கும், நிந்தைமிகு - நிந்தனைமிகுந்த, தாலநிழல்கீழ் இருந்து - பனைநிழலின்கீழேயிருந்து, தண்பால் அருந்திடினும் - குளிர்ந்தபாலையருந்தினாலும், பால் அதுஎனச்சொல்லுவரோ - அதைப் பாலென்று சொல்லுவார்களோ, பார் - பார்ப்பாயாக—எ-று. (சுஅசு)

சீலங்குலமடியா டீண்டிற்கெடுங்கணிகை
ஆலிங்கனந்தனநா சமதாகும்—நூலிழந்த
வல்லிதழுவக்குறையும் வாழ்நாள்பிறர்தாரம்
புல்லினர்க்கெல்லாநலமும் போம்.

இ-ள். அடியாள்தீண்டின் - அடியவளைச்சேர்ந்தால், சீலம்குலம்கெடும்-ஒழுக்கமும் குலமும்கெடும், கணிகை ஆலிங்கனம் - வேசையின் ஆலிங்கனத்தால், தனநாசம்ஆகும் - பொருட்கேடுண்டாகும், நூல் இழந்த வல்லிதழுவ-மங்கிலியமிழந்த மாதைப்புணர்ந்தால், வாழ்நாள்குறையும் - ஆயுள் குறைந்து போம், பிறர்தாரம் புல்லினர்க்கு-பிறர் மனைவியைச் சேர்ந்தவர்க்கு, எல்லாநலமும்போம் - எல்லாநன்மைகளும் நீங்கிப்போம்—எ-று. (சுஅஎ)

உத்தமர்தாமீயுமிடத் தோங்குபனைபோல்வரே
மத்திமர்தாந்தெங்குதனை மானுவரே—முத்தலரும்
மாங்கமுகுபோல்வா ரதமரவர்களே
தேங்கதலியும்போல்வார் தேர்.

இ-ள். ஈயுமிடத்து - கொடுக்குமிடத்தில், உத்தமர் - உத்தமராணவர்கள், ஓங்குபனைபோல்வர் - உயர்ந்த பனைமரம்போல்வர், மத்திமர்-மத்திமர்கள், தெங்குதனைமானுவர் - தென்னமரம்போல்வர், அதமர் - அதமர்கள், முத்து அலரும் - முத்துப்போலப் பாளைவிரிக்கின்ற, மா-பெரிய, கமுகுபோல்வார்-கமுகமரம்போல்வர், (அன்றியும்) தேங்கதலியும்போல்வார் - இனியகதலி மரமும்போல்வர், தேர் - ஆராய்வாயாக—எ-று.

பனைமரம் நீரைவிரும்பாமலே பலனைத்தரும், அதுபோல உத்தமர்பயனையெதிர்பாராமலே கொடுப்பார், தெங்குநீர்விட்டளவுக்குப் பயன்தரும்,அதுபோல மத்திமர் பயனளவை விரும்பியே கொடுப்பர், கமுகும் வாழையும் மாறாமல் நீர்விட்டால் பயன்தரும், அதுபோல அதமர்மாறாமல் பயனை யெதிர்பார்த்தே கொடுப்பர் என்பதுகருத்து. (சுஅஅ)

வெய்யோன்கிரண மிகச்சுடுமேவெய்யவனில்
செய்யோன்கிரணமிகத் தீதாமே—வெய்யகதிர்
எல்லோன்கிரணத் தெரியினிலுமெண்ணமிலார்
சொல்லேமிகவுஞ் சுடும்.

இ-ள். வெய்யோன்கிரணம் மிகச்சுடும் - சூரியகிரணமிகவுஞ்சுடும், வெய்யவனில் - சூரியனைப்பார்க்கிலும், செய்யோன்கிரணம் மிகத்தீது ஆகும்-அங்காரகன் கிரணமானது மிகவும்தீதாகும்,வெய்யகதிர்எல்லோன்கிரணத்து எரியினிலும் - சூரியகிரணத்தினும் அங்காரகன்கிரணத்தினும்எண்ணம் இல்

லார்சொல்லே - நல்லெண்ணமில்லாத மூடரதுசொல்லே, மிகவும்சுடும்-மிகுதியாகச்சீடும்—எ-று.

தீயார்சொல் மிகவுங் கொடிதென்பது கருத்து. (சுஅகூ)

திங்களமிர்த கிரணமிகச்சீதளமாம்
திங்களினுஞ்சந்தனமே சீதளமாம்—இங்கிவற்றின்
அன்பறிவுசாந்த மருளுடையார்நல்வசநம்
இன்பமிகுஞ்சிதள மாமே.

இ-ள். திங்கள் அமிர்தகிரணம் மிகச்சீதளம்ஆம் - சந்திரனது அமிர்தகிரணமானது மிகச்சீதளமாம், திங்களினும் - சந்திரனிலும், சந்தநமே சீதளம் ஆம் - சந்தநமே சீதளமாகும், இங்கு இவற்றின் - இங்கேசொல்லப்பட்ட இரண்டினும், அன்பு அறிவு சாந்தம் அருள் உடையார்நல்வசநம் - அன்புவிவேகம் சாந்தகுணம் அருள் என்பவற்றை உடையவரது நல்லசொல்லே, இன்பமிகும் சீதளம்ஆம் - இன்பத்தை மிகுவிக்கின்ற சீதளமாம்—எ-று.

சீதளம் - குளிர்ச்சி. (சுகூ0)

கல்லார்பலர்கூடிக் காதலித்துவாழினுநூல்
வல்லானொருவனையே மானுவரோ—அல்லாரும்
எண்ணிலாவான்மீ னிலகிடினும்வானகத்தோர்
வெண்ணிலாவாமோ விளம்பு.

இ-ள். கல்லார் பலர்கூடி - பலமூடர்கூடி, காதலித்து வாழினும் - ஒருவரையொருவர் விரும்பிவாழ்ந்தாலும், நூல்வல்லான் ஒருவனை மானுவரோ - கல்விமானாகிய ஒருவனை நிசர்ப்பரோ, அல் - இராக்காலத்தில், ஆரும் - நிறைந்த, எண்எல்லா - அளவற்ற, வான்மீன் இலகிடினும் - நக்ஷத்திரங்கள் பிரகாசித்தாலும், வான் அகத்து ஓர் வெள்நிலா ஆமோவிளம்பு - ஆகாயத்தில்விளங்குவதாகிய ஒரு வெள்ளிய சந்திரனை நிகர்க்குமோ, விளம்பு - சொல்வாயாக—எ-று. (சுகூக)

கங்கைநதிபாவஞ் சசிதாபங்கற்பகந்தான்
மங்கலூறும்வறுமை மாற்றுமே—துங்கமிகும்
இக்குணமோர்மூன்றும் பெரியோரிடஞ்சேரில்
அக்கணமேபோமென் றறி.

இ-ள். கங்கைநதி - கங்காநதியானது, பாவமாற்றும் - பாவமொன்றையேபோக்கும், சசிதாபம்மாற்றும் - சந்திரன் தாபமொன்றையே போக்குவன், கற்பகம் - கற்பகமரமானது, மங்கலூறும் வறுமைமாற்றும் - மங்குதற்குரிய வறுமையைப்போக்கும், துங்கம்மிகும் - பரிசுத்த மிகுந்த, பெரி

யோரிடம்சேரின் - நல்லோரிடத்தையடைந்தால், இக்குணம் ஓர் மூன்றும்- இந்தப் பாவம்தாபம் வறுமையென்னு முக்குணங்களும், அக்கணமே போம் என்று அறி - அந்தக்ஷணத்திலே நீங்கிப்போமென் றறிவாயாக—எ-று.

தாயம் - வெப்பம், வறுமை - தரித்திரம்.                                        (சுகூஉ)

பாங்கிகூற்று.

பொய்ம்மைநெறிதீர் பொருளு மிகப்பயக்கும்
எம்முயிர்க்குமேது மிடரில்லை—வெம்மைதீர்ந்
தேகவினிய நெறியணிய தென்றாலும்
போக லொழிவாய் பொருட்கு.

இ-ள். பொய்ம்மைநெறி தீர்பொருளும் - பொய்யாகிய நெறியைத்தப்புவிக்கின்ற பொருளும், மிகப் பயக்கும் - மிகவு முண்டாகும், எம் உயிர்க்கும் ஏதும் இடர் இல்லை - எங்களுயிருக்கும் சிறிதும் துன்பமில்லை, வெம்மை தீர்ந்து ஏக இனிய நெறி - அச்சம் நீங்கிச் செல்லுவதற்கு இனிதாகிய வழி, அணியது - (அன்றியும்) சமீபித்தது, என்றாலும் - ஆயினும், பொருட்கு- பொருள் சம்பாதித்தற்கு, போகல் ஒழிவாய் - நீ போதலை யொழிவாயாக எ-று.                                        (சுகூங)

பாங்கிகூற்று.

விளைபொருண்மேலண்ணல் விருப்பினையேலீண்டெங்
கிளையழுகைகேட்பதற்கு முன்னே—விளைதேன்
புடையூறுபூந்தார் புனைகழலாய்போக்கும்
கிடையூறுவாராம லேகு.

இ-ள். விளை பொருள்மேல் - மேன்மேலும் விருத்தியடைகின்ற பொருள்மீது, அண்ணல் - அண்ணலே, விருப்பினையேல் - நீவிருப்ப முடையையாயின், ஈண்டு - மிகுந்த, எம் கிளை அழுகை - எமது உறவினர் அழுதலை, கேட்பதற்கு முன்னே - நீ காதிற் கேட்பதற்குமுன்பே, விளைதேன் - சுரக்கின்றதேன், புடை ஊறு - பக்கங்களில் ஒழுகுகின்ற, பூந்தார் - பூமாலையையும், புனைகழலாய் - வீரக்கழலையு மணிந்தவனே, போக்குக்கு - உன்போக்குக்கு, இடையூறுவாராமல் ஏகு - தடைநேரிடாமல் போகக்கடவை—எ-று.

பாங்கிகூற்று.

இன்னுயிர்காத்தளிப்பாய் நீயேயிளவேனில்
மன்னவனுங்கூற்றவனும் வந்தணைந்தால்—அன்னோ
தமக்கெம்மைத்தோன்றாத் தகைமையதோர்விஞ்சை
எமக்கின்றருள்புரிந்தே யேகு.

இ-ள். இன் உயிர் காத்து அளிப்பாய் நீயே - எமது இனிய வுயிரைக் காத்து ரக்ஷிப்பவனாகிய நீயே, இளவேனில் மன்னவனும் - மன்மதனும், கூற்றுவனும் - யமனும், வந்து அணைந்தால் - வந்து சேர்ந்தால், அன்னோர் தமக்கு - அவர்களுக்கு, எம்மைத் தோன்றா - எம்மைக்காட்டாத, தகைமையது - நன்மையதாகிய, ஓர் விஞ்சை - ஒரு மந்திரத்தை, இன்று - இப்பொழுது, எமக்கு அருள்புரிந்து ஏகு - எமக்கருள்செய்து போவாயாக—எ-று. ()

பாங்கிகூற்று.

ஊசலொழிலிழக்கு மொப்புமயிலிழக்கும்
வாசஞ்சுனையிழக்கும் வள்ளலே—தேசு
பொழிலிழக்குநாளையெம் பூங்குழலிநீங்க
எழிலிழக்குமந்தோ விவண்.

இ-ள். வள்ளலே - தலைவனே, ஊசல் - (பூவினால் அலங்கரிக்கப்பட்ட) ஊசலும், தொழில் இழக்கும் - யாம் விளையாடுந் தொழிலையிழக்கும், மயில் ஒப்பு இழக்கும் - மயிலும் உவமையையிழக்கும், சுனைவாசம் இழக்கும் - சுனைகளும் வாசனையையிழக்கும், பொழில் தேசு இழக்கும் - சோலையும் ஒளியையிழக்கும், இவண் - இவ்விடமும், நாளை எம் பூங்குழலி நீங்க - நாளை யெமது தலைவியிறத்தலால், எழில் இழக்கும் - அழகை யிழக்கு(ம்), அந்தோ - ஐயோ, (இனி உனக்கிஷ்டப்படி) செய்வாயாக—எ-று.

பூங்குழலி - மலரையணிந்த குழலையுடையவள். (சுகூசு)

தலைமகன்கூற்று.

மின்னோபொழிலின் விளையாடுமிவ்வுருவம்
பொன்னோவெனுஞ்சுணங்கிற் பூங்கொடியோ—என்னோ
திசையுலவுங்கண்ணுந் திரண்முலையுந்தோளும்
மிசையிருளுந்தாங்குமோ மின்.

இ-ள். பொழிலின் விளையாடும் இவ்வுருவம் - சோலையில் விளையாடுகின்ற இவ்வுருவமானது, மின்னோ - மின்னுருவமோ, (அன்றி) பொன்னோ என்னும் சுணங்கின் பூங்கொடியோ - பொன்னோ வென்றையப் படுதற்குரிய தேமலையுண்டாயிருப்பதொரு உருவத்தையுடைய கொடியோ, (யாதோ வென்று சந்தேகிக்கிற நெஞ்சமே) திசை உலவும் கண்ணும் - திக்குகள் தோறும் சென்றுலாவுகின்ற கண்களையும், திரள் முலையும் - திரண்ட முலைகளையும், தோளும் - இரண்டு தோள்களையும், மிசை இருளும் - தன்மேலேயிருளையும், மின் தாங்குமோ - மின்கொடிதாங்கியிருப்பதுண்டோ, (சொல்லுவாயாக)—எ-று.

என்னோ வென்பது இரக்கக் குறிப்பு. இது தெளிவு என்னுந்துறை. ()

அநபாயச் சோழனைச் சிறப்பித்துப் பாடியது.

தண்கவிகையா லுலகந் தாங்குமநபாயன்
வெண்கவிகைக்குள்ளடங்கா வேந்தில்லை—எங்கும்
மதியத்துடனிரவி வந்துலவுவானிற்
பொதியப்படாத பொருள்.

இ-ள். தண் கவிகையால் - குளிர்ந்த மனத்தோடு கொடுக்குங் கொடையினால், உலகம் தாங்கும் - உலகத்தைத் தாங்குகின்ற, அநபாயன் - அநபாயச் சோழனது, வெண் கவிகைக்குள் அடங்கா - வெண்கொற்றக் குடைநிழலிலடங்காத, வேந்து எங்கும் இல்லை - வேந்தர் எங்கும் இல்லை, (அதுபோல) மதியத்துடன் இரவிவந்து உலவுவானில் - சந்திரனோடு சூரியனும்வந்துலாவுகின்ற ஆகாயத்தில், பொதியப்படாதபொருள் - அடங்காதபொருள், (எங்குமில்லை)—எ-று.

முதலடியிற் கவிகை கொடையென்னும் பொருள்தந்து நின்றது. மதியம் - சந்திரன், இரவி - சூரியன். பொதிதல் - அடங்குதல். (சுகஅ)

## தலைவிமுகத்திற்கும் சந்திரனுக்கும் சிலேடை.

தலைமகன்கூற்று.

அம்போருகஞ்செற் றமுதமயமாகி
வம்பார்முறுவ லொளிவளர்க்க—இம்பர்
முகைமதுவார்கோதை முகமுண்டுலகின்
மிகைமதியும்வேண்டுமோ வேறு.

இ-ள். அம்போருகம்செற்று - தாமரைமலரின் அழகையழித்து, அமுதமயமாகி - அமிர்தத்தை யுடையதாய், வம்பு ஆர் முறுவல் ஒளிவளர்க்க - புதுமையோடுகூடி விரியாகின்ற ஒளியை வளர்த்தற்கு, முகைமது ஆர் கோதை - முல்லைமுகைகள் தேனைச்சிந்துகின்ற கூந்தலையுடையவளாகிய எனது நாயகியின், முகம் - முகமானது, உண்டு - உண்டாயிருக்கின்றது, (இது இருக்க) இம்பர் உலகின் - இவ்வுலகத்துக்கு, வேறுமதியும் வேண்டுமோ - வேறு சந்திரனும் வேண்டுமோ, (வேண்டா) (அப்படிவேண்டுதல்) மிகை - குற்றமாம் எ-று.

முகத்துக்கும் சந்திரனுக்கும் பொருந்தவுரைத்துக்கொள்க. (சுகக)

புகழ், பொருள் கொடுப்பார்க்கே யுண்டாமெனல்.

வெய்யகுரற்றோன்றி வெஞ்சினவேறுட்கொளினும்
பெய்யுமுகிறன்னைப் பேணுவரால்—வையத்

திருள்பொழியுங்குற்றம் பலவரினும்பார்க்கும்
பொருள்பொழிவார்மேற்றே புகழ்.

இ-ள். வெய்ய குரல் தோன்றி - கொடிய முழக்கத்தோடு தோன்றி, வெம் சினம் ஏறு உட்கொளினும் - கொடுங் கோபத்தையுடைய இடியேற்றைத் தன்னுட் கொண்டிருந்தாலும், பெய்யும் முகில் தன்னை - மழைபொழி கின்ற மேகத்தை, பேணுவர் ஆல் - எல்லாரும் விரும்புவா ராதலால், வையத்து - உலகத்தில், யார்க்கும் - எல்லாரிடத்தும், இருள்பொழியும் குற்றம் பலவரினும் - துன்பத்தைத் தருகிற குற்றங்கள் பலவுண்டாயினும், புகழ் - புகழுண்டாவது, பொருள் பொழிவார் மேற்றே - பொருள் மிகுதியாய்க் கொடுப்போரிடத்ததேயாம்—எ-று.

வெய்ய குரல் - மேக முழக்கம், வெஞ்சினவேறு - இடி, மேகத்தினிடத்தில் முழக்கம் முதலான பயங்கரமான குறிகள் முன்னே காணப்பட்டாலும், பின்னேமழைபெய்து உலகத்துக்கு நன்மைசெய்தலால் அதனையெல்லாரும் விரும்புகிறார்கள், (அதுபோல) முன்னே பொருளுடையோரிடத்தில் சில துர்க்குணங்கள் காணப்பட்டாலும் பின்னே பொருள்வழங்கி மனங்குளிர் விக்கிறார்களாதலால் அவர்களை யெல்லாரும் விரும்புகிறார்கள் என்பது கருத்து. (எ00)

## நியமச்சிலேடை.

வெண்ணீர்மைதாங்கு வனமுத்தேவெறியவாய்க்
கண்ணீர்மைசோர்வ கடிபொழிலே—பண்ணீர
மென்கோலியாழே யிரங்குவனவேல்வேந்த
நின்கோலுலாவு நிலத்து.

இ-ள். வேல் வேந்தே-வெற்றியையுடைய வேல்வேந்தனே, நின்கோல் - உன் செங்கோலானது, உலாவும் - உலாவுகின்ற, நிலத்து - உலகத்தில், வென் நீர்மை தாங்குவன - வெண்மைநிறத்தை உடைத்தாயிருப்பன, முத்தே - முத்துக்களே, வெறிய வாய் - நறு நாற்றத்தை உடைய வாய், கள் நீர்மை சோர்வ - மது ஒழுகநிற்பன, கடி பொழிலே - பெரிய பொழிலே, பண்ணீர - குளிர்ந்த ஓசையை உடைத்தாய் அழகோடுகூடி, மெல் - மெல்லிய, கோல்-ஓசையையுடைத்தாய், இரங்குவன - சத்திப்பன, யாழே - யாழேயாம் எ-று.

இவ்வாறு கூறினமையால் இவை ஒழிய அறிவின்மை தாங்குவதும், மிடியையுடைமையாற் கண்ணீர்சொரிவதும், பிறர்மனந் தளர்வது மில்லையெனக் கிடந்தவாறு கண்டுகொள்க. (எ0க)

## நியமவிலக்குச் சிலேடை.

சிறைபடுவபுட்குலமே தீம்புனலுமன்ன
இறைவநீகாத்தளிக்கு மெல்லை—முறையில்

கொடியனமாளிகையின் குன்றமேயன்றிக்
கடியவிழ்பூங்காவு முள.

இ-ள். இறைவ - தலைவனே, நீகாத்தளிக்கும் எல்லை - நீகாத்தளிக்கும் நிலவரைப்பில், சிறைபடுவ - சிறைப்பட்டிருப்பன, புட்குலமே - புட்சாதியே, தீம்புனலும் அன்ன - மதுரமாகிய நீரும் அத்தன்மைத்தே, முறையில் - முறையாக, மாளிகையின் குன்றமே - குன்றம்போன்றமாளிகைகளே, கொடியன அன்றி - கொடியனவா யிருப்பதன்றி, கடி அவிழ்பூங்காவும்உள - மணம்விரிந்த பூஞ்சோலைகளுங் கொடியன—எ-று.

இதனால் சிறைபடுதலும் கொடுமையும்இவன்காக்கும்நிலத்தின்கணில்லை யென் றுரைக்கப்பட்டது. (எ0உ)

## பொருட்குறைவிசேடம்.

தொல்லைமறைதேர் துணைவன்பாலாண்டுவரை
எல்லையிருநாழி நெற்கொண்டோர்—மெல்லியலாள்
ஓங்குலகில்வாழு முயிரனைத்துமூட்டுமால்
ஏங்கொலிநீர்க்காஞ்சி யிடை.

இ-ள். தொல்லை - பழமையாகிய, மறைதேர் - வேதங்களால் ஆராயப் பட்ட, துணைவன்பால் - தன்கொழுநனிடப் பக்கத்தை, ஆண்டு - ஆண்டு, வரைஎல்லை இருநாழி நெற்கொண்டு - மூங்கிலாற்செய்யப்பட்ட இருநாழியளவாகிய நெல்லைக்கொண்டு, ஓர்மெல்இயலாள் - ஒருமெல்லியலாளாகிய உமாதேவி, எங்கு ஒலிநீர் - ஒலிக்கின்ற நீர்சூழ்ந்த காஞ்சியிடை - ஸ்ரீகாஞ்சீநகரத்தின்கணிருந்து, ஓங்கு உலகில்வாழும் - விருத்தியடையாநின்ற உலகில் வாழ்கின்ற, உயிர் அனைத்தும் - எல்லாச்சீவராசிகளையும், ஊட்டும் - உண்பிக்கும்—எ-று.

பால் - பக்கம், வரை - மூங்கில், மெல்லியலாள் - மெல்லியஇயற்கையையுடையாள், ஏங்குதல் - ஒலித்தல். (எ0ங)

## உறுப்புக்குறைவிசேடம்.

யானையிரதம் பரியாளிவையில்லை
தானுமநங்கன் றனுக்கரும்பு—தேனார்
மலரைந்தினால்வென் றடிப்படுத்தான்மாரன்
உலகங்கண்மூன்று மொருங்கு.

இ-ள். யானை - யானையும், இரதம் - இரதமும், பரி - குதிரையும், ஆள் - காலாளும் ஆகிய, இவையில்லை - இவைகளில்லை, தானும் அநங்கன் - தானும் உருவில்லாதவன், தனுகரும்பு - வில்லும்கரும்பாகும், (இப்படியிருந்தும்) மார

ன் - மன்மத ஞானவன், தேன்ஆர் - தேன்பொருந்திய, மலர்ஐந்தினுல் - புஷ்பபாணங்களைந்தினுல், உலகங்கள்மூன்றும் - மூவுலகத்தையும், ஒருங்கு - முழுதும், வென்று அடிப்படுத்தான் - வென்றடக்கினுன்—எ-று.

தேன்ஆர் என்பதற்கு வண்டுகள் மொய்க்கின்ற எனினுமாம். (எ0ச)

## புகழோப்புமைக்கூட்டம்.

பூண்டாங்குகொங்கை பொரவேகுழைபொருப்பும்
தூண்டாததெய்வச் சுடர்விளக்கும்—நாண்டாங்கு
வண்மைசால்சான்ற வருங்காஞ்சிவண்பதியும்
உண்மையானுண்டிவ் வுலகு.

இ-ள். பூண்தாங்கு - ஆபரணங்களைத்தாங்கிய, கொங்கை - தனங்கள், பொரவே - தாக்குதலும், குழைபொருப்பும் - குழைந்துபோனமலையும், தூண்டாத - தூண்டவேண்டாத, தெய்வச்சுடர் விளக்கும் - தெய்வீகமான ஒளியையுடைய விளக்கும், நாண்தாங்கு - நாணைத்தாங்கிய, வண்மைசால்சான்றவரும் - வண்மைமிகுந்த பெரியோரும், காஞ்சிவண்பதியும் - காஞ்சியாகிய வளநகரும், உண்மையான் - உண்டாயிருத்தலால், இவ்வுலகு உண்டு - இவ்வுலகு உண்டாயிருக்கின்றது.

பொருப்பு - பவளமலை, (சிவபிரான்), சுடர்விளக்கு - உமாதேவி. ()

## விரோதாலங்காரம்.

சோலைபயிலுங்குயின்மழலைசோர்ந்தடங்க
ஆலுமயிலினங்க ளார்த்தெழுந்த—ஞாலம்
குளிர்ந்தமுகில்கறுத்த கோபஞ்சிவந்த
விளர்ந்ததுணைபிரிந்தார் மெய்.

இ-ள். சோலைபயிலும்குயில் - சோலையில்வாழ்கின்ற குயில்கள், மழலை சோர்ந்து அடங்க - தம்மழலைச்சொற்கள் சோர்ந்தடங்க, ஆலும் - ஆடுகின்ற, மயில்இனங்கள் - மயிற்கூட்டங்கள், ஆர்த்துஎழுந்த - ஆரவாரித்தெழுந்தன, ஞாலம் - உலகத்தில், குளிர்ந்தமுகில்கறுத்த - குளிர்ந்தமேகங்கள் கறுத்தன, கோபம்சிவந்த - இந்திரகோபங்கள் சிவந்தன, துணைபிரிந்தார்மெய் - துணைவரைப்பிரிந்தவாது உடம்புகள், விளர்ந்த - விளர்த்துப்போயின—எ-று.

விளர்த்தல் விளர்ந்த எனமெலித்தலாயிற்று எதுகைநோக்கி. (எ0சு)

## இதுவும்மேலையலங்காரம்.

காலையுமாலையுங் கைகூப்பிக்காழெழுதான்
மேலையிணையெல்லாங் கீழவாம்—கோலக்

கருமூன்றோல்வெண்ணீற்றுச் செம்மேனிப்பைந்தார்ப்
பெருமானைச்சிற்றம் பலத்து.

இ-ள். கோலம் - அழகாகிய, கரு மூன் தோல் - யானைத் தோலையும், வெண்ணீற்று - வெண்ணீற்றையும், செம் மேனி - செவந்த திருமேனியை யும், பை தார் - பசுமையாகிய மலர் மாலையையும் அணிந்த, பெருமானை - பெருமானை, சிற்றம் பலத்து - சிற்றம்பலத்தின்கண்ணே, காலையுமாலையும் - காலையினும் மாலையினும், கை கூப்பி - கை குவித்து, சால் தொழுதால் - திரு வடியை வணங்கினால், மேலை வினை யெல்லாம் - முன்னை வினைகள் யாவும், கீழ ஆம் - தாழ்வனவாம்—எ-று.

பைந்தார் - பசும்பொன்னிறமாகிய கொன்றைமலர் மாலை. (௭0௭)

## மாறுபடு புகழ்நிலை.

### யாசகனைப் பழித்தல்.

இரவறியாயாவரையும் பின்செல்லாநல்ல
தருநிழலுந்தண்ணீரும் புல்லும்—ஒருவர்
படைத்தனவுங்கொள்ளா விப்புள்ளிமான்பார்மேற்
றுடைத்தனவே யன்றோது யார்.

இ-ள். இரவு அறியா - இரத்தற்றொழிலை யறிய மாட்டா, யாவரையும் பின்செல்லா - எவரையும் பின்றொடர்ந்து செல்லமாட்டா, நல்ல தரு நிழலும் - நல்ல மர நிழலையும், தண்ணீரும் - தண்ணீரையும், புல்லும்-புல்லையும், ஒருவர் படைத்தனவும் - ஒருவர் படைத்தவற்றையும், கொள்ளா - கொள்ள மாட்டா, (ஆதலால்) இப்புள்ளிமான் - இந்தப் புள்ளிமானனைவை, பார்மேல்- உலகின்மீது, துயர் - துன்பத்தை, துடைத்தனவே அன்றோ - துடைத் தனவே யல்லவோ—எ-று.

யாசகன் இவையாவுஞ் செய்கின்றான் என்றதாயிற்று. (௭0௮)

## இதுவும் மேலை யலங்காரம்.

### களவிற் கூடிவந்த தலைவியைப் பழித்தல்.

போதுந்தளிரும் புனைந்துமணம்புணர்ந்து
சூதப்பணைதழுவித் தோன்றுமால்—மாதே
பலமாதவங்கள் பயின்றதேசபண்டிக்
குலமாதவியின் கொடி.

இ-ள். போதும் தளிரும் புனைந்து - மலரையும் தளிரையும் அணிந்து, மணம் புணர்ந்து - மணம் புணர்ந்து, சூதப்பணை தழுவி - சூதக் கிளையைத்

தழுவி, இ - இந்த, குலம் - மேன்மையாகிய, மாதவியின் கொடி - மாதவிக் கொடியானது, தோன்றும் - தோன்றநிற்கின்றது, (ஆதலால்) மாதே-பெண்ணே, பண்டு - முற்காலத்தில், பலமாதவங்கள் பயின்றதோ - பலவாகிய பெருந்தவங்களைச் செய்ததோ—எ-று.

போது - போரும்பு எனினுமாம். சூதம் - மாமரம், பணை - கிளை, பயிலுதல் - இடைவிடாது செய்தல், மாதவியின்கொடி - வசந்த மல்லிகைக்கொடி.

## புகழாப்புகழ்ச்சி.

நினைவரியபல்புகழார் நின்குலத்துத்தொல்லோர்
அனைவரையும்புல்லினு ளன்றே—மனுநூல்
புணர்ந்தநெறிபொழுகும் பூழியநீயிந்நாள்
மணந்ததடமலர்மேன் மாது.

இ-ள். நினைவு அரிய - நினைத்தற்கரிய, பல் புகழார் - பல்புகழையுடையவராகிய, நின்குலத்து தொல்லோர் - உன் குலத்துப் பழையவர், அனைவரையும் - எல்லாரையும், புல்லினள் அன்றே - தழுவினளல்லவா, (அவள் யாரெனின்) மனுநூல் புணர்ந்த நெறி ஒழுகும் - மனுநூலிற் சொல்லப்படுகிற நெறியின்கண்ணே யொழுகுகின்ற, பூழிய - சோழராஜனே, நீ இந்நாள்மணந்த- நீ இந்நாளிற்றழுவின, தடமலர் மேல்மாது - திருமகள்—எ-று.

தடமலர்மேல்மாது - பொய்கை மலராகிய தாமரைப்பீடத்திலிருக்கின்ற பெண். (திருமகள்.) (எ௬0)

## புகழ்மை.

பிறர்செல்வங்கண்டாற் பெரியோர்மகிழ்வும்
சிறியோர்பொறுத திறமும்—அறிவுறீஇச்
செங்கமலமெய்மலர்ந்த தேங்குமுதமெய்பசந்த
பொங்கொளியோன்வீறெய்தும் போது.

இ-ள். பிறர் செல்வம் கண்டால்-பிறருடைய செல்வத்தைக் கண்டால், பெரியோர் மகிழ்வும் - பெரியோர் மகிழ்தலும், சிறியோர் பொறுத திறமும்- சிறியோர் அச்செல்வத்தைக் கண்டாற் பொறாமைப் படுதலும், அறிவுறீஇ- அறிந்து, பொங்கு ஒளியோன் - மிக்க ஒளியையுடைய சூரியன், வீறு எய்தும்போது - மேன்மை யடையும்போது, செங் கமலம் மெய் மலர்ந்த - செந்தாமரை மலர்கள் மெய்பூரித்தன, தேங்குமுதம் மெய்பசந்த - மணம்பொருந்திய செவ்வல்லி மலர்களை மெய்பசந்தன—எ-று.

செங்கமலம் பெரியோருக்கும் குமுதம் சிறியோருக்கும் உவமையாகக் கொள்க. (எ௬௧)

## தீமை.

பெரியோருழையும் பிழைசிறிதுண்டாயின்
இருநிலத்துள்யாருமறிதல்—தெரிவிக்கும்
தேக்குங்கடலுலகில் யாவர்க்குந்தெள்ளமுதம்
வாக்குமதிமேன் மறு.

இ-ள். தேக்கும் - நீர் நிறைந்த, கடல் உலகில் - கடல் சூழ்ந்த வுலகத்தில், யாவர்க்கும் - எல்லார்க்கும், தெள் அமுதம் வாக்கும் - தெளிவாகிய அமிர்தத்தைச்சுரக்கிற, மதிமேல் மறு - சந்திரனிடத்துள்ள களங்கமானது, பெரியோர் உழையும் - பெரியோரிடத்தும், பிழை சிறிது உண்டாயின் - பிழை சிறிதுண்டாகுமாயின், இரு நிலத்துள் - பெரிய நிலவுலகத்தில், யாரும் அறிதல் - யாவருமறிவதை, தெரிவிக்கும் - அறிவிக்கும்—எ-று.

தேக்குதற்கு வினைமுதலாகிய நீர் வருவித்துரைக்கப்பட்டது. மறு-களங்கம். (எ௧௨)

## வினைப்புணர்நிலை.

வேண்டுருவங்கொண்டு கருகிவெளிபரந்து
நீண்டமுகிலுடனே நீர்பொழிந்த—ஆண்டகையோர்
மேவல்விரும்பும் பொருணசையான் மெல்லாவி
காவல்புரிந்திருந்தோர் கண்.

இ-ள். ஆண் தகையோர் - ஆண்டன்மையை யுடையவராகிய தலைவரை, மேவல் விரும்பும் பொருள் நசையால் - சேர்தற் பொருளை விரும்புகின்ற ஆசையால், மெல் ஆவி - தமது மென்மையாகவுயிரை, காவல் புரிந்திருந்தோர் - இறவாதபடி காவல்செய்திருந்த மாதராது, கண் - கண்கள், வேண்டு உருவம் கொண்டு - தாம் வேண்டிய வுருவத்தைக்கொண்டு, கருகி - கருத்து, வெளிபரந்து - ஆகாயத்திற்பரவி, நீண்ட முகிலுடனே நீர் பொழிந்த - பெரியமேகங்கள்போல் நீரைச்சொரிந்தன—எ-று.

கருகி யென்பதற்குப் பகுதி கருமை, வெளி - ஆகாயம், ஆவி - உயிர், காவல் புரிதல் - தடைசெய்தல். (எ௧௩)

## சங்கீர்ணம்.

தண்டுறைநீர்நின்ற தவத்தாலளிமருவு
புண்டரிகநின்வதநம் போன்றதால்—உண்டோ
பயின்றருளம்பருகும் பான்மொழியாய்பார்மேல்
முயன்றான்முடியாப் பொருள்.

இ-ள். பயின்றார் உள்ளம் பருகும் - அடைந்தாரது மனத்தைக் கவர்கின்ற, பால் மொழியாய் - பால் போலும் இன் சொல்லையுடையவளே, பார் மேல் - உலகில், முயன்றால் - முயற்சி செய்தால், முடியாப் பொருள் உண்டோ - முடியாப் பொருளுளதோ (இல்லை), (எவ்வாறெனின்) அளி மருவு புண்டரிகம் - வண்டுகள் பொருந்திய தாமரை மலர், தண் துறை நீர் நின்ற தவத்தால் - குளிர்ந்த துறைகளையுடைய நீரில் நின்று செய்த தவத்தால், நின் வதனம் போன்றது - உன் முகத்தை நிகர்த்தது—எ-று.

நீர் நிலை நிற்றல் முதலியவும் தவத்தார்க்குரியன வாதலால் "தண்டுறை நீர் நின்றதவத்தால்" என்றார். முயன்றால் முடியாப் பொருளில்லை யென்பதி தன் கருத்து. (எகச)

## மடக்கலங்காரம்.

### முதலடி முதன் மடக்கு.

துறைவா துறைவார் பொழிற்றுணைவர்நீங்க
உறைவார்க்குமுண்டாங்கொல் சேவல்—சிறைவாங்கிப்
பேடைக்குருகாரப் புல்லும்பிறங்கிருள்வாய்
வாடைக்குருகா மனம்.

இ-ள். துறைவா - நெய்தனிலத் தலைவனே, துறைவார் பொழில் - துறையின்கண் மிக்கிருக்கிற சோலையில், துணைவர் நீங்க - தலைவர் பிரிய, உறை வார்க்கும் - தனித் திருப்பார்க்கும், சேவல் - சேவற் குருகானது, சிறை வாங்கி - தன் சிறகை வளைத்து, பேடைக் குருகு - பெடைக்குருகை, ஆரப் புல்லும் - இறுகப் புல்லுகின்ற, பிறங்கு இருள்வாய் - மிக்க இருளையுடைய இடையா மத்தின்கண், வாடைக்கு உருகா மனம் உண்டாம் கொல் - வாடைக்காற்றுச்கு உருகாத மனமுண்டாகுமோ—எ-று.

துறைவன் - நெய்தனிலத்தலைவன். வாங்கல் - வளைத்தல். குருகு என்பதனைச் சேவலோடுங் கூட்டுக. வாடை - வடகாற்று. (எசரு)

### இரண்டாமடி முதன்மடக்கு.

கனிவாயிவள்புலம்பக் காவலநீநீங்கின்
இனியாரினியா ரெமக்குப்—பனிநாள்
இருவராத்தாங்கு முயிரன்றியெங்குண்
டொருவராத்தாங்கு முயிர்.

இ-ள். காவல் - அரசனே, கனிவாய் - கொவ்வைக் கனிபோன்ற அதரத்தையுடைய, இவள் புலம்ப - இவள் புலம்பும்படி, நீ நீங்கின் - நீ பிரிந்தால், (அந்தக்காலத்தில்) எமக்கு இனியார் - எமக்கினிய ராவார், இனியார்-

உன்னையன்றி வேறியாவர், பனிநாள் - பனிக் காலத்தில், இருவரா தாங்கும் உயிர் அன்றி - இருவராய்க் கூடித்தாங்கும் உயிரோயன்றி, ஒருவரா தாங்கும் உயிர் - ஒருவராத்தாங்கும்படியான உயிர், எங்கு உண்டு - எவ்விடத்துளது எ-று.

கனி வாய்க் குவமையாக்கினமையால் கொவ்வைக்கனியைக் குறித்தது, கனிவாய் - கனிந்தவாய் எனினுமாம். வாய் - அதரம். வாய்மொழி யெனினும் பொருந்தும். பனிநாள் - வாடைமிக்க பனிக்காலம். (எகசு)

## மூன்றுமடி முதன்மடக்கு.

தேங்கானன்முத்தலைக்குந் தில்லைப்பெருந்தகைக்கு
ஓங்காரத்துட்பொருளா மொண்சுடர்க்கு—நீங்கா
மருளாமருளா தரித்துரைக்குமாற்றம்
பொருளாம்புனைமாலை யாம்.

இ-ள். தேம் கானல் - வாசனையுள்ள கழிக்கரைச் சோலையி லுண்டாகிய, முத்து அலைக்கும் - முத்துக்களைக் கொழிக்கிற, தில்லைபெருந்தகைக்கு - தில்லையிலுள்ள பெரியோனுக்கு, ஓங்காரத்து - பிரணவத்தின், உட் பொருள் ஆம் - உட் பொருளாகிய, ஒள் சுடர்க்கு - ஒள்ளிய சோதியாகிய கடவுளுக்கு, நீங்கா - இடையறாத, மருள் ஆம் - ஆசையாகிய, மருள் ஆதரித்து உரைக்கும் - மயக்கத்தை மேற்கொண்டு சொல்லுகின்றசொல், பொருள்ஆம் - பொருளாகும், புனை மாலை ஆம் - அணிதற்குரிய மாலையுமாம்—எ-று.

தேம் - தேன் எனினுமாம். கானல் - கழிக்கரைச்சோலை மாற்றம் - சொல். (சுகஎ)

## ஈற்றடி முதன்மடக்கு.

இவனளவுந்தீயுமிழ்வ தென்கொலோதோயும்
கவளமதமான் கடத்திற்—றிவளும்
மலையார்புனலருவி நீயணுகாநாளின்
மலையாமலையா நிலம்.

இ-ள். மலையா - குறிஞ்சிநிலத் தலைவனே, நீ அணுகா நாளில்-நீ வந்து இவளை யணையாதபோது, தோயும் - பொருந்திய, கவளம் - கவளங்கொள்ளுகின்ற, மதமான் கடத்தின் - மத யானையின் மதநீரொழுக்குப்போல, துவளும் - புரளா நின்ற, அலை ஆர் - அலைகள் நிரம்பின, புனல் அருவி - நீரருவிகளையுடைய, மலையம் - பொதிய மலையிற் பிறந்த, அநிலம் - தென்றற் காற்றானது, இவள் அளவும் - இவள் மட்டிலே, தீ உமிழ்வது - நெருப்பைக்கக்குவதற்குக் காரணம், என்கொலோ - யாதோ (அறிந்திலேம்)—எ-று.

இது தோழிகூற்று, மதமான் - மதயானை. திவளல் - அசைதல் எனினுமாம். (எகஅ)

## முதலடியும் இரண்டாமடியும் முதன்மடக்கு.

நினையாநினையா நிறைபோயகலா
வினையாவினையா மிலமால்—அனையாள்
குரவாருங்கூந்தற்கு முதவாய்க்கொம்பிற்
புரவாளாநீபிரிந்த போது.

இ-ள். புரவாள - காவலனே, குரவு ஆரும் கூந்தல் - குரவ மலரை யணிந்த கூந்தலையும், குமுதவாய் கொம்பின் அனையாள் - செவ்வல்லி மலர் போலும் வாயினையும் உடையவளாகிய அவள், நீ பிரிந்தபோது - நீ பிரிந்த காலத்தில், நினை - உன்னை, யாம் நினையா - நாங்கள் நினைத்து, நிறைபோய் அகலா இனையா - நிறைபோனது எம்மை நீங்குதலால் வருந்தி, வினையாம் இலம் ஆல் - ஒருசெயலு மற்றிருந்தோமாதலால், (எம்மைப்பிரியாதொழிவா யாக)—எ-று.

நிறை - நிறைவு (கற்பு.) வினை - செயல். கொம்பின் - பூங்கொம்பு போல. (எகக)

## முதலடியு மூன்றுமடியு முதன்மடக்கு.

அடையாரடையா ராணழித்தற்கின்னல்
இடையாடுநெஞ்சமே யேழை—உடையோர்
மயிலாமயிலா மதர்நெடுங்கண்மாற்றம்
குயிலாமென்றெண்ணல் குழைந்து.

இ-ள். இடையாடும் நெஞ்சமே - (ஊசற் கயிறுபோல) இடையாயுழலா நின்றமனமே, ஏழை உடையோர் - தலைவியின் சாயலழகு, மயிலாம் என்று - மயிலாமென்றும், மதர் நெடுங் கண் - மதர்த்த நெடிய கண்கள், அயிலாம் என்று - வேல்களாமென்றும், மாற்றம் - சொல், குயிலாமென்று - குயிலா மென்றும், குழைந்து எண்ணல் - இளகி நினையா தொழிவாயாக, (நினைவா யாயின்) அடையார் அடை - பகைவ ரடைதற்குரிய, ஆர் அரண் - அரிய அரணை, அழித்தற்கு - அழித்தலுக்கு, இன்னல் - வருத்தமாம்—எ-று.

(இது தலைவன் தன்னெஞ்சொடு சொல்லியது.)

அரண் - மதிலரண், நீரரண், காட்டரண், மலையரண் என்பன. அயில் - வேல். (எஉ0)

## முதலடியும் ஈற்றடியும் முதன்மடக்கு.

யானவாமானவா நோக்கின்மதுகரஞ்சூழ்
கானவாங்கூந்தலெங் காரிகைக்குத்—தேனே
பொழியாரந்தார்மேலு நின்புயத்துமேலும்
கழியாகழியா தரவு

இ-ள். மானவா - மனுகுலவேந்தனே, மான் அவாம்நோக்கின் - மான்கள் ஆசைப்படுகிற நோக்கத்தையும், மதுகரம்சூழ்-வண்டுகள்மொய்த்த, கானவாம்கூந்தல் - மணமுள்ளகூந்தலையுடைய,எம்காரிகைக்கு - எம்முதலைவிக்கு, தேனேபொழி - தேன்சொரிகின்ற, ஆர் - ஆத்திமலரால்தொடுக்கப் பட்ட, அம்தார்மேலும் - அழகிய மாலையின்மேலும், நின்புயத்து மேலும் - உன்தோளின்மேலும், கழிஆதரவுகழியா - மிகுதியாகியஆசைநீங்காது—எ-று.

இது தோழி தலைவனுக்குச்சொல்லியது, மதுகரம் - வண்டு, ஆர்-ஆத்தி, ஆதரவு - ஆசை. (எ௨க)

## மூன்றுமடியும்நான்காமடியும் முதன்மடக்கு.

மாதருயிர்தாங்க வள்ளல்வருநெறியில்
பேதுறவுசெய்யும் பெரும்பாந்தள்—யாதும்
வரையாவரையா மெனுமாமதமா
விரையாவிரையா வெழும்.

இ-ள். வள்ளல் - வள்ளலே, மாதர் உயிர்தாங்க - இப்பெண்ணின் உயிரைத் தாங்கும்பொருட்டு, வரும்நெறியில் - நீவரும்வழியில், பேதுறவுசெய்யும் - நடுக்கத்தைச் செய்கிற, பெரும் பாந்தள் - பெரும் பாம்புகள், யாதும் வரையா - யாதொன்றையும் வரையாதே கொல்லுகின்ற, வரையாம்என்னும் மலையாமெனப்படுகிற, மாமதமா - பெரிய மதயானைகளை, இரை ஆ - ஆஹாரமாக நினைந்து, இறையா எழும் - இறைந்துகொண்டு எழும்—எ-று.

(இது தோழிசொல்லியது.)

வள்ளல் - அண்மைவிளி. பேதுறவு - அச்சம்என்னுமாம். பாந்தள்-பாம்பு பெரும்பாம்பு என்றமையால் மலைப்பாம்பு எனப் பொருள் கொள்க. (எ௨௧)

## இரண்டாமடியும்மூன்றுமடியும் முதன்மடக்கு.

குரவார்குழலாள் குவிமென்முலைதாம்
விரவாவிரவா மென்தென்றல்—உரவா
வரவாவரவா மெனநினையாவையம்
புரவாளர்க்கீதோ புகழ்.

இ-ள். உரவா - அறிவுடைய தலைவனே, குரவு ஆர் குழலாள் - குராமலரை யணிந்த கூந்தலையுடையஇவளது, குவிமெல்முலைதாம் - குவிந்தமெல்லிய முலைமீது, விரவா - நீகூடாத, இரவுஆம் - இரவிலுண்டாகிற, மெல்தென்றல் - மென்மையாகியதென்றலின், வரவு - வரவானது, அரவுஆம்எனநினையா - அதனை விழுங்குகின்ற பாம்பாமென்று நினைக்காமல் பிரிகின்றாய், வையம் புரவாளர்க்கு - வையகத்தைக் காக்கும் வேந்தர்க்கு, புகழ் ஈதோ - புகழ் இதுதானோ—எ-று.

(இது தோழிகூற்று)

துவிதல் - நீரளில். உரம் - அறிவு, புரவாளர் - காத்தற்றொழிலையுடைய வேந்தர். (எஉ௩)

இரண்டாமடியும் ஈற்றடியும் முதன்மடக்கு.

மழையார்கொடைத்தடக்கை வாளபயனெங்கோன்
விழையார்விழையார் மெல்லாடை—குழையார்
தழையாமுணவுங் கனியாமினமு
முழையாமுழையா முறை.

இ-ள். மழை ஆர் - மழை போன்ற, கொடை - கொடையையுடைய, தடக்கை - நீண்ட கையினையும், வாள் - ஒளியினையு முடைய, அபயன் - அபயனாகிய, எங்கோன் - எம்மிறைவனது, விழையார்-பகைவர், விழை-விரும்புகின்ற, ஆர் - அரிய, மெல் ஆடை - மெல்லிய ஆடையானது, குழை ஆர்-தழைத்தலையுடைய, தழை ஆம் - தழைகளாம், உணவும் கனி ஆம் - உணவும் கனிகளே யாகும், இனமும் - சுற்றமும், உழை ஆம் - மான்களாம், உறை-உறையிடம், முழை ஆம் - மலைக்குகையாம்—எ-று.

இது சோழனது கொடையையும் வீரத்தையும் புகழ்ந்து ஒருகவிவாணர் கூறியது. (எஉ௪)

ஈற்றடியொழித்து ஏனையமூன்றடியும் முதன்மடக்கு.

இறைவாவிறைவால் வளைகாத்திருந்தியார்
உறைவாருறைவார் புயலால்—நறைவாய்
வண்டளவுவண்டளவு நாளின்மயிலாலக்
கண்டளவினீர்பொழியுங் கண்.

இ-ள். இறைவா - இறைவனே, இறை-கையிறையிலுள்ள, வால் வளை-வெள் வளைகள், காத்திருந்து - விழாதபடி காத்திருந்து, யார் உறைவார்-யார் உயிரோடுவாழ்வார், உறைவார் புயலால் - துவலைமிக்க புயலினால், நறைவாய் - தேன் பொருந்திய, வண் தளவு - வளப்பமாகிய முல்லைமலரின்மேல், வண்டு அளவும் நாளில் - வண்டுகள் சஞ்சரிக்கிற கார் காலத்தில், மயில் ஆடல் கண்டளவில் - மயில்கள் ஆடுவதைக் கண்டளவில், கண் - கண்கள், நீர் பொழியும் - நீரைச்சொரியாநின்றன—எ-று.

(இதுதோழிகூற்று.)

வால்வளை - வெள்ளிய வளையல், உறை - நீர்த்துளி, புயல் - மேகம். நறை - தேன், தளவு - முல்லை, ஆலல் - ஆடல், கண்டளவில் என்பதற்குக், கண்டு அளவில்லாத என்றுரைப்பினுமாம். (எஉ௫)

முதலயலடியோழித்தேனை மூன்றடியும் முதன்மடக்கு.

கொடியார்கொடியார் மதின்மூன் றுங்கொன்ற
படியார்பணைத்தடக்கை நால்வாய்க்—கடியா
ருரியாருரியா ரெமையாளவோதற்
கரியார்கரியார் களம்.

இ-ள் கொடியார் - கொடியவராகிய அவுணரது, கொடி ஆர் - கொடிகள் நெருங்கின, மதில் மூன்றும் கொன்ற - மும் மதில்களையு மழித்த, படியார் - தன்மையையுடையவர், பணை தடக்கை - பனைபோலும் பெரிய துதிக்கையையும், நால் வாய் - தொங்குகின்ற வாயையுமுடையயானையின், கடி ஆர் உரியார் - அச்சத்தைத்தருந் தோலையுடையார், எம்மை ஆள உரியார் - எம்மையாளுதற் குரியவர், ஓதற்கு அரியார் - யாவராலும் சொல்லுதற்கரியவர், களம் கரியார் - கண்டங்கறுத்தவர்—எ-று.

மதில்மூன்று - மும்மதில்கள், இவை இரும்பினாலும் வெள்ளியினாலும் பொன்னினாலும் செய்யப்பட்டுள்ளன, இவை முப்புரம் எனவும்படும். ()

ஈற்றயலடியோழித்தேனை மூன்றடி முதன்மடக்கு.

மலையுமலையு மகிழ்ந்துறையும்வேயும்
கலையுங்கலையுங் கடவும்—தொலைவில்
அமரியெமக்கரணு மென்னுமவர்முன்னிற்
குமரிகுமரிமேற் கொண்டு.

இ-ள். மலையும் - மலையினும், அலையும் - கடலினும், மகிழ்ந்து உறையும் - மகிழ்ந்துறைபவளும், கலையும் வேயும் - இளம்பிறையைச் சூடுபவளும், கலையும் கடவும் - கலைமானைநடத்துபவளும், தொலைவுஇல்-தொலைவில்லாத, அமரி - போர்த்தொழிலையு முடையவள், எமக்கு அரண் ஆம் - எமக்குக் காவலாகியிருப்பாள், என்னும் அவர்முன் - என்பவர்க்கு முன்னே, அரிமேற்கொண்டு, சிங்கமேற்கொண்டு, குமரி நிற்கும் - துர்க்கையானவள் நிற்பாள்-எ-று.

தொலைவு - தோல்வி. அமர் - போர். அரண் - காவல். அரி - சிங்கம். ()

முதலடியோழித்தேனை மூன்றடிக்கண்ணு முதன்மடக்கு.

பாலையாழ்தன்னிற் பதிற்றிரட்டிவெய்தன்றே
மாலைவாய்மாலைவா யின்னிசை—மேலுரை
மேவலர்மேவலர் மெல்லாவிவாட்டாதோ
காவலர்காவலராங் கால்.

இ-ள். பாலையாழ் தன்னின் - பாலையாழ் தன்னினும், பதிற்றிரட்டி - இருபதுமடங்கு, வெய்து அன்றே - வெம்மையை யுடையதன்றோ, மாலை வாய் - அந்திப் பொழுதில், மாலைவாய் - விறலிபாட்டின்கணுண்டாகிய, இன் இசை - இன்பத்தையுடைய இசைமேலாயுள்ள, மேல் உரைமேவலர் - புகழ்ச்சியைப் பொருந்ாதவர், மேவு அலர் - விரும்பிச் சொல்லுகின்ற பழிமொழி, மெல் ஆவி - எனது மெல்லிய வுயிரை, வாட்டாதோ - வாட்டாதொழியுமோ, காவலர் - நம் தலைவர், கா அல்லர் ஆம் கால் - நம்மைக் காவாதவரான காலத்து—எ-று.

மாலை - பாட்டு. மேலுரை - புகழ்ச்சி. (எஉஅ)

## முற்றுமடக்கு.

வரையவரைய சுரஞ்சென்றார்மாற்றம்
புரையபுரைய வெனப்பொன்னே—உரையல்
நனையநனைய தொடைநம்மை வேய்வர்
வினையர்வினையர் விரைந்து.

இ-ள். வரைய - (களவொழுக்கமாகாது) வரையவேண்டு மாசையிற் பிரிந்து, வரைய - மலைகளுமுடைய, சுரம்சென்றார் - சுரங்கடந்து போயினார், (தலைவர், அவரது) மாற்றம் - (நின்னிற் பிரியேன் பிரியின் ஆற்றேன் என்று முற்காலத்து நம்மை தேற்றிய) வார்த்தை, (இப்பொழுது நமக்கு) புரைய புரைய என - பெரிதாகிய குற்றத்தைத் தந்ததென்று, பொன்னே - பொன் போல்வாய், உரையல் - சொல்லா தொழிவாயாக, நனைய - தேனோடும், நனைய - குளிர்ச்சியோடுங் கூடிய, தொடை - பூமாலையை, நம்மை வேய்வர் - நமக்குச்சூட்டுவர், (அவர்) வினையர் - பலதொழில்களையும், வினையர் - அறிவினையு முடையராதலால், விரைந்து - விரைந்து வந்து—எ-று.

வரைதல் - மணஞ்செய்தல் சுரம் - பாலைநிலம். புரை - பெருமை, புரை - குற்றம். பொன் - திருமகள். தொடை - பூமாலை. வேய்தல் - சூடுதல். (எஉகூ)

## இடைமுற்றுமடக்கு.

மனமேங்குழைய குழையவாய்மாந்தர்
இனநீங்கரிய கரிய—புனைவத்தனத்
துள்வாவிவாவிக் கயலொக்குமென்னுள்ளம்
கள்வாளவாளவாங் கண்.

இ-ள். மனம் எங்கு - மனந்தளர்ந்த, உழைய - மானின் நோக்கத்தை யுடையவுமாய், குழையவாய் - குழையைத் தொடர்வனவுமாய், மாந்தர் இனம்

நீங்கு அரிய - இளைஞர் கூட்டம்விட்டு நீங்குதற் கரியனவுமாய், கரிய - கரியனவுமா யிருப்பன, புனை - அலங்கரிக்கப்பட்ட, வதனத்துள் - முகத்தில், வாவி - உலாவி, வரவி கயல் ஒக்கும் - பொய்கைக் கயலொக்கும், என் உள்ளம் - என் உள்ளத்தை, கள் வாள் - களவு கொள்வாளுடைய, ஆ - அந்த, வாள் ஆம் கண் - வாள் போலுங் கண்கள்—எ-று.

உழை - மான், வாவி - தடாகம். கயல் - சேல்மீன், கள்ளல் - வஞ்சித்தல், வாளவாம் என்பதற்கு வாள் விரும்புகின்ற என்றுரைப்பினுமாம். ()

## இறுதிமுற்று மடக்கு.

மாலையருளாது வஞ்சியான்வஞ்சியான்
மேலையமரர்கடை வேலை—வேலை
வளையார்திரைமேல் வருமன்னமன்ன
இளையாளிவளை வளை.

இ-ள். வஞ்சியான் - வஞ்சிக் காவலன், மாலை - தன் மார்பிற் பூ மாலையையும், மேலை - முற்காலத்து, அமரர் கடை வேலை - தேவர்கள் கடையும் போது, வேலை - கரையையும், வளை - சங்குகளையும், ஆர் - பொருந்திய, திரைமேல் வரும் - கடலிற் றோன்றின, அன்னம் அன்ன - திருமகளாகிய அன்னத்தை யொத்த, இளையாள் - பேதைப் பருவத்தினளாகிய, இவள் - இத்தலைவியின், ஐ - அழகிய, வளை - வளைகளையும், அருளாது - கொடாமல், வஞ்சியான் - வஞ்சனை செய்வானல்லன்—எ-று.

வஞ்சியான் - வஞ்சி நகரத்தை யுடையவன். வஞ்சிநகர் - கருவூர். வேலையிரண்டனுள் முன்னது - பொழுதையும் பின்னது கரையையு முணர்த்தின. வளை - சங்கு, ஐ - அழகு. (௭௩௧)

## முதற்கண்ணு மிடைக்கண்ணு முற்றுமடக்கு.

கொண்டல்கொண்டலர் பொழிறொறும்பண்ணையாய்ப்
பண்ணையாயத்துள்ளார்
வண்டல்வண்டலர் தாதுகொண்டியற்றலின்
வருமணமணன்முன்றிற்
கண்டல்கண்டக மகிழ்செயவோதிமங்
கலந்துறைதுறைவெள்ள
மண்டன்மண்டல முழுதுடன்வளைதரு
வளைதருமணிவேலை.

இ-ள். கொண்டல் கொண்டு - கீழ் காற்றினால், அலர் - மலர்கின்ற, பொழில் தொறும் - சோலைகள் தோறும், பண்ணை ஆய் - இசையை யாராய்

கின்ற, பண்ணை - விளையாடற் கூட்டமாகிய, ஆயத்து உள்ளார் - ஆயக் கூட்டத்துள்ள மகளிர், வண்டல் - சிற்றிலை, வண்டு அலர் - வண்டுகள் சேதிக்கிற, தாது கொண்டு இயற்றலின் - தாதுக்களைக்கொண்டு செய்தலால், வரும் மணம் - மணம் வீசுகின்ற, மணல் முன்றில் - மணல் முற்றமாகிய, கண்டல் - தாழையின்மீது, கண்தக மகிழ்செய - (கண்டோரது) கண்கள்களிக்கும்படி, ஓதிமம் - அன்னங்கள், கலந்து உறை - கூடியிருக்கின்ற, துறை வெள்ளம் - துறையில் வெள்ளத்தைக் கொண்டு, மண்டல் - ஏறு தொழிலாராக, மண்டலம் முழுது - பூமண்டல முழுதையும், உடன் வளைதரு - ஒருமிக்க வளைந்த, வளை - சங்குகள், தரு - தந்த, மணி - முத்துக்களையுடைய, வேலை - கடலே—எ-று.

பண் - இராகம், வண்டல் - மகளிர் விளையாட்டு. தாது - மகரந்தம். ஓதிமம் - அன்னம், வேலை - கடல். இது அண்மை விளியாதலால் இயல்பாயிற்று. (எ௩௨)

முதற்கண்ணு மிறுதிக்கண்ணு முற்றுமடக்கு.

நிரையாநிரையார் மணிபோனிறை கோடல்கோடல்
வரையாவரையா மிருண்முன்வரு மாலைமாலை
விரையாவிரையா வெழுமின்னொளி மேகமேகம்
உரையாவுரையா ரினுமொல்லன முல்லைமுல்லை.

இ-ள். நிரை ஆ - வரிசையாகிய பசுக்களின், நிரை ஆம் மணிபோல் - ஒழுங்காகிய மணியோசைபோல, நிறை - எங்கள் நிறையை, கோடல் - கவராதே, கோடல் - காந்தளே, வரையா - அளவிடுதற்கரிய, அரை ஆம் இருள் முன் - அரையா மிருளுக்குமுன்னே, வரும் - வருகின்ற, மாலை - மயக்கத்தைச் செய்கின்ற, மாலை - மாலைக் காலமானது, விரையா - விரைந்து, இரையா - இரைச்சலிட்டு, எழும் - எழுகின்ற, மின் ஒளி - மின்னொளியையுமுடைத்தாய், மேகம் - செல்லுகின்ற, மேகம் - மேகங்களும், உரையா - சொல்லப்படாத, உரையாரினும் - புகழையுடைய தலைவரினும், ஒல்லன - பகையாயின, முல்லை - முல்லை நிலத்துள்ள, முல்லை - முல்லைக் கொடிகளும் எ-று.

அரையாமிருள் - அர்த்தராத்திரி. மாலை - அந்திப்பொழுது. (எ௩௩)

இடைக்கண்ணு மிறுதிக்கண்ணு முற்றுமடக்கு.

வருகம்புளினம் புளினம்பயில் வேலைவேலை
ஒருகாலுலவா வுலவாவரு மோதமோத
வருகேதகை கேதகைசேர்தரு மன்னமன்ன
பெருகாதன் வேதனவேரசை மாதர்மாதர்.

இ-ள். வரு - வாராநின்ற, கம்புள் இனம் - கம்புட்கூட்டங்கள், புளினம் - மணற்குன்றுகளிலே, பயில் வேலை - சஞ்சரிக்குங் காலத்தில், வேலை - கடலா

னது, ஒருகால் உலவா - ஒருகாலுங் குறையாமல், உலவா - உலாவி, ஓதம் மோதவரும் - கரையைமோத வாரா நின்றது, அருகே - அருகே நின்று, தகைக்கப்பட்ட, தகை - தாமரைச்செடிகளின்மேல், அன்னம் சேர் தரும் - அன்னங்கள்சேரும், (ஆதலால்) மன்ன - தலைவனே, தனம் - தனங்களின், ஏர் அசை - அழகிழந்த, மாதர் - மாதருடைய, மாதர் - காதலானது, பெரு காதனவே - பெருகாதொழியுமோ—எ-று.

கம்புள் - சம்பங்கோழி. தகைதல் - தடுத்தல். மாதர் - ஆசை. (௭௩௪)

## அடிதோறு மூன்றிடத்து மடக்கு.

களைகளையமுளரியரு கடைகடையமகளிர்கதிர் மணியுமணியும்
வளைவளையகரதலமு மடைமடையமதுமலரு மலையமலைய
இளையிளைஞர்கிளைவிரவி யரியரியின்மிசைகுவளை மலருமலரும்
கிளைகிளைகொளிசையளிகண் மகிழ்மகிழ்செய்கெழுதகைய மருதமருதம்.

இ-ள். களை களைய - களை கடியும்பொருட்டு, முளரி அருகு அடை - தாமரையினருகேயடைந்த, கடைய மகளிர் - கடைசியரது, கதிர் மணியும் - ஒளியுள்ள மணிகளும், அணியும் - அணிகின்ற, வளை - வளைந்த, வளைய - வளையலணிந்த, கரதலமும் - கையும், அடை - அடைத்த, மடை - மடையி லுள்ள, மது மலரும் - தேனையுடைய மலர்களும், மலைய மலைய - மிகவும் மாறுபடாநிற்க, இளை இளைஞர் - இளங் குறுமாக்கள், கிளை விரவி - சுற்றங் கூடி, அரி - அரிந்த, அரியின்மிசை - அரியின்மீதே, குவளைமலரும் அலரும் - குவளைப் பூவும் மலரா நிற்கும், கிளை - இனத்துடனே, கிளைகொள் இசை - கிளையென்னும் நரம்பினின்றுமுண்டாகின்ற ஓசைபோல, அளிகள் - வண்டுகள், மகிழ் - மகிழமலரினின்று, மகிழ் செய் - மகிழ்ச்சியைச் செய்கின்ற, கெழுதகைய - விளக்கத்தையுடைய, மருதம் - மருதமரங்கள் நெருங்கின, மருதம் - மருதநிலம்—எ-று.

அரி - நெல்லரி. (௭௩௫)

## இடையிட்டுவந்த முதன்முற்று மடக்கு.

தோடுகொண்டளி முரன்றெழக்குடைபவர் குழல்சோர்ந்த
தோடுகொண்டதே மலர்சுமந்தகில் கமழ்ந்தவர்தந்
தோடுதைந்தசெஞ் சாந்தணிமுலை யிடைதோயத்
தோடுதண்பு னனித்திலந்துறைதொறுஞ் சொரியும்.

இ-ள். தோடுகொண்டு - கூட்டங்கொண்டு, அளிமுரன்று எழ - வண்டுகள் ஒலித்து எழ, குடைபவர் - நீராடும் மாதரது, குழல்சோர்ந்த - கூந்தலில் நின்றும்சோர்ந்த, தோடு கொண்ட - இதழ்களையுடைய, தேம் - தேனோடு கூடிய, மலர் சுமந்து - மலரைத் தாங்கி, அகில் கமழ்ந்தவர்தம் - அகில்மணம்

கமழப்பெற்ற மாதருடைய, தோள் துதைந்த - தோளைச் செறிந்த, செஞ்சாந்து அணி-செஞ்சந்தனம் அணியப்பெற்ற, திரள் முலை இடை - திரண்ட தனங்களின்மீது, தோயத்து ஒடு - பெருக்கத்தோடு ஓடாநின்ற, தண்புனல்-குளிர்ந்த நீரானது, நித்திலம் - முத்துக்களை, துறை தொறும் - துறைகள் தோறும், சொரியும் - குவிக்கும்—எ-று.

முழுல் - ீத்தித்தல், குடைதல் - நீராடுதல். (எ௬௯)

## இடையிட்டுவந்த இடைமுற்று மடக்கு.

பரவிநாடொறும் படியவாம்பல் புகழ்ப்பரப்பின்
இரவிசீறிய படியவாம்பரி யெரிகவர
விரவிமான்பயில் படியவாம்வேய் தலைபிணங்கும்
அருவிவாரணம் படியவாம்புலர் பணைமருதம்.

இ-ள். பரவி - துதித்து, நாள் தொறும் - தினந்தோறும், படி அவாம் - உயர்ந்தோர் விரும்புகின்ற, பல் புகழ்ப் பரப்பின் - பல் புகழையுடைத்தாகிய நாடுகளுடனே, இரவி சீறிய - செம்பியன் சீறிய, படிய - சிறிய ஊர்களில், வாம்பரி - வாவி அழுக்கின்ற, எரி கவர - நெருப்பினால் கொள்ளப்பட்ட, மான் விரவி பயில் - மான் கூட்டங்கள் திரண்டு சஞ்சரிக்கிற, படிய வாம் - தன்மையவாம், வேய்தலை பிணங்கும் - மூங்கில்கள் செறியும், வாரணம் - அந்தச்செம்பியன்யானை, படிய - புகுந்து கலக்க, அருவி - நீரானது, புலர் - புலரும்படியான, பணை - தடங்களையுடைய, மருதம் ஆம் - வயல் மருதமாம் எ-று.

படி - உலகம், அது இவ்விடத்தில் உயர்ந்தோரைக் குறித்தது, எரி - நெருப்பு. (எ௭0)

## இடையிட்டுவந்த இறுதிமுற்று மடக்கு.

சொன்னநாளிது சுரும்பிமிரிதழி பொன்கால
மின்னுவாள்விட வில்வளைத் தூன்றியகால
இன்னகார்முகி லினமிருண்டெழு தருகால
மன்னர்வாரலர் தான்வருமயின் மருங்கால.

இ-ள். சொன்னநாள் இது - தாம்வருவோமென்று சொன்னநாள் இது வாயிருந்தது, சுரும்பு இமிர் - வண்டுகள் பாடுகின்ற, இதழி - கொன்றைகள், பொன்கால - பொன்பொழிய, மின்னு - மின்னனது, வாள்விட - ஒளி வீச, வில் வளைத்து - இந்திரதனுசை வளைத்து, ஊன்றியகால - ஊன்றிய கால்களையுடையனவாகிய, இன்ன-இப்படிப்பட்ட, கார்முகில்இனம்-கார்காலத்து மேகக்கூட்டங்கள், இருண்டு எழுதருகாலம் - இருண்டு எழுகின்ற காலத்திலும், மன்னர் - நம்தலைவர், வாரலர் - வந்திலர், மயில் - மயில்கள், மருங்கு

ஆல-பக்கங்களில் ஆடிக்கொண்டிருக்க, தான்வரும் - கார்ப்பருவந்தான்வாரா நின்றது—எ-று.

இதழி - கொன்றைமரம். ஆலல் - ஆடுதல். காலல் - உமிழ்தல். (எகஅ)

## இடையிட்டும் இடையிடாதும் வந்த இடையும் இறுதியு முற்றுமடக்கு.

வாமானமான மழைபோன்மத மானமான்
நாமானமானக முற்றுழக மானமான
தீமானமானவர் புகாத்திற மானமான
காமானமானகல் சுரங்கனன் மானமான.

இ-ள். வாம்மான - தாவுகின்ற மான்களை யுடையன, மான மழைபோல் - பெரியமேகம்போன்று, மதம் ஆனயான - மதம்பொருந்திய யானைகளையுடையன, நாம் ஆனமான - அச்சத்தைத்தருகிறபுலியினது, நகம்உற்று- நகம் பொருந்துதலால், ஆழ் அகம் ஆனமான-தாழ்ந்தமனத்தையுடைய விலங்குகளையுடையன, தீமான-தீமையையுடையன, மானவர்புகா - மக்கள் ஊடாடாத, திறம் ஆனமான - திறமையாகிய தன்மையை யுடையன, காமான-சோலைகளை ஒப்ப, மானகல் - வலியகற்களையுடையன, சுரம்கனல்மானமான- இத்தன்மையையுடைய பாலைவழிகள் நெருப்பினளவா யுள்ளன—எ-று.

தீமை.- தீம் என ஈற்றுயிர்கெட்டது. மானம் - அளவு. (எகசு)

வருமறைபல முறைவசையறப் பணிந்தே
மதியொடுசடை முடிமருவுமப் பணிந்தே
அருநடநவில்வது மழகுபெற்ற மன்றே
யருளொடுகடவு வதணிகொள்பெற்ற மன்றே
திருவடிமலரன திகழொளிச் சிலம்பே
தெளிவுடனுறைவது திருமறைச் சிலம்பே
இருவினைகளைபவ னடைபதத்த னன்றே
யிமையவர்புகலிறை யெனநினைத்த னன்றே.

இ-ள். வரும்மறை - உண்டாகிய வேதங்கள், பல முறை - பலகாலும், வசையறப்பணிந்து - தம் குற்றமறத் தொழுது போற்ற, சடைமுடி- சடையையுடைய முடியில், மதியொடுமருவும் - பிறையோடுகூடின, அப்பு அணிந்து - கங்கையைத்தரித்து, அருநடம் நவில்வதும் - அரிய நடனத்தைச் செய்வதும், அழகுபெற்றமன்றே - அழகுடையதிருவம்பலத்தே, அருளொடு கடவுவது - விருப்பத்தோடு ஏறிநடத்துவது, அணிகொள்பெற்றம் அன்றே- அலங்காரத்தைப்பெற்ற இடபமல்லவா, திருவடிமலரன - திருவடித்தாமரை

யில்விளங்குவன, திகழ் ஒளிசிலம்பே - பிரகாசிக்கிறஒளியையுடையசிலம்பே, தெளிவுடன் உறைவது - விளக்கத்தோடு எழுந்தருளியிருப்பது, திருமலைச் சிலம்பே - அழகிய வேதரூபமான கைலைமலையே, இருவினைகளைபவர் - இருவினைகளையுங்களைந்தவர், அடை - அடைகின்ற, பதத்தன் - பாதங்களை யுடையவன், அன்றே - அநாதிகாலத்திலே, இமையவர்புகல் - தேவர்களுக்குப் புகலிடமாகிய, இறையெனநினைத்தல் - முதல்வனென்றுதியானித்தல், நன்றே - அழகேயாம்—எ-று. (எ௪0)

அனையகாவலர் காவலர்காவலர்
இனையமாலைய மாலையமாலைய
எனையுவாவிய வாவியவாவிய
வினையமாதர மாதரமாதரம்.

இ-ள். அனைய - அத்தன்மையாகிய, கா அலர் - சோலையின் மலராகிய, கா அலர் - காமன்கணைகளை, காவலர் - நம்தலைவர்காத்தலிலர், இனைய - இத்தன்மையாகிய, மாலைய - மயக்கத்தைத்தருகிற, மாலை - மாலைப் பொழுது, அ மாலைய - அத்தன்மைய, என்னை அவாவிய - என்னை நீங்காது காதலித்த, ஆவிய - உயிர்போன்ற, ஆவிய - அறிவையுடைய, வினையமாது - தோழியானவள், அரம் - அரத்தை ஒத்திருக்கின்றாள், ஆதரம் - ஆசையானது, மாதரம் - மிகுதியாயிருக்கின்றது—எ-று.

அம்மா - வியப்பிடைச்சொல். (எ௪௧)

முதலீரடியுமடக்கு.

விரைமேவு மதமாய விடர்கூடு கடுநாக
விரைமேவு மதமாய விடர்கூடு கடுநாக
வரைமேவு நெறியூடு தனிவாரன் மலைநாட
நிறைமேவு வளைசோர விவளாவி நிலைசோரும்.

இ-ள். விரைமேவும் மதம் ஆய - வாசனையுள்ள மதநீரையுடைய, இடர் கூடு - துன்பத்தைச்செய்கிற, கரு நாகம் - கரியயானைகளை, இரைமேவு - இரையாகவிரும்புகிற, மதம் ஆய விடர்கூடு - வலியமுழையுள் உறைகின்ற, கடு நாகம் - நஞ்சையுடையபாம்பையுடைய, வரைமேவு நெறியூடு - மலைகளடர்ந்த வழியில், தனிவாரல் - தனியேவாராதொழிவாயாக, மலைநாட - குறிஞ்சிநிலத் தலைவனே, (வருவையாயின்) இவள் - இந்தப் பெண்ணானவள், நிறைமேவு வளைசோர - வரிசையாகியவளை கழலும்படி, ஆவிநிலைசோரும் - உயிர்நிலை தள்ளாநின்றாள்—எ-று.

விடர் - மலைமுழை, வெடிப்பு எனினுமாம். கடு - நஞ்சு. (எ௪௨)

முதலடியு மூன்றமடியு மடக்கு.

கடன்மேவு கழிகாதன் மிகநாளு மகிழ்வார்கள்
உடன்மேவு நிறைசோர மெலிவாட னுயிர்நோவு
கடன்மேவு கழிகாதன் மிகநாளு மகிழ்வார்கள்
உடன்மேவு பெடைகூடு மறுகாலு முறையாகொல்.

இ-ள். கடன்மேவு - முறையாகப்புணர்கின்ற; கழிகாதல்மிக - மிக்க ஆசையானது வளர, நாளும் - நாள் தோறும், மகிழ் வார்கள் உடன் - மகிழ் வார்களோடு கூடிக்கொண்டு, மேவும் நிறைசோர - பொருந்தியநிறைவாட, மெலிவாள்தன் - மெலிகின்றவளாகிய இந்தப்பெண்ணின், உயிர்நோவு - உயிர்த்துன்பத்தை, கடல்மேவுகழி - கடலிற் பொருந்திய கழிக்கண், காதல்மிக- ஆசை மிகும்படி, நாளும் - காலந் தோறும், மகிழ்வார் - களிப்பு மிக்க, கள்- மலர்க்கள்ளை, உடன்மேவு பெடைகூடும் - உடன்பொருந்திய பெடையோடு கூடிய, (நம்தலைவனுக்கு) அறுகாலும் - வண்டுகளும், உரையாகொல் - சொல்லாவோ—எ-று.

கடன் - முறை. நிறை - கற்பு. அறுகால் - வண்டு. (எசரு)

இடையீரடியு மடக்கு.

கருமாலை தொறுகாதல் கழியாது தொழுதாலு
முருமாய மதனாக மடுமாறு புரிவார்முன்
னுருமாய மதனாக மடுமாறு புரிவார்முன்
வருமாய வினைதீர வொருநாளு மருளார்கொல்.

இ-ள். கருமாலைதொறு - பிறவித்தொடர்ச்சிதோறும், காதல்கழியாது- அன்புநீங்காமல், தொழுதாலும் - தம்மைவணங்கினாலும், உருமாய - வடிவழியும்படி, மதன் ஆகம் அடுமாறுபுரிவார் - காமனுடலை யழியச்செய்வார், முன் - எதிரே, உரும்ஆய - உருமேப்போலவந்த, மதன்நாகம்-மதத்தையுடையயானையை, அடுமாறுபுரிவார் - கொல்லு மியல்பினையுடையார், முன்வரும்- பழமையாய் வருகின்ற, மாய்வினைதீர - வஞ்சவினைநீங்க, ஒருநாளும் - ஒரு காலமும், அருளார்கொல் - (எமக்கு) அருள்செய்யார்போலும்—எ-று.

கரு - பிறவி, உரும் - இடி. நாகம் - யானை. அடுதல் - கொல்லுதல். ()

முதலடியு மீற்றடியு மடக்கு.

மறைநுவல் கங்கைதாங்கினர்
நிறைதவ மங்கைதாங்கினர்
குறையென வண்டர்வேண்டவே
மறைநுவல் கங்கைதாங்கினர்.

இ-ள். மறைநுவல் - வேதங்களாற் புகழ்ந்துரைக்கப் பட்ட, கங்கை தாங்கினர் - கங்கையைத் தரித்தார், நிறைதவம் - நிறைந்ததவத்தையுடைய, மங்கை - உமாதேவியை, தாங்கினர் - (இடப்பாகத்தில்) தாங்கினர், குறை என - எமது குறையீது வென்று, அண்டர் வேண்ட - தேவர்கள் விரும்பி யிரக்க, மறை - வேதரஹஸ்யங்களை, நுவல் - சொல்லுகிற, கம் - பிரமன் தலையை, கை தாங்கினர் - கையில் தரித்திருந்தார் — எ-று.

நுவல் - சொல்லல். மறை - இரகசியம். கம் - தலை. (பிரமகபாலம்.) ()

கடையீரடியுமடக்கு.

கொல்லியம்பொருப்பனை மேவார்கோநகர்
இல்லரிமேவுவ தியம்பல்வேண்டுமோ
வல்லியுந்தாமரை வனங்களாயின
வல்லியந்தாமரை வனங்களாயின.

இ-ள். கொல்லியம் பொருப்பனை - கொல்லி மலையையுடையவனாகிய சேரனை, மேவார் - அடையாராகிய, கோநகர் - அரசர் நகரத்து, இல் - மாளிகைகளை, அரிமேவுவது - எரிகவர்வதை, இயம்பல்வேண்டுமோ - சொல்லுதலும் வேண்டுமோ, வல்லியந்தாமரை - கொடிகளையுடைய அழகியதாமரைகளையுடைய, வனங்கள் ஆயின - நீர்த்தடங்களாயின யாவும், வல்லியம் - புலியும், தாம் மரை - தாவுகின்றமரையுமுள்ள, வனங்கள்ஆயின - காடுகளாய் விட்டன — எ-று.

பொருப்பு - மலை, அரி - நெருப்பு. வல்லி - கொடி, வனம் - நீர், வல்லியம் - புலி. (௬௪)

இரண்டாமடியு மீற்றடியு மடக்கு.

நலத்தகைபெறவிரு சரணமேத்துநம்
குலத்தகைபணிகொளே காம்பரத்தனே
நலத்தகைமகளொரு பாகநண்ணும்மேல்
குலத்தகைபணிகொளே காம்பரத்தனே.

இ-ள். நலத்தகைபெற - நலமிகுதிபெற விரும்பி, இருசரணம் ஏத்தும் - இரண்டு சீர்பாதத்தையும் துதிக்கின்ற, நம்குலத்தகை - நம் குலத்துள்ளரர்களை, பணிகொள் - பணிகொள்ளுகின்ற, ஏகாம்பரத்தனே - ஏகாம்பரத்தையுடையவன், நலத்தகைமகள் - நன்மைமிகுந்த தலைமகளை, ஒருபாகம் நண்ணும் - ஒருபக்கத்திற் சேர்ப்பான், மேல்குலத்தகை - மேன்மையாகியசாதியிற்பிறந்த, பணிகொள் - பாம்புகளாற் புனையப்பட்ட, ஏக அம்பரத்தன் - ஒற்றையாடையை யுடையான் — எ-று.

ஏகாம்பரத்தன் இரண்டனுள்முன்னது ஒற்றை மாமரத்தை யுடையவன் எனவும், பின்னது ஒற்றை யாடையை யுடையவன் எனவும் பொருள்படும், பணியிரண்டனுள் முன்னதற்குப் பணிவிடை யென்றும், பின்னதற்கு பாம்பென்றும் பொருள் கொள்க. (எசஎ)

ஈற்றடி யொழித்தேனை மூன்றடியு மடக்கு.

காமரம்பயி னீரமதுகரம்
காமரம்பயி னீரமதுகரம்
காமரம்பயி னீரமதுகரம்
நாமரந்தை யுறனினையார்நமர்.

இ-ள். காமரம் - சோலையில்மரந்தோறும், பயில் - நெருங்கின, மதுகரம்நீர - வண்டினமானவை, காமரம்பயில்நீர - காமரப்பண்பாடுகின்ற நீர்மையையுடையன, மதுகரம் - தேனைப்பொழிகின்ற, காமர் அம்பு - மன்மத பாணமானது, அயில்நீர - வேலின்தொழிலை யுடையவாயின, மதுகரம்நாம் - வேனிற்காலத்தில் எதிர்ப்பட்டநாம், அரந்தை உறல் - துன்பப்படுதலை, நமர் நினையார் - நம்தலைவர் நினையாதொழிந்தார்—எ-று.

காமர் - காமதேவர். அயில் - வேல். மது - தேன், அது இவ்விடத்து, வசந்தகாலத்துக்காயிற்று. அரந்தை - துன்பம். (எசஅ)

முதலடியொழித்தேனை மூன்றடியுமடக்கு.

வரியவாங்குழன் மாதரிளங்கொடி
அரியவாங்கய தானவனங்களே
அரியவாங்கய தானவனங்களே
அரியவாங்கய தானவனங்களே.

இ-ள். வரி - வண்டுகள், அவாம் - விரும்புகின்ற, குழல் - கூந்தலையுடைய, மாதர் இளங்கொடி - எனக்கு விருப்பத்தைச் செய்கின்றஇளங்கொடிபோல்வாளே, அரியஆங்கு-அடைதற்கரிய அவ்விடத்து, அயம் - பள்ளத்திலுண்டான, தானவனங்கள்-நீர்களாவன, அரி அவாம்-வண்டுகள் தாவுகின்ற, கயம் - யானைகளின், தானவனங்களே - மதநீர்களே, அரியஆம் - சிங்கங்கள் உலாவப்பெற்ற, கயம்தானம் - பெரியஇடத்தோடுகூடின, வனங்களே - காடுகளே—எ-று.

இளங்கொடி - அண்மைவிளி. அரி - சிங்கம். தானம் - மதநீர். (எசகூ)

இரண்டாமடி யொழித்தேனை மூன்றடியு மடக்கு.

கடியவாயின காமருவண்டினம்
அடியவாவகன் றுருழைவாரலர்

கடியவாயின காமருவண்டினம்
கடியவாயின காமருவண்டினம்.

இ-ள். கடிய ஆயின - விளக்கமுடையனவாகிய, காமர் - அழகுபெற்ற, வண்டு இனம் - வளையல் தொகுதிகள், அடிய ஆ - கழன்று அடியிலே விழக் கண்டும், அகன்றார் - நம்மைப் பிரிந்தவர், உழை - நம்மிடத்து, வாரலர்-வந்திலர்; கடி அவாயின - மணத்தை விரும்பாநின்றன, காமரு - சோலை களில் சஞ்சரிக்கிற, வண்டு இனம் - வண்டின் கூட்டம், காமர் வண் தினம்-அழகுள்ள வளவிய நாட்கள், கடிய ஆயின - அஞ்சத் தகுந்தனவாயின-எ-று.

கடி - விளக்கம். அடி - கால். கடி - மணம். கடிய - கடுமையையுடையன, காமர் இரண்டனுள்ளும் உகரம் சாரியை. (எ௩0)

மூன்றமடி யொழித் தேனை மூன்றடியு மடக்கு.

கோவளர்ப்பன கோநகரங்களே
கோவளர்ப்பன கோநகரங்களே
மேவளக்கர் வியன்றிரைவேலைசூழ்
கோவளர்ப்பன கோநகரங்களே.

இ-ள். கோ வளர்ப்பன கோ நகரங்கள் - ஒளியை மிகுப்பன தலைமை யுடைய நகரங்கள், கோவளர்ப்பன கோநகரங்கள் - செம்பியன் பெருக்குவன வேற்றரசருடைய திறைகளே, மேவு அளக்கர் வியன் திரை வேலைசூழ் - பொருந்திய கடலானது பெரிய திரையோடுங் கரையோடுஞ் சூழப்பட்ட, கோ வளர்ப்பன கோநகரங்கள் - நில வலயத்தைக் காப்பன இச்செம்பியனுடைய கைகள்—எ-று.

கரம் - இறை கோ - சோழன் செம்பியன் - சோழன். (எ௩௧)

நான்கடியு மடக்கு.

வானகந்தரு மிசையவாயின
வானகந்தரு மிசையவாயின
வானகந்தரு மிசையவாயின
வானகந்தரு மிசையவாயின.

இ-ள். வானகந்தரும் இசையவாயின - மேகங்கடலினிடத்தில் கொடுக்கும் ஓசையோடு கூடியிருந்தன, வானகந்தரும் மிசையவாயின - ஆகாயத்தைக் கவர்ந்துகொள்ளும் எழுச்சியையுடையவாயின, வானகந்தரும் இசைய வாயின - விண்ணுலகத்தையொக்கும்புகழையுடையன, வானகந்தரும்மிசைய வாயின - மடங்களை யுச்சியிலேயுடையன பெரியமலைகள்—எ-று.

இச்செய்யுள் ஏகபாத மென்றுஞ் சொல்லப்படும். முதலடியிலுள்ள வான் - மேகம். இசை - ஓசை. இரண்டாமடியிலுள்ள வான் - ஆகாயம்

எழுச்சி - உயர்ச்சி. மூன்றுமடியிலுள்ளவான் - விண்ணுலகம். நான்காமடியிலுள்ளவான் - பெருமை. நகம் - மலைகள். மிசை - உச்சி. (எ௩௨)

## இயமாவி யமகம்.

உமாதர னுமாதரன்
உமாதர னுமாதரன்
உமாதர னுமாதரன்
உமாதர னுமாதரன்.

இ-ள். உமாதரனும் - உமாதேவியை யிடப்பாகத்திற்றரித்தவனும், ஆதரனும் - ஆதரிக்கின்றவனும், மாதரனும் - மானைத் தரித்தவனும், மாதரனும் - திருமகளைத் தரித்தவனும், ஆதரனும் - ஆநிரையைக்காத்தவனும், மாதரனும் - யானைத் தோலைத் தரித்தவனும், ஆதரனும் - இடபத்தை நடத்துவோனும், மாதரன் - பெருமையைத் தரித்த முக்கட் கடவுளேயாவன்—எ-று.

இதனை அளவடிச்செய்யுளாக்கின் செந்துறையென்றுஞ் சொல்லப்படும். மா - மான். மா - திருமகள். ஆ - பசு. மா - யானை. இது அதன் றோலுக்காயிற்று. ஆ - இடபம் மா - பெருமை. (எ௩௩)

## இரண்டடிப் பாடக மடக்கு.

பணிபவனந் தனதாக மன்னுவார்
பணிபவனந் தனதாக மன்னுவார்
அணியெனவெய்து மன்ப ராகமே
அணியெனவெய்து மன்ப ராகமே.

இ-ள். பணிபவனம் தனது ஆகம் மன்னுவார் - பாம்புகளுக்கு இடம் தனது மார்பகமாக நிற்பார், பணிபவன் நந்தல்நதாக மன்னுவார் - தாழ்ந்த பிறப்பு இறப்பு இல்லையாக நிலைபெறுவார், அணியென எய்தும் அன்பர் ஆகமே - அழகென்று சொல்லவுறைவதும் அன்பரது உள்ளமே, அணியென எய்தும் மன்பராகம் - அலங்காரமென்று சொல்லவிரும்புவதும் என்றுமுள்ள திருவெண்ணீற்றை—எ-று.

பவனம் - இடம். பணிபவம் - தாழ்ந்தபிறப்பு. நந்தல் - இறப்பு. நதாக - இல்லையாக. (எ௩௪)

கோடாராவிப் பாற்குருகே
கோடாராவிப் பாற்குருகே

கொண்டற்போது மருங்கடலே
கொண்டற்போது மருங்கடலே

வீடாவிருப்புக் காப்புள்ளே
வீடாவிருப்புக் காப்புள்ளே

வீயுந்துயர முண்டகமே
வீயுந்துயர முண்டகமே

நாடாமேகாம் பரத்தருவி
நாடாமேகாம் பரத்தருவி

நற்காஞ்சிவனத் தானத்தான்
நற்காஞ்சிவனத் தானத்தான்

சூடாமலர்க்கண் டலந்தேனே
சூடாமலர்க்கண் டலந்தேனே

சுற்றமலைவாய்த் தவராலே
சுற்றமலைவாய்த் தவராலே.

இ-ள். கோடு ஆர் - ஆவிப்பால் குருகே - கரைபொருந்திய தடத்தின் கண்ணுள்ள குருகுகளே, இப்பால் குருகோள்தாரா - இக்கையினிடத்துள்ள வளையல்கள் கொள்ளநில்லா, கொண்டல்போதும் அருகடலே - மேகம்முழக்கும் அரியகடலே, மருங்கு அடல் கொண்டல்போதும் - பக்கத்து நின்று வருத்துதற்கு கீழ்காற்றேயமையும், காவீடா இருப்புபுள்ளே - சோலையை வீடாக இருத்தலையுடைய புட்குலமே, விருப்பு காப்பு உள் வீடா - ஆசைக்கட்டு மனத்தின்கண்நெகிழாது, வீ உந்து உயர் அம்முண்டகமே - வண்டுகள் அலைக்கின்ற உயர்ந்த அழகிய தாமரையே, அகம்வீயும்துயரம்உண்டு - வீட்டிலுள்ளோரால் இறத்தற்கேதுவாகிய துன்பமுண்டு, நாள்தாம் மேகாம்பரத்து அருவி - உடுக்கள் தாவுகின்ற மேகங்களையுடைய ஆகாயத்தினின்றும் வீழ்கின்ற நீரருவியையுடைய, நாடு ஆம் ஏகாம்பரத்தருவி - நாட்டிலுண்டாம் ஒருமாமரத்தினையுடைய, நல்காஞ்சி வனத்தான் - அழகிய காஞ்சி வனத்தினையுடையவன், நத்தான் - நஞ்சுண்டலையுடையவன், நற்கு ஆம் சிவன் - நன்மையையுடைய சிவபெருமான், நத்தான் அத்தான் - சங்கபாணிக்கு மைத்துனன், சூடாமலர் கண்டலம் தேனே - சூடவொண்ணாத தாழை மலரினிடத்துள்ள வண்டுகளே, சூடு ஆம் அலர்கண்டு அலந்தேன் - வெப்பமாய் அயலார் அலர் தூற்று தலையறிந்து மெலிந்தேன், சுற்று அம் அலைவாய்த்தவராலே - சூழ்ந்த நீரலைகளிலுள்ள வரால்மீன்களே, சுற்றம்மலைவு ஆய்த்து அவரால் - உறவு பகையாயிற்று அந்தத்தலைவரால்—எ-று.

நஞ்சு - விஷம். அது நச்சு என வலித்தலாய்ப்பிறகு பிச்சு பித்து என்றாயதுபோல நத்து என்றாயிற்று. (௭௫)

அந்தாதிமடக்கு.

மாலையாகவெய்யனங்க வேல்பயிறருமாலை
மாலைவேட்டவர்மனங் கொலோவவன்றுழாய்மாலை
மாலையோவுடைத்தது நினைந்தெழுதருமாலை
மாலையாவுடையவரை வந்திடர்செயுமாலை.

இ-ள். மாலையாக எய் அனங்கவேல்பயில் தருமாலை - ஒழுங்காக எய்யும் மன்மதபாணம் பயிலுமிடம், மாலைவேட்டவர் மனம்கொலோ அவன் துழாய் மாலை - திருமாலை விரும்பினவரது மனம்போலும், அவனுடைய துளவமாலை சேர்தற் கருமையுடைத்து, அதுநினைந்து எழுதரும் மாலை மாலையோ உடைத்து - அதனைநினைந்தெழும் உள்ளமயக்கத்தை இயல்பாகவுடையது, மாலையாஉடையவரை வந்து இடர்செய்யும் மாலை - மயக்கத்தை யியல்பாக வுடையவரைவந்து துன்பப்படுத்தும் மாலைக்காலம்—எ-று.

இதனைச் சந்தட்டமடக்கு எனவும் இடையிட்டு முதலுமிறுதியு மடக்கிய முற்றுமடக்கெனவும் கூறுவர். வேல் - என்பது இவ்விடத்து பாணத்துக் காயிற்று. (௭௫௬)

கயலேர்தரவரும் கடிபுனற்காவிரி
காவிரிமலருகக் கரைபொருமரவம்
மரவம்பூஞ்சினை வண்டொடுஞ்சிலம்பும்
சிலம்புசூழ்தளிரடித் திருமனைக்கயலே.

இ-ள். கயல்ஏர்தரவரும் - கயல்கள் அழகுபெறவரும், கடிபுனல்காவிரி - விரைந்த நீரையுடைய காவிரியாறு, காவிரிமலர் உகக்கரைபொரும் மரவம் - சோலையில்விரிந்த மலர்கள்சிந்தும்படி கரையில் அசையாநிற்கும்மரவம், மரவம்பூசினை வண்டொடும் சிலம்பும் - மரவத்திலுண்டான பூங்கொம்புகள் வண்டோடுகூடி ஆரவாரிக்கும், சிலம்புசூழ் தளிர் அடி திருமனைக்கு அயல் - சிலம்பாற்சூழப்பட்ட தளிர்போலும் அடியினையுடைய திருமகளது மனையாகிய தாமரைமலருக்கருகில்—எ-று.

கடி - விரைவு. மரவம் - பீட்டாமரம். திரு - திருமகள். (௭௫௭)

நாநாநாதங்கூடிசை நாடுந்தொழிலோவா
தாதாதாரமாக விரைத் தண்மலர்மீதே
வாவாவார்தண்சோலையில் வாழும்வரிவண்டே
யாயாயாளிற்சேர்த்து வதன்பற்கிசையாயால்.

இ-ள். நாநாநாதம் - நானாவிதமான ஓசையோடு, கூடு இசைநாடும் தொழில் ஓவா - கூடும் இசைகளை ஆராயுந் தொழில் நீங்காது, தாது ஆதார

மாக - தாதேயாதாரமாக, விரைதண்மலர்மீது-வாசனையுடையகுளிர்ந்தமலர் மீது, வர்வா - தாவி, வார்தண்சோலையில்வாழும் - நீண்டகுளிர்ந்தசோலையில் வாழ்கின்ற, வரிவண்டே - பாடலையுடையவண்டே, யாய்ஆயாள் - அன்னை யானவள், இல்சேர்த்துவது - என்னைஇற் செறிவிப்பது, அன்பற்கு இசை யாய் - தலைவர்க்குச் சொல்லுவாயாக—எ-று.

தாது - மகரந்தம் ஆதாரமாக - இடமாக. வரவா - தாவி. யாய் - தாய். இற்சேர்த்துவது - வீட்டில் சேர்ப்பது. (௪௬அ)

அமல லகல மகல லபய
கமல பவன மவள
வமல டமர வளக
வதன மடர மதன.

இ-ள். அமலல் - சேராதொழிவாயாக, அகலம் அகல் - எங்கள்மார்பினை யகல், அபய - சோழனே, கமலபவனம் - தாமரைமலரை யிடமாகவுடைய, அவள - அத்திருமகளை நிகர்த்த இவளுடைய, அமல - குற்றமற்ற, டமர - செறிந்த, அளகம் - கூந்தலையுடைய, வதனம் - முகத்தை, அடர - அழியா தொழிவாயாக, மதன - மன்மதனை நிகர்த்தவனே—எ-று.

அமலல் - சேருதல். அடரல் - என்பது, அடரஎன ஈறு தொகுத்தலாய் நின்றது. அகலம் - மார்பு. பவனம் - இடம். டமரம் - நெருக்கம். இது குற் றுயிரான்வந்த மடக்கு. (௪௬௯)

தாயாயாள ராயாடாமா றுதாராயா
யாமாராவா ணடாமா தாமா—வாவா
யாவாகாலா றுகாவாகா காணுநாமா
மாலாருமா நாதா வா.

இ-ள். தாய் ஆயாள் - தாயாயுள்ளவள், ஆராயாள்-இவளது விசனத்தை யறியாதவளாதலால், தாம் மாறாது - இவளது துன்பங்கள் தாம் நீங்காது, ஆராயாய் - இதனை யாராய்வாயாக, (அங்ஙனம் ஆராயாதஉனக்கு) யாம் ஆர் ஆ - யாங்கள் அறிவுறுத்த யாரோ, வான்நாடா - விண்ணாட்டையொத்தநாட் டையுடையவனே, மாது - மாதானவள், ஆம் மாதாவா - பெரியவருத்தத்தை யடைவாள், வா - நீவருவாயாக, யா - நீவந்தால் எமக்குக்கிடையாதது எது, கால் ஆறுவா - வரும்பொழுது காலாறிவருவாயாக, கா-எங்களைக்காப்பாற்று வாயாக, ஆகாகாண் - இவை ஆகாதனகாண், நா - அயலவர்நாவினால், நாம் ஆம் - எங்களுக்கு அச்சமுண்டாகின்றது, மால் ஆரு - மயக்கமுந்தணியாது, மாநாதா - பெருமையையுடைய இறைவனே, வா - நீ வருவாயாக—எ-று.

இது நெட்டுயிரான் வந்த மடக்கு. (௪௭0)

காக்கைக்காகாகூகை கூகைக்காகாகாக்கை
கோக்குக்கூகாக்கைக்குக் கொக்கொக்கக்—கைக்கைக்குக்
காக்கைக்குக்கைக்கைக் காகா.

இ-ள். காக்கைக்கு - காக்கைக் கூட்டத்திற்கு, ஆகா - ஆற்று, கூகை - கூகைக் கூட்டம், கூகைக்கு - கூகைக் கூட்டத்திற்கு, ஆகா - ஆற்று, காக்கை - காக்கைக் கூட்டம், (காலவசத்தாலாதலால்) கோக்கு - அரசர்க்கு, கூகாக் கைக்கு - பூமியைக் காத்தற்கும், கொக்கு ஒக்க - கொக்கை நிகர்க்க இருந்து, கைக்கைக்கு - பகைவரை யழித்தற்கும், (காலவாய்ப்பு வேண்டும், அக்காலவாய்ப்பு இல்லையாயின்) காக்கு ஐக்கு - கற்பகச் சோலைக்குத் தலைவனாகிய இந்திரனுக்கும், கைக்கைக்கு ஆகா-பகைவரை யழித்தற்குக் கூடாது.

இதில் காலம், பகை. என்னுஞ் சொற்கள் எஞ்சிநின்றன. இது - ககர விகற்பத்தான் வந்தது. (௭௬௧)

தத்தித்தாதூதுதிதா தூதித்தத்துதி
துத்தித்துதைதி துதைத்தாதூதுதி
தித்தித்ததித்தித்த தாதெதுதித்தித்த
தெத்தாதோதித்தித்த தாது.

இ-ள். தத்தி - பாய்ந்து, தாதுஊதுதி - பூந்தேனை யுண்ணாநின்றாய், தாதுஊதி - பூந்தேனையுண்டு, தத்துதி - வேறொருபூவிற் பாயாநின்றாய், துத்தி - அங்ஙனமுண்டு, துதைதி - வேறொருபூவிற் செறியாநின்றாய், துதைத்த - செறிந்த, தாது - வேறொருபூவின்றாதினை, ஊதுதி - கிண்டாநின்றாய், தித்தித்தது (இப்பூக்களில்) இனித்ததும், இத்தித்தது - விருப்பத்தைத் தருவதும், ஆகிய தாதுஎது - பூஎது, தித்தித்தது எத்தாது - தித்தித்தது எந்தமலர், இதித்தித்ததாது - இதினுந்தித்தித்தமலர் எது, ஓது - எமக்குச் சொல்லுவாயாக—எ-று.

இதில் வண்டென்னும் முன்னிலைச்சொல் எஞ்சிநின்றது. இது தலைவி யவயவங்களைவியந்த தலைவன், தலைவிகேட்க வண்டினைநோக்கிக் கூறியது, இது - தகரவிகற்பத்தான் வந்தது. (௭௬௨)

மன்னுமான்மான் முன்மானமுமீனமா
மின்னமானேமுன்னு மானினி—மென்மென
மின்னுமாமென்னிறு மன்னமுமாமென்மனனே
மன்னுமாமானுமான் மான்.

இ-ள். மன்னும் மால் - உண்டாகாநின்றது மயக்கம், முன்னம் மானமும் ஈனமாம் - இதன்முன்னமே மானமுங் குறையாநின்றது, இன்ன - இத்தன்மையான, மானே - மாதினை, இனிமென்மென மின்னுமாமென்னின் -

இனி எம்மால் பின்னினும் மெல்லியளென்று சொல்வேமாயின், அன்னமும் ஆம் - அன்னம்போல்பவளாயு மிருப்பள், என்மனனே - என்மனத்தினுள்ளேயே, மன்னும் - நிலைபெற்றுமிருப்பள், மான்மான் - மான்போன்ற மருண்ட நோக்கத்தையுடைய இந்தப்பெண், மாமானும் - திருமகளையும் நிகர்த்திருப்பள்—எ-று.

இது - ஈரெழுத்தான்வந்தது. இது தோழிகூற்று. (௭௩௩)

உரையுறைதீந்தமிழ்வேந்த னுசிதன்றென்னாட்டொளிசேர்
விரையுறைபூம்பொழின்மேலுறை தெய்வங்கொலன்றிவிண்டோய்
வரையுறைதெய்வங்கொல்வானுறை தெய்வங்கொனீர்மணந்த
திரையுறைதெய்வங்கொலை யந்தருமித்திருநுதலே.

இ-ள். உரைஉறை - சொற்கள் நிரம்பின, தீதமிழ் - மதுரமாகிய தமிழிற்கு, வேந்தன் - வேந்தனாகிய, உசிதன் - பாண்டியனது, தென்னாட்டு - தென்னாட்டில் வாழ்கின்ற, இத்திருநுதல் - இந்த அழகிய நெற்றியையுடையாள், ஒளிசேர் - ஒளிபொருந்திய, விரைஉறை பூம்பொழில்மேல் - மணங்கமழ்கின்ற பூஞ்சோலையில், உறை - வாழ்கின்ற, தெய்வம்கொல் - தெய்வமாதோ, அன்றி - அல்லது, விண்தோய் - ஆகாயத்தையளாவிய, வரைஉறை தெய்வம்கொல் - மலையில்வாழ்கின்ற தெய்வமாதோ, வான்உறை தெய்வம்கொல் - சுவர்க்கலோகத்தில் வாழ்கின்ற தெய்வமாதோ, நீர் மணந்த திரை உறை தெய்வம்கொல் - நீர்நிரம்பின அலைகளையுடைய கடலில் வாழ்கின்ற தெய்வமாதோ, (என்று) ஐயம்தரும்-எனக்கு ஐயத்தைத்தாராநின்றாள்—எ-று.

இத்திருநுதல் - இப்பூம்பொழிலில் வாழ்கின்ற தெய்வமாதோ? வரையரமகளோ? வான் அரமகளோ? நீரரமகளோ? என்பது கருத்து. (௭௩௪)

## துணிவு.

பாவடியானைப் பராங்குசன்பாழிப் பகைதணித்த
தூவடிவேன்மன்னன் கன்னித்துறைச்சுரும் பார்குவளைப்
பூவடிவாணெடுங் கண்ணுமிமைத்தன பூமிதன்மேற்
சேவடிதோய்வகண்டேன் றெய்வமல்லளிச் சேயிழையே.

இ-ள். பாவுஅடி - விரிந்த அடியினையுடைய, யானை - யானைப்படையையுடைய, பராங்குசன்-பராங்குசனென்னும் பெயரையுடையவன், பாழிப்பகைதணித்த - பெரும்பகைவரைவென்ற, தூ - பரிசுத்தமாகிய, வடிவேல்-வடித்த வேலாயுதத்தைத்தாங்கிய, மன்னன் - வேந்தன், (அவனது) கன்னித்துறை - கன்னியாற்றின் றுறையிலுள்ள, சுரும்புஆர் - வண்டுகள் மொய்க்கின்ற, குவளைப்பூ - குவளைமலரை நிகர்த்த, வடிவாள் - கூர்மைபொருந்திய வாள்போன்ற, நெடும் கண்ணும் - நெடிய கண்களும், இமைத்தன - இமையா

நின்றன, பூமிதன்மேல் - நிலத்தின்மீது, 'சேவடி'தோய்வ - சிவந்த கால்கள் படியாநின்றன, கண்டேன் - இவற்றை நான் கண்டேனாதலால், இச்சேயிழை - இந்தப் பெண், தெய்வம் அல்லள் - தெய்வப் பெண்ணல்லள் — எ-று.

சேயிழை - தொழின்முற்றிய ஆபரணத்தை யணிந்தவள். இது அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (எசுடு)

மின்னுவான்முன்னு மெனினுமினிவேனின்
மன்னுவினைவேனென்னை வினவ—முன்னுன
வானவனைமீனவனை மானவினைவென்வேல
மானவனைமானுமோ வான்.

இ-ள். வான் - மேகமானது, மின்னு - மின்னி, முன்னும் எனினும் - முற்படுமாயினும், இனி - இனி, வேனில் - வேனிற்காலத்து, மன்னு - நிலைபெற்று, இனைவேன் என்னை - வருந்துவேனாகிய என்னை, வினவா - என்னென்று வினவாத, முன் ஆனவானவனை - முதல்வனாயுள்ள சேரனையும், மீனவனை - பாண்டியனையும், மான வினை வென் வேல - மிக்கவினைகளோடு போய்வென்ற வேலினையுடைய, மானவனை - மநுகுல வேந்தனை, வான் - மேகம், மானுமோ - நிகர்க்குமோ — எ-று.

இது மூன்றெழுத்தான் வந்தது. என்னையாராயாத மநுகுல வேந்தனை யெனக் கூட்டுக. வான் - இடியேறு எனினுமாம். வென்ற என்பது ஈறு குறைந்து வென் எனவந்தது. (எசுசு)

யானகவென்னே யினையனவாக்கின
கானகயானையனை யானைக்—கோனவனைக்
கொன்னயனவேனக்க கோனகக்கைக்கன்னிக்
கன்னிக்கனியனைய வாய்.

இ-ள். கானகயானை அனையானை - காட்டானையை நிகர்த்தவனை, கோன் அவனை - நமது தலைவனை, யான்நக - யான்பழிக்கும்படி, இனையன ஆக்கின - இத்தன்மையனாகச்செய்தன, (எவையெனின்) கன்னி - இப் பெண்ணினது, கொல்வேல் நயனம் - கொல்லுந் தொழிலையுடைய வேல்போன்ற கண்களும், நக்க கோகநகக் கையும் - விரிந்த தாமரை மலர்போன்ற கைகளும், கன்னி - ஒருவரால் தீண்டப்படாத, கனி அனையவாய் - கொவ்வைக் கனிபோன்ற வாயுமேயாம், என்னே - இது என்னவியப்பாயிருந்தது — எ-று.

இது நான்கெழுத்தால் வந்தது. (எசுஎ)

நமதுபுனலி லளியிவரிவை
யமுதவித ழினிகலுந்முத

மருவிநறவு பருகவளரு
முருவமுண்டைய துரை.

இ-ள். அளி - வண்டுகளே, நுமது புனலில் - நீங்கள் சஞ்சரிக்கிற பூந்தடங்களில், இ அரிவை - இந்தப்பெண்ணினது, அமுத இதழின் - அமுதம் பொருந்திய அதரத்தைப்போல, இகலு குமுதம் - இதனைப் பகைக்கின்ற குமுதமலரில், மருவி - பொருந்தி, நறவு பருக - தேனையுண்ண, வளரும்-பின்னும்வளர்கின்ற, உருவம் உடையது - (தேனுண்டாகும்படியான) தன்மையையுடையது (உண்டாயிருந்தால்) உரை - சொல்லுவீராக—எ-று.

இது ஒற்றெழுத்தின்றிவந்தது. புனல் என்றதுநீர்த்தடத்தை. குமுதம்-செவ்வல்லிமலர். (௭௬௮)

துடித்துத்தடித்துத் துடுப்பெடுத்தகோட
றொடுத்தகொடைகடுக்கை பொற்போற்—பொடித்துத்
தொடிபடைத்ததோடுடித்த தோகைகூத்தாடக்
கடிபடைந்துக்காட்டித்துக் காடு.

இ-ள். தடித்து - மின்னனது, துடித்து - நடுங்கித்தோன்ற, கோடல்-காந்தள்கள், துடுப்பெடுத்த - பூத்துக் குலைகளைத் தாங்காநின்றன, கடுக்கை-கொன்றைகள், பொன் போல் - பொன்போன்ற நிறத்தை யுடைத்தாகி, பொடித்து - மலர்களரும்பி, தொடுத்த - மாலையாய்த் தொங்கா நின்றன, தொடிபடைத்ததோள்துடித்த - எல்லாமாதருக்கும் வளையலையணிந்த இடப்பக்கத்துக் கைகள் துடித்தன, தோகை கூத்து ஆட - மயில்கள் கூத்தாடா நிற்க, காடு - காடானது, கடிபடைத்துகாட்டித்து - புதுமையை விளைத்துக் காட்டாநின்றது—எ-று.

இது வல்லினத்தால் வந்தது. (௭௬௯)

மானமேநண்ணு மனமென்மனமென்னு
மானமான்மன்னு நனிநாணு—மீனமா
மானுமினன்மின்னி முன்முன்னேநண்ணினு
மானுமணிமேனி யான்.

இ-ள். என்மனம் - என் மனமானது, மானம் நண்ணுமனம் என்னும்-மானமில்லாத மனமாயிருக்கின்ற தென்பாள், மானம் மான்மன்னு - பெரிய யானைக்கூட்டமுடைய வேந்தனே, நனி நாணும் - மிகவும் நாணுவாள், ஈனம் ஆம் - குறைகின்றாள், (அவள்யாரெனின்) ஆனு-நீங்காமல், மின்னல்மின்னி-மின்னலானது மின்னி, முன்முன்னே நண்ணினும் - எதிரேயெதிரேதோன்

றினும், மானு - ஒவ்வாத, மணிமேனி - அழகிய வுருவத்தையுடைய, மாள் - இந்தப்பெண்—எ-று.

(இதுமெல்லினத்தால் வந்தது.)

மான் - யானை, மானுதல் - ஒத்தல், மணி - அழகு. (எஎ0)

யாழியல்வாயவி யலளவாயவொலி
யேழியலொல்லாவா லேழையுரை—வாழி
யுழையேலியலா வயில்விழியையோ
விழையேலொளியா லிருள்.

இ-ள். ஏழை உரை - இந்தப்பெண்ணின்மொழிக்கு, யாழ் இயல்வு ஆய - யாழினலியற்றப்பட்ட, இயல் அளவாய ஒலியேழ் - இலக்கண வளவோடு கூடிய வொலியேழும், ஒவ்வா - நிகராகமாட்டாது, உழையேல் - மான்களா யின், அயில் விழி - வேல்போலுங்கண்களை, இயலா - நிகர்க்கமாட்டா, இழை யேல் - ஆபரணங்களோவெனின், ஒளியால் - இவளது ஒளியால், இருள்- (ஒளிமழுங்கி) இருளாயிருக்கும்—எ-று.

(இது இடையினத்தால் வந்தது.)

யாழ் - வீணை, ஒலியேழ் - ஏழிசை, ஏழை - பெண், உரை - மொழி, உழை - மான், அயில் - வேல். (எஎக)

## சித்திரகவிகள் கோமூத்திரி.

அதாவது இரண்டிரண்டு வரியாக ஒருசெயயுளை யெழுதி
மேலுங் கீழும் ஒன்றிடையிட்டு வாசித்தாலும்
அச்செய்யுளேயாவது.

பருவமாகவி தோகனமாலையே
மருவுமாசை விடாகனமாலையே
பொருவிலாவுழை மேவுனகானமே
வெருவலாயிழை பூவணிகாலமே.

இ-ள். அவர்குறித்தகாலம் இதுவாதல்வேண்டும், மேகவொழுங்கானது திசைகளெல்லாவற்றினும் வியாபிக்கும், அதுவுமன்றி மாலைப்பொழுதின் கண் மழையைவிடாதுபொழியும், ஒப்பில்லாத மான்கள் பொருந்தாநின்றன காட்டின்கண் - (ஆதலால்) குற்றமற்ற ஆபரணங்களையுடையாய், நீ அஞ்சா தொழிவாயாக, தலைவர் நம்மைப் பூவால் அலங்கரிக்குங்காலம் இது—எ-று.

இதில் வேண்டும் என்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. மேவின என்பது மேவன எனத்திரிந்து நின்றது. (எ௪உ)

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ப | ரு | வ | மா | க | வி | தோ | க | ன | மா | லை | யே |
| பொ | ரு | வி | லா | வு | ழை | மே | வ | ன | கா | ன | மே |
| ம | ரு | வு | மா | சை | வி | டா | க | ன | மா | லை | யே |
| வெ | ரு | வ | லா | யி | ழை | பூ | வ | ணி | கா | ல | மே |

## ௯ கூட சதுக்கம்.

அதாவது ஈற்றடி யெழுத்துகள் ஏனை மூன்றடி யுள்ளுங் கரந்துநிற்கப் பாடுவது.

புனைத்தகைச் சொற்படைக் கைக்கதக் கட்பிறைப் பற்கறுத்த
பகைத்திறச் சொற்கெடச் செற்றகச் சிப்பதித் தூர்க்கைபொற்புத்
தகைத்ததித் தித்ததுத் தத்தசொற் றத்தைப்பத் தித்திறத்தே
திகைத்தசித் தத்தைத் துடைத்தபிற் பற்றுக் கெடக்கற்பதே.

இ-ள். நெருப்பின் தன்மையையுடைய சொற்களையும், ஆயுதங்களோடு கூடிய கைகளையும், வெகுளியோடு கூடிய பார்வையையும், பிறைபோன்ற கோரதந்தங்களையும், கரிய நிறத்தையுமுடைய பகைவராகிய அவுணசாதி யென்னும் வார்த்தைமாளச் செறுத்த காஞ்சி நகரம் என்னும் பெரும்பதியிலுள்ள தூர்க்கை, அழகுபெற்ற இன்பந்தராநின்ற, யாழிசையென்ற சொல்லையுடைய கிள்ளையை நிகர்ப்பவளிடத்து அன்புசெய்யாது அறிவழிந்தவுள்ளத்தைநீக்கிய காலத்து, இருவகைப்பற்றும் கெடுதற்கேதுவாகிய ஞானத்தையறிவது—எ-று.

கிள்ளை மொழியை யொத்த மொழியை யுடைய தூர்க்கை யெனக் கூட்டுக. (எ௪௩)

## மாலை மாற்று.

அதாவது ஒரு செய்யுளை ஈறுமுதலாக வாசித்தாலும் அச்செய்யுளேயாவது.

நீவாதமாதவா தாமோகராகமோ
தாவாதமாதவா நீ.

இ-ள். நீங்காத பெரியதவத்தையுடையாய், மிக்க மயக்க வேட்கை செய்யாது; (ஆதலால்) அழகிய மாதினுடைய ஆசையைநீக்குவாயாக—எ-று.

நீவாத - நீங்காத. ராகம் - ஆசை. மாது அவா - பெண்ணின் ஆசை.

இதுவுமது.

வாயாயாநீகாவா யாதாமாதாமாதா
யாவாகாநீயா யாவா.

இ-ள். எங்கட்குக் கிடையாதனயாவை, நீயருள்புரிவாயாக, என்னும், இவள்மிக்க வருத்தமாவள், யாவை நினக்காகாதன, ஆயனே, நீவருவாயாக எ-று.

வாய்த்தல் - கிடைத்தல். ஆயன் - திருமால். (எஎ௫)

இதுவுமது.

பூவாளேநாறுநீ பூமேகலோகமே
பூநீறுநாளவா பூ.

இ-ள். இயல்பாகப் பூப்பில்லாதாளைக்கலந்து புலால்கமழும்நீ, எமக்குப் பூமழையும் பொன்மழையும் பொழியும்மேகமோ, பூவுந்திருநீறும்புனைந்து நாளவா, இவள் இப்பொழுது பூப்பினளா யிருக்கிறாள்—எ-று.

பூப்புனைதல் - புலால் நாற்றம் நீங்க. திருநீறு புனைதல் - குற்றம் நீங்க. (எஎசு)

## எழுத்து வருத்தனம்.

அதாவது ஓரெழுத்தா னொருமொழியாய்ப் பொருள்பயந்து, பின்னோ ரெழுத்தேற்றப் பிறிதொரு மொழியாய்ப் பொருள் பயந்து, அவ்வாறே முறை முறையா னேற்ற ஒவ்வொரு மொழியாய்ப் பொருள் பயப்பது.

அந்தியவெண்படையு முன்னெடுத்ததுவும்
பூந்துகிலுமாலுந்தி பூத்ததுவும்—வாய்ந்த
உலைவிலெழுத்தடைவே யோரொன்றாச்சேர்க்கத்
தலைமலைபொன்றாமரை யென்றாம்.

இ-ள். திருமால்தாங்கிய கம்புவும், அவன்எடுத்த நகமும், அவனது ஆடையாகிய கநகமும், அவனுந்திமலர்ந்த கோகநகமும், எனப்படுகிற இவற்றில், கேடில்லாத எழுத்தினடைவேயொன் றொன்றினேரெழுத்தாக வெடுத் துச்சேர்க்கப் பின்பு அது தலையென்றும், மலையென்றும், பொன்னென்றும், தாமரையென்றும் ஆகும். அவ்வாறு சேர்த்த வெங்ஙனமெனின், கம்பு என்பதில் கம்என்கிற எழுத்தைப்பிரித்துத் தலையெனவும், நகம்என்பதில் நாஎன்கிற

எழுத்தைப்பிரித்து, முன்கம்என்பதற்கு முன்கூட்டி நகம்ஆக்கி மலையெனவும் காகம் என்பதில் கவென்கிற எழுத்தைப்பிரித்து முன்நகஎன்பதற்கு முன் கூட்டிக் கநகம்ஆக்கிப் பொன்எனவும், கோகநகம் என்பதில் கோஎன்னும் எழுத்தைப்பிரித்து முன் கநகம் என்பதற்கு முன்கூட்டிக் கோகநகம் ஆக்கித் தாமரையெனவும் கொள்க—எ-று. (௭௭௭)

## வினவுத்தரம்.

அதாவது வினவினதொரு சொற்றொடரைப் பிரித்து, அப்பதந் தோறும் வினயதற் குத்தரமாகப் பதப்பொருளுரைத்துக் கடைசியில் அவ் வினவுக்கு உத்தரமான அச்சொற்றொடர் முழுவதுமொரு பொருளாக்கி யுரைப்பது. அப்பதம் விரிக்குங்கால் செவ்வன் விரியாது அருமை தோன்ற விரித் துக் காட்டுவது.

பூமகள்யார்போவா வானையேவுவானேதுரைக்கும்
நாமம்பொருசரத்திற் கேதென்பர்—தாமழகின்
பேரென்பிறைசூடும் பெம்மானுவந்துறையும்
சேர்வென் றிருவே கம்பம்.

இ-ள். இதனுள் பூமகள்யார் - திரு - எனவும், போவானை யேவுவான் ஏதுரைக்கும் - ஏகு - எனவும், நாமம் பொருசரத்திற்கேதென்பர் - அம்பு - எனவும், அழகின்பேர்என் - அம் - எனவும் கூட்டித் திருவேகம்பம் எனக் கண்டுகொள்க—எ-று. (௭௭௮)

## இதுவுமது.

நீத்தொழிந்தவாறைந் தடக்கிப்பின்னிச்சயமே
வாய்ந்தமைந்தவாயில் பெண்ணையே—கூர்த்தகு
வாளேறேடோசை விளைநிலமிவ்வெல்லாற்
கேளாயுடன்வருவ தில்.

இ-ள். இதனுள் நீத்தொழிந்த ஆறு - நிலை - எனவும், ஐந்தடக்கி - ஆமை - எனவும், வாயில் - கடை - எனவும், பெண்ணை - பிடி - எனவும், வாளேறு - புண் - எனவும், ஓசை - இயம் - எனவும், விளைநிலம் - செய் - எனவும் கூட்டி, நிலையாமை கடைப்பிடி, புண்ணியஞ்செய், எனக் கண்டு கொள்க—எ-று. (௭௭௯)

இதுவுமது.

நல்வினைநாற்கால் விலங்குநவைசேருங்
கொல்வினையஞ்சி குயக்கல—மெல்ல
வுறுதியுமல்லவு நாட்பேர்மாரப்பே
ரிறுதியிலின்ப நெறி.

இ-ள். இதனுள், நல்வினையையுடைய நாற்கால்விலங்குயாது - முயல் - எனவும், நவைசேருங் கொல்வினையஞ்சியாது - ஆமை - எனவும், குயக்கலம்யாது - அகல் - எனவும், மெல்ல உறுதியையும் உறுதி யல்லனவற்றையுஞ் சொல்லும் நாட்பெயர்யாது - சோதி - எனவும், மாரப்பெயர்யாது - தேறு - எனவுங்கூட்டி, முயலாமையகல், சோதி தேறு, எனக்கூட்டுக. இறுதியிலின்பநெறி—எ-று. (௭௮0)

காதை கரப்பு.

அதாவது ஒரு செய்யுள் முடியவெழுதி அதனீற்று மொழிக்கு முதலெழுத்துத் தொடங்கி ஒவ்வோ ரெழுத்திடை யிட்டு வாசிக்கப் பிறிதோரு செய்யுட் போதுவது.

தாயேயாநோவவா வீருவெமதுநீ
பின்னைவெருவா வருவதொரத்தப
வெம்புகல்வேறிருத்தி வைத்திசினிச்சைகவர்
தாவாவருங்கல நீயே.

இ-ள். தாயாயுள்ளாய், யாங்கள்வருந்தும் அவாவினை [illegible], எமது சார்பாயுள்ளாய், நீபின்பு அச்சமாக வருவது ஆராய், அதுகெட எமக்குப் புகலாயுள்ள விடம் வேறாகச் சமைத்து வைப்பாய், ஆசைப்பாடு கைக்கொள், எங்கட்குக் கேடில்லாத அரிய ஆபரணமாயுள்ள கடவுளே—எ-று.

இதனுட் போந்தசெய்யுள்-வஞ்சித்துறை.

"கருவார்கச்சித் திருவேகம்பத்
தொருவாவென்னீ மருவாநோயே"

இ-ள். மனமே, நீகச்சித் திருவேகம்பத்துறையும் ஒப்பில்லாதவனே யென்று சொல்லக்கருவார் நோய்மருவா—எ-று.

வருங்கலம் நீயேயென்பதில் லகரம் மொழிக்கு முதலாகாமையின் அதனை நீக்கிக் ககரமுதலாகக் கொள்க. (௭௮௧)

## கரந்துறைப் பாட்டு.

அதாவது ஒருசெய்யுள் பிறிதொரு செய்யுட் சொற்
புக்காது எழுத்துப் பொறுக்கிக் கொள்ள
லாம்படி பாடுவது.

அகலல்குற்றேரே யதரமமுதம்
பகர்தற்கரிதிடையும் பார்க்கின்—முகமதிய
முத்தென்னலாமுறுவன் மாதர்முழுநீல
மைத்தடங்கண் வெவ்வேறு வாள்.

இ-ள். நண்பனே, நான்கண்ட மாதருடைய உருவத்தின் தன்மை கேட்பாயாக, அல்குலானது தேர்த்தட்டாயும், அதரமானது அமுதமாயும், இடையானது விசாரித்துச் சொல்லுவதற்கு அரிதாயும், முகமானது மதியமாயும், முறுவலானது முத்தமாயும், மைத்தடங் கண்ணானது நீலப்பூவாயும், வேறுபட வைத்தவளாயுமிருக்கும்—எ-று.

இதனுட் போந்த செய்யுள், "அகர முதல வெழுத்தெல்லா மாதி பகவன் முதற்றேயுலகு" என்பதாம். (எ௮உ)

## நான்காரைச் சக்கரம்.

அதாவது ஒருஇரதத்துக் குறுப்பாயிருப்பது இதுநான்காராய்,
நடுவே மேயென்னு மெழுத்து நின்று ஆர்மேலோவ்
வோரெழுத்து நின்று சூட்டின்மேற் பன்
னிரண்டெழுத்து நின்று முற்
றுப் பெறுவது.

மேருசாபமு மேவுமே
மேவுமேபுன லாலமே
மேலவாமய னுயமே
மேயனுனடி சாருமே.

இ-ள். மேருவை வில்லாகக் கொள்ளுவனவாயும், நஞ்சை யுணவாக விரும்புவனவாயும், உயர்ந்த வுருவத்தை யுடையனவாயு மிருக்கும், அவன் விளையாடுதற்கினமாயுள்ள கூளியாகலான் அத்தன்மையா னடிகளைப் பொருந்துவீராக—எ-று. (எ௮௩)

## ஆருரைச் சக்கரம்.

அதாவது ஒரு இரதத்துக்குறிப்பாயிருப்பது. இது ஆருராய் நடுவே ரகரநின்று ஆர்மேல் ஒன்பதோன்ப தேழுத்தாய் குறட்டின்மேல் போதிவானவன் என்னும் பெயர் நின்று சூட்டின்மேல் இருபத்துநான்செழுத்து நின்று முற்றுப்பெறுவது.

தண்மலர்வில்லி தன்பேரான தஞ்சநமக்களித்த
கண்மலர்க்காவிக் கெதிர்வனவன்று கரமளந்த
பண்மலர்யாழ்பயில் வாரன்புசூழ்பதி நாகைமிக்க
தண்மையகத்துப் பதுமத்தமாதர்த் தடங்கண்களே.

இ-ள். கைகளால்தைவந்தவிரிந்தபண்ணையுடையயாழ்வல்லோர்; அன்பு மேவிய நாகபட்டணத்தில்; காமனுடையபோரில் நமக்கபயங்கொடுத்த கண்ணாகிய நீலப்பூவுக்கு ஒப்பாவனவல்ல, மிகக்குளிர்ச்சியையுடையதாமரைமலரினுறைவோர்க்குச் சமானமான பெண்களின் அகன்றகண்கள்—எ-று. (எஅச)

## எட்டாரைச் சக்கரம்.

அதாவது ஒரு இரதத்துக்குறிப்பாயிருப்பது. இது எட்டாராய் ஆர்மேல் அவ்வாறெழுத்தாய், நடுவேககரநின்று, குறட்டின் மேல், அறமேதனமாவது, என்னுஞ் சொல்நின்று, சூட்டின்மேல் முப்பத்திரண்டெழுத்து நின்று முற்றுப்பெறுவது.

மலர்மலிசோலை யகநலங்கதிர்க்க
மடமயிலியற்றக மாதிரம்புதைத்து
வளைந்துபுகன்மேக வல்லிருண்மூழ்க
வரியளிதுதைந்த கதுப்பினிதடைச்சி
மன்னுமாமடமொழி வடிவாள்வலவன்
கன்னித்துறைவன் கனகச்சிலம்பே.

இ-ள். மலர்மிக்கிருந்த சோலையுள் நலம்விளங்க, மடப்பத்தேர்கூடியிருந்த மயிலியலுக் கொக்கும்படியாகத் திசைகளை மறைத்துச்சூழ்ந்து, மிக்க மேகங்களெனப்படுகின்ற வலிய இருளினாலே முழுகுந்தன்மைத்தாய், இசை மருவிய வண்டுகள் குடையத்தகுந்த மலர்களைக் குழலின்மீதே அழகுபெற

அணிந்து பொருந்துகிற மாமடப்பத்தோடு கூடியமொழியை யுடையாள், கூறியவாற்வலவனுகிய கன்னித்துறைவனது கனகமலையின்கண்—எ-று.

இம்மலையின்கண் திசைகளைமறைத்து மேகஞ்சூழ்ந்து மலர் மலிந்து சோலைக்கு அழகு உண்டாகத் தன்குழலையலங்கரித்து மயிலையொப்ப அழகு பெற்ற மடப்பத்தோடுகூடிய மொழியாள் நிற்பள் எனக்கூட்டுக. (எ௮௫)

## வேறோர்வகை நான்காரைச்சக்கரம்.

அதாவது ஒரு இரதத்துக்குறுப்பாயிருப்பது, இதுநான்காராய் நடுவேரகரம்நின்று குறட்டின்மேல் வசுதாரை என்னும் பெயர்நின்று, ஆர்மேல் நந்நான்கெழுத்துநின்று, சூட்டின்மேல் இருபத்தெட் டெழுத்துநின்று முற்றுப்பெறுவது.

மாதவாபேர்திவா தாவருகாமலா
பாதமேபோத சுரரைநீ—தீதகல
மாபாநெறியுளிப்பா யின்றன்பகலாச்சீர்த்
தாயேயலகில்லா டாம்.

இ-ள் புத்ததேவா, குற்றமில்லாததாய்; உன்பாதத்தை வழுத்தாநிற்கும் அசுரருக்கு, நீ பாவங்கெட மோக்ஷமளிப்பாய், அன்புநீங்காத அழகிய தாய் போல்வாய், எல்லையில்லாத மிக்கவலிதாகிய தவத்தை யுடையாய் இன்று அருள்வாயாக—எ-று.

ஆடு - வலி. (எ௮௬)

## சுழிகுளம்.

அதாவது ஒருசெய்யுளை எவ்வெட்டெழுத்தாய் நான்குவரியாக எழுதி மேனின்று கீழிழிந்தும் கீழ்நின்று மேலேறியும் புறம்நின்றுவந்து உள்முடிய உச்சரித்தாலும் அவ்வரி நான்குமேயாகி அச்செய்யுளாகவே முற்றுப்பெறுவது.

கவிமுதியார் பாவே
விலையருமா நற்பா
முயல்வ துறுநர்
திருவருந்து மாயா.

இ-ள். கவிகளால் முதிர்ந்தார் செய்யுங் கவியே விலையிடுதற்கரியபெரிய நல்லகவியாம். இடைவிடாது முயல்வார் செல்வம் அழிந்து கெடாது-எ-று.()

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க | வி | மு | தி | யா | ர் | பா | வே |
| வி | லை | ய | ரு | மா | ந | ற் | பா |
| மு | ய | ல் | வ | து | று | ந | ர் |
| தி | ரு | வ | ழி | ந் | து | மா | யா |

இதுவுமது.

மதநவிராகா வாமா
தநதசகாவே நீவா
நததநதாதா வேகா
விசநவிரோதா காரா.

இ-ள். மதனே! ஆசையில்லாதவனே? ஒளியையுடையானே! குபேரனுக்குத் தோழனையுள்ளானே! மேகத்தினு மதனமானவள்ளலே! பணிப்பூணால் விநோதமான தோற்றத்தையுடையானே! எங்கள் விதனங்களை நீக்கிக் காப்பாயாக—எ-று.

நீக்கப்பொருண்மையின் கண்வந்த ஐந்தனுருபு ஆறனுருபாய் மயங்கின. இதனுள்நீக்கி யென்பது வருவித் துரைக்கப்பட்டது. (எஅ)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ம | த | ந | வி | ரா | கா | வா | மா |
| த | ந | த | ச | கா | வே | நீ | வா |
| ந | த | த | ந | தா | தா | வே | கா |
| வி | ச | ந | வி | ரோ | தா | கா | ரா |

## சருப்பதோ பத்திரம்.

அதாவது ஒருநிரைஎட்டாக அறுபத்துநான்கறைகீறி ஒருசெய்யுள் எவ்வெட்டெழுத்தால் ஓரடியாக நான்கடி யடிமேனின்று கீழிழி யவும் நான்கடியுமெழுதி கீழ்நின்று மேலேறவும் நான்கடியு மெழுதி மேனின்றுகீழிழியவும் கீழ்நின்றுமேலேறவும் முதறொடங்கி யிறுதியாகவும் இறுதி தொடங்கி முதலாகவும் மாலைமாற்றாக நான்முகத்தினும் வாசித்தாலும் அச்செய்யுளேயாவது

மாவாநீதாதாநீ வாமா
வாயாவாமேமேவா யாவா
நீவாராமாமாரா வாநீ
தாமேமாராராமா மேதா.

இ-ள். பெரியோனே! நீதியுடையோனே! மிக்கநீங்காத செல்வத்தை யுடையோனே! என்னுக்கடவது. பொருந்துவாயாக. இப்படி என்னைச்சேர்ந் தால் வாயாதனயாவை? நீவருவாயாக. இராமனை யொப்பாய்! காமனுமாயுள் ளாய்!, மழையையொப்பாய் நீயாதலால் பெரியமேம்பாட்டையுடைய திண்மார் பினிறைந்திருக்கப்பட்ட ஆராகிய தாரினைத்தருவாயாக—எ-று. (எஅகூ)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| தா | மே | மா | ரா | ரா | மா | மே | தா |
| நீ | வா | ரா | மா | மா | ரா | வா | நீ |
| வா | யா | வா | மே | மே | வா | யா | வா |
| மா | வா | நீ | தா | தா | நீ | வா | மா |

## அக்கரச் சுதகம்.

ஒருபொருள் பயப்ப தொருசொற்கூறி அதனில் ஒவ்வொரு எழுத்தாக நீக்க வெவ்வேறு பொருள் பயக்கப் பாடுவது.

பொற்றாணில்வந்தசுடர் பொய்கைபயந்தவண்ணல்
சிற்றுயன்முன்வனிதை யாகியளித்தசெம்மல்
மற்றியார்கொலென்னின் மலர்தூவிவணங்கிநாளும்
கற்றூர்பரவுங் கநகாரிநகாரிகாரி.

இ-ள். பொன்னாகிய தூணிலே தோற்றிய சோதியா யுள்ளான் யார்? பொய்கையானது பெற்றதலைமையுடையவன் யார்? சிற்றுயனாகிய திருமால் முன்னாண் மோகினிவடிவு கொண்டபோது பெற்றபிள்ளை யாரென்று கேட்பீராயின்! கற்றூரால் மலர்தூவி நாடோறும் வணங்கப்பட்ட கநகாரி - என்றும், நகாரி - என்றும் காரி என்றுங்கொள்க—எ-று.

கநகாரி - திருமால். நகாரி - முருகன். காரி - மாசாத்தன்.　　　　(எகூO)

## நிரோட்டம்.

அதாவது இதழ் குவிக்கு முயிருமெய்யுந் தீண்டாமற் பாடுவது.

சீலத்தான்ஞானத்தாற் றேற்றத்தாற்சென்றகன்ற
காலத்தாலாராத காதலான்—ஞாலத்தார்
இச்சிக்கச்சாலச் சிறந்தடியேற்கினிதாங்
கச்சிக்கச்சாலைக் கனி.

இ-ள். தொழிலாலும் அறிவாலும் மனத்தெளிவாலும் தன்னிடனாகச் செலுத்தின காலத்தின் பெருமையாலும் ஒப்பில்லாத ஆசையாலு முயர்ந்தோராயினர் நினைப்பவும் எத்தனையுந்தாழ்ந்த எனக்கு மிகவுஞ் சிறந்தினிதாகாநிற்கும் கச்சிப்பதியிலுண்டாகிய திருக்கச்சாலையிற் றோற்றிய கனியை யொப்பான்—எ-று.

சூ— "உ ஊ ஒ ஓ ஔ ப ம் வ விவற் - றியைபு சோரகிரோட்டத் திறத்து" என்றூராகலின்.　　　　(எகூக)

## ஒற்றுப் பெயர்த்தல்.

அதாவது ஒருமொழியுந் தொடர்மொழியுமாய்ப் பொருள்படு மவற்றை அப்பொருளொழிய வேறுபொருள்பட வைப்பது.

வண்புபலைக்கீழ்ப்படுத்து வானத்தருமலைந்து
மண்குளிரச்சாயல் வளர்க்குமாந்—தண்கவிகைக்

கொங்காரலங்கலந பாயன்கொய்பொழில்சூழ்
கங்காபுரமாளிகை.

இ-ள். வளப்பத்தையுடைய மேகங்கள் கீழாகமேலோங்கி வானகத்தின் கணுண்டாகிய கற்பகப்பூக்களை உச்சிமீதுடைத்தாய் உலகெல்லாம் தன்னுருவச்சாயையாகிய நிழலைப் பெருக்கும் குளிர்ச்சி பொருந்திய குடையினையும் மதுநிறைந்த மாலையையுமுடைய அநபாயனது கங்காபுரத்தின் மாளிகை எனவும். வளப்பத்தையுடைய மேகத்தைப் பழிக்குந் தன்மையையுடையதாய் வானகத்தினுண்டாகிய கற்பகத்தோடு பகைகொண்டு கொடுத்து உலகத்துள்ளாருடைய உள்ளங் குளிரும் வண்ணம் காவல்புரியுங் கங்கா புரத்தையாளும் குளிர்ந்த குடையினையுடைய அநபாயனது கை எனவும் வந்தவாறு காண்க—எ-று. (எகூ௨)

பொற்புடையமாதர் புலவாரேபொய்ம்மருவாச்
சொற்பயிலும்பாண சுடர்மணித்தேர்—கற்புடைய
வஞ்சிநகர்சேரினற மாமருதாராய்மகிழா
நஞ்சனையநல்வயலூ ரற்கு.

இ-ள். பொய்யோடுகூடாத சொற்களைப் பலகாலுஞ் சொல்லாநின்ற பாணா! அவரது சுடர்மணித்தேர் தமது கற்புடைய மனைவியையிலே சேருமாயிற் பொலிவினையுடைய பரத்தையர் புலவியாரோ? தேனுல் வண்டு மருவப்பட்ட தாராய்! யாமின்புறுந் தகையமல்ல. நல் வயலூரனாகிய தலைவற்கு நீங்கள் நஞ்சோடொவ்வோமோ நீண்டுமிடத்து—எ-று.

இப்பாட்டிறுதியில் வஞ்சி, நகர், சேர், இல், நறவு, மா, மருது, ஆர், ஆல், மகிழ் என்னும் பத்துமரங்களின் பெயர்வந்தன. (எகூகூ)

## மாத்திரைச் சுருக்கம்.

அதாவது ஒருபொருள் பயந்துநிற்ப தொருசொல், ஒரு மாத்திரையைக் குறைப்பப் பிறிதொரு பொருள்பயக்குஞ் சொல்லாய் நிற்பது.

நேரிழையார்கூந்தலினோர் புள்ளிபெறநீண்மரமாம்
நீர்நிலையோர்புள்ளிபெற நெருப்பாம்—சீரளவும்
காட்டொன்றொழிப்ப விசையாமனதளவில்
மீட்டொன்றொழிப்ப மிடறு.

இ-ள். நேரிழையார்கூந்தல் - ஓதி, இதில் ஒரு மாத்திரையைச் சுருக்க ஒதியென்னு மரமாம். நீர் நிலை - ஏரி. இதில் ஒருமாத்திரையைச் சுருக்க எரியாகிய நெருப்பாம். காடு - கான்தாரம். இதில் ஒருமாத்திரையைச் சுருக்கக்

சுந்தாரம் என்னும் பண்ணும். இதில் மீட்டும் ஒரு மாத்திரையைச் சுருக்கக் கழுத்தாம்—எ-று.

இதில் புள்ளிபெறுவதைப்பிரித்து விந்துமதியெனவு மமையும். (எகூச)

மாத்திரை வருத்தனம்.

அளபொன்றேறிய வண்டதிறைர்ப்பினல்
அளபொன்றேறிய மண்ணதிர்ந்துக்குமால்
அளபொன்றேறிய பாடலருஞ்சுனை
அளபொன்றேறழ கூடலேந்தாடுமால்.

இ-ள். வண்டு - அளி. அளபேறிய வண்டு - ஆளி. எனவும், மண் - தரை. அளபேறியமண் - தாரை. எனவும், பாடல் - கவி. அளபேறிய பாடல் - காவி. அழகு - வனப்பு அளபேறிய அழகு வானப்பு - எனவும் காண்க—எ-று. ()

முரசபந்தம்.

ஓரடி ஒருவரியாக நான்குவரி யெழுதி மேலிரண்டு வரியும் தம்முட்
கோழத்திரி யாகவும் கீழிரண்டு வரியுந் தம்முட் கோழத்திரி
யாகவும் சிறுவார்போக்கி மேல்வரி யிரண்டாம் வரியி
னும் மூன்றம் வரியினும் நான்காம் வரியினுங்
கீழுற்று மீண்டு மேனோக்கவும் கீழ் வரி
யினும் அவ்வாறேமேலுற்றுமீண்டு
கீழ்நோக்கவும்பெருவார்போ
க்கி இந்தவார் நான்கும் நான்கு வரியாக
வும் பாடுவது.

கானவாரண மரியவாயினனே
தானவாரண மரியவாயினனே
மானவாரண மரியவாயினனே
கானவாரண மரியவாயினனே.

இ-ள். சோழன் வலிய மிக்க போர்செய்த இடமானவை இசையோடு கூடியதேவதம் அரியவாய்க் கூட்டம்பொருந்திய மதயானை யரியவாய்க் காட்டுக் கோழியையும் சிங்கங்களையு முடையவாயின—எ-று.

சோழன் போர் செய்யாதமுன்னர் மறைமுழக்கமும் யானைகளுமுடைய இடங்கள். போர்செய்தபின்னர் காட்டுக்கோழிமுழக்கமும் யானையைக்கொல்லவல்ல சிங்கங்களுமுடையவாயின எனக்கொள்க. (௭௯௬)

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கா | ன | வா | ர | ண | ம் | ரி | ய | வா | யி | ன | னே |
| தா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |
| மா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |
| கா | ன | வா | ர | ண | ம | ரி | ய | வா | யி | ன | னே |

திரிபாகி.

மூன்றெழுத்துமெங்கோ முதலீறொருவள்ளல்
ஏன்றுலகங்காப்பதிடை கடை—யான்றுரைப்பிற்
பூமாரியெய்துலகம் போற்றிப்புகழ்ந்தேத்தும்
காமாரிகாரி மாரி.

இ-ள். இதனுள் மூன்றெழுத்து மெம்முடைய கோவாகிய காமாரியெனவும், இதன் முதலெழுத்துங் கடையெழுத்துங் கூடக் காரியென்றொரு வள்ளல் எனவும், இதனிடையெழுத்துங் கடையெழுத்துங்கூட மாரியென்றுலகங்காக்கு மழையெனவும் வந்தவாறு கண்டுகொள்க—எ-று. (௭௯௭)

திரிபங்கி.

ஆதரந்தீரன்னை போலினியாயம்பி காபதியே
மாதுபங்காவன்னி சேர்சடையாய்வம்பு நீண்முடியாய்
ஏதமுய்ந்தாரின்னல் சூழ்வினைதீரெம்பி ரானினியார்
ஓதுமொன்றேயுன்னு வாரமுதேயும்பர் நாயகனே.

இதனுள்,

1. ஆதரந்தீர்
மாதுபங்கா
ஏதமுய்ந்தார்
ஓதுமொன்றே
எனவும்,

2. அன்னைபோ லினியாய்
வன்னிசேர் சடையாய்
இன்னல்சூழ் வினைதீர்
உன்னுவா ரமுதே
எனவும்,

3. அம்பிகா பதியே
வம்புநீண் முடியாய்
எம்பிரா னினியார்
உம்பர் நாயகனே

எனவும்,

மூன்றுவஞ்சித்துறை வந்தவாறு காண்க.

இ-ள். ஆதரம் தீர் - எமது ஆசாபாசத்தை நீக்குகின்ற, அன்னைபோ லினியாய் - தாய்போல் இனியவனே, அம்பிகா பதியே - அம்பிகைக்கு நாயகனே, மாது பங்கா - பெண்பாகனே, வன்னிசேர் சடையாய் - வன்னியென்னும் பத்திரத்தை முடித்த சடையை யுடையவனே, வம்புநீள்முடியாய்- வாசனை மிகுந்த முடியை யுடையவனே, ஏதம் உய்ந்தார் - குற்றத்தி னின்றும் நீங்கினவராது, இன்னல்சூழ் - துன்பஞ்செய்கின்ற, வினை தீர் - வினைகளை யொழித்தற்குரிய, எம்பிரான் - எம்பெருமான், இனியார் - உன்னையன்றி வேறியாவருளர், ஓதும் - வேதாகமங்களாற் புகழ்ந் துரைக்கப்பட்ட, ஒன்றே - ஒப்பற்ற பொருளே, உன்னுவார் அமுதே - நினைப்பவர்களுக்கு அமிர்தமே, உம்பர் நாயகனே - தேவர் பெருமானே—எ-று. (௭௬௮)

சங்கந்தா பூணாரந் தாமேகலைதாநற்
புங்கவன்மால்காணாப் புலவுடைய—கங்கரா
கோணாகலாமதியக் கோடீரசங்கரா
சோணாசலாசலமே தோ.

என்னும் வெண்பாவே.

பூணாரந்தாமே கலைதாநற்புங்கவன்மால்
காணாப்புலவுடைய கங்கரா - கோணா
கலாமதிசேர்கோடீர சங்காராசோணா
சலாசலமேதோசங்கந் தா.

எனவும்,

சலமேதோசங்கந்தா பூணாரந்தாமே
கலைதாநற்புங்கவன்மால் காணாப் - புலவுடைய
கங்காராசோணா கலாமதியக்கோடீர
சங்காராசோணா சலா.

எனவும் மூன்றுவெண்பாவாய்த் திரிபங்கியானதுகாண்க.

இ-ள். சங்கம்தா - சங்கவளையலைத் தந்தருள்வாயாக, பூணாரம்தா - பூணுகின்ற மாலையைத் தந்தருள்வாயாக, மேகலைதா - மேகலையைத் தந்தருள்வாயாக, நல் - அழகாகிய, புங்கவன் - பிரமதேவனும், மால் - திருமாலும், காணா- காண வொண்ணாத, புலவுடைய - புலானாற்றத்தை யுடைய, கம்-கபாலத்தை,

கரா - கையில் தரித்தவனே, சோண் ஆ - கோணுதலை யுடைய, (வளைந்த) கலா மதியம் - கலைகளையுடைய சந்திரகண்டம்பொருந்திய, கோடீர - ஜடா பாரத்தை யுடையவனே, சிங்கரா - சங்கரனே, சோணசலா - சோணசலனே, சலம் ஏதோ - என்மீது கோபத்திற்குக் காரணம் யாதோ—எ-று. (எகக)

பிறிதுபடுபாட்டு.

தெரிவருங்காதலிற் சேர்ந்தோர்விழையும் பரிசுகொண்டு
வரியளிபாட மருவருவல்லி யிடையுடைத்தாய்த்
திரிதருங்காமர் மயிலியலாய நண்ணுத்தேமொழி
யரிவைதன்னேரன லாகுமெம்மைய யாமாடிடமே.

இது,

தெரிவருங்காதலிற் சேர்ந்தோர்விழையும்
பரிசுகொண்டு வரியளிபாட
மருவருவல்லி யிடையுடைத்தாய்த்
திரிதருங்காமர் மயிலியலாய்நண்ணுத்
தேமொழியரிவை தன்னேரென
லாகுமைய யாமாடிடமே.

இ-ள். என ஆறடியாய் ஈற்றயலடி முச்சீராய் ஏனையடி நாற்சீராய் வந்து நேரிசை யாசிரியப்பா வருமாறுகாண்க. (அ00)

காட்சி.

பூமருகண் ணிணைவண்டாப் புணர்மென் முலையரும்பாத்
தேமருசெவ் வாய்தளிராச் செருச்செந் நிலத்தைவென்ற
மாமருதானை யெங்கோன் வையைவார் பொழிலேர்கலந்த
காமருபூங் கொடிகண்டே களித்தவெங் கண்ணிணையே.

இ-ள். பூமருகண் இணைவண்டுஆ - அழகுபொருந்திய இருகண்களும் வண்டுகளாகவும், புணர்மெல்முலை அரும்புஆ - நெருங்கிய மெல்லிய தனங்கள் அரும்புகளாகவும், தேம்மருசெவ்வாய் தளிர்ஆ - மணங்கமழ்கின்றசிவந்த வாய்தளிராகவும் கொண்டு, செருசெந்நிலத்தை வென்ற - யுத்தகளத்திற் பகைவரைவென்ற, மாமருதானை எங்கோன் - பெருமைபொருந்திய சேனைகளையுடைய எம்மிறைவனாகிய பாண்டியனது, வையைவார்பொழில் - வையையாற்றங் கரையிலுள்ள பெருஞ்சோலையில், ஏர்கலந்த - அழகோடு கூடிநின்ற, காமருபூங்கொடி - அழகிய பூங்கொடியினை, எம்கண் இணை - எமதிரண்டுகண்களும், கண்டுகளித்த - கண்டுகளித்தன—எ-று.

தேமரு - என்பதனை, தே - மரு - எனப் பிரித்து. அழகுபொருந்திய என்றுரைப்பினுமாம். காமரு என்பதில் உகரம் சாரியை. (அ0க)

## நயப்பு.

### தலைமகள் வண்டைநோக்கிச் சொல்லியது.

வேறுமெனநின் றிகன்மலேந்தார்விழி ஞத்துவிண்போ
யேறுந்திறங்கண்ட கோன்றென்பொதியி லிரும்பொழில்வாய்
தேறுந்தகைய வண்டேசொல்லுமெல்லியல் செந்துவர்வாய்
நாறுந்தகைமைய வேயணியாம்ப னறுமலரே.

இ-ள். வேறும் என நின்று - யாம் வெல்லுவோம் எனக் கருதி நின்று, இகல் மலேந்தார் - போர்புரிந்த வேந்தர் பலரும், விழிஞத்து - விழிஞத்துக் கடற்கோடியுள், விண்போய் ஏறும் திறம்கண்ட - சுவர்க்கத்திற்சென்றேறும் வகையைச்செய்த, கோன் - வேந்தனாகிய பாண்டியனது, தென் பொதியில் - தென் பொதிய மலேயில், இரும்பொழில்வாய் - பெரிய பூஞ்சோலேயில், தேறும் தகையவண்டே - யான் தெளியத்தகுந் தன்மையுள்ளவண்டே, அணி - அழகாகிய, நறு - மணம்பொருந்திய, ஆம்பல் மலர் - செவ்வல்லிமலர், மெல்லியல் - இம்மெல்லியலாளது, செந் துவர் வாய் - செம் பவளம்போன்ற வாய் போல, நாறும் தகைமையவே - பரிமளிக்குந் தன்மையவோ (உளவாயின்) சொல்லு - சொல்லுவாயாக—எ-று.

விழிஞம் - ஒரூர், இகல் - போர், துவர் - பவளம். மெல்லியல் - மென்மையாகிய இயற்கையுடையாள். (௩௦௨)

### இதுவுமது.

இருங்கழல்வானவ னாற்றுக்குடியிகல் சாய்ந்தழியப்
பொருங்கழல்வீக்கிய பூழியன்மாறன்றென் பூம்பொதியின்
மருங்குழலுங்களி வண்டினங்காளுரை யீர்மடந்தை
கருங்குழனாறுமென் போதுடைத்தோநும் கடிபொழிலே.

இ-ள். இருகழல் வானவன் - பெரிய வீரக்கழலேயணிந்த சேரன், ஆற்றுக்குடி - ஆற்றுக்குடியில், இகல் சாய்ந்து அழிய - போரில் தோற்றொழியும் வண்ணம், பொரும் - ஒலிக்கின்ற, கழல் - வீரக்கழலே, வீக்கிய - (தன்காலில்) கட்டின, பூழியன் மாறன் - பூழியனாகிய மாறனது, தென் பூ பொதியில் மருங்கு - தெற்கின் கண்ணுண்டாகிய அழகிய பொதியமலேயின் பக்கத்தில், உழலும் - திரியாநின்ற, களி வண்டு இனங்காள் - களிவண்டின் கூட்டங்களே, நும் - உமக்குரிய, கடிபொழில் - மணமுள்ள பூஞ்சோலே, மடந்தை - மடப்பத்தையுடைய இப்பெண்ணினது, கருங் குழல் நாறும் - கரிய கூந்தல் போலக் கமழ்கின்ற, மென்போது உடைத்தோ - மெல்லிய மலர்களேயுடையதோ, உரையீர் - சொல்லுங்கள்—எ-று.

வானவன், - சேரன். ஆற்றுக்குடி - ஒரூர். வீக்குதல் - கட்டுதல். கருங்குழனறும் என்பதற்குக் கருங்குழலின் மீதிருந்து கமழ்தற்குரிய என்றுரைப்பினுமாம். (௨0௩)

இதுவுமது.

விண்டேயெதிர்ந்த தெவ்வேந்தர்பட விழிஞத்துவென்ற
வொண்டேருசித னெங்கோன்கொல்லிச்சார லொளிமலர்த்தா
துண்டேயுழல்வா யறிதியன்றேயுள வேலுரையாய்
வண்டேமடந்தை குழல்போற்கமழு மதுமலரே.

இ-ள். விண்டு - வேறுபட்டு, எதிர்ந்த - எதிர்த்த, தெவ்வேந்தர் - பகையரசர், விழிஞத்து - விழிஞத்துக் கடற்கோடியுள், பட - இறக்கும்படி, வென்ற - வென்ற, ஒள்தேர் - ஒட்பமாகிய தேரையுடைய, உசிதன் - பாண்டியனாகிய, எம் கோன் - எம்மிறைவனது, கொல்லிசாரல் - கொல்லிமலைச் சாரலில், ஒளி மலர் தாது - ஒளியுள்ள பூந்தேனை, உண்டே உழல்வாய் - உண்ணுகின்றே திரிகின்றாய், வண்டே - வண்டே, மடந்தை குழல்போல் - மடவாளது கூந்தல்போல, கமழும் - பரிமளிக்கிற, மதுமலர் - தேனையுடைய மலர்களை, அறிதி அன்றே - அறிந்திருப்பாயல்லவா, உளவேல் - உளவாயின், உரையாய் - சொல்வாயாக—எ-று.

கொல்லி - ஓர்மலை. தாது - தேன். உசிதன் - பாண்டியன். (௨0௪)

பொருங்கழல்வானவற் காயன்றுபூலந்தைப் போர்மலைந்தா
ரொருங்கழலேறவென் றான்கொல்லிச்சார லொண்போதுகடம்
மருங்குழல்வாய்நீ யறிதிவண்டேசொல் லெனக்குமங்கை
கருங்குழல்போலுள வோவிரைநாறு கடிமலரே.

இ-ள். பொரும் கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த, வானவற்காய் - சேரன்பொருட்டு, அன்று - அக்காலத்தில், பூலந்தை - பூலந்தையில், போர் மலைந்தார் - போரிட்டவேந்தர், ஒருங்கு - ஒருங்கே, அழல் ஏற - நெருப்பேறும்படி, வென்றான் - வென்றவனாகிய பாண்டியனது, கொல்லிச் சாரல் - கொல்லிமலைச் சாரலிலுள்ள, ஒள்போதுகள் தம்மருங்கு - அழகியமலர்களின் பக்கத்திலேயே, உழல்வாய் - திரிகின்றனையாகியநீ, அறிதியன்றே - அறிகின்றனையல்லவா, வண்டே - வண்டே, விரைநாறு கடிமலர் - மணங் கமழ்கின்ற விளக்கமாகிய மலர்கள், மங்கை - இம்மங்கையின், கருங்குழல்போல் உளவோ - கரிய கூந்தல்போல உள்ளனவோ, எனக்குசொல் - (உளவாயின்) எனக்குச்சொல்வாயாக—எ-று.

பூலந்தை - ஒரூர். அழலேறல் - மயான நெருப்பிலேறல். கடி-விளக்கம்; சிறப்பு எனினுமாம். (௨0௫)

தேற்றமில்லாததெவ் வேந்தரைச்சேவூர்ச் செருவழித்துக்
கூற்றமவர்க்காய வன்கொல்லிச்சாரல் கொங்குண்டுழல்வாய்
மாற்றமுரைநீ யெனக்குவண்டேமங்கை வார்குழல்போ
னாற்றமுடைய வுளவோவறியு நறுமலரே.

இ-ள். தேற்றம் இல்லாத - தெளிவில்லாத, தெவ்வேந்தரை - பகையரசரை, சேவூர்-சேவூரின்கண், செரு அழித்து-யுத்தத்தில் வென்று, அவர்க்கு-அப்பகையரசர்க்கு, கூற்றம் ஆயவன் - யமனாயிருந்தவனது, கொல்லிச்சாரல்-கொல்லிமலைச்சாரலில், கொங்குஉண்டு உழல்வாய் - தேனையுண்டு திரிவாயாகிய, வண்டே - வண்டே, மங்கை - இப்பெண்ணினது, வார்குழல்போல்-நீண்டகூந்தலைப்போல, அறியும் - நீயறிந்த, நறுமலர் - மணமுள்ள மலர்களுள்ளே, நாற்றம்உடைய உளவோ - நறுநாற்றமுடையன வுள்ளனவோ, (உளவாயின்) நீ எனக்கு மாற்றம் உரை - நீ எனக்கு மறுமொழி சொல்வாயாக—எ-று.

தேற்றம் - தன்வலியும் எதிரிவலியும் அறியுந்தெளிவு. சேவூர் - ஒரூர். கொங்கு - தேன். மாற்றம் - சொல். (அ0௬)

## ஆயத்தோடுஞ் செல்லாநின்ற தலைமகளை நோக்கித் தலைவன் சொல்லியது.

தேயத்தவருயி ரைப்புலனன்றென்பர் செங்கிலத்தைக்
காயக்கனன்றெதிர்ந் தார்மருமத்துக் கடுங்கணைகள்
பாயச்சிலைதொட்ட பஞ்சவன்வஞ்சிப்பைம் பூம்பொழில்வா
யாயத்திடையிது வோதிரிகின்றதென் னாருயிரே.

இ-ள். தேயத்தவர் - உலகத்தார், உயிரை - உயிரை, புலன் அன்று என்பர் - கட்புலனா லறியப்படுவதல்லஎன்று சொல்லுவர், செங்கிலத்தை - யுத்தகளத்தில், காய - பகைவரை யழிக்க, கனன்று - கோபித்து, எதிர்ந்தார்-எதிர்த்தவரது, மருமத்து - மார்பில், கடும்கணைகள் பாய - வேகமாகிய அம்புகள் பாயும்படி, சிலைதொட்ட - வில்வளைத்த, பஞ்சவன் - பாண்டியனது, வஞ்சி - வஞ்சியிலுள்ள, பை - பசுமையாகிய, பூம்பொழில்வாய் - பூஞ்சோலையில், ஆயத்திடை - ஆயத்தின் நடுவே, என் ஆருயிர் - என் அரியவுயிர், இதுவோ திரிகின்றது - இதோ திரியாநின்றது—எ-று.

தேயம் - இனையாகு பெயர். புலன் - அறியப் படுவது. கனலல் - கோபித்தல். வஞ்சி - கருவூர். ஆயம் - தோழிக்கூட்டம். (அ0௭)

## இதுவுமது.

இன்னுயிர்கண்டறி வாரில்லையென்பரி கன்மலைந்தார்
மன்னுயிர்வானசென் றடையக்கடையலுள் வென்றவைய

தன்னுயிர்போனின்றுதாங்குமெங்கோன்கொல்லித்தாழ்பொழில்வா
யென்னுயிராயத் திடையிதுவோநின் றியங்குவதே.

இ-ள். இன்உயிர் - இனியவுயிரை, கண்டு அறிவார் இல்லை என்பர்-கண்டறிவோர் இல்லை யென்று சொல்லுவர் உலகத்தார், இகல் மலைந்தார் - வலியோடுவந்து போர்செய்தவரது, மன்உயிர் - நிலைபெற்றவுயிரானது, வான் சென்று அடைய - சுவர்க்கத்தைச் சென்றடையும்படி, கடையலுள்-கடையலில், வென்று - அவர்களை வென்று, வையம் - உலகத்தை, தன் உயிர்போல் நின்று தாங்கும் - தன்னுயிரைப் போலநின்று காப்பாற்றுகிற, எம்கோன்-எம்மிறைவனது, கொல்லி - கொல்லிமலைச் சாரலிலுள்ள, தாழ் - பெரிய, பொழில்வாய் - பூஞ்சோலையில், ஆயத்திடை - ஆயக் கூட்டத்தி னிடையே, என்உயிர் - என்னுயிரானது, இதுவோ நின்று இயங்குவது - இதோ நின்று சஞ்சரிக்கின்றது—எ-று.

வான் - வீரசுவர்க்கம். கடையல் - ஓரூர். (௮௦௮)

பாங்கன் எவ்விடத் தேவ்வியற் றென்றல்.

வல்லிச்சிறுமருங் குற்பெருந்தோண்மட வார்வடிக்கண்
புல்லிப்பிரிந்தறி யாதமந்தாரத்தெங் கோன்புனனாட்
டல்லித்தடந்தா மரைமலரோவவன் றண்ணளியார்
கொல்லிக்குடவரை யோவண்ணல்கண்டதக் கொம்பினையே.

இ-ள். வல்லி - பூங்கொடிபோன்ற, சிறு மருங்குல் - சிற்றிடையையும், பெரும்தோள் - பெருந்தோள்களையுமுடைய, மடவார்-மாதரது, வடிக்கண் - மாவடுப்போலுங் கண்களை, புல்லி - பொருந்தி, பிரிந்து அறியாத - நீங்காத, மந்தாரத்து - மந்தாரமலர் மாலையையணிந்த, எம்கோன் - எம்மிறைவனாகிய பாண்டியனது, புனல் நாட்டு - நீர்வளமுள்ள நாட்டின்கண் அண்ணல்-பெரியோனாகியநீ, அக்கொம்பினை - அந்தப் பூங்கொடிபோல் வாளை, கண்டது - பார்த்தது, அல்லி - அகவிதழ்களை யுடைய, தடம் தாமரைமலரோ - பெரிய தாமரை மலரினிடத்தோ, அவன் - அவனது, தண்ணளி ஆர் - பாதுகாப்புமைந்த, குடக்கு கொல்லிவரையோ - மேற்றிசையிலுள்ள கொல்லிமலையினிடத்தோ (சொல்வாயாக)—எ-று.

வடி - மாவடு. (௮௦௯)

இதுவுமது.

கண்டார்மகிழுங் கடிகமழ்தாமரை யோகடையல்
விண்டார்விழுந் திக் குப்பையும்வேழக் குழாமும்வென்று
கொண்டான்மழைவளர் கொல்லிக்குடவரை யோவுரைநின்
னெண்டாரகல மெலிவித்தமாத ருறைவிடமே.

இ-ள். (இறைவனே) நின் - உனது, ஒள்தார் அகலம் - ஒள்ளிய மாலையையணிந்த மார்பினை, மெலிவித்த - இவ்வாறு மெலிவித்த, மாதர் - பெண்ணானவள், உறைவிடம் - வாழுமிடம், கண்டார் - பார்த்தோர், மகிழும் - மகிழும்படியான, கடிகமழ் - மணங் கமழ்கின்ற, தாமரையோ - தாமரைமலரோ, கடையல் - கடையலில், விண்டார் - பகைவரது, விழுநிதிக் குப்பையும் - மேன்மையாகிய நிதிக் குவியலையும், வேழக்குழாமும் - யானைக் கூட்டத்தையும், வென்று - அப்பகைவரை வென்று, கொண்டான் - கவர்ந்து கொண்டவனாகிய பாண்டியனது, மழைவளர்-மேகங்கள் தாங்குகின்ற, குடக்குகொல்லி வரையோ - மேற்றிசையிலுள்ள கொல்லி மலையோ, உரை - சொல்லுவாயாக எ-று.

கடையல் - ஒரூர். நிதி - திரவியம். (௧௰)

## தலைவன் இவ்விடத் திவ்வியற் றென்றல்.

அடிவண்ணந்தாமரை யாடரவல்கு லரத்தமங்கை [ம்பின்
கொடிவண்ண நுண்ணிடை கொவ்வைசெவ்வாய்கொங்கை கோங்கரு
படிவண்ணஞ்செங்கோற் பராங்குசன்கொல்லிப் பைம்பூம்பொழில்வா
வடிவண்ணவேற்கண்ணினுலென்னைவாட்டியவாணுதற்கே. [ய்

இ-ள். செங்கோல் - செங்கோலையுடைய, பராங்குசன் - பராங்குசனது, கொல்லி - கொல்லிமலைச்சாரலிலுள்ள, பை - பசிய, பூம்பொழில்வாய் - பூஞ்சோலையில், வடி - வடித்த, வண்ணம் - அழகாகிய, வேல்-வேல்போன்ற, கண்ணினுல்-கண்களால், என்னைவாட்டிய - என்னைவருத்திய, வாள்நுதற்கு - அப்பெண்ணுக்கு, அடிவண்ணம் - பாதத்தழகு, தாமரை-தாமரைமலராகும், அல்குல் வண்ணம் - அல்குலழகு, ஆடுஅரவு - ஆடரவாகும், அங்கைவண்ணம் அரத்தம் - அங்கையினழகு செந்தாமரை மலராகும், நுண் இடைவண்ணம் - சிற்றிடையினழகு, கொடி - பூங்கொடியாகும், செவ்வாய் வண்ணம் - செவ்வாயினழகு, கொவ்வை - கொவ்வைக்கனியாகும், கொங்கை வண்ணம் - கொங்கையழகு, கோங்கு அரும்பின் படிவண்ணம் - கோங்கரும்பி னழகேயாகும்—எ-று.

பராங்குசன் - பராங்குசபாண்டியன். பகையரசராகிய யானைகளுக்கு அங்குசம்போன்றவ னென்பதுபொருள். வாணுதல் - ஒளிபொருந்திய நெற்றியையுடையாள். வண்ணம் - அழகு. (௧௧௧)

## இதுவுமது.

திருமாமுகந்திங்கள் செங்கயலுண்கண் செம்பொற்சுணங்கேர்
வருமாமுலைமணிச் செப்பிணைவானவன் கானமுன்னக்

குருமாநெடுமதிற் கோட்டாற்றரண்கொண்ட தென்னன்கன்னிப்
பெருமான்வரோதயன் கொல்லியஞ்சாரலப் பெண்கொடிக்கே.

இ-ள். வானவன் - சேரன், கானம் உன்ன - காட்டை நினைத்துச் செல்ல, குருமாநெடுமதில்அரண் - ஒளிபொருந்திய மிகநெடிய மதிலரணை, கோட்டாற்று - கோட்டாற்றில், கொண்ட - கைக்கொண்ட, தென்னன் - பாண்டியனும், கன்னிப்பெருமான்-கன்னிநாட்டுக்கிறைவனும், வரோதயன் - வரோதயனும் ஆகிய அவனது, அம் - அழகிய, கொல்லிச்சாரல் - கொல்லி மலைச்சாரலிலுள்ள, அ பெண்கொடிக்கு - அந்தப்பூங்கொடி போல்வாளாகிய பெண்ணுக்கு, திருமுகம் - அழகிய முகமானது, மா திங்கள் - பூர்ணசந்திரன் போலும், உண்கண் - மையுண்டகண்கள், செங்கயல்-செங்கயல்கள்போலும், செம்பொன் - செம்பொற் பொடிபோன்ற, சுணங்கு - தேமல்படர்ந்த, ஏர் வரும் - அழகுவளராநின்ற, மாமுலை - பெரியதனங்கள், இணைமணிசெப்பு - இரண்டு இரத்தினச் செப்புகள்போலும்—எ-று.

செப்பு - சிமிழ். கோட்டாறு - ஒரூர். வரோதயன் - வரத்தினாலவதரித்தவன். (௮௧௨)

இதுவுமது.

கடித்தடம்விண்ட கமலமுக்ங்கம லத்தரும்பேர்
பொடித்தடங்காமுலை பூலந்தைத்தெம்மன்னர் பூவழிய
விடித்தடங்காவுரு மேந்தியகோன்கொல்லி யீர்ம்பொழில்வாய்
வடித்தடங்கண்மல ராலென்னைவாட்டிய வாணுதற்கே.

இ-ள். பூலந்தை - பூலந்தையில், தெம்மன்னர் - பகையரசர், பூ அழிய - பொலிவழியும்படி, இடித்து - இடித்து, அடங்கா - அடங்காத, உரும் - வச்சிராயுதத்தை, ஏந்தியகோன் - தாங்கிய பாண்டியனது, கொல்லி - கொல்லி மலைச்சாரலிலுள்ள, ஈர்ம்பொழில்வாய் - குளிர்ந்த சோலையினிடத்து, வடி - மாவடுப்போன்ற, தடம் - விசாலமான, கண்மலரால் - கண்ணாகிய மலரினால், என்னைவாட்டிய - என்னைவருத்திய, வாணுதற்கு - பெண்ணுக்கு, முகம்-முகமானது, தடம்விண்ட - தடாகம்மலர்ந்த, கடிகமலம்-வாசனையுள்ள தாமரை மலராகும், ஏர்பொடித்து - அழகுண்டாய், அடங்காமுலை - பூரிப்புடைய முலைகள், கமலத்து அரும்பு - தாமரை யரும்பாகும்—எ-று.

பூலந்தை - ஒரூர். பூ - பொலிவு. உரும் - வச்சிராயுதம். (௮௧௩)

மொழி பெற வருந்தல்.

மேவியொன்னாரைவெண் மாத்துதென்றான்கன்னி வீழ்துறைவாய்த்
தேவியென்றுநின்னை யானினைக்கின்றது சேயரிபாய்
காவியென்றாய கண்ணையல்லையேயொன்று கட்டுரையா
யாவிசென்றுற்பெயர்ப் பாரினியாரிவ் வகலிடத்தே.

இ-ள். மேவி - பொருந்தி, ஒன்னரை - பகைவரை, வெண்மாத்து - வெண்மாவில், வென்றான் - வென்றவனாகிய பாண்டியனது, கன்னி - கன்னி நகரில், வீழ் - விரும்பப்படும், துறைவாய் - துறையினிடத்துள்ள, சேஅரிபாய் - செவ்வரிகள்படர்ந்த, காவிவென்றாய் - கருங்குவளையை வென்ற, கண்ணாய் - கண்களையுடையாளே, நின்னையான் நினைக்கின்றது - உன்னை நானெண்ணுவது, தேவி என்று ஆம் - திருமகளென்றாகும், அல்லையேல் - நீ அத்திருமக ளல்லையாயின், ஒன்றுகட்டுரையாய் - ஒரு சொல்சொல்லுவாயாக, (அப்படி நீசொல்லாது விடுவையாயின்) ஆவிசென்றால் - என்உயிர் போய்விடுமாயின், இ அகலிடத்து - இவ்வுலகில், பெயர்ப்பார் - அதனை மீட்குமவர், இனியார் - வேறியாவர்—எ-று.

வெண்மா - ஒரூர். (௧௧௪)

## இதுவுமது.

திரையுறைவார்புனற் சேவூர்ச்செருமன்னர் சீரழித்த
வுரையுறைதீந்தமிழ் வேந்தனுசிதனொண் பூம்பொதியில்
வரையுறைதெய்வமென் றேற்கல்லையேலுன்றன் வாய்திறவாய்
விரையுறைகோதை யுயிர்செல்லின்யார்பிறர் மீட்பவரே.

இ-ள். திரைஉறை - அலைகளையுடைய, வார்புனல் - பெருநீர் சூழ்ந்த, சேவூர் - சேவூரில், செருமன்னர் - யுத்தஞ்செய்த பகையரசரது, சீர்அழித்த - சிறப்பினையழித்த, உரைஉறை - புகழ்ச்சொல்லமைந்த, தீதமிழ்வேந்தன் - இனிய தமிழையுடைய வேந்தனாகிய, உசிதன் - பாண்டியனது, ஒள் - ஒள்ளிய, பூ - அழகிய, பொதியில்வரைஉறை - பொதியமலையிலுள்ள, தெய்வம் என்றேற்கு - தெய்வமென் றெண்ணினஎனக்கு, அல்லையேல் - நீ அத்தெய்வமல்லையாயின், உன்றன் வாய்திறவாய் - உனதுவாயைத்திறந்து வார்த்தை சொல்லுவாயாக, விரை உறை கோதை - வாசனைபொருந்திய கூந்தலையுடையாய், உயிர் செல்லின் - என்உயிர் போமாயின், மீட்பவர் பிறர்யார் - அதனை மீட்குமவர் வேறியாவர்—எ-று.

பொதியில்வரை - பொதிகைமலை, கோதை - அண்மைவிளி. (௧௧௫)

## நாணிக்கண்புதைத்தல்.

### இதனை இடையூறு கிளத்தல் எனவும் கூறுவர்.

அரும்புடைத்தொங்கற் செங்கோலரிகேசரி கூடலன்ன
சுரும்புடைக்கோதைநல்லா யிவற்குத்துயர்செய்யு மென்றான்
பெரும்புடைக்கண்புதைத்தாய் புதைத்தாய்க்குநின் பேரொளிசேர்
கரும்புடைத்தோளுமன்றே வென்துள்ளங் கலக்கினவே.

இ-ள். அரும்புஉடை - பூவரும்புகளையுடைய, தொங்கல் - மாலையையும், செங்கோல் - செங்கோலையுமுடைய, அரிகேசரி-அரிகேசரியின், கூடல் அன்ன - கூடலையொத்த, சுரும்புஉடைகோதை நல்லாய் - வண்டுகள்மொய்க்கின்ற கூந்தலையுடையாய், இவற்கு - இவனுக்கு, துயர்செய்யும்என்று - துன்பஞ்செய்யுமென்று, பெரும்புடை கண்புதைத்தாய் - பெருமைவாய்ந்த உன் கண்களை மூடினாய், புதைத்தாய்க்கு - மூடினவுனக்கு, நின்பேர் ஒளிசேர்-பெரியவொளிபொருந்திய, கரும்புஉடைதோளும் அன்றே - கரும்புபோலுந் தோள்களுமல்லவோ, எனது உள்ளம்கலக்கின - என்மனத்தைக் கலக்கின எ-று.

அரிகேசரி - பாண்டிவமிசத்தோரரசன். கூடல் - மதுரைநகர். (௧௧௬)

இதுவுமது.

தேம்தண்பொழிலணி சேவூர்த்திருந்தார் திறலழித்த
வேந்தன்விசாரிதன் றெவ்வரைப்போன்மெலி விக்குமென்றுன்
பூந்தடங்கண்புதைத் தாய்புதைத்தாய்க்குன் பொருவில்செங்கேழ்க்
காந்தள் விரலுமன்றே வெம்மையுள்ளங் கலக்கினவே.

இ-ள். தேம்தண்பொழில்அணி - மணமுங்குளிர்ச்சியுமுள்ள பூஞ்சோலைகளால் அலங்கரிக்கப்பட்ட, சேவூர் - சேவூரில், திருந்தார் - பகைவரது, திறல்அழித்த - வலியையழித்த, வேந்தன் - அரசனாகிய, விசாரிதன் - விசாரிதனுடைய, தெவ்வரைப்போல் - பகைவரைப்போல, மெலிவிக்கும் என்று - மெலியச்செய்யுமென்றெண்ணி, உன் - உனது, பூதடங்கண் புதைத்தாய்க்கு - அழகிய விசாலமாகிய கண்களைமூடினாய்க்கு, உன் - உனது, பொருவுஇல் - ஒப்பில்லாத, செங்கேழ் - செந்நிறமுள்ள, காந்தள் - சாந்தள்மலர்போன்ற, விரலும் அன்றே - விரல்களுமல்லவோ, எம்மை - எம்மை, உள்ளம் கலக்கின - மனங்கலங்கச்செய்தன—எ-று.

தேம் - தேனெனினுமாம். விசாரிதன் - பாண்டிநாட்டரசருள் ஒருவன், அன்றிவிவேகியெனினும் பொருந்தும். கேழ் - நிறம். (௧௧௭)

பொழில் கண்டு மகிழ்தல்.

துனிதான்கல மண்காத்துத்தொடுபொறி யாயகெண்டை
பனிதாழ்வடவரை மேல்வைத்தடஞ்சவன் பாழிவென்ற
குனிதாழ்சிலைமன்னன் கூடலன்னளது கூடலைப்போல்
இனிதாமெனதுள்ள மெல்லாங்குளிர்வித்த தீம்பொழிலே.

இ-ள். துனிதான் அகல - அச்சம் நீங்கும்படி, மண்காத்து - உலகைக் காத்து, தொடுபொறிஆய - தொட்ட அடையாளமாகிய, கெண்டை - மீனக்

கொடியை, பனிதாழ் - பனிதங்கிய; வடவரைமேல்வைத்த - வடமலையாகிய இமயத்தின்மீது நாட்டின, பஞ்சவன் - பாண்டியன், வாழிவென்ற - (பகைவரது) பெருமையைவென்ற, குனிதாழ்சிலைமன்னன் - வளைந்துநீண்ட வில்லையுடைய வேந்தன்; (அவனது) கூடல்அன்னுளது - கூடலைநிகர்த்தவளது, கூடலைப்போல் - கூடலைப்போல, ஈர்ம்பொழில் - குளிர்ந்தபொழிலானது, இனிதுஆய் - இனிதாகி, எனதுஉள்ளம் எல்லாம் - என்மனமுழுதும், குளிர்வித்தது - குளிரச்செய்தது—எ-று.

கெண்டையென்றது - கெண்டையுருவெழுதப்பட்டகொடியை, பஞ்சவன் - பாண்டியன். (௧௧௮)

தேர்மன்னுதானை பரப்பித்தன்சேவூர்ச் செருமலைந்த
போர்மன்னர்தம்மைப் புறங்கண்டுநாணிய பூங்கழற்கா
லார்மன்னுவேலரி கேசரியந்தண் புகாரனைய
வேர்மன்னுகோதையைப் போலினிதாயிற்றிவ் வீர்ம்பொழிலே.

இ-ள். தேர்மன்னுதானைபரப்பி - தேர்கள் நிலைபெற்ற சேனைகளைப் பரவச்செய்து, தன்சேவூர் - தன்சேவூரில், செருமலைந்த - போர்செய்த, போர்மன்னர்தம்மை - போர்வேந்தரை, புறம் கண்டு - முதுகுகண்டு, நாணிய - வளைந்த, பூ - தாமரைமலர்போன்ற, கழல் - வீரக்கழலையணிந்த, கால் - பாதத்தையும், ஆர் மன்னு - கூர்மைபொருந்திய, வேல் - வேலாயுதத்தையுமுடைய, அரிகேசரி - அரிகேசரியின், அம் தண் - அழகும் தட்பமுமுள்ள, புகார் அனைய - புகாரை நிகர்த்த, ஏர் மன்னு கோதையைப்போல் - அழகுநிலைபெற்ற கூந்தலையுடையாள்போல, இ - இந்த, ஈர்ம்பொழில் - குளிர்ந்த சோலை, இனிது ஆயிற்று - எனக்கினிதாயிருந்தது—எ-று.

ஆர் - கூர்மை, இதுவேலுக்கு விசேடணம். புகார் - காவிரிப்பூம் பட்டினம். (௧௧௯)

## ஊர் முதலிய வினாதல்.

நிதியின்கிழவ னிலமகள்கேள்வனெல் வேலியொன்னார்
கதியின்மலிந்தவெம் மாவுங்களிறுங் கவர்ந்துகொண்டான்
பொதியின்மணிவரைப் பூம்புனங்காக்கும் புனையிழையீர்
பதியின்பெயருநும் பேருமறியப் பகர்மின்களே.

இ-ள். நிதியின் கிழவன் - குபேரன், நிலமகள் கேள்வன் - நிலமகள் நாயகனாகியபாண்டியன், நெல்வேலி - திருநெல்வேலியில், ஒன்னார் - பகைவரது, கதியில் மலிந்த - வேகத்தில்மிகுந்த, வெம்மாவும் - வெவ்விய குதிரை

களையும், களிறும் - யானைகளையும், கவர்ந்துகொண்டான் - கவர்ந்து கொண்டவன், (அவனது) மணி - அழகிய, பொதியில்வரை - பொதிய மலையைச் சார்ந்த, பூ - அழகாகிய, புனம் காக்கும் - புனங்காக்கின்ற, புனை இழையீர் - அலங்கரிக்கப்பட்ட ஆபரணங்களையுடையீர், நும் பதியின்பெயரும் - நுமது ஊர்ப்பெயரும், நும்பேரும் - நுமதுபெயரும், அறிய - யா மறியும்படி, பகர்மின்கள் - சொல்லுங்கள்—எ-று.

கதி - நடையெனினுமாம். புனைதல் - அலங்கரித்தல். (அஉ0)

இதுவுமது.

அறையார்கழன்மன்ன ராற்றுக்குடியமர் காய்ந்தழியக்
கறையாரயில்கொண்ட கோன்கொல்லிக்கார்ப்புனங்காக்கின்றவான்
பிறையார்சிறுநுதற் பெண்ணாரமிழ்தன்ன பெய்வளையீர்
மறையாதுரைமி னெமக்குநும்பேரொடு வாழ்பதியே.

இ-ள். அறை ஆர் - ஒலிமிகுந்த, கழல் - வீரக்கழலையணிந்த, மன்னர் - வேந்தர், ஆற்றுக்குடி - ஆற்றுக்குடியில், அமர்காய்ந்து அழிய - போரில் எதிர்ந்து அழியும்படி, கறை ஆர் - உதிரம்படிந்த, அயில்கொண்ட - வேலையேந்திய, கோன் - வேந்தனாகிய பாண்டியனது, கொல்லி - கொல்லி மலைச் சாரலில், கார்ப்புனம் - கரியபுனத்தை, காக்கின்ற - காவல்செய்கிற, வான் பிறை ஆர் - ஆகாயத்துலாவுகின்ற பிறைபோன்ற, சிறுநுதல் - சிறுநுதலையுடைய, பெண் ஆர் அமிழ்து அன்ன - பெண்களுக்குள்ளே அரிய அமுதம் போன்ற, பெய்வளையீர் - பெய்வளையீர், நும்பேரொடு - நுமதுபெயருடனே, வாழ்பதி - வாழும் ஊரும், எமக்கு மறையாது உரைமின் - எமக்குமறையாது சொல்லுங்கள்—எ-று.

அறை - ஒலி. ஆற்றுக்குடி - ஓரூர். கறை - உதிரம். நுதல் - நெற்றி. பெய்வளையீர் - இடப்பட்ட வளையலையுடையீர். (அஉக)

இதுவுமது.

கறையின்மலிந்த செவ்வேல்வலத்தாற்றென் கடையல்வென்ற
அறையுங்கழலரி கேசரியந்தண் புகாரனைய
பிறையின்மலிந்த திருநுதற்பேரமர்க் கண்மடவீர்
உறையும்பதியும் பெயருமறிய வுரைமின்களே.

இ-ள். கறையின் மலிந்த - உதிரத்தால் மிகுந்த, செவ்வேல் வலத்தால் - செவந்த வேற்படையின் வலியால், தென் கடையல் வென்ற - தென்கடையலில் (பகைவரை) வென்ற, அறையும்கழல் - ஒலிக்கின்ற வீரக் கழலையுடைய, அரிகேசரி - அரிகேசரியின், அம்தண்புகார் அனைய - அழகும் தண்மையுமுள்ள

புகாரைநிகர்த்த, பிறையின்மலிந்தி - பிறையினுமேலாகிய, திருநுதல் - அழகிய நெற்றியையும், பேர் அமர்கண் - பெரும் போர்செய்யுங் கண்களையுமுடைய, மடவீர் - மடவியரே, உறையும்பதியும் - நீர்வாழுமூரும், பெயரும் - பேரும், அறிய - யாமறியும்படி, உரைமின்கள் - சொல்லுங்கள் - ஏ-று.

கடையல் - ஓரூர். மலிதல் - மிகுதல். மடவீர் - மடப்பத்தை யுடையீர். இதுவிளி. (அஉஉ)

## வேழம் வினுதல்.

வருமால்புயல்வண்கை மான்றேவர்வரோதயன் மண்ணளந்த
திருமாலவன்வஞ்சி யன்னவஞ்சீறடிச் சேயிழையீர்
கருமால்வரையன்ன தோற்றக்கருங்கைவெண் கோட்டுச்செங்கட்
பொருமால்களிறொன்று போந்ததுண்டோநும் புனத்தயலே.

இ-ள். வரும் - வளராநின்ற, மால்புயல் - பெரிய மேகம்போன்ற, வண்கை - கொடைக்கையினையுடைய, மான்தேர் - மான்தேரையுடைய, வரோதயன் - வரோதயன், மண் அளந்த திருமாலவன் - மண்ணளந்த திருமாலை நிகர்த்தவன், (அவனது) வஞ்சி அன்ன - வஞ்சியை நிகர்த்த, அம்சீறடி - அழகிய சீறடியையுடைய, சேயிழையீர் - சேயிழையையுடையீர், கரு-கரிய, மால் வரை அன்ன - பெரிய மலைபோன்ற, தோற்றம் - காட்சியையும், கருங்கை - கரியதுதிக்கையையும், வெண்கோட்டு - வெள்ளிய கொம்புகளையும், செங்கண் - செவ்ந்த கண்களையுமுடைய, பொரும்மால்களிறு ஒன்று - பொருகின்ற பெரியயானையொன்று, நம்புனத்து அயல் - நுமது புனத்துப்பக்கத்தில், போந்தது உண்டோ - வந்ததுண்டோ (சொல்லுவீராக) — எ-று.

வஞ்சி - கருவூர். மான் - குதிரை. (அஉ௩)

## கலைமான் வினுதல்.

சினமாண்கடற்படைச் சேரலன்றென்னறை யாற்றழிந்து
மனமாண்பழியவை வேல்கொண்டகோன்வையை நாடனைய.
கனமார்வனமுலைக் கையார்வரிவளைக் காரிகையீ
ரினமான்புகுந்ததுவோ வுரையீர்நும் மிரும்புனத்தே.

இ-ள். சினம்மாண் - கோவத்தால் மாட்சிமையமைந்த, கடல்படை-சேநாசமுத்திரத்தையுடைய, சேரலன் - சேரன், தென் - தெற்கிலுள்ள, நறையாற்று - நறையாற்றில், அழிந்து - தோற்று, மனம்மாண்பு அழிய - மனவலி கெடும்படி, வைவேல் கொண்ட கோன் - கூர்மையாகிய வேற்படையைத்தாங்கிய வேந்தனுகிய பாண்டியனது, வையைநாடு அனைய - வையை நாட்டை

கிகர்த்த, கனம்ஆர் - கனம் பொருந்திய, வனமுலை - அழகிய தனங்களையும், கைஆர்வரிவளை - கையினிடத் தரியவரிவளையலையுமுடைய, காரிகையீர் - காரிகையீர், நம்இரும்புனத்து - நமது பெரும்புனத்தின்கண், இனம் - நமது கூட்டத்தில், மான் புகுந்ததுவோ - மான் ஒன்றுவந்து புகுந்ததுவோ, (புகுந்ததுண்டாயின்) உரையீர் - எமக்குச் சொல்லுவீராக—எ-று.

நறையூர் - ஒரூர். மனமாண்பு - தைரியம். வனம் - சந்தனக்கோலம் எனினுமாம். காரிகையீர் - அழகுள்ளவரே. (அ௨௪)

இதுவுமது.

சிலைமாண்படைமன்னர் செந்நிலத்தோடச் செருவிளைத்த
கொலைமாணயின்மன்னன் றென்புனனாடன்ன கோல்வளையீ
ரிலைமாண்பகழியி னேவுண்டுதன்னினத் திற்பிரிந்தோர்
கலைமான்புகுந்ததுண் டோவுரையீர்நுங்கள் கார்ப்புனத்தே.

இ-ள். சிலைமாண் படைமன்னர் - வில்லையும் மாட்சிமைப் பட்ட படையையுமுடைய வேந்தர், செந்நிலத்து ஓட - போர்க்களத்தில் தோற்றோடும்படி, கொலைமாண் அயில் - கொல்லுந் தொழிலால் மாட்சிமைப்பட்ட வேற்படையைத் தாங்கிய, மன்னன் - வேந்தனாகிய பாண்டியனது, தென்புனல் நாடு அன்ன - தென் புனனாட்டை நிகர்த்த, கோல்வளையீர் - கோல்வளையையுடையீர், இலைமாண் பகழியின் - இலைவடிவாகிய மாட்சிமைப்பட்ட அம்பினால், ஏவுண்டு - எய்யப்பட்டு, தன் இனத்திற் பிரிந்து - தன் இனத்தினின்றும் பிரிந்து, நுங்கள் கார்புனத்து - நமது கரியபுனத்தில், ஓர் கலைமான் புகுந்தது உண்டோ - ஒரு கலைமான் வந்ததுண்டோ, (உண்டாயின்) உரையீர் - எமக்குச் சொல்லுவீராக—எ-று.

உதிரத்தாற் செவந்திருத்தலால் போர்க்களத்தைச் செந்நிலம் என்றார். கோல்வளை - புள்ளியையுடைய வளையல். (அ௨௫)

வழி வினாதல்.

வெல்லுந்திறநினைந் தேற்றார்விழிஞத்து விண்படரக் [ன்
கொல்லின்மலிந்தசெவ் வேல்கொண்டகோன்கொல்லிச் சாரலின்றே
புல்லும்பொழிலின் வேங்கையின்கீழ்நின்ற பூங்குழலீர்
செல்லுநெறியறியே னுரையீர்நுஞ் சிறுகுடிக்கே.

இ-ள். வெல்லும் திறம் நினைந்து - வெல்லும் உபாயத்தை யாராய்ந்தறிந்து, ஏற்றார் - ஏற்றவர், விழிஞத்து - விழிஞத்தில், விண்படர - சுவர்க்க லோகத்திற் செல்லும்படி, கொல்லின்மலிந்த - கொல்லுந்தொழிலின் மிகுந்த, செவ்வேல் கொண்ட கோன் - செவந்த வேற்படையைத் தாங்கிய பாண்டி

வேந்தனது, கொல்லிச்சாரல் - கொல்லிமலைச் சாரலில், இன்தேன் புல்லும்- இனிய தேன்பொருந்திய, பொழில் - பொழிலில், இனவேங்கையின் கீழ் நின்ற - கூட்டமாகிய வேங்கை மரத்தின்கீழே நின்ற, பூங்குழலீர் - மலரை யணிந்த கூந்தலையுடையீர், நும் சிறுகுடிக்கு - நமது சிற்றூருக்கு, செல்லும் நெறி அறியேன்-போகும் வழியறியேன், உரையீர்-சொல்லுவீராக-எ-று.

விழிஞம் - ஒரூர். விண் - வீரசுவர்க்கம். சொல் - கொல்லிச்சோழில். ()

## ஒழிந்தது வினுதல்.

தன்னும்புரையு மழையுருமேறுதன் றானைமுன்னாற்
றுன்னுங்கொடிமிசை யேந்தியகோன்கொல்லிச் சூழ்பொழில்வாய்
மின்னுங்கதிரொளி வாண்முகத்தீரெம் வினுவுரைத்தான்
மன்னுஞ்சுடர்மணி போதருமோநுங்கள் வாயகத்தே.

இ-ள். தன்னும்புரையும் - தன்னைத்தானே நிகர்க்கின்ற, மழை உருமேறு - மேகத்திலுள்ள உருமேறு, தன் தானை முன்னால் - தன்படைகளுக்கு முன்னே, துன்னும் கொடிமிசை - நெருங்கிய கொடியின்மீது, எந்திய கோன் - தாங்கிய வேந்தனாகிய பாண்டியனது, கொல்லி சூழ்பொழில்வாய்- கொல்லிமலையைச்சூழ்ந்த சோலையின்கண், மின்னும் - மின்னுகிற, கதிர்ஒளி_ சந்திரனொளியையுடைய, வாள்முகத்தீர் - பேரொளியினையுடைய முகமுடையீர், எம்வினுஉரைத்தால்-எம்வினுவுக்கு உத்தரஞ்சொன்னால், நும்வாயகத்து மன்னும் - நும்வாயிற் பொருந்திய, சுடர்மணி - ஒளி யமைந்த முத்துக்கள், போதருமோ - உதிர்ந்துபோமோ—எ-று.

உருமேறு - ஆணிடி. சுடர்மணி - ஒளியுள்ள முத்து. வாய்திறந்தால் முத்துச் சிந்திவிடுமோ என்பது உலகத்துப் பழமொழி. (அ௨௭)

## வேழம் வினுதல்.

கண்ணுற்றெதிர்ந்ததெவ் வேந்தர்படக்கடை யற்கொடிமேல்
விண்ணுற்றகோளுரு மேந்தியவேந்தன் வியன்பொதியிற்
பண்ணுற்றதேமொழிப் பாவைநல்லீரோர் பகழிமூழ்கப்
புண்ணுற்றமாவொன்று போந்ததுண்டோநும் புனத்தயலே.

இ-ள். கண்ணுற்று எதிர்ந்த - கண்ணெதிரே வந்தெதிர்த்த, தெவ்வேந்தர்பட - பகையரசர் இறக்கும்படி, கடையல் - கடையலில், கொடிமேல்-கொடியின்மீது, விண்ணுற்ற - ஆகாயத்திலுள்ள, கோள் - துன்பஞ் செய்கிற, உரும் எந்திய - இடியேற்றைத் தாங்கிய, வேந்தன் - அரசனாகிய பாண்டிய

லது, வியன் பொதியில் - பெரிதாகிய பொதியமலையிலுள்ள, பண்ணுற்றதே மொழி - பண்போலுற இனிய மொழியையுடைய, பாவைநல்லீர் - பாவை போலு முருவமைந்த மாதரே, ஒர்பகழிமூழ்க - ஒரு அம்புதைக்க, புண்ணுற்ற - புண்பட்ட, மாஒன்று - ஒருயானையானது, நும்புனத்து அயல்போந்து உண்டோ - நும்புனத்துப் பக்கத்தில் வந்ததுண்டோ, (உண்டாயின்) சொல்லுவீராமின்—எ-று.

கண் - பெருமை யெனினுமாம். பாவை - பிரதிமை. மா - யானை. ()

## இதுவுமது.

முடியுடைவேந்தரு மும்மதயானையு மொய்யமருட்
பொடியிடைவீழத்தென் பூலந்தைவென்றான் புகாரணைய
வடிவுடைவேனெடுங் கண்மடவீர்நுங்கள் வார்புனத்திற்
பிடியொடுபோந்த துண்டோவுரையீரோர் பெருங்களிறே.

இ-ள். முடிஉடை வேந்தரும் - கிரீடத்தையுடைய அரசரும், மும்மத யானையும் - மும்மதத்தையுடைய யானைகளும், மொய் அமருள் - நெருங்கிய யுத்தபூமியில், பொடியிடைவீழ - புழுதியில் விழும்படி, தென்பூலந்தை - தென் பூலந்தையில், வென்றான் - வென்றவனாகிய பாண்டியனது, புகார் அணைய - புகாரை நிகர்த்த, வடிவு உடைய - வடித்தலையுடைய, வேல் - வேல்போன்ற, நெடுங்கண்மடவீர் - நெடியகண்களையுமுடைய மாதரே, நுங்கள் வார்புனத்தில் - நுமது பெரியபுனத்தில், ஓர்பெருங்களிறு - ஒருபெரிய யானையானது, பிடியொடுபோந்தது உண்டோ - பிடியோடும் வந்ததுண்டோ, (உண்டாயின்) உரையீர் - சொல்லுவீராமின்—எ-று.

மும்மதம் - கன்னமதம், கபோலமதம், பீஜமதம். பிடி - பெண்யானை.()

## சுனைநயந்துரைத்தல்.

தேர்மன்னுவாட்படை செந்நிலத்தோடச் செருவிளைத்த
போர்மன்னன்றென்னன் பொதியிற்புனமா மயில்புரையு
மேர்மன்னுகாரிகை யெய்தலுண்டோமென்னின் யானுநின்போ
னீர்மன்னுநீல நெடுஞ்சுனையாடுவ னேரிழையே.

இ-ள். தேர்மன்னுவாள் படை - தேரின்மீதேறிவந்த வாட்படைகள், செந்நிலத்து ஓட - போர்க்களத்தில் தோற்றோடும்படி, செருவிளைத்த - போர் விளைத்த, போர்மன்னன் - போர்வேந்தன், தென்னன் - பாண்டியன், (அவனது) பொதியில் - பொதியமலையில், புனம் - புனத்தில்வாழ்கின்ற, மாமயில்

புரையும் - அழகிய மயிலைநிகர்த்த, ஏர்மன்னுகாரிகை - அழகுபொருந்தியகாரிகையே, யானும் நின்போல் - நானும் உன்னைப்போல, எய்தல் உண்டாம் எனின் - இக்கோலத்தை யடைதலுண்டாமாயின், நேரிழையே - நேரிழையாய், நீர்மன்னும் - நீர் நிலைபெற்ற, நீலம் - நீலமலர்கள் நெருங்கின, நெடுஞ்சுனை ஆடுவன் - பெருஞ்சுனையிற் குளிப்பேன்—எ-று.

வாட்படை - வாள்வீரர்சேனை. புரைதல் - நிகர்த்தல். காரிகை - அழகு எனினுமாம். நீலம் - கருங்குவளைமலர். (அந0)

இதுவமது.

புண்டாமருநிறத் துற்றுத்தென்பூலந்தைப் போர்மலைந்த
வொண்டாரரசர் குழாமுடனேயொளி வானடையக்
கண்டான்பொதியின் மயிலன்னகாரிகை யெய்தனின்போ
லுண்டாமெனிற்றையல் யானுஞ்சென்றாடுவ னொண்சுனையே.

இ-ள். தென்பூலந்தை - தெற்கின் கண்ணுள்ள பூலந்தையில், போர் மலைந்த - போர்புரிந்த, ஒள்தார் அரசர் குழாம் - ஒள்ளிய மாலையையணிந்த அரசர்கூட்டம், உடனே - ஒருங்கே, அருநிறத்து - தமது அரியமார்பில், புண்தாம் உற்று - புண்ணையடைந்து, ஒளிவான் அடைய - ஒளிபொருந்திய வீரசுவர்க்கமடையும்படி, கண்டான் - கண்டவனாகிய பாண்டியனது, பொதியில் - பொதியமலையினிடத்துள்ள, மயில் அன்னகாரிகை - மயில்போன்றகாரிகையே, தையல் - தையலே, நின்போல் எய்தல் உண்டாம் எனின் - உன்னைப்போல அழகுபொருந்துத லுண்டாமாயின், ஒண்சுனை - நீயாடிய ஒள்ளியசுனையில், யானும்சென்று ஆடுவன்-யானுஞ்சென்று மூழ்குவேன்—எ-று.

புண் - இரணம். வான் - வீரசுவர்க்கம். (அநக)

திருமாலகலஞ்செஞ் சாந்தணிந்தென்னச் செவ்வானகட்டுக்
கருமாமலர்க்கண்ணி கைதொழத்தோன்றின்று காண்வந்தொன்னார்
செருமாலரசுகச் செந்நிலத்தட்டதென் றீந்தமிழ்நர்
பெருமான்றனது குலமுதலாய பிறைக்கொழுந்தே.

இ-ள். ஒன்னார் - பகைவர், காண்வந்து - யாவருங் காணும்படி வந்து, செரு - யுத்தகளத்தில், மால் அரசுஉக - தமது பெரிய வேந்துத்தன்மை யழியும்படி, செந்நிலத்து - அந்தப் போர்க்களத்தில், அட்ட - அவர்களை வென்ற, தென் - தென்றிசையிலுள்ள, தீம்தமிழ்நர் - மதுரமாகிய தமிழ்நாட்டாருக்கு, பெருமான் தனது - இறைவனாகிய பாண்டியனது, குலமுதல் ஆய - குலத்துக்கு முதலாகிய, பிறைக்கொழுந்து-பிறைக்கொழுந்தானது, திருமால் அகலம் - திருமாலின் மார்பினிடத்து, செம்சாந்து அணிந்து என்ன - செஞ்சந்

தனமணிக்தாற்போல, செவ்வான் அகட்டு-செவ்வானத்தின் நடுவில், கருமா மலர்கண்ணி - கரிய அழகாகிய குவளைமலர்போன்ற கண்களை யுடையாளை, கைதொழ - கன்னியரெல்லாருங் கைகூப்பி வணங்கும்படி, தோன்றின்று - உதித்தது—எ-று.

கரு என்ற விசேஷத்தால் மலர்குவளை மலரையுணர்த்திற்று. காண என்பது காண் என ஈறுதொடுத்தலாயிற்று. அரசு - அரசத் தன்மை. தமிழ் நம்பெருமான் - தமிழ்நாட்டார்க்கரசன். பிறைக்கொழுந்து-பிறைச்சந்திரன்.()

சுனை வியந்துரைத்தல்.

ஆணெடுந்தானை யாற்றுக்குடிவென்ற கோன்பொதியிற்
சேணெடுங்குன்றத் தருவிநின்சேவடி தோய்ந்ததில்லை
வாணெடுங்கண்ணுஞ் சிவப்பச்செவ்வாயும் விளர்ப்பவண்டார்
தாணெடும்போதவை சூட்டவற்றோவத் தடஞ்சுனையே.

இ-ள். ஆள்நெடும் தானையை - போர்வீரரது பெருஞ்சேனையை, ஆற்றுக்குடி - ஆற்றுக்குடியில், வென்ற - வென்றடக்கின, கோன் - பாண்டியராசனது, பொதியில் - பொதியமலையாகிய, சேண்நெடும் குன்றத்து - மிகப் பெரிதாகிய குன்றத்துள்ள, அருவி - அருவியாற்றில், நின்சேவடி-நின் சிவந்த பாதம், தோய்ந்தது இல்லை - படிந்ததில்லை, வாள்நெடும் கண்ணும் சிவப்ப-ஒளிபொருந்திய நீண்டகண்ணும் சிவக்கவும், செவ்வாயும் விளர்ப்ப - சிவந்த வாயும்வெளுக்கவும், வண்டுஆர் - வண்டுகள்மொய்க்கின்ற, தாள் - நாளத்தோடுகூடிய, நெடும்போது அவை-பெரியமலர்களாகிய அவற்றை, அ தடம் சுனை - அந்தப் பெரியசுனையானது, சூட்டவற்றோ - சூட்டவல்லதோ. (இஃதோர் வியப்பிருந்தவா றென்னை)—எ-று.

ஆற்றுக்குடி - ஒரூர். வாள்நெடுங்கண் - என்பதற்கு வாள்போலும் - நெடிய கண்எனினுமாம். விளர்த்தல் - வெளுத்தல். (அஙங)

தோற்றத்தா லாராய்தல்.

கந்தாரடுகளி யானைக்கழனெடு மாறன்கன்னிக்
கொந்தாடிரும்பொழில் வாய்ப்பண்ணையாயத்துக் கோலமென்பூம்
பந்தாடலினிடை நொந்துகொல்பைங்கழல் வெண்மணன்மேல்
வந்தாடலினடி நொந்துகொல்வா ணுதல் வாடியதே.

இ-ள். கந்துஆர் அடு - கட்டுத்தறியின் வரிசையை முறிக்கின்ற, களியானை - களிப்புள்ள யானைகளையுடைய, கழல் - வீரக்கழலையணிந்த, நெடுமா

றன் - நெடியமாறனது, கன்னி - கன்னிநாட்டில், சொந்து ஆடு - பூங்கொத் துக்களசைகின்ற, இரும்பொழில்வாய் - பெரும்பொழிலினிடத்து, பண்ணை ஆயத்து - கூட்டமாகிய ஆயத்தில், கோலம் - அழகிய, மெல் - மெலிதாகிய, பூ - பொலிவுள்ள, பந்துஆடலின் - பந்தடித்துவிளையாடுதலால், இடைநொந் துகொல் - இடைநொந்தோ, வெண்மணல்மேல்வந்து - வெண்மணலின்மீது வந்து, பைங்கழல் ஆடலின்-பைங்கழல் ஆடுதலால், அடிநொந்துகொல்-அடி நொந்தோ, வாணுதல் வாடியது - இவ்வாணுதல் வாடினது—எ-று.

கன்னிநாடு - பாண்டிநாடு. பண்ணை ஆயம் - தோழிக்கூட்டம். பைங் கழல் - பசிய அம்மனைக்காய். (அ௬௪)

பொருந்தியபூந்தண் புனலுன்குடைந்துகொல் பொற்கயிற்றுத்
திருந்தியவூசல்சென் றாடிக்கொல்சேவூர்ச் செருவடர்த்த
பருந்திவர்செஞ்சுடர் வெள்வேற்பராங்குசன் பற்றலர்போல்
வருந்தியகாரண மென்னைகொல்லோமற்றிவ் வாணுதலே.

இ-ள். பொருந்திய - பொருந்திய, பூ - பொலிவாகிய, தண் - குளிர்ந்த, புனல்குடைந்துகொல் - நீராடியோ, பொன்கயிற்று - பொற்சங்கிலியிற் பூட் டிய, திருந்திய - திருத்தமாகிய, ஊசல் - ஊசலில், சென்று - போய், ஆடிக் கொல் - ஆடியோ, சேவூர் - சேவூரில், செருஅடர்த்த-போர்வென்ற, பருந்து இவர் - பருந்துகள் சூழ்ந்த, செஞ்சுடர் - செந்நிறமுள்ள, வெள்வேல் - வெள் வேலைத்தாங்கிய, பராங்குசன் - பராங்குசபாண்டியனது, பற்றலர்போல்- பகைவரைப்போல, இவ்வாணுதல் - இவ்வொளிபொருந்திய நெற்றியையுடை யாள், வருந்தியகாரணம் என்னைகொல் - வருந்துதற்குக் காரண மென்னை யோ—எ-று. (அ௬௫)

பாமாண்டமிழுடை வேந்தன்பராங்குசன் கொல்லிப்பைம்பூந்
தேமாந்தழையொடு கண்ணியுங்கொண்டிச் செழும்புனத்து
ளேமாண்சிலையண்ணல் வந்துநின்றான்பண்டு போல்வின்று
பூமாண்குழலா யறியேனுரைப்பதோர் பொய்ம்மொழியே.

இ-ள். பாமாண் - பாக்கள் மாட்சிமைப்பட்ட, தமிழ்உடை வேந்தன் தமிழ்வேந்தனாகிய, பராங்குசன் - பராங்குசபாண்டியனது, கொல்லி - கொல் லிமலையிலுள்ள, பை - பசிய, பூ - அழகிய, தேமாந்தழையொடு - தேமாந்த ழையுடன், கண்ணியும்கொண்டு - மாலையையுங்கொண்டு, இச்செழும்புனத் துள் - இந்தச்செழுமையான புனத்தில், ஏமாண் சிலைஅண்ணல் - அம்புமாட் சிமைப்பட்ட சிலையையேந்திய தலைவர், வந்துநின்றார் - வந்துநின்றார், பூமா ண்குழலாய் - பூமாட்சிமைப்பட்ட கூந்தலையுடையாளே, பண்டுபோல - முன்

போல, இன்று - இன்று, உரைப்பர ஓர் பொய்மொழி - அவருக்குச்சொல்லத் தருவதோர் பொய்மொழியை, அறியேன் - அறியேன்—எ-று. (அ௩௬)

### தோழி தலைவியை இடத்துய்த்து நீங்கல்.

கணிநிறவேங்கையுங் கொய்துங்கலாபம் பரப்பிநின்று
மணிநிறமாமயி லாடலுங்காண்டும்வல் லத்துவென்ற
துணிநிறவேன்மன்னன் றென்னர்பிரான்சுடர் தோய்பொதியி
னணிநிறமால்வரைத் தூநீரருவியு மாடுதுமே.

இ-ள். கணி - மதிக்கப்பட்ட, நிறம் - ஒளியுள்ள, வேங்கையும்-வேங்கை மலரையும், கொய்தும் - பறிப்போம், கலாபம் பரப்பிநின்று - தோகை விரித்துநின்று, மணிநிற மாமயில் - நீலமணியின் நிறத்தையுடைய அழகிய மயில்கள், ஆடலும் - ஆடுதலையும், காண்டும் - காண்போம், வல்லத்து - வல்லமென்னுமூரில், வென்ற - பகைவரைவென்ற, துணி - உறுதியாகிய, நிறம் - ஒளியுள்ள, வேல் - வேலாயுதத்தையேந்திய, மன்னன் - வேந்தன், தென்னர் பிரான் - தென்னாட்டாருக்குத்தலைவன், (அவனது) சுடர்தோய்பொதியின் - ஒளிபொருந்திய பொதியிலாகிய, அணிநிறம் - அழகிய நிறமுள்ள, மால் - பெரிய, வரை - குன்றுகளினின்றும் பெருகிவருகிற, தூநீர் - பரிசுத்தமாகிய நீரையுடைய, அருவியும் - அருவியாறுகளிலும், ஆடுதும் - மூழ்குவோம்—எ-று. ()

### இதுவுமது.

விரைவளர்வேங்கையுங் காந்தளுங்கொய்து வியலறைமே
னிரைவளர்மாமயி லாடலுங்காண்டு நிகர்மலைந்தார்
திரைவளர்பூம்புனற் சேவூர்ப்படச்செற்ற தென்னன்கொல்லி
வரைவளர்மானீ ரருவியுமாடுதும் வாணுதலே.

இ-ள். விரைவளர் - மணமிகுந்த, வேங்கையும் - வேங்கை மலரையும், காந்தளும் - காந்தள் மலரையும், கொய்தும் - பறிப்போம், வியல் - விசாலமாகிய, அறைமேல் - கற்பாறைகளின்மேல், நிரைவளர் - வரிசையாயுள்ள, மாமயில் - அழகியமயில்கள், ஆடலும் - ஆடுதலையும், காண்டும் - காண்போம், நிகர்மலைந்தார் - சமானமாகவந்து போர்செய்தபகைவர், திரைவளர் - அலைகள்வளராநின்ற, பூம்புனல் - அழகிய நீர்வளமுள்ள, சேவூர் - சேவூரில், பட - அழியும்படி, செற்ற - அவரைவென்ற, தென்னன் - பாண்டியனது, கொல்லி வரைவளர் - கொல்லிமலையிலுள்ள, மால் - பெரிய, நீரருவியும், நீரையுடைய அருவியாறுகளிலும், ஆடுதும் - மூழ்குவோம், வாணுதலே - ஒளிபொருந்திய நெற்றியையுடையாளே—எ-று. (அ௩அ)

தோழி தலைவிக்குத் தழையேற்பித்தமை தலைவற்குக் கூறல்.

சிலைமிசைவைத்த புயலுங்கயலுஞ்சென் றோங்குசெம்பொன்
மலைமிசைவைத்த பெருமான்வரோதயன் வஞ்சியன்னாள்
முலைமிசைவைத்துமென் றோண்மேற்கடாய்த்தன்மொய் பூங்குழல்சேர்
தலைமிசைவைத்துக்கொண் டாளண்ணனீதந்த தண்டழையே.

இ-ள். சிலை மிசைவைத்த - தன் வில்லின்மீதுவைத்த, புயலும் - புயற்கொடியும், கயலும் - கயற்கொடியும், சென்று - போய், ஓங்கு - உயர்ந்த, செம் பொன் மலைமிசை வைத்த - மேருமலையின்மீது நாட்டின, பெருமான் - வேந்தனும், வரோதயன் - வரோதயனும் ஆகிய பாண்டியனது, வஞ்சி அன்னாள் - வஞ்சி நகரை நிகர்த்தவள், அண்ணல் - அண்ணலே, நீ தந்த - நீ கொடுத்த, தண் தழை - குளிர்ந்த தழையை, முலை மிசை வைத்து - தனத்தின் மீது ஒற்றி, மெல் தோள் மேல்கடாய் - மெல்லிய தோளின்மீது அழுத்தி, தன்மொய்பூங் குழல் சேர் - தனது நெருங்கிய மலரையணிந்த கூந்தலையுடைய, தலைமிசை வைத்துக் கொண்டாள் - தலைமீது முடித்துக்கொண்டாள்—எ-று.

புயல் - மேகம். கயல் - சேல்மீன். இவ்விரண்டும் இவையெழுதப்பட்ட கொடிகளுக்காயிற்று. மேருமலை பொன்மலையாதலால் செம்பொன்மலை யெனப்பட்டது. அண்ணல் - பெருமையிற்சிறந்தோன். (௩௩௧)

இதுவுமது.

கழுதுகுருதி படியக்கலிநீர்க் கடையல்வென்ற
விழுதுபடுநெடு வேன்மன்னனீர்ம்புனற் கூடலன்னா
டொழுதுதலைமிசை வைத்துக்கொண்டாள்வண்டுந் தும்பியுந்தேன்
கொழுதுமலர்நறுந் தாரண்ணனீதந்த கொய்தழையே.

இ-ள். வண்டும் - கருவண்டுகளும், தும்பியும் - தேன் வண்டுகளும், தேன்கொழுது - தேனின்பொருட்டுக்கிண்டுகின்ற, நறு - மணமுள்ள, மலர் தார் - மலர்மாலையையணிந்த, அண்ணல் - அண்ணலே, நீதந்த - நீகொடுத்த, கொய்தழை - பறிக்கப்பட்டதழையை, கழுது - பேய்கள், குருதிபடிய - உதிரத்திற்படியும்படி, கலிநீர் - ஒலிக்கின்ற நீர்சூழ்ந்த, கடையல் - கடையலில், வென்ற - பகைவரை வென்ற, இழுதுபடு - நிணம் பொருந்திய, நெடு வேல் - நெடியவேலைத்தாங்கிய, மன்னன் - வேந்தனாகிய பாண்டியனது, ஈர்ம்புனல் - குளிர்ந்த நீர்சூழ்ந்த, கூடல் அன்னாள் - கூடலை நிகர்த்தவளாகிய எம்மிறைவி, தொழுது - வணங்கி, தலைமிசைவைத்துக்கொண்டாள் - தலையின்மீதுவைத்துக்கொண்டாள்—எ-று.

கடையல் - ஓரூர். கூடல் - மதுரைநகர். கொழுதுதல் - கிண்டுதல். ()

தோழி காவல் மிகுதிகூறல்.

மண்ணிவர்செங்கோல் வரோதயன்வல்லத்து மாற்றலர்க்கு
விண்ணிவர்செல்வம் விளைவித்தவேந்தன் விண்டோய்பொதியிற்
கண்ணிவர்பூந்தண் சிலம்பிடைவாரன்மின் காப்புடைத்தாற
பண்ணிவர்வண்டறை சோலைவளாயவெம் பைம்புனமே.

இ-ள். மண் இவர் செங்கோல்வரோதயன் - நிலவுலகத்தைக் காக்கின்ற செங்கோலினையுடையவரோதயன், வல்லத்து - வல்லத்தில், மாற்றலர்க்கு - பகைவருக்கு, விண் இவர்செல்வம்விளைவித்த வேந்தன் - சொர்க்கலோக செல்வத்தைத்தந்த வேந்தனது, விண்தோய்பொதியில் - ஆகாயத்தையளாவிய பொதியமாகிய, கண் இவர் - பெருமைமிகுந்த, பூ தண் சிலம்பிடை - அழகுங் குளிர்ச்சியுமுள்ள மலையினிடத்து, பண் இவர்வண்டு அறை - பண்பாடுகின்ற வண்டுகளொலிக்கின்ற, சோலைவளாய - சோலைகள்சூழ்ந்த, எம்பைம்புனம் - எமது பசியபுனமானது, காப்புஉடைத்து - காவலையுடைத்து, ஆல் - ஆதலால், வாரல்மின் - நீர் இவ்விடத்து வாராதொழிவீராக—எ-று.

விண்ணிவர் செல்வம் - வீரசுவர்க்கமாகிய செல்வம். பொதியிற்சிலம்பு எனக்கூட்டுக. (௩௪௪)

இதுவுமது.

புல்லாவ்வயவர் நறையாற்றழியப் பொருதழித்த
வில்லான்விளங்குமுத் தக்குடைமன்னன் வியனிலத்தா
ரெல்லாமிறைஞ்சநின் றான்கொல்லிமல்லலஞ் சாரலிங்கு
நில்லாதியங்குமின் காப்புடைத்தையவிந் நீள்புனமே.

இ-ள். புல்லாவயவர் - சரணடையாத பகையரசர், நறையாற்று அழிய - நறையாற்றின்கண் அழிந்தொழிய, பொருது - அவரோடு போர்செய்து, அழித்த - அவர்களையழித்த, வில்லான் - வில்லையுடையவன், விளங்கும் முத்தம்குடை - விளங்குகின்ற முத்துக்குடையையுடைய, மன்னன் - மன்னன், வியன்நிலத்தார் எல்லாம் - உயர்ந்த பூமியிலுள்ளவர்களெல்லாம், இறைஞ்ச நின்றான் - வணங்கநின்றவனது, மல்லல் - வளம்பொருந்திய, அம் - அழகிய, கொல்லிசாரல் இங்கு - கொல்லிமலையின் சாரலாகிய இவ்விடத்தே, நில்லாது இயங்குமின் - நில்லாது போவீராக, ஐய - தலைவனே, இ நீள்புனம் - இந்தப் பெரியபுனம், காப்புஉடைத்து - காவலுடைத்து—எ-று. (௩௪௫)

இதுவுமது.

பூவியர்தண்பொழிற் பூலந்தைபுல்லா வரசழித்த
மாவலர்தானை வரோதயன்கொல்லி மணிவரைவா

யேவலர் தி... ர்சிலை யாரெமர்நீங்கா ரிருபொழு... ங்
காவலராய்நிற்பர் வாரன்மினீரிக் கடிபுனத்தே.

இ-ள். பூ அலர் - பூக்கள் மலர்கின்ற, தண்பொழில் - குளிர்ந்த சோலை சூழ்ந்த, பூலந்தை - பூலந்தையில், புல்லா அரசு - சரணடையா... அ... ரை, அழித்த - அழித்த, மா அலர் தானை - யானைமிகுதியையுடையசேனையையுடைய, வரோதயன் - வரோதயனது, மணிகொல்லிவரைவாய் - அழகிய கொல்லிமலையினிடத்து, ஏ அலர் - அம்புகோத்த, திண்சிலையார் - வலியசிலையையுடையாரான, எமர் - எம்மவரான குறவர், இருபொழுதும் - இரண்டு பொழுதிலும், நீங்கார் - நீங்காதாராய், காவலராய் நிற்பர் - காப்பவராய் நிற்பார்கள், (ஆதலால்) இ கடிபுனத்தே - இக்காவலுண்டிய புனத்தினிடத்தே, வாரல்மின் - வாராதொழிவீராக—எ-று. (அசந)

## தோழி எதிர் மொழிசோடேத்தல். (தழைமறுத்தல்.)

சே...ம்வினவுதிர் மென்பூந்தழையுங் கொணர்ந்துநிற்றி
ராழமுடைய கருமத்திர்போறி ரணைந்தகலீர்
சோழன்சுடர்முடி வானவன்றென்னன்றுன் னுதமன்னர்
தாழமழையுரு மேந்தியகோன்கொல்லித் தண்புனத்தே.

இ-ள். சோழன் - சோழனும், சுடர்முடிவானவன் - ஒளியுள்ள முடியை ... - சேரனும் ஆகிய, துன்னுதமன்னர் - பகையரசர், தாழ - தாழ்ந்து ...ம்படி, மழையுரும் ஏந்தியகோன் - இடியேற்றைத்தாங்கியவேந்த..., தென்னன் - பாண்டியனது, கொல்லி - கொல்லிமலைச் சாரலிலுள்ள, தண்புனத்து - குளிர்ந்தபுனத்தில், (வந்து) வேழம் வினவுதிர் - யானையை வினவுகின்றீர், மெல்பூதழையும் கொணர்ந்துநிற்றிர் - மெல்லிய பொலிவாகிய தழையையுங் கொண்டுவந்து நிற்கின்றீர், ஆழம் உடைய கருமத்திர்போல்திர் - ஆழமாகிய கருமத்தையுடையவர்போல்கின்றீர், அணைந்து அகலிர் - வந்துபோகாதிருக்கின்றீர், (இதனால் ...மது கருத்தின்னதென்று புலப்படவில்லை)—எ-று. (அசச)

## இதுவுமது.

பாவுற்றதீந்தமிழ் வேந்தன்பராங்குசன் பாழிப்பற்ருக்
கோவுற்றவல்லல்கண் டான்கொல்லிச்சாரலெங் கொய்புனத்து
னோவுற்றபுண்ணொடு மான்வந்ததோவென்னு மீர்ஞ்சிலம்பா
மாவுற்றபுண்ணிற் கிடுமருந்தேநின்னகை வார்தழையே.

இ-ள். பா உற்ற தீ தமிழ்வேந்தன் - பாடலமைந்த இனியதமிழ்வேந்தனாகிய, பராங்குசன் - பராங்குசனாகிய பாண்டியன், பாழிபற்ரு கோ உற்ற அல்லல் கண்டான் - பெருமையில்லாத பகையரசர் அடைந்த துன்பத்தைச்செய்தவன்,

(அவனது) கொல்லிச்சாரல் - கொல்லிமலைச் சாரலிலுள்ள, எம் கொய்புனத்துள் - எம்துகொய்புனத்தில், ஏ உற்ற புண்ணொடு - அம்புதைத்த புண்ணுடனே, மான்வந்ததோ என்னும் - மான்வந்ததோவென்று வினவுகிற, ஈர்ஞ்சிலம்பா - குளிர்ந்தமலைநாடனே, நின்கைவார்தழை - உன்கையிலுள்ள - நெடிய தழை, மாஉற்ற புண்ணிற்கு இடும்மருந்தே - மானினது புண்ணுக்கிடுகின்ற மருந்துதானோ—எ-று.

பாவுற்ற - பரவிய எனினுமாம். ஏ - அம்பு. மா - மான். மருந்தே என்பதில் ஏகாரம்வினா. (அசுரு)

## இதுவுமது.

வேனகநீண்டகண் ணாளும்விரும்புஞ் சுரும்பரற்றத்
தேனகநீண்டவண் டார்கண்ணியாய்சிறி துண்டுதெவ்வர்
வானகமேறவல் லத்துவென்றான் கொல்லி மால்வரைவாய்க்
கானகவாழ்நருங் கண்டறிவாரிக் கமழ்தழையே.

இ-ள். வேல்நகநீண்ட கண்ணாளும் - வேல்போல விளங்க நீண்ட கண்களையுடையாளும், விரும்பும் - விரும்புவள், சுரும்பு அரற்ற - வண்டுகள் சத்திக்க, தேன்நக - தேன்பெருக, நீண்ட - நெடிதாகிய, வள்தார் கண்ணியாய் - வளவிய பூமாலையையுடையாய், சிறிது உண்டு - (நுமது எண்ணத்துக்குச் சிறிது தடையுண்டு, (அதுயாதெனின்) தெவ்வர்வானகம் ஏற - பகையாசரசுவர்க்கமடைய, வல்லத்துவென்றான் - (அவரை) வல்லத்தில் வென்றவனாகிய பாண்டியனது, மால் - பெரிய, கொல்லிவரைவாய் - கொல்லிமலையில், கானகவாழ்நரும் - காட்டில்வாழ்வோராகிய குறவரும், இக்கமழ்தழை - இந்தக்கமழ்தழையை, கண்டறிவார் - கண்டறிந்துளர், (ஆதலால் இத்தழை எங்குடிக்கேலாது)—எ-று.

தார் - மலர். கானகவாழ்நர் - குறவர். (அசசு)

## இதுவுமது.

துடியாரிடைவடி வேற்கண்மடந்தைதன் சொல்லறிந்தாற்
கடியார்கமழ்கண்ணி யாய்கொள்வல்யான்களத் தூரில்வென்ற
வடியாரிலங்கிலை வேன்மன்னன்வானே றணிந்தவென்றிக்
கொடியான் மழைவளர் கொல்லியஞ்சாரலிக் கொய்தழையே.

இ-ள். களத்தூரில் வென்ற - களத்தூரில் பகையாசரை வென்ற, வடி ஆர் - வடித்தலமைந்த, இலங்கு இலைவேல் - விளங்குகின்ற இலைவடிவாகிய வேலாயுதத்தைத்தாங்கிய, மன்னன் - வேந்தன், வானேறு அணிந்த - இடி

